

டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

## ஜனநாயகம் என்பது என்ன

ஜனநாயகம் என்பது ஆட்சி செய்யும் ஒரு வடிவம் அல்லது முறை; இத்தகைய முறையில் இரத்தம் சிந்தாமல் மக்களின் பொருளாதார மற்றும் சமூக வாழ்க்கையில் புரட்சிகர மாற்றங்கள் தோற்றுவிக்கப்படுகின்றன.

- 1952 டிசம்பர் 22 ஆம் நாளன்று
புனா மாவட்ட சட்ட நூலகத்தில்
**பாபாசாகேப் டாக்டர் அம்பேத்கர் ஆற்றிய உரையிலிருந்து.**

This Volume XXVI in Tamil forms the First part of the English Edition Volume 13 Part I - Section 1, 2 & 3 of **Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - Published by the Education Department, Government of Maharashtra,** 1992.

*முதற் பதிப்பு: பிப்ரவரி, 2002*
*விஷு ஆண்டு, மாசி*



**விலை** : ரூ. 40/-

**நூலகப் பதிப்பு :** ரூ. 115—

**வெளியீட்டாளர்:**

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
சமூக நீதி மற்றும் உரிமையளிப்பு அமைச்சகம்,
இந்திய அரசு,
15, ஜன்பத் சாலை,
புதுடில்லி.

**விற்பனை நிலையம்:**

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.

*அச்சிட்டோர்:*

**பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,**
*142, ஜானி ஜான் கான் ரோடு,*
*ராயப்பேட்டை, சென்னை - 600 014.*
*தொலைபேசி: 8532441, 8532973*

# ஆலோசனைக்குழு

**டாக்டர் சத்தியநாராயண ஜாட்டியா,**
சமூக நீதி மற்றும் உரிமையளிப்புத்துறை அமைச்சர்,
இந்திய அரசு

**டாக்டர் பிந்தேஸ்வர் பாதக்,** பிஎச்.டி., டி.லிட்.,
செயல் துணைத் தலைவர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி.

**திரு. சத் பால்**
இயக்குநர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி.

**நிர்வாக ஆசிரியர் (தமிழ்):**
**ரா. ரங்கசாமி (மாஜினி)**
சென்னை, தமிழ்நாடு.

ஆங்கில நூல் வெளியீடு:

*கல்வித்துறை,*
*மகாராஷ்டிர மாநில அரசு, 1992.*

ஆங்கில நூல் தொகுப்பாளர்:

திரு. வஸந்த் மூன்
மும்பை

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்:

*ரா. ரங்கசாமி (மாஜினி)*

மொழிபெயர்ப்பாளர்கள்:

*பா.மா. அன்புமணி, பி.ஏ., பி.எல்.,*
*கே. நீலகண்டன், பி.ஏ.,*
*ஏ.எஸ். மணி, பி.ஏ.,*
*வி. ராதாகிருஷ்ணன்,*
*டாக்டர் எஸ். செல்வநாதன்*
*வி.வி. சந்திரசேகரன்*

ஒப்புநோக்கியோர்:

*டாக்டர் எஸ். பெருமாள்*
*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*

பிழைதிருத்த உதவி:

*திரு. கே. நீலகண்டன்*
*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*

# அணிந்துரை

நமது இந்திய நாட்டின் அரசியல் சாசனம் உலகின் தலை சிறந்த அரசியல் சாசனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது. இத்தகைய சிறப்புமிக்க அரசியல் சாசனத்தை உருவாக்கி, செழுமைப் படுத்தி, வடிவமைத்துத் தந்த பெருமை பிரதானமாக பாரத ரத்னா பாபா சாகேப் டாக்டர் அம்பேத்கரையும், அரசியல் சாசன வரைவுக் குழுவையும் சேரும். அரசியல் நிர்ணய சபையின் பரிசீலனைக்கு அவர் சமர்ப்பித்த இந்திய அரசியல் சாசனத்தின், இந்திய அரசமைப்பின் முன்வரைவு இந்தத் தொகுதியில் அப்படியே வெளியிடப்பட்டுள்ளது.

மேலும், இந்த முன்வரைவு குறித்து அரசியல் நிர்ணய சபையில் நடைபெற்ற காரசாரமான, கருத்தாழமும் செறிவுமிக்க விவாதங்களும், அந்த முன்வரைவுக்குச் சமர்ப்பிக்கப்பட்ட திருத்தங்களும் இத்தொகுதியில் இடம்பெற்றுள்ளன. விவாதங் களின்போது எழுப்பப்பட்ட பல்வேறு பிரச்சினைகளுக்கும், ஐயங்களுக்கும், கேள்விகளுக்கும், சர்ச்சைகளுக்கும் டாக்டர் அம்பேத்கர் ஆணித்தரமாகவும், அழுத்தம் திருத்தமாகவும், அசைக்க மறுக்க முடியாத ஆதாரங்களுடனும் பதிலளித்து அனைவரது பாராட்டையும் பெற்றிருப்பதையும் காண்கிறோம்.

டாக்டர் அம்பேத்கர் நமது பாரதத் திருநாட்டின் ஈடு இணையற்ற சட்ட மேதைகளில் ஒருவர் என்பதை மெய்ப்பித்துக் காட்டியுள்ளார். டாக்டர் அம்பேத்கர் நூல்களின் தமிழாக்கம் வாசகர்கள் பல்வேறு பயனுள்ள விஷயங்களைப் பற்றித் தெரிந்து புரிந்து கொள்வதற்கும், எல்லோரும் எல்லாமும் பெற்று இன்புற்று வாழும் புதியதோர் சமுதாயம் உருவாகும் திசை வழியில் நாடு முன்னேறுவதற்கும் உதவும் என்றும் நம்புகிறோம்.

நல்வாழ்த்துக்கள்!

(ஒப்பம்) டாக்டர் சத்திய நாராயண ஜாட்டியா,
சமூக நீதி மற்றும்
உரிமையளிப்புத்துறை அமைச்சர்,
இந்திய அரசு.

புதுடில்லி

# பதிப்புரை

மகாராஷ்டிர மாநில அரசு ஆங்கில மொழியில் வெளியிட்டு வரும் டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுதிகளை இந்தியிலும் ஏனைய இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடும் பணியை இந்திய அரசின் நல அமைச்சகத்தைச் சார்ந்த டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன் மேற்கொண்டு நிறைவேற்றி வருகின்றது. இந்தப் பணி மக்களிடையே வரவேற்பைப் பெற்றிருப்பது மகிழ்ச்சி அளிப்பதாகும்.

டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல் தொகுப்பு வரிசையில் 26-வது தொகுதியை நாட்டு மக்களுக்கு அளிப்பதில் பெருமகிழ்ச்சி கொள்கிறோம். உயர்ந்ததொரு இலட்சியத்தை நோக்கி நம் நாடு செல்லும் பயணத்தில் டாக்டர் அம்பேத்கர் அவர்களின் நூல்கள் வழிகாட்டியாகவும் உறுதுணையாகவும் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

ஆங்கில நூல்களை இந்திய மொழிகளில் அளிப்பதில் முனைந்து பணியாற்றும் நிர்வாக ஆசிரியர்கள், மொழிபெயர்ப்பாளர்கள், ஒப்புநோக்குவோர், அச்சகத்தார் ஆகிய அனைவரும் நமது பாராட்டுதலுக்கு உரியவர்கள். இந்த அரிய பணியில் ஒத்துழைப்பு நல்கும் அனைவர்க்கும் நன்றியைத் தெரிவிக்கின்றோம்.

ஏனைய தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதியையும் மக்கள் வரவேற்று ஆதரிப்பார்கள் என நம்புகின்றோம்.

புதுடில்லி

**இயக்குநர்**
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்

# தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர் உரை

பாரத ரத்னா டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஒரு சகலகலா வல்லவர்; பல அரிய திறமைகளின் பெட்டகமாகத் திகழ்ந்தவர்; சீரிய பண்புகளின் சுரங்கமாக விளங்கியவர்; நேரிய செயற்பாடு களின் கருவூலமாக மிளிர்ந்தவர். சுருங்கச் சொன்னால் அவரை ஒரு நடமாடும் பல்கலைக் கழகம் என்று கூறினால் அது மிகை யாகாது.

இவையெல்லாவற்றையும் விட முக்கியமாக டாக்டர் அம்பேத்கரை இந்திய அரசியல் சாசனத்தின், அரசமைப்புச் சட்டத்தின் பிதாமகர் எனக் கூறலாம். அவரது அற்புத சட்டப் புலமையை, உலகிலுள்ள பல்வேறு அரசியல் சாசனங்கள் குறித்து அவருக்கிருந்த ஆழ்ந்த, தேர்ந்த, தெளிந்த ஞானத்தை இது விகசிதமாகப் புலப்படுத்துகிறது. மகாராஷ்டிர மாநில அரசு வெளியிட்டுள்ள டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுப்பு வரிசை 13 ஆவது தொகுதி தமிழில் 26, 27, 28, 29, 30 ஆவது தொகுதிகளாக வெளியிடப்படுகிறது. இவை அனைத்தும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அரசியல் நிர்ணய சபையில் சமர்ப்பித்த அரசமைப்புச் சட்ட முன்வரைவு குறித்த விவாதங்களாகும். இந்த விவாதங்களுக்கு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் அளித்த பதில்கள் படிப்போர் உள்ளத்தைப் பிணைத்து ஈர்ப்பதாக உள்ளன. எத்தகைய சிக்கலான விஷயமாக இருந் தாலும் புள்ளிவிவர ஆதாரங்களோடு, தகுந்த விவரங்களோடு, அலசி ஆராய்ந்து, அசைக்க மறுக்க முடியாதபடி அவர் பதிலளித் திருப்பதைக் காணலாம்.

இந்த ஐந்து தொகுதிகளும் பலரால் மொழிபெயர்க்கப் பட்டிருப்பதால் மொழி நடையும், சொல்லாக்கமும், பதப் பிரயோகங்களும் வேறுபட்டிருப்பது தவிர்க்க முடியாததாகி விட்டன. இதனை வாசகர்கள் பொறுத்தருள்வார்கள் என்று நம்புகிறோம்.

இதுவரை வெளிவந்துள்ள தொகுதிகளுக்குப் பேராதரவு அளித்து வந்துள்ளதைப் போன்றே இந்த ஐந்து தொகுதிகளும் வாசகர்களால் பெரிதும் வரவேற்கப்படும் என்று நம்புகிறோம்.

தமிழ் நூல் நிர்வாக ஆசிரியர்

# பிழைத்திருத்தம்

| பக். | மேலிருந்து கீழ்வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 9 | 12 | ஆட்சேபணை | ஆட்சேபனை |
| 46 | 10 | நினைவுபடுத்தும் | நிறைவுப்படுத்தும் |
| 50 | 18 | தரங்கும் | தாங்கும் |
| 96 | 25 | நடந்து கொள்வா | நடந்து கொள்வர் |
| 112 | 27 | வாழ்ந்துரைகளை | வாழ்த்துரைகளை |
| 163 | 37 | அனுப்புவர் | அனுப்புபவர் |
| 184 | 34 | நிரப்பவுதற்காக | நிரப்புவதற்காக |
| 204 | 12 | விளம்பரப் | விளம்பப் |
| 205 | 14 | நிலமை | நிலைமை |
| 210 | 16 | தேதியலிருந்து | தேதியிலிருந்து |
| 324 | 31 | மென்றும் | மென்னும் |
| 330 | 8 | செறுத்தும் | செலுத்தும் |
| 336 | 18 | பெரும் | பெறும் |
| 338 | 20 | குள்ளடங்களி | குள்ளடங்கிய |
| 358 | 31 | தகுதியுடைவர் | தகுதியுடையவர் |
| 364 | 21 | வேறானலன்றி | வேறானாலன்றி |
| 459 | 13 | வகயகம் | வகையம் |

குறிப்பு:

1. "வரைவு இந்திய அரசியல் சாசனம்" என்று வரும் இடங்களில் எல்லாம் இந்திய அரசமைப்பின் முன்வரைவு என்று திருத்தி வாசிக்கவும்.
2. வகையகம் என்று வருமிடங்களில் எல்லாம் வகையம் என்று திருத்தி வாசிக்கவும்.
3. நஸிருத்தீன் அகமது என்று திருத்தி வாசிக்கவும்.

# பொருளடக்கம்

## பாகம் I

### பகுதி 1



### பகுதி 2



### பகுதி 3

# Eighth Schedule

**(Articles 344 (1) and 351)**

## Languages

1. Assamese.
2. Bengali.
3. Gujarati.
4. Hindi.
5. Kannada.
6. Kashmiri.
7. Malayalam.
8. Marathi.
9. Oriya.
10. Punjabi.
11. Sanskrit.
12. Tamil.
13. Telugu.
14. Urdu.

---

இந்திய அரசமைப்புச் சட்டம் 222 மற்றும் 223 ஆகிய பக்கங்களில் கையொப்பமிட்டவர்களின் கையெழுத்துகளை இவ்விரு பக்கங்களில் காண்கிறோம். டேராடூனில் உள்ள இந்திய சர்வே அலுவலகம் இதனை வெளியிட்டுள்ளது.

# பாகம் I

## அரசியல் நிர்ணயசபையில் டாக்டர் அம்பேத்கர் பிரவேசித்தது முதல் அரசியல் நிர்ணயசபையில் வரைவு இந்திய அரசியல் சாசனத்தை அறிமுகப்படுத்தியது வரை

# நோக்கங்கள் மற்றும் குறிக்கோள்கள் பற்றிய தீர்மானம்

*(1945ல் இரண்டாவது உலகப் போர் முடிவுக்கு வந்தபின், இந்தியாவின் விடுதலை பிரச்சினை முன்னுரிமை பெற்றது. அதிகார மாற்றம் இணக்கமான முறையில் நடைபெறுவதற்கான வழிமுறை களைப் பற்றி யோசனை கூற மூன்று நபர் கொண்ட தூதுக்குழுவை பிரிட்டிஷ் அரசாங்கம் அனுப்பியது. அமைச்சரவைத் தூதுக்குழு என்று அழைக்கப்பட்ட இந்தத் தூதுக்குழு மார்ச் 16ல் தனது பரிந் துரைகளை வெளியிட்டது. இந்தியாவின் எதிர்கால அரசாங்கம் சம்பந்தமாக ஓர் அரசியல் சாசனத்தை உருவாக்க ஓர் அரசியல் நிர்ணய சபையை அமைக்கலாம் என்று அவற்றில் ஆலோசனை கூறப்பட்டிருந்தது.*

*இதற்கேற்ப, அரசியல் நிர்ணய சபைக்கான தேர்தல்கள் நடை பெற்றன; அவற்றில் மாகாணச் சட்டப் பேரவைகளிலிருந்து உறுப் பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். காங்கிரஸ் எதிர்ப்பின் காரண மாக பம்பாயிலிருந்து டாக்டர் அம்பேத்கர் தேர்ந்தெடுக்கப்பட முடியாது போகவே, ஜோகேந்திரநாத் மண்டல் மற்றும் ஷெட் யூல்டு வகுப்பு உறுப்பினர்களின் ஆதரவுடன் வங்காள சட்டப் பேரவை மூலம் அரசியல் நிர்ணய சபையில் நுழைவதில் அவர் வெற்றி பெற்றார்.*

*சுதந்திர இந்தியாவின் அரசியல் சாசனத்தை உருவாக்கும் தனது பணியை அரசியல் நிர்ணயசபை 1946 டிசம்பர் 9 ஆம் தேதி துவக்கியது. இந்தத் துவக்க நிகழ்ச்சியில் பங்குபெற 296 உறுப் பினர்கள் உரிமை பெற்றிருந்தனர். ஆனால் 207 பேர் மட்டுமே கலந்து கொண்டனர்; கலந்து கொள்ளாதவர்கள் பிரதானமாக, அரசியல் நிர்ணய சபையைப் புறக்கணித்த முஸ்லீம் லீக் உறுப்பினர்கள் ஆவர்.)*

**இந்தியாவின் அரசியல் நிர்ணயசபையின் முதல் கூட்டம், புதுடில்லி அரசியல் நிர்ணயசபை அரங்கில் 1946 டிசம்பர் 9ம் தேதி (முற்பகல்) 11 மணிக்குத் துவங்கியது.**

தற்காலிகத் தலைவராக கூட்டத்திற்கு தலைமை வகித்து நடத்தும்படி டாக்டர் சச்சிதானந்த சின்ஹாவை, ஆச்சாரிய ஜே.பி. கிருபளானி கேட்டுக்கொண்டார்.

தலைவர் துவக்க உரை ஆற்றினார். இதைத் தொடர்ந்து துணைத் தலைவராக திரு. பிராங்க் அந்தோணி நியமனம் ஆனார்.

பின்பு உறுப்பினர்கள் தங்களின் ஆதாரச் சான்றுகளை முன் வைத்து பதிவேட்டில் தங்கள் பெயர்களைப் பதிவு செய்தனர். வங்காளத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் உறுப்பினர் என்று டாக்டர் அம்பேத்கர் கையெழுத்திட்டார்.

1946 டிசம்பர் 10ம் தேதி, அரசியல் நிர்ணய சபையின் தலைவரைத் தேர்ந்தெடுப்பதற்கான விதிமுறைகளை அவை நிறைவேற்றியது. அதற்குப்பின்பு, 1946 டிசம்பர் 11ம் தேதி, நிரந்தரத் தலைவராக டாக்டர் ராஜேந்திர பிரசாத்தை அவை தேர்ந்தெடுத்தது.

1946 டிசம்பர் 13ம் தேதி, நோக்கங்கள் மற்றும் குறிக்கோள்கள் பற்றிய கீழ்க்கண்ட தீர்மானத்தை மாண்புமிகு பண்டித ஜவஹர்லால் நேரு முன்மொழிந்தார்:

"[1]1. இந்தியாவை ஒரு சுதந்திரமான இறையாண்மை கொண்டகுடியரசாகப் பிரகடனம் செய்யவும் அதன் எதிர்கால ஆட்சிக்காக ஓர் அரசியல் சாசனத்தை உருவாக்கவும் தனது மனப்பூர்வமான உறுதியை இந்த அரசியல் நிர்ணயசபை பிரகடனம் செய்கிறது;

2. இதனில், இப்பொழுது பிரிட்டிஷ் இந்தியாவில் அடங்கிய நிலப் பரப்புகளும், சுதந்திரமான இறையாண்மை கொண்ட இந்தியாவில் சேர்ந்து கொள்ள விரும்பும் இந்தியாவின் சமஸ்தானங்களாக உள்ள நிலப்பரப்புகளும், பிரிட்டிஷ் இந்தியாவிற்கு வெளியில் உள்ள இந்தியாவின் பகுதிகளும், மற்ற பரப்புகளும் - இவை எல்லாம் சேர்ந்து ஓர் ஒன்றியமாக இருக்கும்.

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் (இனி அ.நி.ச. விவாதங்கள் என்று அழைக்கப்படும்) தொகுதி I, 1946 டிசம்பர் 13, ப.59.

3. மேலே சொன்ன நிலப்பரப்புகள், அவற்றின் இன்றைய எல்லை களுடனோ அல்லது அரசியல் நிர்ணயசபை நிர்ணயிக்கும் மற்றவை யுடனோ, அதற்குப் பின் அரசியல் சாசனப்படி சுயாட்சி அந்தஸ்து கொண்ட அலகுகளாக, எஞ்சியுள்ள அதிகாரங்களுடன், ஒன்றியத்திற்கு வழங்கப்பட்ட அல்லது ஒன்றியத்திற்கு என்று மறைமுகமாகக் குறிப்பிடப்படும் அல்லது அதன் விளைவாக எழும் அதிகாரங்கள், செயல்பாடுகள் நீங்கலாக இதர எல்லா அதிகாரங்களையும் செயல்பாடு களையும் பெற்றிருக்கும்.

4. இறையாண்மை கொண்ட சுதந்திர இந்தியாவின், அதன் அங்கங்களின், அரசாங்க அமைப்புகளின் எல்லா அதிகாரங்களும் மேலாண்மை உரிமைகளும் மக்களிடமிருந்தே பெறப்படுகின்றன;

5. இந்தியாவின் எல்லா மக்களுக்கும் சமூக, பொருளாதார, அரசியல் நீதி, சம அந்தஸ்து, சம சந்தர்ப்பம், சட்டத்தின் முன் சமத்துவம், எண்ணம், கருத்து வெளிப்பாடு, கோட்பாடு, மத நம்பிக்கை, தொழில், கூட்டுச் சேருதல், செயல்பாடு, வழிபாடு ஆகியவற்றில் அனைத்து மக்களுக்கும் சுதந்திரம் - சட்டத்திற்கும் ஒழுக்கப் பண்புக்கும் உட்பட்டு உத்திரவாதம் செய்து வழங்கப்படும்.

6. எல்லாச் சிறுபான்மையினர், பிற்பட்ட வகுப்பினர், மலை சாதியினர் பிராந்தியங்கள், ஒடுக்கப்பட்ட, தாழ்த்தப்பட்ட மற்றும் பிற்பட்ட வகுப்பினர்கள் ஆகியோருக்குப் போதுமான பாதுகாப்பு அளிக்கப் படும்.

7. குடியரசின் பிரதேச ஒருமைப்பாடு, நாகரிகமடைந்த நாடுகளின் நீதி, சட்டம் ஆகியவற்றின் அடிப்படையில் நிலம், கடல், ஆகாயம் ஆகிய வற்றின் மீது அதற்குள்ள இறையாண்மை பாதுகாக்கப்படும்.

8. இந்தப் பழைமை வாய்ந்த நாடு, உலகில் தனக்குள்ள நியாயமான, கௌரவமான இடத்தை அடையும்; உலக சமதானத்தையும், மனித சமுதாயத்தின் சுபிட்சத்தையும் வளர்க்க தன்னுடைய முழுமையான உணர்வுபூர்வமான பங்கைச் செலுத்தும்.''

***(இதைத் தொடர்ந்து பண்டித நேரு, புருஷோத்தம் தாஸ் தாண்டன் மற்றும் தலைவர் டாக்டர் ராஜேந்திர பிரசாத் ஆகியோர் உரையாற்றினர். பின்பு அவை 1946 டிசம்பர் 16 வரை ஒத்தி வைக்கப்பட்டது.)***

- ஆசிரியர்

★ ★ ★

***(மேற்கண்ட தீர்மானத்திற்கு டாக்டர் எம்.ஆர். ஜெயகர் தமது திருத்தத்தை 1946 டிசம்பர் 16ல் பிரேரேபித்தார்.)***

[1]**ரைட் ஹானரபிள் டாக்டர் எம்.ஆர். ஜெயகர் (பம்பாய் - பொது):** நல்லது, நான் திருத்தத்தை வாசிக்கிறேன். உங்கள் நேரத்தை சில நிமிஷங்கள் மீதப்படுத்த விரும்பினேன். திருத்தம் இதுதான்:

> ''இந்தியாவின் எதிர்கால ஆட்சி முறைக்காக இந்த அவை தயாரிக்கவிருக்கும் அரசியல் சாசனம் ஒரு சுதந்திர மான, ஜனநாயக இறையாண்மை கொண்ட அரசு அமைப் பதை நோக்கமாகக் கொண்டிருக்கும் என இந்த அவை உறுதி யுடனும் மனப்பூர்வமாகவும் தீர்மானிக்கிறது. ஆனால், அத்தகைய ஓர் அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் முஸ்லீம் லீக் மற்றும் இந்திய சமஸ்தானங்களின் ஒத்துழைப் பைப் பெறுவதற்காகவும் அதன் மூலம் இந்தத் தீர்மானத் தின் உறுதித் தன்மையை வலுப்படுத்துவதற்காகவும் இந்த இரு அமைப்புகளின் பிரதிநிதிகள் இந்த அவையின் நடவடிக்கைகளில் பங்கு பெறுவதை - அவர்கள் அவ்வாறு தீர்மானித்தால் - சாத்தியமாக்கும் பொருட்டு இந்த விஷயம் பற்றி மேற்கொண்டு பரிசீலனை செய்வதை பின்பு ஒரு தேதிக்கு இந்த அவை ஒத்திவைக்கிறது.''

இந்தத் தீர்மானம் பற்றிய கூடுதலான பரிசீலனையை அடுத்த கட்டத்திற்கு, ஒன்றியத்தின் அரசியல் சாசனத்தை உருவாக்கும் கட்டத் திற்கு ஒத்திவைக்க வேண்டுமென்பது எனது திருத்தத்தின் சாரம்; அந்த சமயத்தில் இந்தியச் சமஸ்தானங்களும் மூஸ்லீம் லீகும் அவையில் இருக்கும் என நம்புகிறேன்.

*(தீர்மானம் கொண்டு வரப்பட்ட சமயசந்தர்ப்பத்தை டாக்டர் எம்.ஆர். ஜெயகர் ஆட்சேபித்தார். அரசியல் சாசனத்தின் அடிப் படைகளை வகுக்கும் கடமைப் பொறுப்பில் முஸ்லீம் லீக் பங்கு*

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் தொகுதி I, 1946 டிசம்பர் 16, ப. 73.

*பெற வேண்டுமென அவர் விரும்பியதால், தீர்மானத்தை நிறை வேற்றுவதை ஒத்திவைக்கக் கோரும் திருத்தத்தை அவர் பிரேரே பித்தார். இத்தீர்மானம் அவையில் ஓர் இறுக்கமான சூழ்நிலையை ஏற்படுத்தியது. 1946 டிசம்பர் 17ம் தேதி, தமது கருத்தை முன் வைக்குமாறு எதிர்பாராத நிலையில் டாக்டர் அம்பேத்கருக்கு தலைவர் டாக்டர் ராஜேந்திர பிரசாத் அழைப்பு விடுத்தார். அம்பேத்கர் பேசத் துவங்கியதும் அவையின் முழு கவனமும் அவர் பேச்சின் மீது இருந்தது.*

*டாக்டர் தனன்ஜெய் கீர் எழுதுகிறார்: ''அத்தகைய ஒரு ஆபத்தான பங்கை ஆற்றுவதன் மூலம், நாட்டின் மிகவும் சக்தி வாய்ந்த காங்கிரஸ் தலைவர்களின் விருப்பங்களுக்கும் ஆட்சேபணைகளுக்கும் எதிரான நிலை எடுத்தால், திருத்தத்தை முன்மொழிந்தவருடன் சேர்ந்து டாக்டர் அம்பேத்கரும் தோல்வி யைத் தழுவ வேண்டியிருக்கும்; 1815ல் நெப்போலியன் வாட்டர் லூவில் தோல்வியைத் தழுவியதைப் போல் இவரும் தோல்வி யடைய வேண்டிவரும் என்று ஒவ்வொருவரும் நினைத்தனர். இதற்கேற்ப தங்களது கடைந்தெடுத்த எதிரியைப் பலஹீனப்படுத்திக் கீழே தள்ள உயர்த்திய தங்கள் கரங்களுடன் காங்கிரஸ் உறுப் பினர்கள் தயாராக இருந்தனர்.'' வரலாற்றுச் சிறப்பு மிக்க இந்த உரை டாக்டர் அம்பேத்கரின் அரசியல் வாழ்வின் திசையையே மாற்றியது. அவரது உரை நீண்ட ஆர்ப்பாட்டமான கரகோஷத்தைப் பெற்றது. இந்த நிகழ்ச்சியை நேரில் கண்ட திரு. என்.வி.காட்கில் குறிப்பிட்டதுபோல் ''அவரது உரை அரசியல் மேதகையத்தன்மை வாய்ந்ததாக, மனக்கசப்பு சிறிதும் இல்லாததாக, ஆழ்ந்த அக்கறை யுடன் கூடிய சவாலாக இருந்ததால், அவை முழுவதும் அவரது பேச்சில் மயங்கிப்போய் நிசப்தத்துடன் அதனை செவிமடுத்துக் கேட்டது. உரை மிக ஆரவாரத்துடன் கூடிய கரகோஷத்தால் வரவேற்கப்பட்டது. அவைக்கு வெளியில் பாராட்டுகளால் அவர் திக்குமுக்காடிப் போனார்.'' டாக்டர் அம்பேத்கரின் உரை மிகுந்த தாக்கத்தை ஏற்படுத்திற்று. குறிக்கோள்கள் பற்றிய தீர்மானத்தின் பரிசீலனையை அடுத்த கூட்டத்திற்கு அரசியல் நிர்ணய சபை ஒத்திவைத்தது. - ஆசிரியர்.)*

[1]திரு.தலைவர்: டாக்டர் அம்பேத்கர்.

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : (வங்காளம், பொது): திரு. அவைத் தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தின் மீது பேச என்னை அழைத்தமைக்காக உங்களுக்கு மிகவும் நன்றிகூறக் கடமைப்பட்டிருக்கிறேன். எனினும், தங்கள் அழைப்பு எனக்கு ஆச்சரியமாக இருந்தது என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். எனக்கு முன்னால் 20 அல்லது 22 பேர்கள் பேச இருந்ததால், நாளைதான் பேசுவதற்கு எனக்கு வாய்ப்பு கிடைக்கும் என எண்ணி னேன். மேலும் நாளைய தினம் பேசுவதைத்தான் நானும் விரும்பி னேன். ஏனெனில், இன்று நான் எந்தத் தயாரிப்பும் இல்லாமல் வந்திருக்கிறேன். இம்மாதிரியான வாய்ப்பின்போது ஒரு முழுமை யான அறிவிப்பை வெளியிட நான் எண்ணியிருந்ததால், அதற்காக என்னைத் தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும் என எண்ணினேன். மேலும் தாங்கள் 10 நிமிட அவகாசமே நிர்ணயித்திருக்கிறீர்கள். இத்தகைய கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு, நம்முன் உள்ள தீர்மானம் குறித்து எவ்வாறு என்னால் உரையாற்ற முடியும் என்பதை நான் அறியேன். இந்த விஷயம்பற்றி நான் என்ன நினைக்கிறேன் என்பதை சில வார்த்தைகளில் சுருக்கிக்கூற என்னால் சாத்தியமான அளவு முயற்சிக்கிறேன்.

திரு.தலைவர் அவர்களே, நேற்றிலிருந்து நடந்த விவாதத் தின் பகைப்புலனில் பார்க்கும்போது தீர்மானம் இரண்டு பாகங் களாகப் பிரிந்திருக்கிறது என்பது தெளிவு. ஒரு பாகம் கருத்து வேறு பாட்டிற்கு உட்பட்டது. மற்றது வாதத்திற்கு உட்படாதது. வாதத் திற்கு உட்படாதது இந்தத் தீர்மானத்தின் (5) முதல் (7) பாராக்களைக் கொண்ட பாகம். இந்த நாட்டின் எதிர்கால அரசியல் சாசனத்தின் குறிக்கோள்களை இந்தப் பத்திகள் முன்வைக்கின்றன இந்தத் தீர்மானம் கருத்து வேறுபாட்டிற்கு அப்பாற்பட்டது என்றாலும் ஒரு சோசலிஸ்ட் என்று புகழ்பெற்ற பண்டித ஜவஹர்லால் நேருவிட மிருந்து வந்த இந்தத் தீர்மானம் என் மனத்திற்கு மிகவும் ஏமாற்றம் அளிப்பதாக உள்ளது என்பதை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். தீர்மானத்தின் இந்தப் பாகத்தில், அவர் மேற்கொண்டிருக்கும் நிலையை விட மேலும் அதிகம் சென்றிருக்க வேண்டும் என்பது என் கருத்து. ஒரு வரலாற்று மாணவன் என்ற ரீதியில், தீர்மானத்தில்

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் தொகுதி I, 1946 டிசம்பர் 17, ப. 99-103.

இந்த பாகம் அதில் உட்படுத்தபடாமல் இருப்பதையே நான் அதிகம் விரும்பியிருப்பேன். தீர்மானத்தின் இந்தப் பகுதியை ஒருவர் வாசிப் பாரேயானால் பிரெஞ்சு அரசியல் நிர்ணயசபையில் அறிவிக்கப் பட்ட மனிதஉரிமைகள் பிரகடனம் அவரது நினைவிற்கு நிச்சயம் வரும். உண்மையில் 450 ஆண்டுகள் கழிந்தபின் மனித உரிமைகள் பிரகடனமும் அது உள்ளடக்கிய கோட்பாடுகளும் உலகின் நாகரிக மடைந்துள்ள எந்தப் பாகத்திலும் உள்ள தற்கால மனிதனின் மன உணர் வின் ஒரு பிரிக்க முடியாத பகுதி ஆகிவிட்டது என்று நான் கூறினால் அது மிகையாகாது என்றே நினைக்கிறேன். அதுமட்டுமல்ல, மிகவும் வைதீகமான, பழமையான சிந்தனைப் போக்கில் ஊறிப்போன நமது சொந்த நாட்டிலும்கூட, பிரெஞ்சு மனித உரிமைகள் பிரகடனத்தின் தகைமையை மறுக்கும் எவரையும் காண்பது கடினம். தீர்மானத்தி லேயே குறிப்பிடப்பட்டிருப்பது போல் அதைத் திரும்பக் கூறுவது அதிகப்பிரசங்கித்தனமாகவே இருக்கும். இந்தக் கோட்பாடுகள் நமது கண்ணோட்டத்தின் உள்ளார்ந்த விழுமிய அடிப்படையாகி விட்டன. எனவே, நமது கோட்பாட்டின் பாகமாக ஆகிவிட்டன என்று அறிவிப்பது அவசியமற்றது. தீர்மானத்தில் வேறுசில குறை களும் உள்ளன. தீர்மானத்தின் இந்தப் பகுதி சில உரிமைகளை வெளியிடுகின்றதென்றாலும், பரிகாரங்கள் பற்றி அது எதுவும் கூறவில்லை. உரிமைகள் மீறப்படும் போது, மக்கள் நிவர்த்தி பெறுவதற்கான பரிகாரங்கள் அளிக்கப்படாவிடில் அந்த உரிமைகள் பயனற்றவை என்பதை நாம் எல்லோரும் அறிவோம். பரிகாரங்கள் முற்றிலுமாக இல்லாததைக் காண்கிறேன். எந்த மனிதனுடையவும் உயிர், சுதந்திரம், உடைமைகள் சட்டரீதியான முறைகளின்படி அல்லாமல் வேறுவகையில் பறிக்கப்பட மாட்டா என்ற வழக்கப் படியான விதிமுறைகூட தீர்மானத்தில் இடம்பெறவில்லை. சட்டத் திற்கும் ஒழுங்குமுறைக்கும் உட்பட்டதாக இந்த அடிப்படை உரிமைகள் வகுக்கப்பட்டுள்ளன. சட்டம் எது, ஒழுங்குமுறை எது என்பதை அந்தச் சமயத்தில் உள்ள நிர்வாகம் முடிவுசெய்யும். ஒரு நிர்வாகம் ஒரு கண்ணோட்டத்தை கொண்டிருக்கும்போது வேறு ஒரு நிர்வாகம் வேறொரு கண்ணோட்டத்தைக் கொண்டிருக்கலாம். அன்றுள்ள நிர்வாகத்திடம் இந்த விஷயம் விடப்பட்டால், அடிப் படை உரிமைகள் பற்றிய திட்டவட்டமான நிலையை நாம் கறாராகத் தெரிந்துகொள்ளமுடியாது. ஐயா, பொருளாதார, சமூக, அரசியல் நீதி பற்றி குறிப்பிடும் சில ஷரத்துக்கள் உள்ளன. இந்த தீர்மானத் திற்குப் பின்னால் யதார்த்தத்தன்மை மற்றும் நேர்மை இருக்கு

மாயின் - அதுபற்றி எனக்கு கிஞ்சித்தும் சந்தேகம் இல்லை - பொருளாதார, சமூக, அரசியல் நீதியை யதார்த்தமாக்குவதை அரசுக்குச் சாத்தியமாக்க சில வழிமுறைகள் இருப்பதை தீர் மானத்தை முன்மொழிந்தவரிடமிருந்து நான் எதிர்பார்த்தேன். இந்தக் கண்ணோட்டத்திலிருந்து, நாட்டில் சமூக, பொருளாதார நீதி நிலவுவதற்காக திட்டவட்டமான வழிமுறைகள் தீர்மானத்தில் இடம்பெற்றிருக்க வேண்டும்; தொழில்கள் தேசியமயமாக்கப் படுதல், நிலம் தேசியமயமாக்கப்படுதல் ஆகிய திட்டங்கள் தீர் மானத்தில் இடம்பெற்றிருக்க வேண்டும். சமூக, பொருளாதார, அரசியல் நீதியை வழங்க வேண்டுமென்று நம்பும் எந்த எதிர்கால அரசாங்கத்திற்கும், அதன் பொருளாதாரம் ஒரு சோஷலிசப் பொரு ளாதாரமாக இல்லை எனில், அது எவ்வாறு சாத்தியமாகும் என என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. எனவே, என்னைப் பொறுத்தவரை, இங்கு முன்மொழியப்படும் விஷயங்கள் தெளி வாக்கப்பட்டுள்ளது பற்றி எனக்கு ஆட்சேபம் எதுவும் இல்லை யெனினும், இந்தத் தீர்மானம் என் மனத்திற்கு சிறிது ஏமாற்றமளிக் கிறது. எனினும், நான் வெளியிட்ட கருத்துக்களோடு, இந்த விஷ யத்தை இத்துடன் விட்டுவிடத் தயாராக உள்ளேன்.

இப்பொழுது, தீர்மானத்தின் முதல் பாகத்திற்கு வருகிறேன். இது முதல் நான்கு பாராக்களைக் கொண்டுள்ளது. நான் கூறியது போல, இந்த அவையில் நடந்த விவாதத்திலிருந்து, இது வாதப் பிரதிவாதத்திற்குரிய விஷயமாக ஆகிவிட்டது. இந்த சர்ச்சை ''குடியரசு'' என்ற வார்த்தையைப் பயன்படுத்துவதை மையமாகக் கொண்டுள்ளது எனத் தோன்றுகிறது. ''இறையாண்மை மக்களிட மிருந்து பெறப்படுகிறது'' என்று பாரா 4ல் உள்ள வாக்கியத்தை இது மையமாகக் கொண்டுள்ளது. முஸ்லீம் லீக் வராமல் இருக்கும்போது இந்த மன்றம் இந்தத்தீர்மானத்தை பரிசீலிக்கத் துவங்குவது முறை யற்றது என எனது நண்பர் டாக்டர் ஜெயகர் எழுப்பிய விஷயத்தி லிருந்து இது எழுகிறது. இந்த மாபெரும் நாட்டின் சமூக, அரசியல், பொருளாதாரக் கட்டமைப்பின் எதிர்காலப் பரிணாம வளர்ச்சி மற்றும் அதன் இறுதி வடிவம் பற்றி எந்தவித மிகச்சிறிய ஐயப்பாடும் என் மனதில் இல்லை. இன்று நாம் அரசியல், சமூக, பொருளாதார ரீதியில் பிளவுபட்டுள்ளோம் என்பதை நான் அறிவேன். நாம் போட்டி பூசல்களில் ஈடுபடும் பாசறைகளாக இருக்கிறோம். அத்தகைய ஒரு பாசறையின் தலைவர்களில் ஒருவனாக நான் இருக்கிறேன் என்பதை

ஒப்புக்கொள்ளும் அளவுக்குச் செல்லவும் நான் தயாராக இருக்கிறேன். ஆனால், ஐயா, இப்படியிருப்பினும், காலமும் சூழ்நிலையும் நன்கு அமையுமாயின் இந்த நாடு ஒரே நாடாகப் பரிணமிப்பதை உலகில் எந்த சக்தியாலும் தடுக்க முடியாது என்பதில் நான் முற்றிலும் உறுதியாக இருக்கிறேன் *(கரகோஷம்)*. நம்மிடையே எத்தனை எத்தனையோ சாதிகளும் சமயக் கோட்பாடுகளும் இருப்பினும் நாம் ஐக்கியப்பட்ட மக்களாக ஆவோம் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை *(ஆரவாரம்)*. இந்தியாவைப் பிரிக்க வேண்டுமென்ற முஸ்லீம் லீகின் கிளர்ச்சி இருந்த போதிலும், ஒருநாள் முஸ்லீம்களிடையிலேயே, போதுமான தெளிவு ஏற்பட்டு, ஐக்கியப்பட்ட இந்தியாவே தங்களுக்கும் நல்லது என்று அவர்கள் சிந்திக்கத் துவங்குவர் என்று கூறுவதில் எனக்கு எந்தத் தயக்கமும் மயக்கமும் இல்லை. *(உரத்த ஆரவாரமும் கரகோஷமும்)*.

இறுதி குறிக்கோளைப் பொறுத்தவரை நம்மில் யாருக்கும் எந்தக் கவலையும் இருக்கத் தேவையில்லை என்று நினைக்கிறேன். நம்மில் யாருக்கும் ஐயம் இருக்க வேண்டியதில்லை. நமக்குள்ள சிரமம் என்னவெனில் இன்று பல்வேறான முரண்கூறுகள் கொண்ட நம் மக்களைப் பொதுவான முடிவை எடுக்கும்படி செய்து நம்மை ஐக்கியத்திற்கு இட்டுச் செல்லும் பாதையில் முன்னேறச் செய்வது எவ்வாறு என்பதுதான். நமது சிரமமும் இறுதியான குறிக்கோள் பற்றியதல்ல; மாறாக, ஆரம்பம், பற்றியதே நமக்குள்ள சிரமம். ஆகவே, திரு.தலைவர் அவர்களே, நம்மை இஷ்டபூர்வ நண்பர்களாக ஆக்குவதற்காக, ஒவ்வொரு கட்சியையும் ஒவ்வொரு பகுதியினரையும் அந்தப் பாதையில் அழைத்துச் செல்வதற்கு இணங்கச் செய்வதற்காக பெரும்பான்மைக்கட்சி, இன்று நம்முடன் இணைந்து வரத்தயாராக இல்லாதவர்களின் தப்பெண்ணங்களைச் சகித்துக் கொள்வது கூட மிகச் சிறந்த அரசியல் மேதகைமையாதலால், இந்த வேண்டுகோளை விடுக்க விரும்புகிறேன். கோஷங்களை நாம் விட்டுவிடுவோம்; மக்களைப் பயமுறுத்தும் வார்த்தைகளை விட்டு விடுவோம். நமது எதிராளிகளின் தப்பெண்ணங்களுக்கு சலுகை கூட அளிப்போம்; அவர்களை உள்ளே அழைத்து வருவோம்; இதனால் நான் குறிப்பிட்ட பாதையில் முன்னேற அவர்கள் விருப்பமுடன் நம்முடன் சேர்ந்துகொள்வர்; நாம் நெடிய தூரம் பயணம் செய்தால், அது நிச்சயமாக ஐக்கியத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும். எனவே, இந்த இடத்தில் இருந்து டாக்டர் ஜெயகரின்

திருத்தத்தை ஆதரிக்கிறேனென்றால், சரியோ, தவறோ, நாம் எடுக்கும் நிலை சட்டப்படியான உரிமைகளுக்கு உகந்ததா, மே 16ம் தேதி, டிசம்பர் 6ம் தேதி அறிக்கையுடன் ஒத்துப்போகிறதா என்பதை யெல்லாம் ஒருபக்கமாய் வைத்துவிடுவது அவசியம் என்பதை நாம் எல்லோரும் உணர்ந்து கொள்ள வேண்டும் என்பதே இதற்குக் காரணம். இது சட்டப்படியான உரிமைகள் என்ற கட்டுக்கோப் பிற்கு உட்படுத்த முடியாத பெரிய விஷயமாகும். இது சட்டப் படியான பிரச்சினையே அல்ல. இந்த சட்டரீதியான பரிசீலனையை ஒதுக்கிவைத்துவிட்டு சில முயற்சியை மேற்கொள்வோம்; அதன் மூலம் நம்முடன் வரத்தயாராக இல்லாதவர்கள் வந்து சேருவர். அவர்கள் வருவதைச் சாத்தியமாக்குவோம். இதுதான் எனது வேண்டுகோள்.

இதுவரை நடைபெற்ற விவாதங்களில் இரு விஷயங்கள் என்னை மிகவும் ஈர்த்தன; அவற்றை ஒரு காகிதத்தில் குறித்து வைத்துக் கொள்ளும் சிரமத்தை மேற்கொண்டேன். ஒரு விஷயம் இந்த அவையில் நேற்று எனது நண்பர் பீஹாரின் பிரதம மந்திரி பேசியதாகும். அவர் கேட்டார்: இந்த அரசியல் நிர்ணய சபைக்குள் லீக் வருவதை இந்தத் தீர்மானம் எவ்வாறு தடுக்க முடியும்? இன்று எனது நண்பர் டாக்டர் சியாமப் பிரசாத் முகர்ஜி வேறொரு கேள்வியை எழுப்பினார். அதாவது இந்தத் தீர்மானம் முரணாக உள்ளதா? இவை மிக முக்கியமான கேள்விகள் என்றும், அவற்றிற்குப் பதிலளிக்கப்பட வேண்டும், திட்டவட்டமாகப் பதிலளிக்கப்பட வேண்டும் என்றும் நான் நினைக்கிறேன். இந்தத் தீர்மானம் பலனை கொண்டுவரும் நோக்கம் கொண்டதா இல்லையா; ஆழமான கணிப்பின் அடிப்படையிலானதா; இது தற்செயலாக நிகழ்ந்ததா? இது எப்படியாயினும் முஸ்லீம் லீகை வெளியில் வைப்பதே அதன் விளைவாக இருக்கும் என்று கருதுகிறேன். இது சம்பந்தமாக, தீர் மானத்தின் 3வது பாராவைத் தங்களின் கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகிறேன்; அது மிகக் கருத்தாழம் மிக்கதும் முக்கியத்துவம் வாய்ந்ததும் ஆகும் என நினைக்கிறேன். பாரா 3 இந்தியாவின் எதிர்கால அரசியல் சாசனத்தைப் படம்பிடித்துக் காட்டுகிறது. இந்தத் தீர்மானத்தை முன்மொழிந்தவரின் நோக்கம் யாது என்பதை நான் அறியேன். இந்தத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டபின், தீர்மானத்தின் 3வது பாராவின் வரையறைகளின்படி ஓர் அரசியல் சாசனத்தை வகுக்கும்படி அரசியல் நிர்ணயசபைக்கு ஓர் ஆணையிடுவது போன்று

அது செயல்படும். பாரா 3 என்ன கூறுகிறது? இந்த நாட்டில் இரு வெவ் வேறான ஆட்சி முறை இருக்கும் என்று பாரா 3 கூறுகிறது; கீழே (அடிமட்டத்தில்) சுயாட்சிஉரிமை பெற்ற மாகாணங்கள் அல்லது சமஸ்தானங்கள் அல்லது ஐக்கிய இந்தியாவில் சேர விரும்பும் மற்ற பிரதேசங்கள் இருக்கும். இந்த சுயாட்சிப் பகுதிகள் முழு அதிகாரங்கள் பெற்றிருக்கும்; மத்திய அரசாங்கத்துக்கு ஒதுக்கப்பட்ட அதிகாரங்கள் போக எஞ்சியுள்ள அதிகாரங்கள் அவற்றிற்கு இருக்கும். மாகாண அரசாங்கங்களுக்கு மேலே ஓர் ஒன்றிய அரசாங்கம் இருக்கும். அது சில விஷயங்களில் சட்டமியற்றி அவற்றை அமுல்படுத்தும் மற்றும் நிர்வகிக்கும். தீர்மானத்தின் இந்தப் பகுதியை நான் படிக்கும்போது, அதாவது ஒன்றியத்திற்கும் மாகாணங்களுக்கும், இடையிலான அமைப்பு பற்றிய எந்தக் குறிப்பையும் என்னால் காணமுடியவில்லை. அமைச்சரவைக் குழுவின் அறிக்கையின் வெளிச்சத்தில், அல்லது வார்தா மாநாட்டில் காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்தின் பகைப்புலனில் இந்தப் பாராவை படித்ததில், மாகாணங்களை குழுக்களாக ஆக்கும் கருத்து பற்றிய எந்தக் குறிப்பும் இல்லாதது பற்றிப் பெருமளவு ஆச்சரியமடைந்தேன். தனிப்பட்ட முறையில் என்னைப் பொறுத்தவரை, மாகாணங்களைக் குழுக்களாக ஆக்கும் கருத்தை நான் விரும்பவில்லை (சபாஷ், சபாஷ்). ஐக்கியப்பட்ட ஒரு பலமான மத்திய அமைப்பையே, 1935 இந்திய அரசாங்கச் சட்டப்படி நாம் ஏற்படுத்திய மத்திய அமைப்பை விட அதிக பலம் வாய்ந்த மத்திய அமைப்பையே நான் விரும்புகிறேன் (சபாஷ், சபாஷ்). ஆனால், ஐயா, இந்த அபிப்ராயங்கள், இந்த விருப்பங்கள் யதார்த்த நிலைமையில் எத்தகைய பிரதிபலிப்பையும் ஏற்படுத்தப் போவது இல்லை. ஒரு நீண்ட பாதையில் நாம் பயணம் செய்துள் ளோம். காங்கிரஸ்கட்சி அதற்கே தெரிந்த காரணங்களால், ஒரு பலமான மத்திய அமைப்பை உடைத்தெறிவதற்கு சம்மதித்துள்ளது. 150 ஆண்டு நிர்வாகத்தின் விளைவாக ஒரு பலமான மத்திய மையம் அமைக்கப்பட்டது; அது வியந்து பாராட்டக்கூடிய, கௌரவமான, பாதுகாப்பளிப்பதான ஓர் ஏற்பாடாகும். ஆனால், காங்கிரஸ் கட்சி அந்த நிலையைக் கைவிட்டு, ஒருபலமான மத்திய அமைப்பு நமக்கு வேண்டாமென்று சொல்லுகிறது; ஓர் இடைத்தட்டான அரசியல் அமைப்புமுறை, அதாவது ஒன்றிய அரசாங்கத்திற்கும் மாகாணங் களுக்குமிடையே ஒரு உப-கூட்டாட்சி அமைப்பு இருக்க வேண்டும் என்று கூறுகிறது. இந்நிலைமையில் மாகாணங்களைக் குழுக்களாக

அமைக்கும் கருத்து பற்றி எந்தக் குறிப்பும் 3வது பாராவில் ஏன் இல்லை என்று தெரிந்துகொள்ள விரும்புகிறேன். காங்கிரஸ், முஸ்லீம் லீக் மற்றும் மாட்சிமை பொருந்திய மன்னர்பிரான் அரசாங்கமும், குழுக்களாகப் பிரிப்பது பற்றிய விதியின் வியாக்கியானம் பற்றி ஒருமித்த கருத்துக் கொண்டிருக்கவில்லை என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. பல்வேறு குழுக்களில் வைக்கப்பட்ட மாகாணங்கள் ஓர் ஒன்றியம் அல்லது உப-கூட்டாட்சி அமைப்பை ஏற்படுத்த ஒப்புக்கொண்டால் அந்த ஆலோசனை பற்றி காங்கிரசுக்கு எந்த ஆட்சேபமும் இருக்காது, குறைந்தபட்சம் அதனை காங்கிரஸ் ஒப்புக் கொள்ளும் என்றே எப்பொழுதும் எண்ணி வந்திருக்கிறேன். அது தவறு என்று காண்பிக்கப்பட்டால் அதைத் திருத்திக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். காங்கிரஸ் கட்சியின் சிந்தனையை நான் சரியாக வியாக் கியானம் செய்திருக்கிறேன். நான் கேட்க விரும்பும் கேள்வி இதுதான்: மாகாணங்களின் ஒன்றியம் அல்லது மாகாணங்களைக் குழுக்களாக அமைக்கும் கருத்தை, தீர்மானத்தை முன்மொழிந் தவரும் அவரது கட்சியும் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கும்போது, தீர்மானத்தில் ஏன் அவர் அதைக் குறிப்பிடவில்லை? ஒன்றியம் என்ற கருத்து தீர்மானத்தின் வாசகத்தில் ஏன் முற்றிலுமாக நீக்கப்பட்டுள்ளது? இதற்கான விடையை என்னால் காணமுடியவில்லை. எனவே, இந்த அவையில் பீஹார் பிரதம மந்திரியும் டாக்டர் சியாம பிரசாத் முகர்ஜி யும் எழுப்பிய இரண்டு கேள்விகளுக்கு, அதாவது மே 16 அறிக்கைக்கு எவ்வாறு இந்தத் தீர்மானம் முரணாக இருக்கிறது அல்லது அரசியல் நிர்ணயசபையில் முஸ்லீம் லீக் நுழைவதை இந்தத் தீர்மானம் எவ்வாறு தடுக்கிறது என்ற கேள்விகளுக்கு பதிலாக நான் கூறுகிறேன். முஸ்லீம் லீக் தொடர்ந்து அவைக்கு வராமல் இருப்பதை, கலந்து கொள்ளாமல் இருப்பதை நியாயப்படுத்த இத் தீர்மானத்தின் பாரா 3ஐ நிச்சயம் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளும். இந்த விஷயம் பற்றி முடிவு எடுப்பதை ஒத்திப்போட வேண்டும் என்ற தமது நிலையை எனது நண்பர் டாக்டர் ஜெயகர் சட்டரீதியான முறையில் வாதித்தார்; அவர் மனத்தைப் புண்படுத்தும் எண்ணம் ஏதும் எனக்கு இல்லை. அவர் வாதத்தின் அடிப்படை இவ்வாறு செய்வதற்கு உங்களுக்கு உரிமை இருக்கிறதா என்பதாகும். அரசியல் நிர்ணயசபை செயல்படுவது பற்றிய பகுதியை அமைச்சரவைக் குழு அறிக்கையிலிருந்து அவர் வாசித்தார். இந்தத் தீர்மானத்தைப் பற்றி முடிவு செய்வதற்கு இந்த அரசியல் நிர்ணயசபை கடைப்பிடிக்கும் செயல்முறை அந்த

அறிக்கையில் வகுக்கப்பட்ட செயல்முறைக்கு முரணாக உள்ளது என்பது அவரது வாதம். ஐயா, இந்த விஷயத்தை வேறுமுறையில் நான் முன்வைக்க விரும்புகிறேன். உடனடியாக, நேராகவே, இந்தத் தீர்மானத்தை நிறைவேற்ற உங்களுக்கு உரிமை இருக்கிறதா, இல்லையா என்பதைப் பரிசீலிக்கும்படி உங்களை நான் கேட்டுக் கொள்ளவில்லை. இவ்வாறு செய்வதற்கு உங்களுக்கு உரிமை இருக்கலாம். நான் கேட்கும் கேள்வி இதுதான்: இவ்வாறு செய்வது விவேகமானதா? அதிகாரம் என்பது ஒரு விஷயம்; விவேகம் என்பது முற்றிலும் வேறான விஷயம்; இந்த விஷயத்தை பின்கண்ட முறையில் பரிசீலிக்க வேண்டுமென விரும்புகிறேன்: அதாவது இது மதிநுட்பம் கொண்டதாக இருக்குமா? இது அரசியல் மேதகைத் தன்மை பெற்றதாக இருக்குமா? இந்தக் கட்டத்தில் இவ்வாறு செய்வது விவேகமாகுமா? இதற்கு நான் அளிக்கும் பதில் அது விவேகமானதாக இருக்காது, புத்திசாலித்தனமானதாக இருக்காது. காங்கிரசுக்கும் முஸ்லீம் லீகிற்குமிடையே உள்ள தாவாவிற்கு தீர்வுகாண மேலும் ஒரு முயற்சி மேற்கொள்ளலாம் என்று யோசனை கூறுகிறேன். ஏனென்றால் இந்த விஷயம் மிகுந்த ஜீவாதாரமானது; மிக முக்கியத்துவம் வாய்ந்தது; ஒருகட்சியின் கௌரவம் அல்லது மற்றொரு கட்சியின் கௌரவம் என்ற அடிப்படையில் மட்டுமே இதற்குத் தீர்வுகாண முடியாது என நிச்சயமாக நம்புகிறேன். நாடுகளின் எதிர்காலங்களை முடிவு செய்யும்போது, நபர்களின் கௌரவம், தலைவர்களின் கௌரவம், கட்சிகளின் கௌரவம் ஆகியவற்றைக் கணக்கில் கொள்ளக்கூடாது. நாட்டின் எதிர்காலம், அதன் குறிக்கோள்தான் முற்றிலுமாக கணக்கில் எடுத்துக்கொள்ளப் பட வேண்டும். அரசியல் நிர்ணயசபையின் நலனுக்கு அதுதான் உகந்தது. இதனால் அது முழுமையானதாக செயல்பட முடியும். முடிவுக்கு வரும்முன் முஸ்லீம் லீகின் பிரதிபலிப்பை அது பெற முடியும்; எனவே நான் டாக்டர் ஜெயகரின் திருத்தத்தை ஆதரிக்கிறேன்; நாம் அவசரப்பட்டுச் செயல்பட்டால் எதிர்காலத்தில் என்ன நிகழும் என்பதை நாம் பரிசீலிக்க வேண்டும். இந்த அவையை தன் பிடியில் வைத்திருக்கும் காங்கிரஸ் மனதில் என்ன திட்டம் உள்ளது என்பது எனக்குத் தெரியாது. அவர்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள எனக்கு மந்திரதந்திர சக்தி ஏதும் இல்லை. அவர்களுடைய யுத்ததந்திரம் என்ன, நடைமுறைத் தந்திரங்கள் யாவை என்பதும் எனக்குத் தெரியாது. எழுந்துள்ள

பிரச்சினை பற்றி வெளிநபர் என்ற முறையில் நான் சிந்தித்ததில் எதிர்காலம் பற்றி முடிவு செய்வதற்கு மூன்று வழிகள் உள்ளதாக எனக்குத் தோன்றுகிறது. ஒன்று, ஒரு கட்சி மற்றொரு கட்சியின் விருப்பத்திற்கு சரணடைய வேண்டும். இது ஒருவழி. மற்ற வழி பேச்சு வார்த்தைகள் மூலம் சமாதானத்தை அடைவது. மூன்றாவது வழி யுத்தம், பகிரங்க யுத்தம். அரசியல் நிர்ணய சபையின் சில உறுப்பினர் களிடமிருந்து கேள்விப்படுகிறேன்- அவர்கள் யுத்தத்திற்குச் செல்லத் தயார் என்று. இந்த நாட்டின் அரசியல் பிரச்சினைகளை யுத்த முறையில் தீர்க்க முடியும் என்று இந்த நாட்டில் ஒருவர் சிந்திக்க முடியும் என்ற எண்ணமே என்னைக் கவலைக்குள்ளாக்குகிறது. இந்தக் கருத்தை நாட்டில் எத்தனைபேர் ஆதரிக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியாது. ஒரு கணிசமான மக்கள் ஆதரிக்கிறார்கள். அவ்வாறு அவர்கள் செய்வதற்கு எனக்குத் தோன்றும் காரணம், அவர்கள் பெரும்பான்மையோர், குறைந்தபட்சம் கணிசமானவர்கள் நினைத்துக் கொண்டிருக்கும் யுத்தம் பிரிட்டிஷ்காரர் களுடனான யுத்தம் என்பதாகும். நல்லது ஐயா! மக்களின் மனதில் உள்ள எதிர் நோக்கும் யுத்தம் ஸ்தலதன்மை கொண்டதாக, கட்டுப்படுத்தக் கூடியதாக இருந்தால், அத்தகைய யுத்த தந்திரத்திற்கு எனக்கு அதிகம் ஆட்சேபனை இல்லாமல் இருக்கலாம். ஆனால், அது பிரிட்டிஷ் காரர்கள் மீதான யுத்தமாக மட்டும் இருக்குமா? சாத்தியமான அளவு தயக்கம் எதுவுமின்றி மிகத் தெள்ளத்தெளிவாக சபை முன்பு எடுத்துக்கூற விரும்புகிறேன். இந்த நாட்டில் யுத்தம் வந்தால், நாம் எதிர்நோக்கும் விஷயத்தோடு அந்த யுத்தம் ஏதாவது சம்பந்தப் பட்டிருந்தால், அது பிரிட்டிஷ்காரர்கள் மீதான யுத்தமாக இருக்காது. அது முஸ்லீம்கள் மீதான யுத்தமாகவே இருக்கும். அது முஸ்லீம்கள் மீதான யுத்தமாக இருக்கலாம்; அல்லது ஒருவேளை மிகவும் மோச மானதாக இருக்கலாம்; பிரிட்டிஷ்காரர்கள், முஸ்லீம்கள் ஆகியோர் மீதான யுத்தமாகவும் இருக்கலாம். எதிர்பார்க்கும் இந்த யுத்தம் நான் பயப்படும் யுத்தத்திலிருந்து எவ்வாறு வேறுபட்டதாக இருக்கும் என என்னால் பார்க்க முடியவில்லை. ஐயா! அமெரிக்காவுடன் சமரசம் செய்து கொள்வது பற்றி புர்கே ஆற்றிய சிறப்பான உரை யிலிருந்து ஒரு பகுதியை இந்த அவையில் படித்துக்காட்ட விரும்பு கிறேன். இந்த அவையின் மனோநிலையில் இது ஓரளவு தாக்கத்தை ஏற்படுத்தும் என்று நம்புகிறேன். தங்களுக்குத் தெரியும் கலகக் கொடியைத் தூக்கிய ஐக்கிய அமெரிக்காவின் காலனிகளை அவர்

களின் விருப்பத்திற்கு மாறாக அடக்கி அடிமைப்படுத்த பிரிட்டிஷ் மக்கள் முயற்சி செய்து கொண்டிருந்தனர். இந்தக் காலனிகளை அடக்கி ஆள வேண்டுமென்ற இந்த கருத்துக்கு எதிராக புர்கே கூறியது இதுதான்:

''முதலாவதாக, ஐயா, படைபலத்தை உபயோகிப்பது தற்காலிகமானது மட்டுமே எனக் கூற அனுமதியுங்கள். அது ஒரு சமயத்திற்கு பணிய வைக்கலாம்; ஆனால் மீண்டும் கீழ்ப்படிய வைப்பதற்கான அவசியத்தை அது நீக்கிவிடவில்லை. தொடர்ந்து அடக்கியாளப்படும் நாடு ஆட்சி செய்யப் படுவதில்லை.

''என்னுடைய அடுத்த ஆட்சேபனை, அதன் நிச்சயமற்ற தன்மை யாகும்.'' பயங்கரம் எப்பொழுதும் ஆயுதபலத்தின் விளைவாக அல்ல; ஆயுதங்கள் ஒரு வெற்றியல்ல. நீங்கள் வெற்றிபெற வில்லையெனில், உங்களுக்கு வழிமுறை இல்லாமல் போகும். சமரசம் தோற்றால், படைபலமே எஞ்சுகிறது. படைபலம் தோற்றால், சமரசத்திற்கான நம்பிக்கை போய் விடுகிறது. பலமும் அதிகாரமும் சில சமயங்களில் அன்பால் வாங்க முடிகிறது. பலஹீனமடைந்த, தோற்கடிக்கப்பட்ட பயங்கரவாதத்தால் அவற்றைப் பிச்சையாக ஒருபொழுதும் பெற முடியாது......

"படைபலத்திற்கு மேலும் ஒரு ஆட்சேபனை. அதை பாதுகாப்பதற்கான உங்கள் முயற்சிகள் மூலமே உங்கள் லட்சியத்தை பழுதாக்குகிறீர்கள். நீங்கள் எதற்காகப் போராடினீர்களோ அது அல்ல நீங்கள் திரும்பப் பெறுவது. மாறாக, அது போராட்டத்தில் மதிப்பிழந்து, மூழ்கி வீணாகி நாசமாகி விடுகிறது."

ஆழமான அர்த்தம் பொதிந்த இந்த வார்த்தைகளை புறக் கணிப்பது அபாயகரமானதாகும். இந்து-முஸ்லீம் பிரச்சினையை பலத் தின் மூலம் தீர்க்கும் திட்டம் எவர் மனதிலும் இருந்தால் இப் பிரச்சினைக்கு யுத்தம் மூலமாகத் தீர்வு காண்பது என்பதே அதற்குப் பொருள்; அதாவது அவர்கள் சம்மதம் இன்றித் தயாரிக்கப்படும் அரசியல் சாசனத்திற்கு அவர்களைச் சரணடைய வைப்பதற்காக அவர்களைக் கீழ்ப்படுத்த இந்த நாடு இடைவிடாமல் ஈடுபட வேண்டும். அம்மாதிரி கீழ்ப்படுத்துவது ஒரு தடவையில் முடியாது, காலம் பூராவும் நீடிக்கும். நான் எடுத்துக் கொண்ட நேரத்தை விட அதிக நேரத்தை எடுத்துக் கொள்ள விரும்பவில்லை. புர்கே கூறிய வற்றை மீண்டும் குறிப்பிட்டு என் உரையை முடித்துக் கொள்வேன். அதிகாரத்தை அளிப்பது சுலபம். ஆனால் விவேகத்தை அளிப்பது கஷ்டம் என்று புர்கே கூறியுள்ளார். இறையாண்மை அதிகாரத்தைத்

தனக்குத்தானே இந்த அவை எடுத்துக் கொண்டிருந்தால், அவற்றை விவேகத்துடன் கையாள்வோம் என்று நமது நடத்தைமூலம் நாம் நிரூபிப்போம். இந்த ஒரே வழி மூலமே நாட்டின் எல்லாப் பகுதியினரையும் நம்முடன் அழைத்துச் செல்ல முடியும். வேறு எந்தப் பாதையும் நம்மை ஐக்கியத்திற்கு இட்டுச் செல்லாது. இதுபற்றி நமக்கு எந்த ஐயமும் இருக்க வேண்டாம்.

★ ★ ★

## அடிப்படை உரிமைகள் பற்றிய இடைக்கால அறிக்கை

[1]**மாண்புமிகு பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு:** ஒரு அசாதாரணமான, கஷ்டமான பிரச்சினையை அரசாங்கம் எதிர்நோக்குகிறது; விதி 8 (2), இன்றைய நிலவரங்கள் சம்பந்தமாக விசித்திரமான அலட்சியம் காட்டுகிறது. தெளிவாக வரையறுக்கப்படும் சில நிபந்தனைகளின்கீழ் மட்டுமே இந்த உரிமை வழங்கப்பட வேண்டும் என நினைக்கிறேன்.

**டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** (வங்காளம் - பொது): அவரது பேச்சில் குறுக்கிட நான் விரும்பவில்லை; ஆனால் விதி 8 (2) [1]பற்றி கையாளும்போது அந்த விதி பூராவும் பற்றி அவர் ஒரு தவறான எண்ணத்தை வெளியிடுகிறார் என்பதை இங்கு நான் குறிப்பிட்டாக வேண்டும்.[2]

**டாக்டர் பி. பட்டாபி சீத்தாராமய்யா:** (சென்னை: பொது): தமது கருத்தை தகுந்த உதாரணத்துடன் தெளிவாக விளக்குவதற்குப் பதிலாக, அவர் தகுதி பற்றிய விவாதத்தில் இறங்கியுள்ளார்.

---

1. அ.நி.ச. விவாதங்கள்; தொகுதி III, 1947 ஏப்ரல் 29, ப. 402.

2. விதி (2) யின் வாசகம் வருமாறு: ''சிறுபான்மையினர் மற்றும் மலைவாழ் மக்களின் பாதுகாப்பு உள்ளிட்ட பொது நலனுக்கு அவசியமாகும் நியாயமான கட்டுப்பாடுகளை விதிக்கும் சட்டப்படியான வரையறை ஏற்படுத்தப்படலாம்.''

**மாண்புமிகு பண்டித ஹிருதயநாத் குன்ஸ்ரு:** ஐயா, ஒரு பாராளுமன்றவாதியாக, நான் செய்வது என்ன என்பதை நீங்கள் அறிவீர்கள். டாக்டர் அம்பேத்கரின் ஆட்சேபனையைப் பொறுத்த வரை, நான் கூறுவது - அதை நீங்கள் புரிந்து கொள்வீர்களென நம்புகிறேன். காப்பு வாசகத்தையும் சேர்த்து விதி முழுவதையும் வாசிக்கிறேன்.

**திரு.தலைவர்:** அவர் விளக்கிக் கூறவிரும்பும் விஷயத்தை விளக்கிக் கூறுவதோடு நிறுத்திக் கொள்ளும்படியும், முன்மொழி வின் தகுதி பற்றி எதுவும் கூற வேண்டாமென்றும் உறுப்பினரைக் கேட்டுக் கொள்கிறேன்.

★ ★ ★

## விதி 11 - சுதந்திரத்திற்கான உரிமைகள்

[1]**மாண்புமிகு சர்தார் வல்லபாய் பட்டேல்:** விதி 11 கட்டாய மாக வேலை வாங்குவது பற்றி பின்வருமாறு கூறுகிறது :

''11 (அ) மனித ஜீவன்களை வணிகப் பொருள் போல் பாவித்து வேலை வாங்குவது, மேலும்

(ஆ) ஒரு குற்றத்திற்காக தண்டனையாக முறையாகத் தண்டிக்கப்பட் டிருந்தாலொழிய, கட்டாய வேலை வாங்குவது, அல்லது விருப்ப மற்ற அடிமைத்தனம் உட்பட எந்த உருவத்திலும் கட்டாயமாக வேலை வாங்குவது,

இதன்மூலம் தடைசெய்யப்படுகிறது, இந்தத் தடையை மீறுவது ஒரு குற்றமாகும்.''

விளக்கம்:

''இனம், மதம், சாதி, வர்க்கம் என்ற அடிப்படையில் பாரபட்சம் காட்டாமல் பொதுநல நோக்கங்களுக்காக கட்டாயச் சேவையை புகுத்துவதை இந்த உப-பிரிவில் எதுவும் தடுக்காது.''

நாம் இதை விவாதித்து, தனியான விதிகளுக்குப் பதிலாக, சுருக்கி தெளிவாகப் புரிந்து கொள்ளும் முறையில் அதை ''மனிதர் களை இழிவான முறையில் வாணிகம் செய்வது'' என்ற பிரிவில் உட்படுத்த வேண்டும்.

★ ★ ★

1. அ.நி.ச. விவாதங்கள்; தொகுதி III, 1947 மே 1, ப. 478.

*[1]டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (வங்காளம்: பொது) : நான் கூற விரும்புவது, உபவிதி(அ)வையும் (ஆ) வையும் கச்சிதமாக இணைத்து வாசகத்தை மாற்றி எழுதுவதற்கு எனக்கு ஆட்சேபனை இல்லை; ஆயினும் விளக்கத்தை நீக்கிவிடுவது ஆலோசனைக் குழுவின் பெரும்பான்மை உறுப்பினர்களின் விருப்பத்திற்கு உகந்ததாக இருக்குமா என்பது பற்றி அதாவது கட்டாயச் சேவையை கொண்டுவர அரசுக்கு அதிகாரம் இருக்கக்கூடாது என்பது பற்றி, கொஞ்சம் சந்தேகம் எனக்கு இருக்கிறது. திரு.முன்ஷி பின்வருமாறு கூறினார்: விதியின் வாசகம் மாற்றி எழுதப்பட்டால், விளக்கம் நீக்கப்பட்டுவிட்டால், அப்படியும் கட்டாய ராணுவ சேவையை கொண்டுவர அரசுக்கு உரிமை இருக்கும். உத்தேச மாற்றம், அதாவது விளக்கத்தை நீக்கிவிட்டால், அதன் விளைவு என்னவாயிருக்கும் என்று சிந்தித்துப்பார்க்க எனக்குப் போதுமான அவகாசம் கிடைக்கவில்லை. விளக்கத்தை நீக்குவதும், கூறப்பட்டபடி விதியை வைத்திருப்பதும் எதிரான மற்றும் பாதகமான விளைவுகளை ஏற்படுத்தும் என அஞ்சுகிறேன். ஏனெனில், 'பேகர்' என்பதும் அரசால் திணிக்கப்படுவதுபோன்றதுதான். நான் அறிந்தவரை சில பொதுக் காரியங்களுக்காக, 'பேகர்' அரசால் கோரப்படுகிறது. 'பேகர்' வைத்துக் கொள்வதிலிருந்து அரசு தடுக்கப்பட்டால், கட்டாய இராணுவ சேவையும்கூட 'பேகர்' என்று ஒருவர் வாதிப்பது முற்றிலும் சாத்தியமே. எனவே, இந்தக் கட்டத்தில் விளக்கத்தை எடுத்துவிடுவது விரும்பத்தக்க ஒன்று என்று நான் திருப்தியடையவில்லை. இந்த விஷயத்தில் திட்டவட்டமான எந்தச் செயல்முறையையும் பற்றி ஆலோசனை கூறும் நிலையில் நான் இல்லை. விளக்கத்தை எடுத்துவிடுவது ராணுவ காரியங்களுக்கோ அல்லது சமூகக் காரியங்களுக்கோ கட்டாயச் சேவையை கோரும் அரசுக்கு உள்ள உரிமை மீது எந்த விளைவை ஏற்படுத்தும் என்பது பற்றி என் மனதில் உள்ள சந்தேகத்தின்பால் இந்த அவையின் கவனத்தைத் திருப்பினால் நான் எனது கடமைகளை போதுமான அளவு நிறைவேற்றியவனாவேன் என்று நினைக்கிறேன். எனது ஆலோசனை என்னவெனில் இந்தக் கட்டத்தில் நாம் விளக்கத்தை நீக்கக்கூடாது; அது இருப்பது போலவே இருக்கட்டும். மாகாண அரசியல் சாசனம் மற்றும் கூட்டாட்சி அரசியல் சாசனம் அவற்றின் இறுதியான வடிவில் வகுக்கப்படும் போது விஷயம் முழுவதும் மறுபரிசீலனை செய்யப்படலாம்.*

---

*1. அ.நி.ச. விவாதங்கள்; தொகுதி III, 1947 மே 1, ப. 480.*

[1]**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஓர் ஆலோசனையை நான் அளிக்கலாமா? சர் அல்லாடி கிருஷ்ணசுவாமி அய்யரின் வாதங்களை நாம் கேட்டோம். ஐக்கிய அமெரிக்காவின் உச்சநீதிமன்றத் தீர்ப்பு களைத் தாம் படித்தவரை, விளக்கம் (அங்கு) இல்லாமல் இருந் தாலும், கட்டாய ராணுவ சேவையை வைத்துக்கொள்ள அரசு அனுமதிக்கப்படும் என்று அவர் கூறினார். அதிர்ஷ்டவசமாக, சர் அல்லாடி கவனத்தில் கொண்டுள்ள அதே வழக்குகளை பற்றிக் கவனம் செலுத்த எனக்கு சந்தர்ப்பம் கிடைத்தது. நான் கூறுவதை அவர் ஒப்புகொள்வார் என்று நினைக்கிறேன். உச்ச நீதிமன்றம் அளித்த தீர்ப்பின் வாதத்தை அவர் பார்ப்பாரானால், அவர்கள் வாத ஆதார கருத்தின் அடிப்படையில் துவங்கியுள்ளனர் என்பதை அவர் காணமுடியும். அதாவது ஓர் அரசியல் அமைப்பில், சுதந்திரமான பிரஜைக்குத் தனது அரசாங்கத்தை ஆதரிக்கும் கடமை உள்ளது. ஒவ்வொரு பிரஜைக்கும் சர்க்காரை ஆதரிக்கும் கடமை உள்ளது. எனவே, கட்டாய இராணுவ சேவை ராணுவச் சட்டம் அரசுக்கு ஏற்கனவே செய்ய கடமைப்பட்டுள்ள கடமையை செய்யும்படி பிரஜைக்கு அறைகூவல் விடுப்பதைத் தவிர வேறொன்றும் செய்யவில்லை. அரசைப் பாதுகாக்க கட்டாய ராணுவ சேவையின் அவசியம் பற்றிய மிக முக்கிய விஷயத்திற்கு இது ஆபத்தான அஸ்திவாரம் என்று பணிவுடன் கூறுகிறேன்.

இந்தியாவின் உச்சநீதிமன்றம் எத்தகைய வாதத்தை முன் வைக்கும் அல்லது முன்வைக்காது என்பதோடு நாம் திருப்தி அடைந்து விடக்கூடாது என்று கூறுகிறேன். எனவே, என்னுடைய ஆலோசனை என்னவெனில், பிரஜா உரிமை பற்றிய மற்ற விதி விஷ யத்தில் மேலும் பரிசீலனை செய்வதற்காக அதை ஒரு சிறிய குழு வுக்கு அனுப்பி வைக்க மனமுவந்து தாங்கள் ஒத்துக்கொண்டது போல, இந்த விஷயத்திலும் விளக்கத்தை வைத்துக் கொள்ள வேண்டுமா இல்லையா என்பதை ஒரு சிறிய குழுவுக்கு அனுப்புவது விரும்பத்தக்கதாகும். அந்தச் சிறியக் குழு அவைக்கு அறிக்கையைச் சமர்ப்பிக்கும். அப்பொழுது, இந்த விஷயம் பற்றி ஒரு சரியான முடிவுக்கு வருவது அவைக்கு சாத்தியமாகும்.

**திரு. தலைவர்:** டாக்டர் அம்பேத்கர் முன்வைத்த ஆலோ சனை அவை ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இருப்பின், மேலும் விவாதம் எதுவும் நடத்த அவசியமிருக்காது என்று கருதுகிறேன்.

1. அ.நி.ச. விவாதங்கள்; தொகுதி III, 1947 மே 1, ப. 483-484.

**திரு. ஆர்.கே. சித்வா** (மத்திய மாகாணம்-பேரார்: பொது) கட்டாய இராணுவ சேவை என்பது பற்றிய விஷயம் இங்கு விவா திக்கப் படலாம்.

**திரு. தலைவர்:** கட்டாய இராணுவ சேவை நமக்கு வேண்டுமா வேண்டாமா என்பதை நாம் இங்கு முடிவு செய்யவில்லை. கேள்வி என்னவெனில், அடிப்படை உரிமைகளின் கீழ் கட்டாய இராணுவ சேவை தடுக்கப்படுகிறதா என்பதே. மற்ற விதி அனுப்பி வைக்கப் பட்ட அதே குழுவுக்கு இதையும் அனுப்பிவைப்பது சிறந்ததாகும் என எண்ணுகிறேன்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** விதி 11 முழுவதையுமா.

**திரு.தலைவர்:** ஆம். விதி 11 முழுவதையும்.

விதி அனுப்பி வைக்கப்பட்டது.

★ ★ ★

## விதி 17

[1] **மாண்புமிகு சர்தார் வல்லபாய் பட்டேல்:** ஐயா, விதி 17 ஐ நான் முன்மொழிகிறேன்:

> "நிர்ப்பந்தம் அல்லது தகாத செல்வாக்கின் மூலம் ஒரு மதத்திலிருந்து மற்றொரு மதத்திற்கு மாற்றப்படுவது சட்டத்தால் அங்கீகரிக்கப்படாது."

**திரு.கே.எம்.முன்ஷி:** கீழ்க்கண்ட திருத்தத்தை பிரேரேபிக்க விரும்புகிறேன், ஐயா.

> "17 ஆம் விதிக்குப் பதிலாக கீழ்கண்ட விதியை மாற்றாக வைக்கலாம். எந்த ஒரு நபரையோ அல்லது 18 வயதுக்குக் கீழான மைனரையோ மோசடி மூலம், நிர்ப்பந்தம் அல்லது தகாத செல்வாக்கின்மூலம் ஒரு மதத்திலிருந்து மற்றொரு மதத்திற்கு மாற்றம் செய்யப்படும் எதுவும் சட்டத்தால் அங்கீ கரிக்கப்படாது."

[2] **டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, மைனர் குழந்தைகள் மதமாற்றம் செய்யப்படுவது சம்பந்தமாக திரு.முன்ஷி பிரேரேபித்த

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி III, 1947 மே.1, ப.488.
2. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி III, 1947 மே.1, ப.501-02.

திருத்தத்தோடு எனக்கு உடன்பாடில்லை என்று கூறுவதற்கு வருந்து கிறேன். மைனர் சிறுவர்களை மதமாற்றம் செய்வது சம்பந்தமான இந்த விஷயம் அடிப்படை உரிமைகள் குழுவால் அல்லது சிறுபான்மையினர் உப-குழுவால் பரிசீலிக்கப்படவில்லை என்ற கருத்தை அதனுடைய வாசகம் ஒருவேளை கொடுக்கிறது போலும். இந்தப் பிரச்சினை பற்றி பெருமளவு பரிசீலிக்கப்பட்டது என்றும் ஒவ்வொரு அம்சமும் விவாதிக்கப்பட்டது என்றும் இந்த அவைக்கு உறுதிகூற நான் விரும்புகிறேன். பிரச்சினை முழுவதும் அதன் எல்லா அம்சங்களிலும், பரிசீலிக்கப்பட்ட பின்புதான், இதனால் எழக்கூடிய எல்லாக் கஷ்டங்களையும் கணக்கில் எடுத்துக்கொண்டு, இந்த விதி அதனுடைய இப்போதுள்ள வாசகத்தில் இருக்க வேண்டு மென்று ஆலோசனைக் குழு முடிவுக்கு வந்தது.

ஐயா, என்மனதிற்கு கஷ்டம் தெளிவாகத் தெரிவதால், இந்த திருத்தத்தை கைவிடும்படி திரு. முன்ஷியை கேட்டுக்கொள்வதைத் தவிர வேறுவழி எதுவும் எனக்குத் தெரியவில்லை.

குழந்தைகளைப் பொறுத்தவரை, மூன்று வகையினர் உள்ள னர்: முதலாவது, பெற்றோர்கள் பொறுப்பாளர்களாக உள்ள குழந்தை கள். அனாதைக் குழந்தைகள், அவர்களுக்குப் பெற்றோர்கள் இல்லை, சட்டரீதியான முறையில் பொறுப்பாளரும் இல்லை. 18 வயதுக்குக் கீழ்ப்பட்ட குழந்தைகளை மதமாற்றம் செய்வதைத் தடுக்கும் இந்தப் பிரிவு இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம்; அனாதைகளாக உள்ள குழந்தைகளின் நிலை என்னவாக இருக்கும்? அவர்களுக்கு எந்தவிதமான மதமும் இருக்கக் கூடாதா? அவர்கள் மீது அன்பான அக்கறை கொள்ளும் ஒருவரால் எந்த மதபோதனை யையும் அவர்களுக்கு அளிக்க முடியாதா? எனக்குத் தோன்றுவது என்னவெனில், திரு.முன்ஷி தந்துள்ள வாசகத்தில் உள்ள திருத் தத்தை ஏற்றுக்கொண்டால், அதாவது 18 வயதுக்குக் குறைவாக உள்ள குழந்தைகள் மதமாற்றம் செய்யப்படக்கூடாது என்பது அனாதைகளாகவும் தங்களுக்குச் சட்டப்படியான பொருப்பாளர் கள் இல்லாதவர்களாகவும் உள்ள குழந்தைகள் எந்தவிதமான மத போதனையையும் பெற முடியாது என்பதாகும். இத்தகைய விளைவை அவை விரும்பாது என்று உறுதியாக நம்புகிறேன். எனவே, திரு. முன்ஷி பிரேரேபித்த திருத்தத்தின் செயல்பாட்டிலிருந்து இத்தகைய பிரிவினருக்கு விதிவிலக்களிக்கப்பட வேண்டும்.

அடுத்து, மற்ற பிரிவான பெற்றோர்களையும் பொறுப்பாளர் களையும் கொண்டுள்ள குழந்தைகள் விஷயத்துக்கு வருகிறேன். அவர்கள் இரண்டு பகுதியினர்களில் அடங்குவர். தெளிவு பெறுவதற் காக, அவர்கள் விவகாரங்களை தனித்தனியாக பரிசீலிக்கலாம்; முதல் பகுதியினர் இவர்களின் பொறுப்பாளர்கள் அல்லது பெற்றோர் களுக்குத் தெரிந்தே அவர்கள் சம்மதத்துடன் மதமாற்றம் செய்யப் பட்ட குழந்தைகள். அடுத்த பகுதியினர் மதமாற்றம் செய்து கொண்ட பெற்றோர்களின் குழந்தைகள்.

சட்டப்படியான காப்பாளர்களைப் பெற்றுள்ள மைனர் குழந்தைகள், அந்த சட்டபூர்வ காப்பாளர்களுக்குத் தெரியாமல், அவர்களின் சம்மதமில்லாமல் மதம் மாற்றம் செய்யப் படுவதற்குத் தடை இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது. இது மிக நியாயமான யோசனையாகும். சட்டப்படியான காப்பாளராக உள்ள ஒருவரின் கீழ் உள்ள ஒரு குழந்தை காப்பாளர் பதவிச் சட்டத்தின்படி அந்தக்குறிப்பிட்ட குழந்தையின் மதபோதனையை முறைப்படுத் தவும் கட்டுப்பாட்டிற்குள் வைக்கவும் உரிமை பெற்றவரின் கீழ் உள்ள குழந்தையை மதம் மாற்றம் செய்ய விரும்பும் ஒரு மதபோதகர், குழந்தை வேறு மதத்திற்கு மாற்றப்படுகிறது என்பதை அந்த நபர் அல்லது காப்பாளர் தெரிந்து கொள்வதற்கு அவருக்குள்ள உரிமை களைப் பறிக்கக்கூடாது. இது ஒரு நல்ல பரிந்துரை, இதற்கு ஆட்சேபனை எதுவும் இருக்க முடியாது என்றே கருதுகிறேன்.

ஆனால், மற்ற விவகாரத்திற்கு நாம் வரும்போது, பெற்றோர் கள் மதமாற்றம் செய்து கொண்டார்கள் எனில், அப்பொழுது ஒரு கடுமையான பிரச்சினையை நாம் எதிர்நோக்குகிறோம் என்று நினைக்கிறேன். பெற்றோர்கள் மதமாற்றம் செய்யப்பட்டிருக்கலாம்; ஏனெனில் அவர்கள் - 18 வயதுக்கு மேற்பட்ட மேஜர்கள்-ஆனால் 18 வயதுக்குட்பட்ட மைனர்கள் அவர்களின் குழந்தைகள் என்ற போதிலும், பெற்றோர்களுடன் அவர்களை மத மாற்றம் செய்யக் கூடாது என்று நீங்கள் சொல்லப் போகிறீர்கள் என்றால், நாம் பரிசீலிக்க வேண்டிய கேள்வி, இந்தக் குழந்தைகளுக்கு எந்த ஏற்பாட்டை நாம் செய்து கொடுக்கப் போகிறோம்? ஒரு பெற்றோர் கிருஸ்தவ மதத்திற்கு மாற்றம் செய்யப்பட்டிருக்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். அவர்களுடைய ஒரு குழந்தை மரணமடை

கிறது என்று வைத்துக்கொள்வோம். கிருஸ்துவ மத போதனையில் வளர்ந்துள்ள பெற்றோர் இறந்த குழந்தையை கிருஸ்தவ முறைப்படி அடக்கம் செய்கிறார் எனில் அது சட்டப்படி குற்றமாகக் கருதப் படுமா? மற்றொரு விஷயத்தை எடுத்துக்கொள்ளுங்கள். மதம் மாற்றம் செய்துகொண்ட ஒரு பெற்றோருக்கு ஒரு மகள் இருக்கிறாள் என்று வைத்துக்கொள்வோம். கிறிஸ்தவ சடங்குகளின்படி அந்த மகளுக்குத் திருமணம் செய்துவைக்கிறார்கள். அந்தத் திருமணத்தின் விளைவு எதுவாக இருக்க முடியும்? அந்தத் திருமணம் எந்தப் பலனை ஏற்படுத்தும்? அந்தத் திருமணம் சட்டப்படிச் செல்லுமா அல்லது செல்லாதா?

குழந்தைகளை மதமாற்றம் செய்யக்கூடாது என்று நீங்கள் விரும்பினால், தாங்கள் குழந்தைகளின் மீது செல்வாக்கைப் பிரயோ கிக்கவும் அவர்களின் மதவாழ்க்கையை உருவாக்கவும் பெற்றோர் களுக்கு உள்ள உரிமைகளை பிரயோகிப்பதனின்றும் அவர்களைத் தடுக்க காப்பாளர்பதவி சம்பந்தமான மற்றொரு வகையான சட்டத்தை நீங்கள் இயற்றவேண்டும். உதாரணமாக பெற்றோர்கள் கிறிஸ்தவ மதத்தை அல்லது அவர்கள் முன்பு இல்லாத மற்றொரு மதத்தை ஏற்றுக்கொண்டார்கள் என்பதற்காக ஒரு ஐந்து வயது குழந்தை அவனது பெற்றோரிடமிருந்து பிரிக்கப்பட வேண்டும் என்பதை இந்த அவை ஏற்றுக்கொள்வது சாத்தியமா என்று கேட்க விரும்பு கிறேன். இந்தக் கஷ்டங்களை நான் குறிப்பிடுவதற்குக் காரணம், அடிப்படை உரிமைகள் குழு, சிறுபான்மையினர் குழு மற்றும் ஆலோசனைக் குழு எதிர்நோக்கியவை இக்கஷ்டங்களையே என்றும் இதனால் இந்த ஆலோசனையை நிராகரிக்க வேண்டி வந்தது என்றும் எடுத்துக் காட்டவேதான், இந்த யோசனையை, அதாவது 18 வயதுக்குக்கீழ் உள்ளவர்களை மதமாற்றம் செய்யக்கூடாது என்பதை ஏற்றுக்கொள்வது பல சீர்குலைவுகளுக்கும் தீங்கான விளைவுகளுக் கும் இட்டுச்செல்லும் என்று நாங்கள் உணர்ந்ததால்தான், இந்த விஷயம் முழுவதையும் விட்டுவிடுவது நல்லது என்று நாங்கள் எண்ணினோம். *(ஆதரவான ஆரவாரக் குரல்)*. அடிப்படை உரிமைகள் பற்றிய 17வது விதியில் இதுபற்றி நாங்கள் குறிப்பிடாததால், மட்டுமே, சட்டமன்றம் தனது பணியைத் துவக்கும்போது, இந்த விஷயத்தை முறைப்படுத்துவதற்காக எந்தச் சட்டத்தையும் இயற்று

வதை தடுக்காது என்பது என்னுடைய கணிப்பு. எனவே மேலும் பரிசீலனைக்காக, இந்த விதியை மீண்டும் குழுவுக்கு அனுப்புவது எந்த விதமான நல்ல பலனையும் ஏற்படுத்தப் போவதில்லை என்பது என் கருத்து. இதுபற்றி வேறுவிதமாக கருதுபவர்களால் இந்த விஷயம் மேலும் பரிசீலனை செய்யப்படுவது பற்றி எனக்கு எந்த ஆட்சேபமும் இல்லை. ஆனால், எல்லா (மூன்று) குழுக்களும் இந்த விஷயம் பற்றித் தங்களின் மிக உயரிய கவனத்தை அளித்தன என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். எனவே, இந்த விஷயத்தின் எல்லா அம்சங்களையும், சூழ்நிலைகளையும் கணக்கில் எடுத்துக்கொண்டு, மிகச் சிறந்த மார்க்கம் இந்த விதியை முற்றிலுமாக விட்டுவிடுவது தான் என்ற முடிவுக்கு வந்துள்ளேன். சட்டப்படியான, சட்டரீதியான, பாதுகாப்பாளர்கள் பெற்றுள்ள குழந்தைகளை பெற்றோர்களுக்குத் தெரியாமல் மதமாற்றம் செய்யக்கூடாது என்ற ஒரு ஷரத்தை ஏற்படுத்துவது பற்றி எனக்கு ஆட்சேபனை எதுவும் இல்லை. இந்த விஷயத்தைப் பொறுத்தவரை இதுபோதும் என்று கருதுகிறேன்.

★ ★ ★

*(இந்த விதி பரிசீலனைக்காக ஆலோசனைக் குழுவிற்கு திரும்ப அனுப்பப்படுகிறது)*
*- ஆசிரியர்*

### விதி 18. கலாசார மற்றும் கல்வி உரிமைகள்

[1]*மாண்புமிகு சர்தார் வல்லபாய் பட்டேல்:* விதி 18ஐ இப்பொழுது முன்மொழிகிறேன். ''1. நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் உள்ள சிறு பான்மையினர், அவர்களின் மொழிகள், எழுத்து வடிவம், கலை சம்பந்தமாக பாதுகாக்கப்படுவர். இது விஷயமாக கொடுமைப்படுத்தும் முறையில் அல்லது ஒருதலை சார்பாக கேடு விளைவிக்கும் முறையில் எந்தச் சட்டங்களும் விதிமுறைகளும் நிறைவேற்றப்பட மாட்டா.

(2) அரசின் கல்வி நிறுவனங்களில் சேர்வது பற்றி எந்தச் சிறு பான்மைப் பிரிவினருக்கும் மதம், சமூகம் அல்லது மொழி அடிப்படையில் பாரபட்சம் காட்டப்பட மாட்டாது; அல்லது எந்தமத போதனையையும் அவர்கள் மீது கட்டாயமாகச் சுமத்தக்கூடாது.

(3) (அ) நாட்டின் எந்த ஒருபகுதியிலும், சமூகம் அல்லது மொழி அடிப்படையிலான எல்லாச் சிறுபான்மையினருக்கும் தாங்கள் விரும்பும் கல்வி நிறுவனங்களை அமைத்து நிர்வகிக்க சுதந்திரம் உண்டு.

1. அ.நி.ச.-விவாதங்கள், தொகுதி III, 1947, மே 1, பக்கம் 503.

*(ஆ) அரசு மான்யம் வழங்குவதில் மதம், சமூகம் அல்லது மொழி அடிப்படையிலான சிறுபான்மையினரின் நிர்வாகத்தில் உள்ள பள்ளி களுக்கு எதிராக அரசு பாரபட்சம் காட்டாது.''*

அவை ஏற்றுக் கொள்வதற்கு இந்த விதியை முன்மொழி கிறேன்.

**திரு. மோகன்லால் சாக்சேனா** (ஐக்கிய மாகாணங்கள் - பொது): ஐயா, மறுபரிசீலனைக்காக இந்த விதி ஆலோசனைக் குழு வுக்கு அனுப்பப்பட வேண்டுமென்று தங்கள் அனுமதியுடன் பிரரே பிக்கிறேன். மறுபரிசீலனை தேவைப்படுகிற சில அம்சங்கள் உள்ளன; மொத்தத்தில், இந்த விதி முழுவதையும் மறுபரிசீலனைக்காக ஆலோசனைக் குழுவிற்கு திருப்பி அனுப்பி வைப்பது மிகவும் நல்லது என நினைக்கிறேன்.

**திரு. தலைவர்:** மேற்கொண்டும் பரிசீலனைக்காக ஆலோ சனைக் குழுவிற்கு இந்த விதி திருப்பி அனுப்பப்பட வேண்டும் என்று மோகன்லால் சாக்சேனா பிரேரேபிக்கிறார்.

★ ★ ★

[1]**திரு. கே.எம். முன்ஷி:** விதி 18 ன் உப-விதி (2) ஐ ஆலோ சனைக் குழுவிற்குத் திருப்பி அனுப்ப வேண்டுமென நான் பிரரே பிக்கிறேன். நடைபெற்ற விவாதத்தின் வெளிச்சத்தில் இந்த விதி மறுபரிசீலனை செய்யப்பட வேண்டும் என்பது பல உறுப்பினர் களின் பொதுவான உணர்வாகும்.

[2]**டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** திரு.தலைவர் அவர்களே, - இந்தத் திருத்தங்கள் திரு.முன்ஷியும் திரு.தியாகியும் முன்மொழிந்த திருத்தங்கள் - என்னைப் பெரிதும் வியப்புக்குள்ளாக்கிவிட்டன. இந்த விதி 18 ஏன் குழுவுக்குத் திருப்பி அனுப்பப்பட வேண்டும் என்பதற்கு எந்தக் காரணத்தையும் அவர்கள் கொடுக்கவில்லை. ஒருவர் புரிந்து கொள்ளமுடியும் எனில், இந்த ஆலோசனைக்கான ஒரே காரணம் என்னவெனில் சிறுபான்மையினரின் உரிமைகள்

---

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி III, 1947, மே 1, பக்கம் 504
2. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி III, 1947, மே 1, பக்கம் 507-508.

ஒப்பீட்டு முறையில் இருக்க வேண்டும் என்பது; அதாவது, ஹிந்துஸ் தான் நிலப்பரப்பில் உள்ள சிறுபான்மையினருக்கு நாம் அளிக்க விரும்பும் உரிமைகளை நிர்ணயிக்கும் முன்பு, பாகிஸ்தான் அவை யால் சிறுபான்மையினருக்கு அளிக்கப்படும் உரிமைகள் யாவை என்று பொறுத்திருந்து பார்க்க வேண்டும். ஐயா. உரிய மரியாதை யுடன், இந்தக் கருத்தை நான் குறை கூறியே ஆகவேண்டும். சிறுபான்மையினரின் உரிமைகள் முழுமையானவையாக வரம் பற்றவையாக இருக்க வேண்டும். தனது அதிகார எல்லைக்குள் உள்ள சிறுபான்மையினருக்கு மற்றவர்கள் என்ன செய்ய விரும்புவார்கள் என்பதை அடிப்படையாகக் கொண்டு அவை இருக்கக்கூடாது. மற்றொரு அரசின் அதிகார எல்லைக்குள் இருக்கும், நாம் அக்கறை கொண்டுள்ள சிறுபான்மையினர், நமது ஆட்சி எல்லைக்குள் உள்ள சிறுபான்மை யினருக்கு நாம் அளித்துள்ள அதே உரிமைகளை பெறவில்லை எனில், அதை ராஜீய உறவு ரீதியில் எடுத்துக்கொண்டு அந்தக் குறைபாடுகள் நீக்கப்படுவதற்கு அரசு ஆவன செய்ய வேண்டும். ஆனால் மற்றவர்கள் என்ன செய்தபோதிலும், நமது சொந்தக் கணிப்பில் எது சரி யென்றுபடுகிறதோ அதை நாம் செய்வது நமது தார்மீகக் கடமையாகும் என நினைக்கிறேன். விதி 18ல் குறிப்பிட்டுள்ள உரிமைகள்-மற்றபிற பரிசீலனை எதுவாக இருந் தாலும் - ஒவ்வொரு சிறுபான்மையினரும் பெற உரிமையுள்ள உரிமைகளாகும் எனக் கருதுகிறேன். நாம் அளித்துள்ள முதல் உரிமை அவர்களது மொழி, எழுத்து வடிவம் மற்றும் கலாசாரத்தை அவர்கள் பயன்படுத்தும் உரிமையாகும். அரசின் கல்வி நிறுவனங்களில் சேர்வதற்கு ''மதம், மொழி முதலான அடிப்படையில் எந்த பார பட்சமும் இருக்காது'' என்று நாம் குறிப் பிட்டுள்ளோம். எந்தச் சிறுபான்மைப் பிரிவும் அது நிறுவ விரும்பும் கல்வி நிறுவனத்தை அமைப்பதிலிருந்து தடுக்கப்பட மாட்டாது'' என்று கூறியுள்ளோம். சிறுபான்மையினரால் நடத்தப்படும் பள்ளி களுக்கோ அல்லது பிற கல்வி நிறுவனங்களுக்கோ மான்யம் வழங்க எப்பொழுது அரசு முடிவும் செய்தாலும், அந்த மான்யம் வழங்குவதில், மதம், சமூகம் அல்லது மொழியின் அடிப்படையில் எத்தகைய பாரபட்சமும் காட்டப்பட மாட்டாது என்றும் கூறப்பட்டுள்ளது. விதி18ல் குறிக்கப் பட்டுள்ள இந்த உரிமைகள் பற்றி ஆட்சேபம் எதுவும் இருக்க முடியும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. எப்படி

யாயினும் இது குழுவுக்கு திருப்பி அனுப்பப்பட வேண்டுமென்ற இந்தத் தீர்மானக் கோரிக்கையை ஆதரித்த எவரும் ஒரு சிறுபான்மை யினர் பெற வேண்டிய உரிமைகளை விட இந்த உரிமைகள் அதிக மானவை என்றோ, அத்தகைய சிறுபான்மையினர் அவற்றைப் பெற வேண்டியவையல்ல என்றோ எந்த வாதத்தையும் முன்வைக்க வில்லை. இந்த ஷரத்துக்களை உருவாக்கிய மூன்று குழுக்களின் கடின உழைப்பை, அவசர கோலத்தில் சில காரணங்களுக்காக இந்த விஷயம் குழுவுக்கு அனுப்பப்பட வேண்டும் எனச் சிலர் விரும்புகிறார்கள் என்பதற்காக மட்டுமே தள்ளிவிடுவது மிகப் பரிதாப கரமானதாக எனக்குத் தோன்றுகிறது. இன்றைய வடிவில் உள்ள உபவிதி (2) குறித்து எனது நண்பர் திரு.முன்ஷிக்கு என்ன ஆட்சேபனை இருக்கமுடியும் என்று என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை; ஆனால் குழுவுக்கு இந்த உப-விதி திருப்பி அனுப்பப்பட வேண் டியது அவசியமென்றால், ஆட்சேபனை எதையும் நிச்சயமாக நான் எழுப்ப மாட்டேன். உப-விதி திருப்பி அனுப்பப்படலாம். ஏனெனில் இந்த விஷயத்தை அரசின் கல்வி நிறுவனங்களோடு நாம் கட்டுப் படுத்திக் கொண்டோம்; அரசு மானியம் மட்டுமே பெறுபவை பற்றி நாம் எதுவும் கூறவில்லை. இதுகுறித்து மேலும் தெளிவு தேவை யெனில், இந்த விஷயத்தை குழுவுக்குத் திருப்பி அனுப்பலாம். ஆனால், உப-விதி (2) ஐ திருப்பி அனுப்புவதற்குச் சாதகமாகக் கூறுவதற்கு ஏதாவது இருந்தாலும், விதி முழுவதற்கும் இந்த வாதத்தை நீடிக்கமுடியும் என்பதை என்னால் பார்க்க முடியவில்லை. உப-விதி (2) ஐத் தவிர இப்பொழுது உள்ளபடியே விதியை நிறை வேற்றலாம் என்று கருதுகிறேன். தேவைப்பட்டால் உப-விதி (2) ஐ பரிசீலனைக்காக குழுவுக்குத் திரும்ப அனுப்பலாம்.

★ ★ ★

[1]திரு. தலைவர்: இப்பொழுது ஐவர் கமிட்டிக்கு அனுப்பப் பட்ட இரண்டு விதிகள் உள்ளன. அவற்றை ஒன்றன்பின் ஒன்றாக நாம் எடுத்துக் கொள்ளலாம். புதிய விதி 3 இப்பொழுது பிரேரே பிக்கப்படலாம்.

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி III, 1947, மே.2, பக்கம். 526.

**ஒன்றிய அரசியல் சாசனக் குழுவின் அறிக்கை**

**விதி 3**

**திரு.கே.எம். முன்ஷி:** மூலவிதிக்குப் பதிலாக கீழ்க்கண்ட விதி மாற்றீடு செய்யப்படலாம்:

> ''ஒன்றியத்திலுள்ள ஒவ்வொரு நபரும், அதன் அதிகார எல்லைக் குட்பட்டு, ஒவ்வொரு நபரின் பிறப்பின்போது அவரது பெற்றோரில் ஒருவர் ஒன்றியத்தின் பிரஜையாக இருந்திருந்தாலும் மேலும் ஒன்றியத்தில் குடியுரிமை உடையவராக ஆக்கப்பட்டாலும் அத்தகைய ஒவ்வொரு நபரும் ஒன்றியத்தின் பிரஜையாவார்.''
>
> ஒன்றியக் குடியுரிமையைப் பெறுவது மற்றும் நீக்குவது சம்பந்த மான விதிகளை ஒன்றியச் சட்டத்தின் மூலம் நிறைவேற்றலாம்.

தனிக் குழுவின் அறிக்கையில் காரணங்கள் முழுமையாக அளிக்கப்பட்டுள்ளன. அத்துடன் சேர்த்துக்கொள்ள என்னிடம் எதுவு மில்லை.

**திரு. கே. சந்தானம்:** ஐயா, இந்த விதியின் முதல் பாராவின் முடிவில் சேர்த்துக் கொள்ளப்படுவதற்காக கீழ்க்கண்டதை பிரேரே பிக்கிறேன்:

> ''ஒன்றியம் துவங்கப்படுவதற்கு முன்பு பிறந்த, அல்லது இந்தியா வில் குடியுரிமைபெற்ற ஒவ்வொருவரும், அதன் அதிகார எல்லைக்கு உட்பட்டு ஒன்றியத்தின் பிரஜையாவார்.''

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (பம்பாய்: பொது): திரு. தலைவர் அவர்களே, திரு.சந்தானத்தால் எழுப்பப்பட்ட விஷயம் அதிமுக்கியத்துவம் வாய்ந்ததாகும் என்பதில் சந்தேகம் எதுவும் இருக்க முடியாது. இந்த விஷயத்தை மிக்க கவனத்தோடு நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். குழுவால் வரையப்பட்ட விதியின் முதல் வாக்கியத்தை ஒருவர் கவனமாகப் படிப்பாராயின், நம்முன் எழுந்துள்ள கஷ்டத்தைப் பார்க்க முடியும். வாசகம் கூறுகிறது: ''ஒன்றியத்தில் பிறந்த ஒவ்வொரு நபரும்''. இது எதிர்காலத்தைக் குறிப்பிடுகிறது. அதாவது ஒன்றியம் அமைக்கப்பட்ட பின் பிறந்தவர்

களைப் பற்றிக் குறிப்பிடுகிறது என்பது தெளிவு. கேள்வி இதுதான்: இந்தியாவில் பிறந்த நபர்களின், அதாவது ஒன்றியம் அமைவதற்கு முன்பு பிறந்த நபர்களின் நிலை என்னவாக இருக்கும்? எனது கணிப்பில், இம்மாதிரியானவர்களையும் சேர்த்துக் கொள்வதற்கு வேறு ஒரு விதியை நாம் கொண்டுவர வேண்டும். ஒரு திருத்தம் என்று நான் ஆலோசனை கூறவில்லை; ஒரு கருத்தை முன்வைக்கி றேன். புதிய விதி இது மாதிரியாக இருக்கும்:

> "பொதுவிதிகள் சட்டத்தில் வரையறுத்தபடி இந்தியாவில் பிறந்த எல்லா நபர்களும் மேலும், ஒன்றியத்தில் வாழ்ந்து கொண்டிருப்பவர்களும், ஒன்றியத்தின் ஆட்சி எல்லைக்கு உட்பட்டு, ஒன்றியத்தின் குடியுரிமை பெற்றவர்களாக இருப்பர்."

இம்மாதிரியான அடிப்படையில் இருக்க வேண்டியது அவசியம்; இந்தியாவில் பிறந்த மக்களை, ஒன்றியம் அமையும்போது ஒன்றியத்தின் குடிமக்களாக இருக்கும் மக்களை இது கவனித்துக் கொள்ளும். இந்த விதி இல்லாவிடில், பெரும் எண்ணிக் கையில் மக்கள் நாட்டின் குடிமக்களாக இல்லாமல் போவர். தேசம் இல்லா மல் போகும். எனவே, விதி முழுவதையும் மேற்கொண்டும் பரி சீலனைக்காக அனுப்புவது நல்லது என்று ஆலோசனை கூறுகிறேன்.

**திரு. தலைவர்:** விதி முழுவதும் மேற்கொண்டும் பரிசீலனைக் காக நிறுத்தி வைக்கப்பட வேண்டும் என்ற ஆலோசனை அளிக்கப் பட்டுள்ளது.

**திரு. ஆர்.கே. சித்வா:** வழக்கறிஞர்களுக்கு மட்டுமான விஷயம் அல்ல இது. ஒவ்வொரு நபருடனும் இது சம்பந்தப்பட்டது.

**திரு. தலைவர்:** ஆலோசனைக் குழு இதை பரிசீலிக்க அதிகாரம் பெற்றுள்ளது; அது கருதினால், அடுத்தக் கூட்டத்தில் ஆலோசனைகள் எதையும் அது முன்வைக்கலாம்.

(விதி 3 நிறுத்தி வைக்கப்படுகிறது.)

★ ★ ★

## விதி 24

[1]மாண்புமிகு சர் என்.கோபாலசுவாமி ஐயங்கார்: ஐயா, விதி 24ஐ முன்மொழிகிறேன்:

> ''இந்த அரசியல் சாசனத்தின் கீழ் கூட்டரசு அமைப்புக்கும் மாகாணங்களுக்கும் நடைபெறும் தேர்தல்களை மேற்பார்வையிடுவது, வழி நடத்துவது, கட்டுப்பாட்டிற்கு உட்படுத்துவது, அத்தகைய தேர்தல்களால் அல்லது அவை சம்பந்தப்பட்ட சந்தேகங்களையும் தாவாக்களையும் தீர்த்துவைப்பது, தேர்தல் தீர்ப்பாயங்களை நியமிப்பது உட்பட எல்லாவற்றையும் பற்றிய அதிகாரம் குடியரசுத்தலைவர் நியமிக்கும் ஒரு கமிஷனிடம் அளிக்கப்படும்.''

ஐயா, இந்த விதியின் நோக்கம் நாட்டில் கூட்டரசுத் தேர்தல்கள் அல்லது மாகாணத் தேர்தல்கள் பாரபட்சமற்ற முறையில் நடத்தப்படுவதை உத்தரவாதம் செய்வதாகும். அதேபோல் இத்தகைய தேர்தல் நடவடிக்கைகளின் மற்றும் தேர்தலை அடுத்த நடவடிக்கைகளின் பல்வேறு அம்சங்களை முறைப்படுத்தி கட்டுப்படுத்துவதற்காகவே குடியரசுத் தலைவரால் ஒரு கமிஷன் அமைக்கப்படுகிறது.''

★ ★ ★

[2]டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (பம்பாய்: பொது): திரு.துணைத் தலைவர் அவர்களே, இந்த விதியின் தோற்றுவாய் பற்றி இந்த அவைக்கு எடுத்துச் சொல்வது விரும்பத்தக்கது என நினைக்கிறேன்.

ஒன்றியம் பற்றிய அரசியல் சாசனத்தில் இந்த விதி இருந்த போதிலும், உண்மையில் இந்த விஷயம் அடிப்படை உரிமைகள் குழுவால் பரிசீலிக்கப்பட்டது. இன்று ஆட்சியில் உள்ள நிர்வாக அமைப்பின் பொறுப்பில் தேர்தல்கள் விடப்பட்டால், சிறுபான்மையினர் பற்றியும் தேர்தல்கள் பற்றியும் எந்த உத்தரவாதத்தையும் அளிக்கமுடியாது என்ற முடிவுக்கு அடிப்படை உரிமைகள் குழு வந்தது. நிர்வாக அமைப்பின் அதிகாரப் பொறுப்பில் தேர்தல்கள் நடந்தால், அதிகாரத்தில் இருக்கும் கட்சிக்கு அல்லது அரசாங்கத்திற்கு ஆதரவாக உள்ள வேட்பாளருக்கு ஆதரவைப் பெறும் நோக்கத்துடன் ஒரு வட்டாரத்திலிருந்து மற்றொரு வட்டாரத்திற்கு

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி IV, 1947, ஜூலை 29, ப. 915.
2. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி IV, 1947, ஜூலை 29. பக்கம் 917-18.

அதிகாரிகளை மாற்றும் அதிகாரம் நிர்வாக அமைப்புக்கு இருந்தால் நாம் எல்லோரும் விரும்பும் சுதந்திரமான தேர்தல்களை அது பாதிக்கும். எனவே, தேர்தல்கள் சுதந்திரமாகவும், பாதுகாப்பாகவும், நேர்மையாகவும் நடைபெறுவதற்கு நிர்வாக அமைப்பின் கரங்களி லிருந்து தேர்தல் விஷயத்தை எடுத்து சுதந்திரமான அதிகாரம் பெற்ற ஓர் அமைப்பிடம் அளிப்பது என்று அடிப்படை உரிமைகள் குழுவின் உறுப்பினர்களால் ஏகமனதாக முடிவு செய்யப்பட்டது. அடிப்படை உரிமைகள் குழு பரிசீலித்த இத்திட்டம் விதி 23ல் குறிப்பாகக் கூறப் படாவிடினும், அடிப்படை உரிமைகள் குழு உறுப்பினர்களின் மனதில் இருந்த திட்டம் இந்தியா முழுவதும் தேர்தல்களை கையாளக் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படும் ஒரு மத்திய கமிஷன் இருக்க வேண்டும் என்பதுதான். உத்தேசத் திட்டத்தின் நோக்கம் தேர்தல்களை மேற்பார்வையிடவும் வழி காட்டவும் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்பட்ட ஒரு மத்திய கமிஷன் இருக்க வேண்டும் என்பது என்றாலும், டில்லியில் அல்லது மத்திய அரசாங்கம் அமைந்துள்ள இடத்தில் (தலைநகரில்) அமர்ந் திருக்கும் ஒரே ஒரு கமிஷன் மட்டுமே இருக்கும் என்று கருதப்பட வில்லை. திட்டம் என்னவெனில், ஒரு மத்தியக் கமிஷன் இருக்கும்; அது கூட்டரசின் நாடாளுமன்றத்திற்கான, தேர்தல்களைக் கவனித்துக் கொள்ளும். இந்தக் கமிஷன் ஒவ்வொரு மாகாணத்திற்கும் தனக்குக் கீழே இயங்கும் ஒரு தனிக் கமிஷனை வைத்துக் கொள்ள முடியாத படி மிகச் சிறிய மாகாணமாக இருந்தால், இரண்டு அல்லது மூன்று மாகாணங்களை இணைத்து அவற்றிற்கு ஒரு கமிஷன் இருக்கும். தேர்தல்களைப் பொறுத்தவரை தங்கள் பணிகளை ஒவ்வொரு ஸ்தல கமிஷனும் செய்ய முடியும். ஆரம்பம்முதலே கருத்து என்னவெனில், மையப்படுத்தாமல் கிளை கமிஷன்களுக்கு அதிகாரம் பகிர்ந்தளிக்கப் பட வேண்டும் என்பதேயாகும். கூட்டரசு நாடாளுமன்றத் தேர்தலுக்கு ஒரு மத்தியக் கமிஷன், பல்வேறு மாகாணங்களில் தேர்தல்கள் நடத்த பலகமிஷன்கள் என்பதே திட்டம். இந்தத் திட்டம் நடைமுறைக்கு வந்தால், தமது திருத்தத்தை பிரேரேபித்த திரு.படாஸ்கர் மனதில் உள்ள விஷயம் வெற்றி பெறும்; ஏனெனில், அவரை நான் புரிந்து கொண்டவரை அவர் விரும்பியது என்னவெனில் அந்தந்த மாகாணத் தில் தேர்தல்கள் சம்பந்தமாக கவனித்துக் கொள்ள ஒரு ஸ்தல அதிகார அமைப்பு அல்லது ஸ்தலக் கமிஷன் இருக்க வேண்டும் என்பதுதான். எங்களது நோக்கம் இதுவாக இருந்த போதிலும், அந்தத் திட்டம் விதி 24ல் குறிப்பிடப்படவில்லை. அவர்கள் மனதில் இருந்த விஷயம் சந்தேகமில்லாமல் அதுதான். எனினும் எனது நண்பர் திரு.படாஸ்கர்

இன்னமும் தமது திருத்தத்தை நிறைவேற்ற வேண்டுமென வற்புறுத்து வாராயின், அவரிடம் ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன்: அவர் தயாரித்த திருத்தத்தை நீங்கள் படிக்கும்போது ஒரு விஷயம் சந்தேக மாக உள்ளது. ''எல்லாத் தேர்தல் களும்'' என்ற வார்த்தைகளை நீக்கிவிட்டு அவற்றிற்கு பதிலாக ''கூட்டரசு அமைப்பின் எல்லாத் தேர்தல்களும்'' என்ற வார்த்தைகள் இருக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார். ஒரு விஷயத்தில் அவர் என்னைத் திருப்திப் படுத்தினால், அவரது திருத்தத்திற்கு எனக்குப் பெரிய ஆட்சேபனை எதுவும் இருக்காது. கோட்பாட்டை ஒத்துக் கொள்கிறாரா இல்லையா என அவரைக் கேட்க விரும்புகிறேன்; அந்தக் கோட்பாடு பற்றித் தான் நாம் எல்லோரும் அக்கறை கொண் டிருக்கிறோம்; அவரைக் கேட்க நான் விரும்புவது இதுதான்: தேர்தல்கள் நிர்வாக அமைப் பிற்கு வெளியே ஒரு சுதந்திரமான அமைப்பின் பொறுப்பில் விடப்பட வேண்டும் என்பதை அவர் ஏற்றுக்கொள்கிறாரா? இதை அவர் ஒப்புக்கொண்டால் தனிப்பட்ட முறையில் ஏற்கனவே நான் கூறியபடி, அவையின் ஒப்புதலோடு விதி 24ல் உள்ள அதேமாதிரி யான விதியை அரசியல் சாசனத்தின் மாகாணம் பற்றிய பகுதியில் சேர்த்துக் கொள்வதில் எனக்கு ஆட்சேபம் ஏதும் இல்லை. மத்தியப் படுத்தப்படும் ஆசை எனக்கில்லை. தேர்தலின்போது அச்சமயம் அதிகாரத்திலிருக்கும் அரசாங்கத்தின் பொறுப்பிலிருந்து தேர்தல் களை நடத்தும் பணி அகற்றப்பட வேண்டும் என்பதே எங்கள் மனதில் இருந்தது.

*(அடிப்படை உரிமைகள் பற்றியும் சிறுபான்மையினர் பற்றியும் ஓர் ஆலோசனைக்குழு அமைக்கப்பட வேண்டுமென அமைச்சரவைக்குழு சிபாரிசு செய்திருந்தது. அதன்படி 1947 ஜனவரி 24ம் தேதி ஒரு தீர்மானத்தின் மூலம் சர்தார் பட்டேல் தலைமையில் ஓர் ஆலோசனைக்குழு அமைக்கப்பட்டது. குழுவில் 50 உறுப் பினர்கள் இருந்தனர்; அதில் டாக்டர் அம்பேத்கரும் ஒருவர். தனது பணியை எளிதாக்க, கீழேகண்ட நான்கு உப-குழுக்களை ஆலோ சனைக்குழு நியமித்தது.)*

1. *அடிப்படை உரிமைகள் உப-குழு.*
2. *சிறுபான்மையினர் உப-குழு.*
3. *வடமேற்கு எல்லை மலைவாழ்மக்கள் வட்டாரங்கள் உப-குழு.*
4. *விடப்பட்ட அல்லது பகுதியாக விடப்பட்ட வட்டாரங்கள் (அஸ்ஸாமில் உள்ளதைத் தவிர மற்றவை) உப-குழு.*

முதல் இரண்டு உபக்குழுக்களில் உறுப்பினராக அம்பேத்கர் இருந்தார்; அவற்றின் பணிகளில் தீவிர அக்கறை கொண்டார். அடிப்படை உரிமைகள் உபகுழுவுக்கு ஓர் அறிக்கை சமர்ப்பித்தார்; அதில் அவர் தம் கருத்துகளுக்கு ஸ்தூலமான உருவம் தந்தார். ''மாகாணங்களும் சிறுபான்மையினரும், அவர்களின் உரிமைகள் யாவை? சுதந்திர இந்தியாவின் அரசியல் சாசனத்தில், அவற்றைப் பெற்றுத் தருவது எவ்வாறு?'' என்ற தலைப்பில் இந்த அறிக்கை பின்பு பிரசுரிக்கப்பட்டது. அரசியல் நிர்ணயசபையும் இதர மூன்று குழுக்களை நியமித்தது. அவை: 1. ஒன்றிய அதிகாரக்குழு 2. ஒன்றிய அரசியல் சாசனக் குழு மற்றும் 3. மாகாண அரசியல் சாசனக்குழு. பிரதம மந்திரி பண்டித ஜவஹர்லால் நேரு முதல் இரு குழுக்களின் தலைவராக இருந்தார்; மூன்றாவது குழு சர்தார் வல்லபாய் பட்டேலைத் தலைவராகக் கொண்டது. 1947 ஏப்ரல் 30ல் ஒரு தீர்மானம் மூலம் இந்தக் குழுக்கள் அமைக்கப்பட்டன. டாக்டர் அம்பேத்கர், ஒன்றிய அரசியல் சாசனக் குழுவின் உறுப்பினராக இருந்தார். அவையின் தலைவரிடம் அந்தக் குழுவின் அறிக்கை அதன் தலைவர் பண்டித நேருவால் சமர்ப் பிக்கப்பட்டது. பல்வேறு உப-குழுக்களில் டாக்டர் அம்பேத்கர் ஆற்றிய பணி மிகவும் பயனுள்ளதாக இருந்ததாகக் கருதப்பட்டது; சுதந்திரத்தை வலுப்படுத்துவதும், உரிய சட்டங்களை இயற்றுவதும் டாக்டர் அம்பேத்கரின் சேவையின்றி சுலபமல்ல என்பதைக் காங்கிரஸ் பெருந்தலைவர்கள் நன்கு உணர்ந்து கொண்டனர். வங்காளப் பிரிவினையின் விளைவாக அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினராகவும் அவர் இருக்க முடியாது போயிற்று. அரசியல் நிர்ணயசபையில் டாக்டர் அம்பேத்கர் இடம்பெறுவதை மிகக் கடுமையாக எதிர்த்த காங்கிரஸ் கட்சி அவரை வேட்பாளராக முன்மொழிய முன்வந்தது.

அரசியல் நிர்ணய சபையின் தலைவர் டாக்டர் ராஜேந்திர பிரசாத் பம்பாயின் அன்றைய பிரதமர் திரு.பி.ஜி.கெர்க்கு எழுதிய தமது 1947 ஜூன் 30ம் தேதியக் கடிதத்தில் டாக்டர் அம்பேத்கரை உடனே தேர்ந்தெடுக்கும்படி கேட்டுக்கொண்டார். ''மற்ற எந்த பரிசீலனைக்கும் மேலாக, அரசியல் நிர்ணய சபையிலும், பல்வேறு குழுக்களிலும் டாக்டர் அம்பேத்கரின் பணி மிகச் சிறப்பாக உள்ளதால் அவரது சேவையை இழக்கக்கூடாது. தாங்கள் அறிந்துள்ளது போல், அவர் வங்காளத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்த மாகாணத்தின் பிரிவினைக்குப் பின் அவர் அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினராகத் தொடர்ந்து இருக்க இயலாது போயிற்று.

*ஜூலை 14ம் தேதி நடைபெறும் அரசியல் நிர்ணய சபையின் கூட்டத்தில் அவர் அவசியம் கலந்துகொள்ள வேண்டுமென்றும் நான் அக்கறை கொண்டுள்ளேன். எனவே அவர் உடனே தேர்ந்தெடுக்கப் பட வேண்டியது அவசியம்.'' அதன்படி, அரசியல் நிர்ணயசபையின் உறுப்பினராக பம்பாயிலிருந்து டாக்டர் அம்பேத்கர் மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதற்கு அடுத்து, சுதந்திரம் பெறும் சமயத்தில் 1947 ஆகஸ்ட் 15ல் அமைக்கப்பட்ட அமைச்சரவையில் சேரும்படி அவருக்குப் பிரதம மந்திரி நேரு அழைப்பு விடுத்தார். டாக்டர் அம்பேத்கர் அந்த அழைப்பை ஏற்று இந்தியாவின் முதலாவது சட்ட அமைச்சர் ஆனார். அரசியல் சாசனத்தை உருவாக்கும் கடமை அளிக்கப்பட்ட வரைவுக் குழுவின் தலைவராக ஆகஸ்டு 29ம்தேதி அவர் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். காங்கிரஸின் ஒரு பலமான எதிரியாக இருந்த டாக்டர் அம்பேத்கர் அரசியல் அமைப்பு விஷயங்களில் அவர்களின் நண்பராக, சித்தாந்த வாதியாக, வழிகாட்டியாக ஆனார். - ஆசிரியர்.)*

□ □ □

# வரைவு அரசியல் சாசனத்தை ஆழ்ந்து பரிசீலிப்பதற்கான குழு

[1]**திரு. சத்திய நாராயண சின்ஹா:** ஐயா, பின்வருமாறு பிரேரே பிக்கிறேன்: "அவையில் எடுக்கப்பட்ட முடிவின்படி அவையின் அலுவலகத்தில் தயார் செய்யப்பட்ட வரைவு அரசியல் சாசனத்தை ஆழமாகப் பரிசீலிக்கவும் தேவைப்படும் திருத்தம் பற்றி ஆலோசனை வழங்கவும் கீழ்க்கண்ட நபர்கள் கொண்ட குழுவை நியமிக்க அவை தீர்மானிக்கிறது:

(1) திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்.

(2) திரு. என். கோபாலசுவாமி ஐயங்கார்.

(3) மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்.

(4) திரு. கே.எம். முன்ஷி.

(5) சய்யித் முகமது சாதுல்லா.

(6) திரு. பி.எல். மிட்டர்.

(7) திரு. டி.பி. கயித்தான்"

*(தீர்மானம் நிறைவேற்றப்பட்டது - ஆர்)*

## அரசியல் நிர்ணய சபையின் பணிகள் குழுவின் அறிக்கை

[2]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (பம்பாய் : பொது): அவையின் 1947 ஆகஸ்டு 20ம் தேதி முடிவின்படி தலைவரால் நிய மிக்கப்பட்ட குழு, 1947 இந்திய சுதந்திரச்சட்டத்தின் கீழ் அரசியல்

---

1. அ.நி.ச. விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை தொகுதி V, 1947 ஆகஸ்டு 29, பக். 293-294.
2. அ.நி.ச. விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை தொகுதி V, 1947 ஆகஸ்டு 29, பக். 310-312

நிர்ணய சபையின் பணிகள் மீதான அறிக்கையைப் பரிசீலிக்க இந்த அவை துவங்குகிறது என்பதைப் பிரேரேபிக்கிறேன்.

ஐயா, குழுவின் அறிக்கை ஏற்கனவே அவையின் உறுப்பினர்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டுள்ளது; குறைந்தது கடந்த இரு நாட்களாக அறிக்கை உறுப்பினர்களின் கரங்களில் இருப்பதால், இந்தக் கட்டத்தில், இந்த அவையின் பணிபற்றிப் பெரிய அளவில் விவரிக்க வேண்டுமென்று நான் நினைக்கவில்லை. முதலில், குழுவின் சிபாரிசுகள்மீது கவனத்தை ஈர்த்தால், அதுபோதும் என்று நான் எண்ணுகிறேன்.

மொத்தத்தில், ஐந்து பரிந்துரைகளைக் குழு செய்துள்ளது. அதனுடைய முதல் பரிந்துரை என்னவெனில், சட்டமன்றமாக (பேரவையாக) செயல்பட அரசியல் நிர்ணயசபைக்கு முடியும்; அது அவ்வாறு செயல்பட வேண்டும்; (2) சட்டமன்றமாக அது செயல்படும்போது, சாத்தியமான அளவு தேவைப்படும் திருத்தங்களோடு சட்டப் பேரவையின் விதி முறைகளை அது வகுத்துக் கொள்ள வேண்டும்; (3) அரசியல் நிர்ணயசபையின் தலைவரது உத்தரவுகளின்கீழ் தேவையான திருத்தங்கள் செய்யப்பட வேண்டும்; (4) அரசியல் சாசனத்தை உருவாக்கும் அவை என்ற அரசியல் நிர்ணய சபையின் பணியும், சாதாரண சட்டப் பேரவையாக செயல்படும் போதான பணியும் பிரிக்கப்பட வேண்டும்; தனித் தனிக் கூட்டங்களாக தனித் தனித் தேதிகளில் நடத்தப்பட வேண்டும்; (5) அவையின் கூட்டங்களைத் தள்ளிவைக்கும் அதிகாரம் தலைவரிடம் இருக்க வேண்டும்; இந்திய அரசாங்கச் சட்டத்தை மாற்றி அமைத்ததில் கண்டுள்ளது போல அது கவர்னர்-ஜெனரலிடம் இருக்காது. இந்தப் பரிந்துரைகளைச் செய்தபின், தங்களின் பரிந்துரைகளை நடைமுறைப்படுத்துவதில் கஷ்டங்கள் இருக்கின்றனவா என்பதைக்குழு பரிசீலித்தது; இந்தப் பரிந்துரைகளை நடைமுறைப்படுத்தும் விஷயத்தில் தீர்வு காணப்பட வேண்டிய மூன்று சிரமங்கள் இருப்பதை குழு கண்டது.

முதலாவது, இரு அமைப்புகளிலும், அதாவது அரசியல் நிர்ணய சபையிலும் சட்டப் பேரவையிலும் தலைமை தாங்குபவர் ஒரே நபராக இருக்க வேண்டுமா என்பது. இந்தச் சிரமம் எழுந்ததற்குக் காரணம் இந்திய அரசியல் சட்டப் பேரவைத் தலைவர் பற்றிய அரசாங்கச் சட்டத்தில் 22வது பிரிவு இந்திய சுதந்திரச் சட்டத்தில் மாற்றி அமைக்கப்படும்போது விலக்கப்பட்டது; இதன்

விளைவாக இரண்டிலும், அரசியல் சாசனத்தை வகுக்கும் அவை யிலும் சட்டப்பேரவையாக செயல்படும்போதும் வழிநடத்துபவர் தலைவரே. சாதாரணமாகக் கூறுவதெனில், இது எந்தக் கஷ்டத் தையும் ஏற்படுத்தக்கூடாது. தலைவராக இருப்பவர் அரசின் ஓர் அமைச்சர் என்றால், இந்தக்கஷ்டம் எழலாம். அரசின் அமைச்சராக உள்ள தலைவர் அரசியல் சாசனத்தை வரையும் அவையாக அரசியல் நிர்ணயசபை இயங்கும்போது, அது ஒழுங்கு மீறிய ஒன்றாக இருக் கும்; எனவே, இரண்டில் ஒரு வழியைப் பின்பற்றவேண்டும் என குழு நினைத்ததால் தலைவர், அமைச்சராக இருக்கக்கூடாது; அவர் அமைச்சராகத் தொடர்ந்து இருந்தால், சட்டமன்றம் ஒரு சபாநாயகர் அல்லது துணைத்தலைவர் என்று அழைக்கப்படும் ஒரு அதிகாரி யைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவரது பணி, சட்டங்கள் இயற்று வதற்காக அரசியல் நிர்ணயசபை கூடும்போது அதற்கு தலைமை தாங்கி நடத்துவதாகும்.

குழுவை எதிர்நோக்கிய இரண்டாவது சிரமம் சமஸ்தானங் களின் பிரதிநிதிகள் பற்றியதாகும்; உரிய சட்டங்கள் இயற்றுவதற் காக அரசியல் நிர்ணயசபை கூடும்போது, இந்திய அரசாங்கச் சட்டம் ஏழாவது அட்டவணை பட்டியல் 1ல் குறிப்பிடப்பட்டிருக்கும் பிரதேசம் முழுவதும் அதன் செயற்பாட்டுக்கு உட்பட்டதாகும் என்பதை இந்த அவை நினைவிற்கொள்ளும். மேலும் பட்டியல் 1ல் இடம்பெற்றுள்ள விஷயங்களுடன் அறவே ஒத்துப்போகாத இணைப்பு ஒப்பந்தம் என்பதாக ஓர் ஒப்பந்தத்தின் அடிப்படையில் இந்திய சமஸ்தானங்கள் தற்போது அரசியல் நிர்ணயசபையில் சேர்ந் துள்ளன என்பதையும் இந்த அவை கணக்கிலெடுத்துக்கொள்ளும். உண்மையில், இணைப்பு ஒப்பந்தத்தில் இடம்பெற்றுள்ள விஷ யங்கள் பட்டியல் 1ல் இடம்பெற்றிருக்கும் விஷயங்களுடன் ஒப்பிடும் போது கணிசமான அளவுக்குக் குறைவானவையாகும். எனவே, இங்கு எழும் கேள்வி இதுதான். இணைப்பு ஒப்பந்தப்படி அரசியல் நிர்ணயசபையில் உறுப்பினர்களாக இருப்பவர்களும், இணைப்பு ஒப்பந்தத்துக்குக் கட்டுப்பட்டவர்களும் குறைந்த எண்ணிக்கை யிலுள்ள விஷயங்களுக்கு மட்டுமே பொறுப்பானவர்களுமான ஒரு குழுவினர் இணைப்பு ஒப்பந்தப் பட்டியலில் இடம்பெறாத இதர சில விஷயங்களைப் பற்றிய விவாதங்களிலும் தீர்மானங்களிலும் பங்கு கொள்ளலாமா? இந்த விஷயத்தை இருவழிகளில் சந்திக்க லாம். இவற்றில் ஒருவழி 'உள்ளும் மற்றும் வெளியிலும்' என்ற வழி முறையை அனுசரிப்பது; அதாவது, ஒப்பந்தத்திலும் பட்டியல்-1லும் பொதுவாக உள்ள விஷயங்களை விவாதிக்கும்போது அவையில்

அமர்ந்து வாக்கு அளிக்க அவர்களை அனுமதிக்கலாம்; அவையில் விவாதிக்கப்படும். ஒரு விஷயம் ஒப்பந் தத்தில் இடம்பெறாததாக இருந்தால், விவாதத்தில் கலந்துகொள்ள அவர்களை அனுமதிக்கக் கூடாது. நடைமுறைக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும்போது, இரண்டாவது வழி கொள்கை ரீதியில் அதிகம் தர்க்கரீதியாக இருந்த போதிலும், நாம் இன்றுள்ள சூழ்நிலையில் அத்தகைய பாகுபாடு செய்ய வேண்டியதில்லை என்ற முடிவுக்கு குழு வந்தது; இரண்டு பட்டியல்களுக்கும் இடையே உள்ள வேறுபாடுகள் எதுவாக இருந் தாலும் எல்லா விஷயங்கள் பற்றிய விவாதங்களிலும் சமஸ்தானப் பிரதிநிதிகள் தொடர்ந்து பங்கு வகிக்க வேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டது.

தாங்கள் கவனம் செலுத்த வேண்டும் என்று குழு கருதிய மூன்றாவது விஷயம் அமைச்சர்களின் நிலை பற்றியதாகும். அரசியல் நிர்ணய சபையில் தற்பொழுது உறுப்பினர்கள் அல்லாத அமைச் சர்கள் சிலர் உள்ளனர். இந்தப் பிரிவில் தற்போது ஐந்து பேர்கள் உள்ளனர். எனவே பரிசீலனைக்குவரும் கேள்வி, அரசியல் நிர்ணய சபையில் உறுப்பினர்களாக இல்லாத அமைச்சர்கள் அரசியல் நிர்ணய சபை நடவடிக்கைகளில் மட்டுமின்றி சட்டப் பேரவை நடவடிக்கைகளிலும் கலந்து கொள்ளலாமா என்பதாகும். சட்டப் பேரவைப் பணியில் அவர்கள் கலந்து கொள்வதைப் பொறுத்தவரை பிரிவு 2ன் உப பிரிவு(2) அப்படியே இந்திய அரசாங்கச் சட்டத்தில் வைத்துக் கொள்ளப் பட்டிருப்பதால், இந்த நிலையில் எத்தகைய மாறுதலும் இல்லை. பிரிவு 10 ன் உபபிரிவு 2 ஷரத்துப்படி, சட்ட பேரவையில் ஒருவர் உறுப்பினராக இல்லாவிடினும் அவர் அதன் நடவடிக்கைகளில் தொடர்ந்து கலந்துகொண்டு அமைச்சராகவும் இருக்கலாம். எனவே, அதன்படி அரசியல் நிர்ணய சபையில் உறுப் பினர்களாக இல்லாத அமைச்சர்கள் அரசியல் நிர்ணயசபை, சட்டப் பேரவையாகச் செயல்படும்போது, அமைச்சர்களாக இருந்து கொண்டே அதில் அமர்ந்து கலந்துகொள்ள உரிமை பெறுகின்றனர்.

தெளிவுப்படுத்தப்பட வேண்டிய இன்னமும் உள்ள கேள்வி, அரசியல் நிர்ணய சபையுடன் அவர்களுக்கு உள்ள உறவு என்ன வாகிறது? இப்பொழுது அவர்கள் அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினர்களாக இல்லாததால், அரசியல் சாசனத்தை உருவாக் குவது சம்பந்தமாக அரசியல் நிர்ணயசபையின் பணியில் அவர் களுக்கு உரிமை கிடையாது. எனினும் அரசியல் சாசனத்தை உரு வாக்கும் விஷயத்தில் அரசியல் நிர்ணய சபைக்கு அவர்களது வழி காட்டுதல் அவசியம் என்ற முடிவுக்குக் குழு வந்தது; எனவே

பிரிவு 10ன் உபபிரிவு (2) ன்படி சட்டமன்றப்பணிகளில் பங்கெடுக்க அவர்களை அனுமதிப்பதுபோல் அரசியல் நிர்ணயசபையின் உறுப்பினர்களாக இல்லாத அரசாங்க உறுப்பினர்கள் அரசியல் நிர்ணய சபையின் பணியிலும் பங்குபெற அரசியல் நிர்ணயசபை வகை செய்ய வேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.

ஐயா, குழு எந்தப் பரிந்துரைகளையும் செய்யாத வேறு இரு விஷயங்களும் உள்ளன; அவை பற்றி நான் குறிப்பிட வேண்டியது அவசியம். முதல் விஷயம் இரட்டை உறுப்பினர் பற்றியது. இது விஷயத்தில் மாகாண சட்டமன்றத்திலும் உறுப்பினர்களாக உள்ள அரசியல் நிர்ணயசபை உறுப்பினர்கள் சிலர் இருக்கின்றனர். இதுவரை முறைகேடு எதுவும் நிகழவில்லை. ஏனெனில், அரசியல் நிர்ணயசபை ஒரு சட்டமன்றமல்ல. ஆனால் அரசியல் நிர்ணய சபை சட்டமியற்றும் அவையாகச் செயல்படும்போது, இரட்டை உறுப்பினர் காரணமாக, இந்த மோதல் நிச்சயமாக எழும். இந்த விஷயத்தைக் கையாளும் இந்திய அரசாங்கச் சட்டத்தின் பிரிவு 68 (2) ஓர் உறுப்பினர் மத்திய, மாநில இரண்டு சட்டமன்றங்களிலும் இரட்டை உறுப்பினராக இருப்பதை அனுமதிக்காத ஷரத்து பற்றி கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். மாற்றி அமைத்ததில் இந்த ஷரத்து கைவிடப்பட்டது. எனவே, அரசியல் நிர்ணயசபை உறுப்பினர்கள், சட்டமன்றத்தின் உறுப்பினர்களாக செயல்பட்டு வரும் போது, மற்றொரு சட்டமன்றத்தின் உறுப்பினராகவும் இருக்கலாம். அரசியல் சட்டக் கண்ணோட்டத்தில் கறாராகப் பார்த்தால், முறைகேடு நிச்சயமாக இருக்கிறது. பிரிவு 68 (2) நீக்கத்தில் அமைந்துள்ள கோட்பாட்டு அடிப்படையை அவர்கள் ஏற்றுக்கொண்டு, பிரிவு 68 (2) ஐ நீக்கிவிட்ட போதிலும், இரட்டை உறுப்பினரை அனுமதிப்பார்களா, இரட்டை உறுப்பினராவதைத் தடுப்பதற்கு தக்க நடவடிக்கை எடுப்பார்களா என்பதை அரசியல் நிர்ணய சபை முடிவு செய்ய வேண்டும்.

குழு பரிந்துரைக்காத இரண்டாவது விஷயம் அவையின் நிர்வாக அமைப்பு பற்றியது. அவையில் உள்ள நிர்வாக அமைப்பு ஒரே ஒருங்கிணைந்த அமைப்பு என்பதால், அது அரசியல் நிர்ணய சபைத் தலைவரின் முற்றிலுமான அதிகாரத்தின்கீழ் உள்ளது. அரசியல் நிர்ணய சபைக்கு இந்த ஒரு தனித் தன்மையான செயல்பாடு மட்டும் இருந்தால் அதாவது அரசியல் சாசனத்தைத் தயாரிக்கும் பணி மட்டும் என்றால், இந்த விஷயத்தில் எந்தச் சிரமமும் இல்லை. ஆனால், அரசியல் நிர்ணயசபை, இரட்டைப் பொறுப்பை ஏற்கும்போது, ஒருசமயம் அரசியல் சாசனத்தை உருவாக்கும் அமைப்பாகவும்

மற்றொரு சமயம் மற்றொருவர் தலைமையில், அதாவது, சபாநாயகர் அல்லது துணைச் சபாநாயகர் தலைமையில் சட்டம் இயற்றும் அமைப்பாகவும் செயல்படும்போது ஊழியர்களைத் தக்கவாறு அமைத்துக் கொள்ளும் பிரச்சினைகள் எழலாம். ஆனால் ஆய்வுக் குரிய வரையறையின்கீழ், இந்த விஷயம் பற்றி பரிசீலிக்க தனக்கு அதிகாரம் இல்லை என்பதால், அதுபற்றி குழு எதுவும் கூறவில்லை.

ஐயா, ஏற்கனவே நான் எடுத்துக்கொண்டதை விட இந்த அவையின் நேரத்தை மேலும் அதிகம் எடுத்துக் கொள்வது அவசியம் என்று நான் கருதவில்லை. குழு ஆற்றிய பணியைப் பற்றி நான் கூறியவை உறுப்பினர்களை போதுமான அளவு நினைவுபடுத்தும் என்றும் அவர்கள் சிறந்தமுறை என்று கருதுகிறபடி இந்த அறிக்கை யைப் பரிசீலிக்க அவர்களுக்கு உதவும் என்றும் நினைக்கிறேன்.

★ ★ ★

[1]**திரு. தலைவர்:** இதுபற்றி நாம் போதுமான அளவு விவா தித்துள்ளோம் என கருதுகிறேன்; பதிலளிக்கும்படி டாக்டர் அம்பேத் கரை இப்பொழுது அழைக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. தலைவர் அவர்களே! குழு சமர்ப்பித்த அறிக்கை பல்வகைப்பட்ட பிரதி பலிப்பை ஏற்படுத்தியுள்ளது என்பது தெளிவு. இது ஒரு குழப்ப மான ஆவணம் என்று அவையின் சில உறுப்பினர்கள் கருத்துத் தெரி வித்தனர்; இம்மாதிரியான முறைகளில் அறிக்கையைச் சித்தரித்த வர்களுக்கு எந்தப் பதிலும் அளிக்க நான் உத்தேசிக்கவில்லை. காரணம், அவர்கள் முன்வைத்த வாதங்கள் போதுமான பரிசீலனைக் குத் தகுதி வாய்ந்தவையல்ல என்று என் சொந்தமுறையில் நினைக் கிறேன். பதிலில் நான் கூறவிரும்புவது, எனது நண்பர்கள் டாக்டர் தேஷ்முக்கும் திரு. விஸ்வநாததாசும் எழுப்பிய சில சட்டநுட்ப விஷயங்களை விளக்கிக் கூறுவதேயாகும். குழு செய்துள்ள இரு பரிந்துரைகள் பற்றி டாக்டர் தேஷ்முக் குறிப்பிட்டார். ஒன்று, சமஸ் தானங்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் உறுப்பினர்கள் குழுவின் எல்லா விவாதங்களிலும் பங்குகொள்ள அனுமதி வழங்க வேண்டும் என்ற பரிந்துரை. அவர் குறிப்பிட்ட இரண்டாவது பரிந்துரை ராஜாங்க

1. அ.நி.ச. விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை, தொகுதி V, 1947, ஆகஸ்டு 29, பக்கம் 327-331.

அமைச்சர்கள் சட்டமன்றத்தின் நடவடிக்கைகளில் கலந்து கொள்வதை அனுமதிப்பது விரும்பத்தக்கதாக இருக்காது என்பது சம்பந்தமானது. குழு கூறியுள்ளதெல்லாம் தர்க்க ரீதியானதாகவும் சௌகரியமானதாகவும் உள்ளது என்று டாக்டர் தேஷ்முக் கூறினார். இது அரசியல் சட்டப்படியானதா என்று குழு கூறவில்லை. இந்த விஷயம் பற்றி குறிப்பாக நான் அதிகம் ஆச்சரியப்படுகிறேன்; காரணம் டாக்டர் தேஷ்முக் ஒரு வழக்கறிஞராக இருப்பதால், உண்மை விஷயம் என்ன வெனில், நமக்கு அரசியல் சாசனம் எதுவும் இல்லை என்று அவர் உணர்ந்திருக்க வேண்டும். அரசியல் நிர்ணயசபை அரசியல் சாசனத்தை உருவாக்கிக் கொண்டிருக்கிறது. அரசியல் நிர்ணயசபை செய்யும் எதுவும் அரசியல் சட்டரீதியானதாகும் (சபாஷ், சபாஷ்). சமஸ்தானங்களின் பிரதிநிதிகள் பங்குபெறக் கூடாது என்று அரசியல் நிர்ணயசபை கூறினால் அது முற்றிலும் அரசியல் சட்டத்தன்மை வாய்ந்ததாகும். அவர்கள் கலந்துகொள்ள வேண்டும் என்று அரசியல் நிர்ணயசபை கூறினால் அதுவும் முற்றிலும் சட்டத் தன்மை வாய்ந்ததாகும். எனவே இம்மாதிரியான கூற்று முற்றிலும் பொருத்தமற்றது என நான் நினைத்தேன். எனது நண்பர் திரு. விஸ்வநாத் தாஸ் எழுப்பிய விஷயத்தைப் பொறுத்தவரை, அவர் இம்மாதிரி கூறியது பொருத்தமானது என்று அவர் கருதியது பற்றி நான் பெருமளவு ஆச்சரியப்பட்டேன். நான் சரியாக ஞாபகத் தில் கொண்டிருந்தால், அவர் கூறியவை இரு விஷயங்கள் சம்பந்தப் பட்டவை. அரசியல் நிர்ணயசபையை இருபாகங்களாக குழு பிரித் துள்ளது என்றும், அது பகுக்க முடியாத அமைப்பு என்றும், ஒன் றிணைந்த, ஒரு முழுமையான அமைப்பு என்றும் கூறினார். அரசியல் சாசனத்தை உருவாக்குவதிலிருந்து, சாதாரணமாகச் சட்டம் இயற் றுவது முற்றிலும் மாறுபட்டது என்பதைப் புரிந்துகொள்ளும் நிலை யில் அவர்கள் இல்லையா என்பது எனக்குத் தெரியவில்லை. இரத்தினச்சுருக்கமாகக் கூறினால், பாகுபாடு என்னவெனில், அர சியல் நிர்ணயசபை அரசியல் சாசனத்தால் கட்டுப்படுத்தப்பட வில்லை, ஆனால் ஒரு சட்டமன்றம் அரசியல் சாசனத்துக்குக் கட்டுப் பட்டுள்ளது என்று எனக்குத் தோன்று கிறது. ஆனால் அரசியல் நிர்ணயசபை ஒரு சட்டமன்றமாக இயங் கும்போது அது இந்திய அரசாங்கச் சட்டத்தின்கீழ் மாற்றியமைக்கப்பட்ட இந்திய அரசாங்கச் சட்டத்திற்கு கட்டுப்பட்டதாகும். ஒரு ஒழுங்குப் பிரச்சினையை எவரும் எழுப்ப முடியும். இதனால் ஒரு குறிப்பிட்ட தீர்மானம் செல்லுபடியாகத்தக்கதா என்பதை எவரும் கூறமுடியும். ஆனால் அரசியல் சாசனத்தை உருவாக்கும் அமைப்பாக அரசியல் நிர்ணய

சபை இயங்கும்போது அத்தகைய கேள்வி நிச்சயம் எழாது. அது போதுமான அளவு வலுவான வேறுபாடு என்பதால், அதாவது இரு செயல்பாடுகளும் வேறுபட்டவை, நோக்கங்கள் வேறுபட்டவை. பணிகள் வித்தியாசமானவை என்பதை கோட்பாட்டுரீதியில் நம்மால் புரிந்து கொள்ள உதவும் என கருதினேன். குழப்பத்தைத் தவிர்க்க வேண்டுமென நாம் விரும்புகிறோமெனில், சட்டமன்றத்திலிருந்து மாறுபட்டதாக, அரசியல் நிர்ணயசபைக் கூட்டம் தனியாகக் கூடட்டும். மாறுபாடுகள் செய்யப்படுவதைப் பற்றியும் சில மனக் குறைகளை அவர் வெளியிட்டார். 1935 இந்திய அரசாங்கச் சட்டத் தில் புகுத்தப்பட்ட மாற்றங்களுக்கு இங்குள்ள எவரும் பொறுப் பல்ல என்பதையும் நான் இப்பொழுது ஒளிவுமறைவின்றி கூறியாக வேண்டும்.

இந்திய சுதந்திரச் சட்ட மசோதாவின் பிரிவு 8ன் உபபிரிவு (1)ஐ அவர் குறிப்பிடுகிறாரெனில், சட்டமன்றம் என்ற புதிய அந்தஸ்தைப் பெற்றுள்ள அரசியல் நிர்ணயசபை 1935 இந்திய சர்க்கார் சட்டத்தை தக்கவாறு மாற்றியமைக்கும் அதிகாரத்தை முற்றிலுமாக கவர்னர் - ஜெனரல் பெற்றிருந்தார் என்பதை அவர் புரிந்துகொள்ளமுடியும். எந்த மாற்றங்கள் கொண்டு வரப்பட வேண்டும் என்பதை முடிவு செய்வதற்காக, ஏதாவது வகையில் கவர்னர்-ஜெனரல் ஆலோசனை பெற்றிருப்பது சாத்தியமே என்று கருதமுடியும். எனவே, இன்றைய நிலையில், அதற்கு யாரும் பொறுப்பல்ல. 1935 ஆம் வருட இந்திய அரசாங்கச்சட்டத்தின்படி மேற்கொள்ளப்பட்ட மாற்றங்கள் பற்றி அரசியல் நிர்ணயசபை திருப்தியடைய வில்லையெனில், மாற்றங் களை மாற்றி அமைக்கவும், அது விரும்பும் வேறு எதையாவது புகுத்தவும் அது முழுத்தகுதிபெற்றுள்ளது என அதே பிரிவு 8, உப பிரிவு (1) கூறுகிறது. ஐயா, எனவே குழுவின் பணிபற்றி விமர்சித்த வர்கள் எழுப்பிய விஷயங்களில் எந்தச் சத்தும் சாரமும் இல்லை என்பதைப் பணிவுடன் கூறிக்கொள்கிறேன்.

எனது நண்பர் திரு.கிருஷ்ணமாச்சாரி குறிப்பிட்ட மற்று மொரு விஷயத்துக்கு இப்போது வருகிறேன்: எதையும் ஆராய்ந்து முடிவு செய்வதிலும் மற்றும் நிர்வாகத்திலும் தனித்த அதிகாரம் படைத்தவர் தலைவர்தான் என்ற விஷயத்தை எடுத்துக்கூறும் அறிக்கையின் இரண்டாவது பாகத்தை திரு.முன்ஷியின் தீர்மானம் கணக்கில் எடுத்துக் கொள்ளத் தவறிவிட்டது என்று அவர் கூறினார்.

நடைமுறையில் குழுவின் எல்லா யோசனைகளையும் ஏற்றுக் கொண்டு வரைந்து சமர்ப்பிக்கப்பட்ட தீர்மானத்தில் இந்த குறிப் பிட்ட ஷரத்து ஏன் இடம்பெறவில்லை என்று அவர் கேள்வி எழுப் பினார். அறிக்கையை திரு.கிருஷ்ணமாச்சாரி கவனமாகப் படித்தா ரெனில், அறிக்கையின் இந்தப் பகுதி குழுவின் ஒரு கண்ணோட்டமே தவிர, ஒரு சிபாரிசு அல்ல என்பதைத் தெரிந்துகொள்வார். என்வே, எனது நண்பர் திரு.முன்ஷி அதைக் குறிப்பிடாதது முற்றிலும் சரியே எனக் கருதுகிறேன்.

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** ஐயா, டாக்டர் அம்பேத் கரிடம் ஒரு தகவலைக் கேட்க விரும்புகிறேன். முதலாவதாக, அவரிடமிருந்து தெரிந்து கொள்ள விரும்புவது...

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** அது ஓர் உரையா அல்லது ஒரு கேள்வியா?

**திரு. தலைவர்:** அவர் ஓர் உரையை ஆற்ற முடியாது என்பதை பண்டிட் மைத்ராவுக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன்: அவர் கேள்வி எழுப்பியுள்ளார்; விரும்பினால் டாக்டர் அம்பேத்கர் பதிலளிப்பார்.

**மதிப்பிற்குரிய உறுப்பினர்:** கேள்வியே ஒழுங்கற்றது (அனுமதிக்க முடியாதது).

**பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா:** ஏன் அனுமதிக்க முடி யாதது? மாண்புமிகு உறுப்பினர் விவாதத்திற்குப்பதில் அளிக்கும் போது, மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் அதனைப் புரிந்துகொள்ள இயலவில்லை எனில், விஷயங்களை நன்கு தெளிவுபடுத்திக் கொள் வதற்கு மேலும் கேள்விகளைக் கேட்பதற்கு அவருக்கு முற்றிலும் உரிமை உள்ளது.

**திரு. தலைவர்:** நீங்கள் கேள்வியைக் கேட்டுவிட்டீர்கள்; டாக்டர் அம்பேத்கர் பதிலளிப்பார்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் சுருக்க மாகப் பேச விரும்புகிறேன். இந்திய அரசாங்கச் சட்டத்தில் மாற்றி

அமைத்துக் கொண்டவற்றில் ஏதேனும் மாறுதல் செய்ய நாம் விரும்புகிறோமா என்பது முதல் கேள்வி. இதற்கு எனது பதில் என்னவெனில் எத்தகைய மாறுதல்களைச் செய்யவேண்டுமென்றாலும் அது அவை தீர்மானிக்க வேண்டிய விஷயம் என்பதேயாகும். ஆனால் மாற்றியமைக்கப் பட்டவற்றை மாற்ற நமக்கு அதிகாரம் உள்ளது என்று எனது நண்பர்களுக்கு உறுதிகூற விரும்புகிறேன். அதன் மாற்றங்களுடன் உள்ள இந்திய அரசாங்கச் சட்டம் நம்மை முழுவதுமாகக் கட்டுப்படுத்தாது, அதாவது, எந்த அர்த்தத்தில் எனில், எந்த ஒரு மாற்றமும் நமது அதிகார வரம்பிற்கு அப்பாற்பட்டதல்ல. விஷயத்தை மறுபரிசீலனை செய்தபின், மாற்றி அமைக்கப்பட்டவற்றில் குறிப்பிட்ட சிலவற்றை மாற்றப்பட வேண்டுமென அவை கருதினால், அந்த ஷரத்தைக் கொண்டு வருவது முற்றிலும் சாத்தியமே.

மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு.மைத்ரா என்னிடம் கேட்ட இரண்டாவது கேள்வி, நிர்வாகத்தின் ஒற்றுமை பாதிக்கப்படுவது சாத்தியமா என்பது; அதிகாரம் வகிப்பவர்கள் இரண்டு பேர் இருப்பார்கள் என்பதால் அதாவது அரசியல் நிர்ணய சபைக்குத் தலைமை வகிக்க ஒரு தலைவர் சட்டப்பேரவைக்குத் தலைமை தாங்கும். ஒரு சபாநாயகர் இருப்பார்கள் என்பதால், முரண்பாடு ஏற்படுவது சாத்தியம். குழு கூறியுள்ளது என்னவெனில், கோட்பாட்டு ரீதியில் முரண்பாடு சாத்தியமே. ஆனால், முரண்பாடு ஏற்படுவதற்கான அவசியம் இருக்காது என்று கருதுகிறேன். நடைமுறையில், அதிகாரம் வகிக்கும் இருவர். தலைவரும், சட்டமன்றத்தின் சபாநாயகரும் ஒற்றுமையாகச் செயல்படுவது முற்றிலும் சாத்தியமாக வேண்டும்; அதிகாரம் பெற்றவர்கள் இருவர் இருந்தபோதிலும், அரசியல் நிர்ணயச் சபையும், சட்டமன்றமும் செயல்படும் காலத்தை தக்க முறையில் நிர்ணயிப்பதன் மூலம் இரண்டு வழிவகை செய்ய முடியும். முரண்பாடு ஏற்படுவது சாத்தியமென்று நாம் பயப்பட வேண்டியதில்லை. அரசியல் நிர்ணயசபையை சட்டமியற்றும் அமைப்பாக மாற்ற நாம் செய்யும் ஏற்பாடு சந்தேக மின்றி தற்காலிக மானது என்பது தெளிவு. அரசியல் சாசனத்தை உருவாக்கும் பணி முடியும் வரை அது நீடிக்கும். அரசியல் சாசனத்தை உருவாக்கும் பணி பூர்த்தியடைந்ததும், இவற்றில் ஏதேனும் ஓர் ஏற்பாடு மறைந்து விடும்; அப்பொழுது நாம் ஒரு சட்டமன்றமாக மட்டுமே செயல்படுவோம்.

**திரு. நஸிருத்தீன் அகமது:** மேலும் ஒரு கேள்வி. அவையால் மறுமாற்றம் செய்ய முடியும் என்று மாண்புமிகு உறுப்பினர் கூறினார். மேற்கொண்டும் மாற்றங்கள் செய்வது கவர்னர்-ஜெனரலுக்குச் சாத்தியமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அது சட்டப் பிரச்சினை. மாற்றி அமைக்கப்பட்டதை மாற்ற அவைக்கு அதிகாரம் உள்ளது.

**திரு. நஸிருத்தீன் அகமது:** அதை நான் மறுக்கவில்லை. கேள்வி என்னவெனில் மாண்புமிகு உறுப்பினர் கருத்துப்படி, கவர்னர்-ஜெனரல் மேற்கொண்டும் மாற்றங்கள் செய்ய முடியுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவரால் செய்ய முடியாது. அவரது அமைச்சர்களின் ஆலோசனையின் பேரிலேயே இதனை அவர் செய்ய வேண்டியிருக்கும்.

**திரு. நஸிருத்தீன் அகமது:** அவரது அமைச்சர்களின் ஆலோசனையின் பேரில் அவரால் செய்ய முடியுமா?

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** இது ஒரு நீதிமன்றமா அல்லது ஒரு குறுக்கு விசாரணையா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் நிச்சயமாகக் கூறமுடியாது. யோசனை செய்யாமல் திடீரென பதிலளிக்க நான் விரும்பவில்லை.

**திரு.தலைவர்:** பரிந்துரைக்கப்பட்டதுபோல், தீர்மானம் விதிவிதியாக முன்வைக்கப்பட வேண்டுமெனக் கருதுகிறேன்.

(விதி விதியாகத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதன்பின் கீழே கொடுத்துள்ள தீர்மானம் ஏற்கப்பட்டது -ஆர்.)

**திரு. தலைவர்:** விஷயம் இதுதான். தீர்மானம் முழுவதுமாக நிறைவேற்றப்படுகிறது. அதாவது,

"இந்தியச் சுதந்திரச் சட்டத்தின்கீழ், அரசியல் நிர்ணயசபையின் செயல்பாடுகள் மீதான அறிக்கையை பரிசீலிப்பது சம்பந்தமான மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் தீர்மானத்தைப் பொறுத்தவரை, இவ்வாறு தீர்மானிக்கப்படுகிறது:

(i) சபையின் செயல்பாடுகள் -

அ) 1946 டிசம்பர் 9ம்தேதி துவங்கிய அரசியல் சாசனத்தை உருவாக்கும் பணியைத் தொடர்ந்து முடிக்க வேண்டும்.

ஆ) புதிய அரசியல் சாசனத்தின்கீழ் புதிய சட்டமன்றம் அமையும் வரை, டொமினியன் சட்டமன்றமாகச் செயல்படும்.

(ii) அரசியல் சாசனத்தை உருவாக்கும் அமைப்பான சபையின் செயல்பாடுகள், டொமினியன் சட்டமன்றமாக அதன் இயல்பான செயல்பாடுகளிலிருந்து தெளிவாக பாகுபடுத்தப்பட வேண்டும்; இரண்டு விதமான செயல்பாடுகளுக்கு தனித்தனி நாட்கள் அல்லது ஒரே நாளில் வேறுபட்ட கூட்டங்களாக ஒதுக்க வேண்டும்.

(iii) அவையில் இந்திய சமஸ்தானங்களின் பிரதிநிதிகள் நிலை பற்றி அறிக்கையின் 6வது பாராவில் இடம்பெற்றுள்ள பரிந்துரைகள் ஏற்றுக் கொள்ளப்படும்.

(iv) டொமினியன் சட்டமன்றமாக அவை செயல்படும்போது, அதன் நடவடிக்கைகளைத் தலைமை தாங்கி நடத்த சபாநாயகர் என்ற பெயரில் ஒரு அதிகாரியின் தேர்வுக்காக அரசியல் நிர்ணய சபையின் விதிமுறைகளில் பொருத்தமான வழிமுறைகள் செய்யப்பட வேண்டும்.

(v) டொமினியன் சட்டமன்றமாகச் செயல்படுவதற்கு அவையைக் கூட்டுவதற்கோ (கலைக்காமல்) தள்ளிவைப்பதற்கோ தலைவருக்கு அதிகாரம் இருக்கும்.

(vi) அரசியல் நிர்ணயசபை உறுப்பினர்களாக இல்லாத டொமினியன் அரசாங்க அமைச்சர்கள் அரசியல் சாசனத்தை உருவாக்கும் அதன் பணியில் கலந்துகொண்டு பங்குபெற உரிமை பெற்றிருப்பர்; ஆனால் அரசியல் நிர்ணய சபையின் உறுப்பினர்களாக அவர்கள் ஆகும்வரை வாக்களிக்கும் உரிமை அவர்களுக்கு இருக்காது.

(vii) தேவைப்படும் திருத்தங்கள், மாற்றங்கள் மற்றும் சேர்க்கைகள் அரசியல் நிர்ணயசபை தலைவரால்

அ) இந்த சட்டமன்றத்தின் விதிகளுக்கும் நிரந்தர உத்திரவுகளுக்கும், 1947 இந்தியச் சுதந்திரச் சட்டத்தின்கீழ் மாற்றியமைக்கப்பட்ட இந்திய அரசாங்கச் சட்டத்தின் உரிய வகையங்களுக்கும் ஏற்ப மாற்றியமைக்கப்பட வேண்டும்.

ஆ) அறிக்கையின் பாராவில் உள்ள வகையங்களை நிறைவேற்ற விதிமுறைகளிலும் நிரந்தர உத்திரவுகளிலும் புதிய விதியோடு ஒத்துப்போகுமாறு இந்திய அரசாங்கச் சட்டத்தின் சம்பந்தப்பட்ட பிரிவில் பொறுத்தமான மாற்றங்களை அரசியல் நிர்ணய சபையோ அதன் தலைவரோ செய்ய வேண்டும்."

★ ★ ★

## கிழக்கு பஞ்சாபிற்கு கூடுதல் பிரதிநிதித்துவம்

[1]**திரு.தலைவர்:** இந்தக் குறிப்பிட்ட தீர்மானம் சம்பந்தமாக, மிக நீண்ட விவாதத்தை தவிர்க்கும் பொருட்டு கடைப்பிடிக்க வேண்டிய செயல்முறைபற்றி ஓர் அறிக்கையை நான் முன்வைக்க லாமா? இந்த விஷயம் வழிகாட்டுக்குழுவின் முன் வந்தது; இந்தப் புள்ளிவிவரங்கள் பற்றி பரிசீலிக்க ஒரு சிறிய குழுவிற்கு அனுப்பி வைப்பது அவசியம் என்று வழிகாட்டுக்குழு கருதியது. அந்தக் குழு பின்கண்டவர்களைக் கொண்டதாக இருந்தது:

**டாக்டர் அம்பேத்கர்**
**திவான் சமன்லால்**
**கியானி குர்முக் சிங் முஸாபிர்**
**திரு. ரபி அஹமத் கித்வாய், மற்றும்**
**திரு. அனந்தசயனம் அய்யங்கார்.**

ஒரு பக்கத்திலிருந்து மற்ற பக்கத்திற்குக் குடிபெயர்ந்த மக்கட் தொகை பற்றி கிடைத்த இந்த புள்ளிவிவரங்களையும் மற்றும் தகவல்களையும் பரிசீலித்தபின் குழு குறிப்பிட்ட பரிந்துரை களைச் செய்தது. அவற்றின் அடிப்படையில் இந்த அவை முன் பரிந்துரைகள் வைக்கப் பட்டன; வழிகாட்டுக் குழுவின் சிபாரிசின் பேரில் நான் நியமித்த உபகுழுவால் இந்த விஷயம் பரிசீலிக்கப் பட்டது. இதை ஏற்றுக்கொள்வது அல்லது நிராகரிப்பது என்பது நிச்சயம் அவையின் பொறுப்பு, நிலையை விளக்குவது நல்லது என்று நான் நினைத்தேன். உபகுழுவின் அறிக்கை வினியோகிக்கப் படவில்லை. தீர்மானம் மட்டும்தான் வினியோகிக்கப்பட்டது. உறுப்பினர்களிடம் முன்பே அறிக்கை அளிக்கப்பட்டிருந்தால், விவாதத்தின் பெரும்பகுதியைத் தவிர்த் திருக்கலாம்; ஆனால் அது செய்யப்படவில்லை. அதற்காக வருந்து கிறேன்.

## புதிய விதிகள் 38-ஏ-ஐ 38-வியுடன் சேர்த்தல்

[2]**திருமதி ஜி. துர்க்காபாய்** (சென்னை: பொது): என் பெயரில் இருக்கும் கீழ்க்கண்ட தீர்மானத்தை பிரேரேபிக்கிறேன்:

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VI, 1948, ஜனவரி 27, பக்கம் 9.
2. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VI, 1948, ஜனவரி 27, பக்கம் 25-28.

அரசியல் நிர்ணயசபை விதிகளுக்கு கீழ்க்கண்ட திருத்தங்களைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம்:

விதி 38ஐ அடுத்து, பின்கண்டதைச் சேர்க்கவும்:-

இந்திய அரசியல் சாசனத்திற்கு வகையங்கள் செய்வதற்கான சட்டத்திற்கான செயல்முறை பற்றி ஓர் அத்தியாயத்தில், அத்தியாயம் VI-A-ல் விதிகள் வகுத்துரைக்கப்படுகின்றன. அவை 38-A, முதல் 38-B வரை 22 பிரிவுகளுக்கு மேல் பரந்துகிடக்கின்றன; இரண்டு இனங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

**(இந்தத் தீர்மானத்தைத் தொடர்ந்து விவாதம் நடந்தது. பின்பு, விமர்சனத்திற்குப் பதிலளிக்க டாக்டர் அம்பேத்கர் எழுந்தார். - ஆசிரியர்)**

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** (பம்பாய்: பொது): திரு. தலைவர் அவர்களே, இந்த அரசியல் நிர்ணய சபை சில விதிகளை ஏற்றுக்கொள்வது சம்பந்தமாக திருமதி துர்க்காபாய் கொண்டு வந்துள்ள தீர்மானத்துக்கு எதிராக திரு.சந்தானம் எழுப்பிய சில விமர்சனங்களுக்கு விளக்கம் கூற முன்வந்துள்ளேன். அவரது தீர்மானத்துக்கு எதிராகக் கூறப்பட்ட விமர்சனங்களில் ஒன்று திரு. சந்தானம் எழுப்பியதாகும். நாம் கவனத்தில் கொண்டுள்ள நோக்கத்திற்கு இன்றுள்ள விதி 24 மிகவும் போதுமானது, புதிய விதிகள் அவசியமில்லை என்பது, திரு.சந்தானத்தின் பிரதான வாதம். திருமதி துர்க்காபாயின் தீர்மானத்தை எதிர்த்துப் பேச வந்தபோது, திரு.சந்தானம் இந்தப் பிரச்சினை குறித்துப் போதுமான கவனம் செலுத்தவில்லை என்று உறுதியாக நம்புகிறேன். விதி 24, ஒரு தீர்மானத்தைப் பற்றிக் கூறுகிறது. மேலும் ஒரு தீர்மானத்தின் மூலம் இந்த அவை எதையும் செய்ய முடியும் என்று கூறுகிறது. அது முற்றிலும் உண்மை. இந்தப் பலநோக்கு விதி போதாது என்பதையும், மேலும் விரிவான விதிகள் தேவை என்பதையும் உணர திரு. சந்தானம் தவறிவிட்டார் என்று திட்டவட்டமாக நம்புகிறேன். ஏனெனில் தீர்மானங்கள் இரு இனங்களாக உள்ளன. மேற்கொண்டு விவாதிக்க வேண்டிய கட்டம் ஏதும் இல்லாத தீர்மானம் ஒன்று

உள்ளது. அந்தக் குறிப்பிட்ட தீர்மானத்தின்மீது அவை முடிவெடுத்ததும் அது தீர்ந்துபோகிறது. மேற்கொண்டும் பலவிதக் கட்டங்களை உட்படுத்தும் மற்றொரு வகை தீர்மானங்கள் உள்ளது. இத்தகைய ஒரு தீர்மானத்துக்கு எடுத்துக் காட்டு ஒரு மசோதாவை முன்மொழியும் தீர்மானமாகும். ஒரு தீர்மானத்தின் மூலம் முன்வைக்கப்படும் மசோதா, அந்தத் தீர்மானம் குறித்து சாதகமாக அவை முடிவு செய்திருந்தால், அது தீர்ந்து போவதில்லை. கடந்து செல்லவேண்டிய மேலும் பல கட்டங்கள் உள்ளன. எனவே, இம் மாதிரியான ஒரு தீர்மானம் கூடுதலான கட்டங்களைக் குறிப்பிட்ட விதியால் முறைப்படுத்தப்பட வேண்டியது மிக அவசியம். அரசியல் நிர்ணயசபை (சட்டமியற்றும்) விதிகளைத் திரு. சந்தானம் எடுத்துப் பார்த்திருப்பாரேயானால், திருமதி துர்க்காபாய் முன்மொழிந்த புதிய விதிகள், அரசியல் நிர்ணய சபையின் விதிமுறைகள், நிலையாணைகள் ஆகியவற்றில் உள்ள வகையறைகளை முன்மாதிரியாக கொண்டவை என்பதை அவர் காண முடியும். உதாரணமாக, விதி24க்கு ஒத்திசைவானதை, அரசியல் நிர்ணய சபை விதிகளில் நிலையாணை 30ல் காண்பார்; அது விதி 24 போன்ற அதே வாசகத்தைக் கொண்டுள்ளது. இது மட்டுமல்லாமல், மேற்கொண்டும் ஒரு நிலையாணை, அதாவது எண் 37 உள்ளது. அது மசோதாக்களுக்கு வழிவகை செய்கிறது; அவை பற்றி மேற்கொண்டு எந்த தீர்மானங்களும் முன் மொழியப்படலாம் என்று வரையறுக்கிறது. எனவே, அதே அடிப் படையில், புதிய விதியை தீர்மானிப்பதற்காக முன்வைக்கப்பட்ட ஆலோசனை, சட்டமியற்றும் தன் பாத்திரத்தில் அரசியல் நிர்ணயசபை ஏற்றுக்கொண்ட செயல் முறைக்கு ஒத்ததாக உள்ளது. சட்டமியற்றுதல் சம்பந்தமாக அதன் அலுவல்களை நடத்துவதற்கு விதி 24ஐ மட்டுமே அரசியல் நிர்ணய சபை ஆதாரமாகக் கொண்டிருக்குமேயானால் முற்றிலும் குழப்ப நிலை ஏற்படும் என்பதில் எனக்குக் கிஞ்சித்தும் ஐயமில்லை. விதி 24 மட்டுமே இருந்தால் ஒருவர் முன்மொழியும் தீர்மானங்களின் எண்ணிக்கைக்கோ தீர்மானங்களின் தன்மைக்கோ எல்லை எதுவும் இருக்க முடியாது. சட்டமன்ற விதிகளின்படி ஒருமசோதா அறிமுகப் படுத்தப்பட்ட பின் அனுமதிக்கப்படுவது மூன்று தீர்மானங்கள் மட்டுமே என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் காண்பார்கள். ஒரு தீர்மானம் சுற்றுக்கு அனுப்புவதற்காக, மற்றொரு தீர்மானம் மசோதாவை தெரிவுக்குழுவுக்கு அனுப்புவதற்காக, மூன்றாவது தீர்மானம் மசோதாவை நிறைவேற்றுவதற்காக நமக்கு நமது செயல்பாடுகளுக்கு வழிகாட்ட விதி 24ஐ தவிரவேறு எதுவும்

இல்லாவிடில், எந்த உறுப்பினரும் அவரது கற்பனையில் உதிக்கும் எந்தமாதிரியான தீர்மானத்தையும் முன்மொழிய முடியும். உண்மையில், சில குறிப்பிட்ட விஷயங்களில், இந்த மூன்று தீர்மானங்களில் எதையும் முன்மொழியும் உரிமையை அனுமதிக்காமலிருப்பது அவசியம். நமது புதிய அரசியல் சாசனத்திற்கு உருக்கொடுக்கும் மசோதாவை நிவைற்றும் நோக்கத்திற்கான நமது நிகழ்ச்சி முறையில், ஓர் உறுப்பினர் முன்மொழியக்கூடிய தீர்மானங்களின் பட்டியலை நாம் வெட்டிக் குறைத்துள்ளோம். ஆலோசனைக்கு வைக்கப் பட்டுள்ள புதிய விதிகளில் அரசியல் சாசனத்தை சுற்றுக்கு அனுப்பு வதற்கான தீர்மானத்தை நாம் அனுமதிக்கவில்லை; ஏனெனில் அது காலம் கடத்துவதாக இருக்கும் என்று நாங்கள் நினைக்கிறோம். சுருக்கமாகக் கூறினால், மனதில் இருக்க வேண்டிய முக்கியமான விஷயம் என்னவெனில், இந்த விதிகள் மேற்கொள்ளப்பட்டா லொழிய, மசோதாவின் மற்ற கட்டங்களைக் கட்டுப்படுத்துவது முற்றிலும் சாத்தியமற்றுப் போகும் என்பதாகும். எனவே, திரு. சந்தானம் எழுப்பிய விஷயம், சாரமற்ற ஒரு விஷயம் என நினைக் கிறேன்.

திரு.சந்தானம் விமர்சனம் செய்த மற்றொரு விஷயம், அரசியல் நிர்ணயசபை நிறைவேற்றிய மசோதாவுக்கு கவர்னர்-ஜெனரலின் ஒப்புதல் தேவைப்படுவது சம்பந்தமான புதிய விதி களில் ஒன்றைப் பற்றியதாகும். பின்கண்ட விஷயம் அவை உறுப் பினர்களின் கவனத்தில் இருக்கும் என்று நம்புகிறேன்: அரசியல் நிர்ணயசபையின் செயல்பாட்டை இருகூறாக ஆக்குவது பற்றிய, அதாவது (1) அரசியல் சாசனம் சம்பந்தப் பட்டவைகளை ஆக்கும் அரசியல் நிர்ணயசபை (2) சாதாரணச் சட்டங்களை இயற்றும் டொமினியன் சட்டமன்றம் என்பது பற்றிய குழுவின் அறிக்கை அரசியல் நிர்ணய சபையின் பணியை இரு பாகமாக பிரித்தது; ஒருபாகம் எதிர்கால அரசியல் சாசனத்தை உருவாக்குவது சம்பந்த மானது; மற்றது, 1935 இந்திய அரசாங்கச் சட்டம் மற்றும் 1947 இந்திய சுதந்திரச் சட்டத்தில் உள்ளடக்கியதுபோல் இப்பொழுது உள்ள அரசியல் சட்டத்தை திருத்தம் செய்வது பற்றியது. எதிர்கால அரசியல் சாசனத்தை உருவாக்கி நிறைவேற்றும் அதன் அதிகாரத்தைப் பொறுத்தவரை, கவர்னர்- ஜெனரலுக்கு எந்தப் பங்கும் கிடையாது. அவருடைய ஒப்புதல் தேவையில்லை. அரசியல் நிர்ணயசபை உச்ச அதிகாரம் பெற்றது. கவர்னர்-ஜெனரலின் ஒப்புதல் அவசியமில்லை என்பது மட்டுமல்ல; இப்பொழுது தயாரிக்கப்பட்ட விதிகளின்படி

தலைவரின் ஒப்பு தலுக்குக்கூட அவசியமில்லை. தலைவருக்குக் கொடுக்கப்பட்டுள்ள ஒரேஅதிகாரம் அரசியல் சாசனம் அவையால் நிறைவேற்றப்பட்ட பின், அரசியல் சாசனத்தின் இறுதிச் செயல்பாடு என்ற முறையில் வெறும் அடையாளமாக அதில் கையெழுத்திடுவது தான். சாதாரண அர்த்தத்தில் அது ஒப்புதலாகாது. இப்பொழுதுள்ள அரசியல் சட்டத்தில் திருத்தம் செய்வது சம்பந்தமாக கவர்னர்-ஜெனரலின் ஒப்புதல் (அதிகாரம்) தொடர்ந்து வைத்துக்கொள்ளப் படுகிறது. அத்தகைய ஒரு ஷரத்தை மேலும் வைத்திருக்க வேண்டுமா என மனவருத்தமடைந்த சில உறுப்பினர்கள் இருக்கிறார்கள் என்பதை நான் அறிவேன். கிடைத்த மிகச்சிறந்த வழக்கறிஞர்களால் இந்த விஷயம் பரிசீலிக்கப்பட்டது; கவர்னர் - ஜெனரலின் ஒப்புதலை நீடித்து வைத்திருப்பது விரும்பத்தக்கது மட்டுமல்ல, அவசியமும் ஆகும் என்ற முடிவுக்கு அவர்கள் எல்லோரும் வந்தனர். இதற்கான காரணங்களை விளக்கிக் கூற விரும்புகிறேன். முதலாவதாக, ஒவ்வொருவரும் அறிந்துள்ளது போல் அரசியல் சட்டத்தை மாற்றி அமைக்கும் அதிகாரம் கவர்னர்-ஜெனரலிடம் உள்ளது. அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்கு வேறு பெயர் மாற்றியமைப்பது என்பது மட்டுமே. அவை இரண்டும் ஒரே விஷயம்தான். இங்கு எழும்கேள்வி என்னவெனில், அரசியல் சட்டத்தை மாற்றியமைக்கும் ரூபத்தில் அதைத் திருத்தும் அதிகாரத்தை கவர்னர்-ஜெனரல் பெற்றிருப்பது அவசியமெனில், ஒரு மசோதா விஷயத்தில் அதிகாரத்தை விடாது வைத்திருப்பது போல்அதே நோக்கத்தோடு அரசியல் சட்டத்தை மாற்றியமைக்காமல் அதனைத் திருத்துவதற்கு அந்த அதிகாரத்தை வைத்திருந்தால் என்ன தீங்கு ஏற்பட்டுவிடும்.''

**திரு. கே. சந்தானம்:** பின் மசோதாவையே ஏன் தாங்கள் வேண்டுமென்கிறீர்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பதில் எளிதானது; தக்க மாற்றங்கள் செய்யும் அதிகாரம் மார்ச் 31 ம் தேதியோடு முடிந்து விடும். அதற்குபின்பு இப்பொழுது அமுலில் இருக்கும் அரசியல் சட்டத்தை திருத்த வேண்டிய அவசியம் ஏற்பட்டால் என்ன நடக்கும்? மாற்றி அமைக்கும் அதிகாரம் ஏப்ரல் 1ல் முடிவுக்கு வந்தால், நமது எதிர்கால அரசியல் சாசனம் ஏப்ரல் 1ம்தேதி அமுலுக்கு வந்தால், பிரச்சினை எழவே எழாது. இன்றைய அரசியல் சட்டம் உட்கொண்ட நிலப்பரப்பு முழுவதையும் புதிய அரசியல் சட்டம் தனது கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்துவிடும். நிலைமை அத்தகையதாக இருக்குமா என்பது பற்றி நமக்கு நிச்சயமில்லை. புதிய அரசியல் சட்டம் துவங்குவதற்கும் 1948 ஏப்ரல் 1க்கும்

இடையே சுணக்கம் ஏற்படலாம். அரசியல் சட்டத் தொடக்கத் திற்கும் மார்ச் 31க்கும் இடையே ஒன்று அல்லது இரண்டு மாதங்கள் ஆகிவிடலாம். இந்த அவையால் உருவாக்கப்பட்டு நிறைவேற்றப் பட்ட அரசியல் சாசனம் முழுமையாக உடனேயே நடைமுறைக்கு வராமல் போகலாம் என்பதும் அதுபோலவே தெளிவு. அது பகுதி பகுதியாக நடைமுறைக்கு வரலாம். தொகுதிகளை வகுக்கும் நோக்கத்திற்காகவும் தற்செயலான விஷயங்கள் என்று கூறப்படுப வற்றை நடைமுறைப்படுத்தும் நோக்கத்திற்காவும் இடைக்கால வகையங்கள், பின் சேர்க்கையான வகையங்களாக இருக்கலாம். இவை எல்லாவற்றிற்கும் கொஞ்சம் அவகாசம் சந்தேகமில்லாமல் தேவைப்படும். இதனால், மார்ச் 31ம் தேதி முடிவுறும் அரசியல் சட்டத்தில் மாற்றங்கள் செய்யும் நடைமுறை தொடர வேண்டி வரும். இந்த அவை நிறைவேற்றும் ஒரு மசோதா என்ற வழிமுறையால் தான் அதைத் தொடர முடியும்.

இதன் வெளிச்சத்தில், ஒரு மசோதா மூலம் இன்றைய அரசியல் சட்டத்தை மாற்றுவதற்கான ஒரு வகையம் அவசியம் என்பது தெளிவாகும். இந்த உண்மையை உணர்கிறவர்கள், தக்கபடி மாற்றியமைக்கும் நோக்கமும் அரசியல் சட்டத்தைத் திருத்தும் மசோதாவும் ஒன்றே என்பதையும் புரிந்து கொள்பவர்கள் ஒரு மசோதாவுக்கு கவர்னர் - ஜெனரல் ஒப்புதல் தேவைப்படும் வகை யத்தின் சட்டப்படியான நியாயத்தை பற்றிக் கேள்வி எழுப்ப மாட்டார்கள். இரண்டின் நோக்கமும் ஒன்றேயெனில், மற்றும் அரசியல் சட்டத்தை மாற்றியமைத்தற்கு கவர்னர்-ஜெனரலின் ஒப்புதல் தேவைப்படுகிறதெனில், ஒரு திருத்த மசோதாவக்கு கவர்னர்-ஜெனரலின் ஒப்புதல் ஏன் தேவைப்படாது? நிச்சயமாக, இதில் தர்க்கரீதியான முரணான நிலை எதுவும் இல்லை. மேலும் நான் கூறவிரும்புவது இதுதான்: சுதந்திரச் சட்டத்தின் பிரிவு 6 ன் உப பிரிவு(3) உள்ள வகையத்தைப் பெருமளவு வழிகாட்டியாகக் குழு எடுத்துக்கொண்டது; டொமினியன் சட்டமன்றத்தால் நிறை வேற்றப்பட்ட எல்லாச் சட்டங்களுக்கும் கவர்னர்-ஜெனரலின் ஒப்புதல் அளிக்கப்படும். அந்தப் பிரிவின் பொருள் இன்றைய நிச்சயமற்ற விஷயம். ஒப்புதல் அளிக்கக் கவர்னர் -ஜெனரல் அதிகாரம் பெற்றுள்ளார். கேள்வி என்னவெனில், சுதந்திரச் சட்டம் ஒப்புதல் அளிக்க கவர்னர்-ஜெனரல் அதிகாரம் பெற்றிருப்பதால், இன்றைய அரசியல் சட்டத்தை திருத்தும் மசோதாவை இந்த அவை கவர்னர்-ஜெனரலுக்குச் சமர்ப்பிக்க வேண்டுமென்று ஆகுமா? ஒரு திட்ட வட்டமான ஆலோசனையை எங்களால் அளிக்கமுடியவில்லை. பிரிவு 6 ன் உப-பிரிவு (3) இருப்பதனால் மட்டும், ஒப்புதலுக்கு

கவர்னர் - ஜெனரலுக்கு அனுப்ப வேண்டிய கட்டாயம் இல்லை என்ற வாதத்திற்கு சாத்தியப்பாடு இருந்தபோதிலும், ஒரு நீதிமன்றம் வேறுவிதமாகக் கருதி, ஒப்புதலுக்கு கவர்னர்-ஜெனரலிடம் சமர்ப்பிக்கப்படாத, இந்த அவையில் நிறைவேற்றப்பட்ட சட்டம் செல்லுபடியாகாது என்று அறிவிக்கலாம் என்று நாங்கள் கருதினோம்; சட்டமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட சட்டம் இத்தகைய ஆபத்திற்கு உள்ளாவதை நாங்கள் விரும்பவில்லை. எனவே, அபரிமிதமான ஜாக்கிரதை உணர்வுடனும் தர்க்கரீதியற்ற எதுவும் அதில் இல்லை என்ற எண்ணத்தாலும், இந்தப் புதிய விதியை நாங்கள் புகுத்தினோம். தன் பரிசீலனைக்கு அனுப்பப்பட்ட இந்த விஷயத்தில் வரைவுக்குழு செய்ததெல்லாம் முற்றிலும் முறையானது என்றும், திரு. சந்தானமும் அவரைத் தொடர்ந்து நண்பர்கள் எழுப்பிய பிரச்சினைகளில் சாரம் எதுவும் இல்லை என்றும் இந்த அவை புரிந்துகொள்ளும் என நம்புகிறேன்.

★ ★ ★

[2]**திரு. தலைவர்:** இந்தத் தீர்மானத்தை வாக்கெடுப்புக்கு விடும் முன், இதை முன்மொழிந்தவரை அவர் ஏதாவது பதில் கூற விரும்புகிறாரா எனக் கேட்க விரும்புகிறேன்.

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** ஐயா, அதற்கு முன்பு, கொஞ்சம் குறுக்கிட்டுப் பேச அனுமதிக்கும்படி வேண்டுகிறேன். மாண்புமிகு டாக்டர் அம்பேத்கரிடமிருந்து ஒன்றை உறுதிப்படுத்திக் கொள்ள விரும்புகிறேன். இந்தத் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டால் அதன் விளைவுகள் பற்றி அவர் பரிசீலித்தாரா? ஏனெனில் தக்கமாற்றங்கள் செய்யப்பட்ட இந்திய அரசாங்கச் சட்டம் 32வது பிரிவின் கீழ் தமக்கு அனுப்பப்படும் ஒரு மசோதாவுக்கு ஒப்புதலை அளிக்கவோ அல்லது மறுக்கவோ கவர்னர்-ஜெனரலுக்கு அதிகாரம் உள்ளது. இன்றைய அரசியல் சட்டத்தைத் திருத்துவதற்கான ஒரு மசோதாவைப் பொறுத்தவரை, தமது ஒப்புதலை அளிக்கவோ அல்லது மறுக்கவோ கவர்னர்-ஜெனரல் அதிகாரம் பெற்றிருப்பார் என்று நாம் கருதுகிறோமா?

**மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:** அவர் அரசியல் சட்டரீதியான கவர்னர் - ஜெனரல். ஆலோசனையின் அடிப்படையில் அவர் செயல்படுகிறார்.

2. அ.நி.ச. விவாதங்கள், அதிகாரபூர்வ அறிக்கை தொகுதி VI, 1948, ஜனவரி 27, ப.29.

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** தெளிவு பெற வேண்டிய மற்றொரு விஷயம் உள்ளது. டொமினியன் சட்டமன்றம் ஒரு மசோதாவை நிறைவேற்றும்போது அதற்கு கவர்னர்-ஜெனரலின் ஒப்புதல் தேவைப்படுகிறது. இன்றைய அரசியல் சாசனத்தைத் திருத் தத்திற்கும் இது பொருந்துமா? ஏனெனில் நாம் இங்கு டொமினியன் சட்டமன்றமாக அமர்ந்திருக்கவில்லை. இறையாண்மை கொண்ட அரசியல் நிர்ணய சபையாக இயங்குகிறோம். எனவே தலைவர் என்ற நிலையில் தங்களுக்கு அதிகாரம் உள்ளது என்று நான் கூறு கிறேன். இங்கு நாம் சபாநாயகர் என்றுகூடச் சொல்லவில்லை. புதிய அரசியல் சாசனத்தைக் கவர்னர்- ஜெனரலுக்கு அனுப்பப் போவது இல்லை என்பதுபோல் இன்று நிலவும் அரசியல் சாசனத் திருத் தத்தையும் அவருக்கு அனுப்ப வேண்டியதில்லை என்று டாக்டர் அம்பேத்கர் உணர்ந்துள்ளாரா?

**திரு. தலைவர்:** தமது பாணியிலேயே டாக்டர் அம்பேத்கர் பதிலளித்த விஷயம் இது. உறுப்பினர் திருப்தியடைந்தாரா இல்லையா என்பது வேறுவிஷயம் தீர்மானத்தை முன்மொழிந்தவர் (திருமதி துர்க்காபாய்) பதிலாக ஏதாவது கூறவிரும்பினால், கூறும்படி அவரை இப்பொழுது அழைக்கிறேன்.

**திருமதி ஜி. துர்க்காபாய்:** ஐயா, திரு.தலைவர் அவர்களே! நான் பதில் கூறுவதற்கு அதிகம் ஏதும் இல்லை; ஏனெனில் மொத்த நிலையை விளக்கும் பொறுப்பையும், மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர்கள் எழுப்பிய விஷயங்களுக்குப் பதிலளிக்கும் பொறுப்பை யும் டாக்டர் அம்பேத்கர் மிக அன்புடன் ஏற்றுக்கொண்டார். அவற்றிற்கு அவர் தக்கபடி பதிலளித்தார் என்றும், மொத்த நிலையை யும் தெளிவுபடுத்தினார் என்றும் நம்புகிறேன். விதி 38-A-ல் குறிப் பிடப்பட்டுள்ள மசோதாவுக்கு கவர்னர்-ஜெனரல் அங்கீகாரம் பற்றிய வகையத்தை வைத்துக்கொண்டுள்ளது பற்றி சில உறுப்பினர்கள் தெரிவித்த கருத்துகளைப் பெரிதும் பாராட்டுகிறேன். அவற்றைப் பற்றியும் டாக்டர் அம்பேத்கர் விளக்கி யுள்ளார். எனவே இதுபற்றி நான் அதிகம் கூற வேண்டிய தேவை இல்லை. ஆனால், ஓர் உண்மையை மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன்; இப்பொழுது மாற்றங்கள் செய்யப்பட்ட 1935 சட்டப்படி நாம் ஆளப்படுகிறோம்; அதில் இன்னமும் அந்த வகையம் உள்ளது....

(திருமதி துர்க்காபாயின் தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.)

[1]**திரு. தலைவர்:** திரு.நஸிருத்தீன் அகமது தமது திருத்தத்தை பிரேரேபிக்கலாம்.

**திரு.நஸிருத்தீன் அகமது:** ஐயா, நான் பின்வருமாறு பிரேரே பிக்கிறேன்:

> உத்தேசிக்கப்பட்டுள்ள விதி 38-Bல் ''ஒரு மசோதாவை அறிமுகப் படுத்தல்'' என்ற சொற்களுக்குப் பதிலாக ''அத்தகைய ஒரு மசோதாவை அறிமுகப்படுத்தல்'' என்ற சொற்கள் இடம்பெற வேண்டும்.

ஐயா. இந்தத் திருத்தம் அவசியம். ஏனெனில், விதியின் முந்திய பகுதியில் மசோதா குறிப்பிடப்பட்டிருந்தாலும், 'அத்தகைய' என்ற பதத்தை சேர்ப்பது அதை இன்னும் தெளிவாக்கும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, இதுபற்றி நான் பதிலளிக்க விரும்புகிறேன். திருத்தத்தைப் பிரேரேபிப்பவர் அத்தியாயத்தின் தலைப்பைப் பார்ப்பாரேயாயின், ''இந்திய அர சியல் சட்டத்திற்கு வகையங்கள் ஏற்படுத்துவதற்கான சட்டம்'' என்று அந்த அத்தியாயம் குறிப்பிடப்படுவதை அவர் காணமுடியும். அரசியல் சட்டத்தைத் திருத்தும் மசோதாவைத் தவிர வேறு எதையும் இந்த விதிகள் குறிப்பிடவில்லை. எனவே, ''அத்தகைய'' என்ற பதம் நிச்சயமாக அவசியமற்றது.

**திரு. நஸிருத்தின் அகமது:** இந்த விளக்கத்திற்குப்பின், என் திருத்தத்தைத் திரும்பப் பெற அனுமதி வேண்டுகிறேன்.

(அவையின் அனுமதியுடன் திருத்தம் திரும்பப் பெற்றுக் கொள்ளப்பட்டது.)

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நேரத்தை மிச்சப் படுத்தும் நோக்கத்தோடு, ஐயா நான் ஒரு யோசனை கூற விரும்பு கிறேன். இவையெல்லாம் வரைவுத் திருத்தங்கள். இந்த எல்லா திருத்தங்களையும் அதிகாரபூர்வ மசோதாக்களை உருவாக்குபவர் களின் பரிசீலனைக்கு முன்வைத்தால் எங்கெல்லாம் அவசியம் என்று அவர்கள் நினைக்கிறார்களோ அங்கு அத்திருத்தங்களை

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VI, 1948, ஜனவரி 27, பக். 32-33

இணைத்துக் கொள்ளலாம் என்று இந்த அவை ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினால், அது உசிதமாக இருக்கும். திருத்தங்களை ஒன்றன் பின் ஒன்றாக நாம் எடுத்துக் கொள்வதெனில், அதற்கு ஒரு நாள் முழுவதும் பிடிக்கும். மேலும் ஒரே கருத்தை தெரிவிப்பதற்காக வெவ்வேறு நபர்கள் வெவ்வேறு வாசகத்தை பயன்படுத்துவர். இந்த விஷயத்தில் தங்கள் நேரத்தை செலவிட மட்டுமே விரும்பும் பயிற்சி பெறாதவர்களை விட இந்த மசோதாக்களின் தயாரிப்பாளர்கள் குறிப்பாக தகுதி பெற்றுள்ளவர்கள்.

*(விதி 38-B, ஏற்றுக்கொள்ளப்பட்டது - ஆசிரியர்)*

*(வரைவுக்குழு 1947 ஆகஸ்டு 30ல் முதலாவதாகக் கூடி, டாக்டர் அம்பேத்கரை தனது தலைவராகத் தேர்ந்தெடுத்தது. 1947 அக்டோபர் 27லிருந்து குழு நாள்தோறும்கூடி, அரசியல்சட்ட ஆலோசகரின் அலுவலகம் தயாரித்த வரைவு வாசகங்களை விவாதித்தது; திருத்தி அமைக்கவும் செய்தது. 1948 பிப்ரவரி 13 வரை 44 நாட்கள் குழு கூடியது. இதில் டாக்டர் அம்பேத்கரே எல்லா நடவடிக்கைகளுக்கும் வழிகாட்டியாக இருந்தார். வரைவுக்குழு இறுதிப்படுத்திய புதிய வரைவு அரசியல் சாசனம் அரசியல் நிர்ணயசபைத் தலைவருக்கு 1948 பிப்ரவரி 21ல் சமர்ப்பிக்கப்பட்டது. குழு தொடர்ந்து செயல் பட்டது. அவ்வப்போது திருத்தங்கள் சம்பந்தமாகத் தெரிவிக்கப் பட்ட யோசனைகளைப் பரிசீலனை செய்தது. வரைவு அரசியல் சாசனம் மக்கள் முன்னிலையில் எட்டு மாதங்கள் இருந்தது. பின்னர் விவாதத்திற்காக அரசியல் நிர்ணய சபையிடம் 1948 நவம்பர் 4ல் வந்தது - ஆசிரியர்.)*



# வரைவு அரசியல் சாசனத்தின் முதல் வாசிப்பு

*புதுடில்லியில் அரசியல் சாசன மண்டபத்தில், 1948 நவம்பர் 4 ஆம் தேதி வியாழனன்று அரசியல் நிர்ணய சபை கூடிற்று.*

அறிமுகச் சான்றுகளை சமர்ப்பிப்பது, பதிவேட்டில் கையொப்பமிடுவது, உறுதிமொழி எடுத்துக் கொள்வது ஆகிய சம்பிரதாயங்கள் பூர்த்தியானதும், தலைவர் மாண்புமிகு டாக்டர் ராஜேந்திர பிரசாத், நாட்டின் தந்தைக்கு அஞ்சலியையும் ஆழ்ந்த மரியாதையயும் செலுத்துவதற்காக உறுப்பினர்களை அவர்களின் இருக்கைகளிலிருந்து எழுந்து நிற்கும்படிக் கேட்டுக் கொண்டார். 'நமது உயிரற்ற சதைக்கும் எலும்புகளுக்கும் உயிரூட்டியவர், சோர்வு, ஏமாற்றம் என்னும் இருளிலிருந்து நம்பிக்கை, மற்றும் சாதனை என்ற வெளிச்சத்துக்கு, ஞாயிற்றொளிக்கு நம்மை இட்டுச் சென்றவர், அடிமைத்தளையிலிருந்து நம்மை சுதந்திரத்திற்கு வழி நடத்திச் சென்றவர், என்று மகாத்மா காந்தியை அவர் வர்ணித்தார்.

உறுப்பினர்கள் எழுந்து நின்று மௌனம் அனுஷ்டித்தனர். இதனையடுத்து, காய்தே-இ-ஆஸம் முகமது அலி ஜின்னா, திரு. டி.பி. கயித்தான் மற்றும் திரு. டி.எஸ். குருங் ஆகியோர் மறைவுக்கு இருக்கையிலிருந்து எழுந்து நின்று மௌனம் அனுசரித்து அஞ்சலி செலுத்தப்பட்டது.

முதலாவதாக, சென்னையைச் சார்ந்த திருமதி ஜி. துர்க்கா பாய் முன்மொழிந்த தீர்மானத்தை அவை விவாதத்திற்கு எடுத்துக் கொண்டது; அது அரசியல் நிர்ணயசபை விதிகள் 5A மற்றும் 5Bக்குத் திருத்தமாகும். அவை அதை ஏற்றுக்கொண்டது.

பின்பு தலைவர் டாக்டர் ராஜேந்திர பிரசாத் எழுந்து அவையில் உரையாற்றினார். அலுவல் நிகழ்ச்சிநிரல் பற்றி அவர் விளக்கினார். அதைத் தொடர்ந்து விவாதம் நடைபெற்றது.

*பிற்பகல் கூட்டத்தில் தமது தீர்மானத்தை முன்வைக்கும் படி டாக்டர் அம்பேத்கரை, தலைவர் அழைத்தார். அரசியல் நிர்ணய சபையின் பரிசீலனைக்காக வரைவு அரசியல் சாசனத்தை டாக்டர் அம்பேத்கர்அறிமுகப்படுத்தினார்.*

*1948 நவம்பர் 4 ஆம் தேதி அரசியல் நிர்ணய சபை முன் வரைவு அரசியல் சாசனம் சமர்ப்பிக்கப் பட்டதும், அதைத் தொடர்ந்து ஒரு சுருக்கமான விவாதம் நடைபெற்றது. அது அரசியல் சாசனத் தின் முதல் வாசிப்பு என்று அழைக்கப்படுகிறது. இரண்டாவது வாசிப்பு 1948 நவம்பர் 15ல் துவங்கியது. இரண்டாவது வாசிப்பில், அரசியல் சாசனம் பிரிவு, பிரிவாக விரிவாக விவாதிக்கப்பட்டது. 1949 அக்டோபர் 17ல் விவாதம் முடிவுபெற்றது.*

*மூன்றாவது வாசிப்புக்காக, 1949 நவம்பர் 14ல் அரசியல் நிர்ணயசபை மீண்டும் கூடிற்று. இது 1949 நவம்பர் 26ல் பூர்த்தி யாயிற்று; அப்பொழுது அரசியல் சாசனம் நிறைவேற்றப்பட்ட தாக பிரகடனப்படுத்தப்பட்டது; அதை அடுத்து அவையின் தலைவர் அதில் கையொப்பமிட்டார்.*

*வரைவு அரசியல் சாசனம் இந்த பாகத்தில் பின்சேர்க்கை யாக வைக்கப்பட்டுள்ளது. வரைவு அரசியல் சாசனத்தை படிப்பதன் மூலம் இந்திய அரசியல் சாசனத்தின் பல்வேறு விதிகளையும் அவை பற்றிய விவாதத்தையும் வாசகர் புரிந்துகொள்வதற்கு இது உதவும்.*

*- ஆசிரியர்.*

## வரைவு அரசியல் சாசனம் - விவாதம்

### வரைவு அரசியல் சாசனம் குறித்த தீர்மானம்

**திரு.தலைவர்:** இப்பொழுது விவாதத்தைத் தொடரலாம் என்று நினைக்கிறேன். தம்முடைய தீர்மானத்தை முன்மொழிய மாண்புமிகு டாக்டர் அம்பேத்கரை அழைக்கிறேன்.

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** (பம்பாய்-பொது): தலைவர் அவர்களே, வரைவுக் குழுவினரால் அறுதி செய்யப்பட்ட வரைவு அரசியல் சாசனத்தை விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளலாம் என முன்மொழிகிறேன்.

1947 ஆகஸ்டு 29 ம் நாளன்று அரசியல் நிர்ணயசபை நிறைவேற்றிய தீர்மானத்தின் அடிப்படையில் வரைவுக்குழு நியமிக்கப் பட்டது.

ஒன்றிய அதிகாரக்குழு, ஒன்றிய அரசியல் சாசனக்குழு, மாகாண அரசியல் சாசனக்குழு மற்றும் அடிப்படை உரிமைகள், சிறுபான்மையினர், பழங்குடியினர் பிராந்தியங்கள் குறித்த ஆலோசனைக்குழு போன்ற பல்வேறு குழுக்களது அறிக்கைகளின் அடிப்படையில் அரசியல் நிர்ணயசபை மேற்கொண்ட முடிவுகளுக்கேற்ப அரசியல் சாசனத்தைத் தயாரிக்கும் பணி, வரைவுக் குழுவுக்கு பணிக்கப் பட்டது. சில விஷயங்களில், 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் விதிகளைப் பின்பற்ற வேண்டுமென்று அரசியல் நிர்ணய சபை பணித்தது. வரைவுக்குழு செய்துள்ள மாற்றங்களை, 1948 பிப்ரவரி 21 ஆம் தேதிய கடிதத்தில் குறிப்பிட்டுள்ளேன். இந்த மாற்றங்களைத் தவிர, அதற்களிக்கப்பட்ட வழிகாட்டுதல்களை உள்ள படியே வரைவுக்குழு நிறைவேற்றியுள்ளது என நம்புகிறேன்.

வரைவுக்குழு உருவாக்கியுள்ள வரைவு அரசியல் சாசனம் ஓர் சக்தி மிக்க ஆவணம் எனக் கூறலாம். அது 315 விதிகளையும் 8 அட்டவணைகளையும் கொண்டுள்ளது. எந்த நாட்டு அரசியல் சாசனமும்

---

1. அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் (இனி அ.நி.ச. விவாதங்கள் என்று குறிப்பிடப்படுகிறது. 1948 நவம்பர் 4, பக்கம் 31.-44)

இந்திய வரைவு அரசியல் சாசனத்தை போன்று, அளவில் இத்தனைப் பெரிதாக இல்லை என்பது மறுக்க முடியாதது. கவனத்தைப் பெரிதும் ஈர்க்கின்ற இந்த வரைவு அரசியல் சாசனத்தின் சிறப்பம் சங்களை அதை முழுவதும் படிக்காதவர்களால் அறிந்துகொள்வது சாத்தியமில்லை.

கடந்த எட்டு மாதங்களாக வரைவு அரசியல் சாசனம் மக்கள் முன் விவாதத்திற்கு வைக்கப்பட்டிருந்தது. இந்த இடைக்காலத் தில் நண்பர்கள், விமர்சகர்கள், எதிர்ப்பாளர்கள் ஆகியோர் இதில் கண்டுள்ள விதிகளைக் குறித்த தங்களின் கருத்துகளைத் தெரிவிக்க போதுமான அவகாசம் இருந்தது. விதிகளைப் பற்றிய தவறான கருத் துகள் மற்றும் விதிகளைச் சரியாகப் புரிந்து கொள்ளாததன் அடிப் படையில் சில விமர்சனங்கள் எழுந்துள்ளன என்று என்னால் நிச்சய மாகக் கூறமுடியும். ஆனால் அந்த விமர்சனங்களுக்குப் பதிலளித்தாக வேண்டும்.

இந்த இரண்டு காரணங்களுக்காக, இத்தீர்மானத்தை விவா தத்திற்கு எடுத்துக்கொள்ளும் வேளையில் அரசியல் சாசனத்தின் சிறப்பம்சங்களை உங்கள் கவனத்துக்குக் கொண்டு வருவதுடன் அதன் மீது சாற்றப்பட்டுள்ள குற்றச்சாட்டுகளுக்கு நான் பதிலளித்தாக வேண்டும்.

நான் இதைத் தொடங்குவதற்கு முன்பு அரசியல் நிர்ணய சபை நியமித்துள்ள மூன்று குழுக்களின் அறிக்கைகளை சபை முன் வைக்க விரும்புகிறேன். அவை, 1. தலைமை ஆணையர்கள் மாகா ணங்கள் பற்றிய குழுவின் அறிக்கை. 2. ஒன்றியத்துக்கும் மாநிலங் களுக்குமிடையேயான நிதிநிலை உறவுகள் பற்றிய சிறப்புக் குழு வின் அறிக்கை, மற்றும் 3. பழங்குடியினர் பிரதேசங்கள் பற்றிய ஆலோசனைக்குழுவின் அறிக்கை. அவை உறுப்பினர்களுக்கு இதன் நகல்கள் அளிக்கப்பட்டன. ஆனால் அவர்கள் அதைக் கவனத்தில் எடுத்துக்கொள்ள உரிய காலத்தில் அவை வழங்கப்படவில்லை. இந்த அறிக்கைகள் மற்றும் அவற்றில் கொடுக்கப்பட்டுள்ள பரிந்துரைகள் வரைவுக் குழுவினரால் பரிசீலிக்கப்பட்டுள்ளதால் சம்பிரதாய முறை யில் அவற்றை இந்த அவைக்கு அளிப்பது நியாயமாக இருக்கும்.

முக்கியமான கேள்வியைப் பார்ப்போம். அரசியல் சாசன மாணவன் ஒருவனிடம் இந்த அரசியல் சாசனத்தை அளித்தால், நிச்சயமாக அவன் இரண்டு கேள்விகளை எழுப்புவான்: அரசியல் சாசனம் எத்தகைய அரசை முன்வைக்கிறது? இரண்டாவதாக அரசியல் சாசனம் எப்படிப்பட்டதாக இருக்கும்? ஏனெனில் இந்த இரண்டு முக்கிய விஷயங்களையும் ஒவ்வொரு அரசியல் சாசனமும் உள்ளடக்கியுள்ளது. இந்த இரண்டு கேள்விகளில் முதலாவதிலிருந்து ஆரம்பிக்கிறேன்.

இந்திய ஒன்றியத்தின் தலைவராக குடியரசுத் தலைவர் விளங்குவார் என்று வரைவு அரசியல் சாசனம் குறிப்பிடுகிறது. குடியரசுத் தலைவர் அழைக்கப்படும் முறை அமெரிக்க ஐக்கிய நாடு களின் அதிபரை நினைவுப்படுத்துகிறது. குடியரசுத் தலைவர் என்ற பெயர் ஒற்றுமையைத் தவிர அமெரிக்க அரசுமுறைக்கும் வரைவு அரசியல் சாசனம் குறிப்பிடும் இந்திய அரசு முறைக்கும் எந்த விதப் பொதுத்தன்மையும் கிடையாது. அமெரிக்க ஆட்சிமுறை அதிபர் ஆட்சி முறை எனப்படும். வரைவுஅரசியல் சாசனத்தில் கொடுக்கப் பட்டுள்ளதோ நாடாளுமன்ற அரசமைப்பாகும். இந்த இரண்டும் அடிப்படையில் வேறுபாடுடையவை.

அமெரிக்க அதிபர் முறையில் ஆட்சித் துறையின் முக்கியத் தலைவராக அதிபர் விளங்குகிறார். ஆட்சித்துறை அவர் பொறுப் பில் இருக்கும். வரைவு அரசியல் சாசனத்தின்படி குடியரசுத் தலை வருக்கு அளிக்கப்பட்டுள்ள இடம், இங்கிலாந்து அரசியல் சாசனப்படி அரசருக்கு அளிக்கப்பட்டுள்ள இடத்தைப் போன்றதாகும். அவர் குடியரசின் தலைவர் ஆவார்; ஆனால் ஆட்சித்துறையின் தலைவ ராக இருக்க மாட்டார். அவர் நாட்டைப் பிரதிநிதித்துவப்படுத்து கிறார். ஆனால் நாட்டை ஆள்வதில்லை. அவர் நாட்டின் சின்னமாக விளங்குகிறார். நாட்டின் முடிவுகள் அறிவிக்கப்படும் வழிமுறைச் சடங்குகளின் முத்திரை போன்றதுதான் ஆட்சித்துறையில் அவ ருடைய இடம், அமெரிக்க அரசியல் சாசனப்படி பல்வேறு துறை களை நிருவகிக்கும் அமைச்சர்கள் அதிபரின் கீழ் உள்ளனர். அதே போன்று இந்தியக் குடியரசுத் தலைவரின் கீழும் பல்வேறு துறை களை நிருவகிக்கும் அமைச்சர்கள் இருப்பார்கள். இங்கும் கூட இரண்டுக்கும் இடையே அடிப்படையான வேறுபாடு உள்ளது.

தமது அமைச்சர்கள் அளிக்கும் ஆலோசனை எதையும் அமெரிக்க அதிபர் கேட்க வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. இந்தியக் குடியரசுத் தலைவர், பொதுவாக தமது அமைச்சர்களின் ஆலோசனை களை கேட்டாக வேண்டும். அவர்கள் ஆலோசனைக்கு மாறாக அவரால் எதையும் செய்ய முடியாது. அவர்கள் ஆலோசனையின்றி அவர் எதையும் செய்ய முடியாது. தமது அமைச்சரை அமெரிக்க அதிபர் எந்த நேரத்திலும் பதவியிலிருந்து விலக்கமுடியும். ஆனால் நாடாளுமன்றத்தில் அமைச்சரவைக்குப் பெரும்பான்மையிருக்கும் வரை இந்தியக் குடியரசுத் தலைவருக்கு இந்த அதிகாரம் கிடையாது.

ஆட்சித் துறையும் சட்டமன்றமும் தனித்தனியாகச் செயல் படுவதின் அடிப்படையில் அமெரிக்க அதிபர் ஆட்சி முறை செயல் படுகிறது. எனவே அதிபரும் அவரது அமைச்சர் சகாக்களும் காங் கிரசின் உறுப்பினர்களாக் இருப்பதில்லை. இந்தக் கோட்பாட்டை வரைவு அரசியல் சாசனம் ஏற்றுக்கொள்ளவில்லை. இந்திய ஒன்றி யத்தின் அரசியல் சாசனப்படி அமைச்சர்கள் நாடாளுமன்ற உறுப் பினர்களாக இருப்பார்கள். நாடாளுமன்ற உறுப்பினர்கள் மட்டுமே அமைச்சர்களாக முடியும். நாடாளுமன்றத்திலுள்ள மற்ற உறுப் பினர்களுக்குள்ள உரிமைகளே அமைச்சர்களுக்கும் இருக்கும். அதாவது நாடாளுமன்றத்தில் அமர்ந்து விவாதங்களில் பங்கு கொள்வது, வாக்களிப்பது போன்றவையாகும். நிச்சயமாக இந்த இருவகை அரசுகளும் ஜனநாயக அரசுகள்தான். இரண்டில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பது என்பது எளிய செயலல்ல. ஒரு ஜனநாயக ஆட்சித் துறை இரண்டு நிபந்தனைகளுக்குட்பட வேண்டும்: (1) அது ஒரு நிலையான ஆட்சித் துறையாக இருக்க வேண்டும். (2) அது ஒரு பொறுப்புள்ள ஆட்சித் துறையாக இருக்க வேண்டும். இரண்டு வகை யிலும் சம அளவில் இயங்கும் ஆட்சித் துறையை உருவாக்குவது துரதிர்ஷ்டவசமாக சாத்தியமில்லாமலிருக்கிறது. அதிக உறுதி யுடன் இருக்கும் முறையோ அல்லது அதிகப் பொறுப்புள்ள ஆனால் அதிக நிலையற்ற ஒரு முறையோதான் உருவாகிறது. அமெரிக்க மற்றும் சுவிட்சர்லாந்து முறைகள் அதிக நிலையான தன்மை கொண்டவை. ஆனால் அதிகப் பொறுப்புள்ளவைகள் அல்ல. ஆனால் பிரிட்டிஷ் முறை அதிகப் பொறுப்புள்ளதாக இருந்தாலும், அதிக நிலையான தன்மை கொண்டதல்ல, இதற்கான காரணம் எளிதில் புரிந்துகொள்ளக் கூடியதே. அமெரிக்க ஆட்சித்துறை நாடாளு மன்றம் சார்ந்த அதிகார அமைப்பல்ல. எனவே அது நாடாளுமன்ற பெரும்பான்மையை சார்ந்து செயல்படவேண்டிய அவசியமில்லை.

ஆனால் பிரிட்டிஷ்முறை நாடாளுமன்றம் சார்ந்த முறையாகை யால் நாடாளுமன்றப் பெரும்பான்மையைப் பொறுத்து அது செயல் படுகிறது. நாடாளுமன்றம் சாராத ஆட்சித்துறையாக அமெரிக்க செயலாற்றும் துறை இருப்பதால் அமெரிக்க காங்கிரஸ் ஆட்சி நிருவாகத் துறையை நீக்கிவிட முடியாது. நாடாளுமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசு, பெரும்பான்மையினரின் நம்பிக்கையை இழந்தவுடன் பதவியைத் துறக்க வேண்டும். நாடாளுமன்றத்தை சாராமல் இயங்கும் ஆட்சித்துறை சட்டமன்றத்திற்கு அதிக அளவில் பொறுப்பாக நடந்து கொள்வதில்லை. ஆனால் நாடாளுமன்றத்தைச் சார்ந்து இயங்கும் ஆட்சித் துறைக்கு நாடாளுமன்றத்தில் பெரும் பான்மை தேவைப்படுவதால் அதிகப் பொறுப்புடன் நடந்துகொள்ள வேண்டியிருக்கிறது. நாடாளுமன்றத்தைச் சார்ந்து இயங்கும் ஆட்சித் துறை நாடாளுமன்றம் சாராத ஆட்சித் துறையை விட அதிகப் பொறுப்புடன் நடந்து கொள்ளும் என்ற வேறுபாடு இருப்பதுடன், அதன் செயல்பாடுகளை மதிப்பீடு செய்யும் கால அளவிலும் அதைச் செயல்படுத்தும் முறையிலும் வேறுபாடு உள்ளது. அமெரிக்காவில் இயங்கி வருவது போன்ற நாடாளுமன்றம் சாராத முறையில், ஆட்சித்துறையின் பொறுப்புகள் நிறைவேற்றப்பட்டதைக் குறித்து ஒரு குறிப்பிட்ட காலக் கெடுவிற்குப் பிறகு மதிப்பீடு செய்யப்படு கிறது. அது இரண்டாண்டுக்கு ஒருமுறை நடைபெறுகிறது. அது வாக்காளர்களால் நிறைவேற்றப்படுகிறது. நாடாளுமன்ற முறை செயல்பட்டு வரும் இங்கிலாந்து நாட்டில் ஆட்சித்துறையின் பணிகள் தினந்தோறும் மற்றும் குறிப்பிட்ட காலத்தில் மதிப்பீடு செய்யப்படு கிறது. கேள்விகள், தீர்மானங்கள், நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள், ஒத்திவைப்புத் தீர்மானங்கள், உரைகளின் மீதான விவாதங்கள் ஆகியவைகள் மூலம் அன்றாடம் மதிப்பீடு செய்யப்படுகின்றன. ஒரு காலக் கெடுவில் நடைபெறும் மதிப்பீடு ஐந்தாண்டுகளுக்கோ அதற்கு முன்போ நடைபெறும் தேர்தல் மூலம் நிறைவேற்றப்படு கிறது. ஒரு குறிப்பிட்ட கால அவகாசத்தில் செய்யப்படும் மதிப் பீட்டை விட, பொறுப்புகள் நிறைவேற்றப்பட்டதை அன்றாடம் மதிப்பீடு செய்யும் முறையே இந்தியா போன்ற நாட்டில் மிகவும் பயனுள்ளதும் அவசியமானதும் என்று கருதப்பட்டது. இது அமெரிக்க முறையில் கிடையாது. நாடாளுமன்றத்தைச் சார்ந்து இயங்கும் ஆட்சித் துறையை சிபாரிசு செய்துள்ள வரைவு அரசியல் சாசனம், ஆட்சித் துறையின் நிரந்தரத் தன்மையை விட அதன் அதிகப் பொறுப்பையே விரும்புகிறது.

வரைவு அரசியல் சாசனப்படியான ஆட்சி அமைப்பு முறையைப் பற்றி இதுவரை விளக்கம் அளித்துள்ளேன். இப்பொழுது வேறு ஒரு முக்கியப் பிரச்சினையான அரசியல் சாசனம் எவ்வாறு இருக்கும் என்பதைப் பார்ப்போம்.

இரண்டு வகையான அரசியல் சாசனங்கள் வரலாற்றில் பிரதானமாக இடம்பெற்று உள்ளன. அதாவது அவை ஒற்றை அரசியல் சாசனம் அல்லது கூட்டரசுக்கான (Federal) அரசியல் சாசனம் எனப்படும். ஒற்றை அரசுக்கான அரசியல் சாசனத்தின் இரண்டு முக்கிய தன்மைகள்: (1) மத்திய ஆட்சியின் மிக உயர்ந்த நிலை. (2) துணை சுய ஆட்சி அமைப்புகள் இல்லாதிருத்தல். மாறாக, கூட்டாட்சி அரசின் அரசியல் சாசனத்தில் (1) மத்திய ஆட்சி அமைப்பு முறையுடன் துணை சுய ஆட்சி அமைப்பு முறையும் இணைந்திருத்தல் (2) ஒவ்வொன்றும் அதற்கு ஒதுக்கப்பட்டுள்ள களத்தில் சர்வ சுதந்திரத்துடன் செயல்படுவது, வேறு வார்த்தைகளில் கூறுவதென்றால், கூட்டாட்சி என்பது ஒரு இரட்டை ஆட்சி அமைப்பு முறையாகும். இரட்டை ஆட்சி முறையை நிறுவ வகை செய்வதால் வரைவு அரசியல் சாசனம் ஒரு கூட்டரசு அரசியல் சாசனம் என்றாகிறது. அரசியல் சாசனம் வகைசெய்துள்ள இரட்டை ஆட்சி முறையால் மத்தியில் ஒன்றியமும் பிராந்தியத்தில் மாநிலங்களும், அரசியல் சாசனம் அவைகளுக்கு ஒதுக்கியுள்ள களங்களில் அதிகாரம் செலுத்தும் இறையாண்மை உடைத்தாயிருக்கும். இந்த இரட்டை ஆட்சி அமைப்பு என்பது அமெரிக்க அரசியல் சாசனத்தைப் போன்றது. அமெரிக்க அரசியல் அமைப்பு முறையும் இரட்டை ஆட்சி அமைப்பு முறைதான். அதில் ஒன்று கூட்டாட்சியாகவும் மற்றவை மாகாணங்களின் அரசுகளும் ஆகும். அவை வரைவு அரசியல் சாசனத்தில் குறிப்பிட்டுள்ள ஒன்றிய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் ஒப்பாகும். அமெரிக்க அரசியல் சாசனப்படியான கூட்டாட்சி, மாகாணங்களின் ஒரு கூட்டு ஒப்பந்த அமைப்பு அல்ல. அதேபோன்று மாகாணங்களின் நிருவாக அமைப்புகள் ஒன்றிய அரசை பிரதிநிதித்துவப் படுத்துவதில்லை. இதே போன்று இந்திய அரசும் மாநிலங்களின் கூட்டு ஒப்பந்த அமைப்பு அல்ல. மாநிலங்களின் நிருவாக அமைப்புகளும் மத்திய அரசை பிரதிநிதித்துவப்படுத்துவதில்லை. ஆயினும், இத்துடன் இந்திய மற்றும் அமெரிக்க அரசியல் சாசனங்களுக்கிடையேயான ஒற்றுமை முடிந்து விடுகிறது. இந்த இரண்டுக்கும் இடையேயான ஒற்றுமைகளை விட வேற்றுமைகள் மிகவும் அடிப்படையானவை என்பதுடன் நன்கு புலப்படக் கூடியவைகளுமாகும்.

அமெரிக்கக் கூட்டரசு மற்றும் இந்தியக் கூட்டரசுகளுக் கிடையேயான வேற்றுமைகள் முக்கியமாக இரண்டாகும். அமெரிக் காவில் இந்த இரட்டை ஆட்சி அமைப்பு முறையுடன் இரட்டைக் குடியுரிமையும் வழக்கத்தில் உள்ளது. அமெரிக்காவில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் குடியுரிமை உள்ளது. ஆனால் மாகாணத்தின் குடி யுரிமையும் இருக்கிறது. இரட்டைக் குடியுரிமையினால் ஏற்படும் கடுமைகளை அமெரிக்க அரசியல் சாசனத்தின் பதினான்காவது திருத்தம் எளிதாக்குகிறது. அதன்படி அமெரிக்கக் குடிமகனுக்குள்ள உரிமைகளை, சலுகைகளை, சட்ட விலக்குகளை மாகாணங்கள் மறுப்பது தடை செய்யப்பட்டுள்ளது. அதே நேரத்தில், திரு. வில்லியன் ஆண்டர்சன் குறிப்பிட்டபடி வாக்களிப்பது, அரசு பதவிகள் போன்ற அரசியல் விஷயங்களில் மாகாணங்கள் தங்கள் குடிமகன்களுக்கு சலுகையளிக்கலாம். சில நேர்வுகளில் இந்தச் சலுகைகள் மேலும் அதிகமாகிறது. ஒரு மாகாண அரசுப் பணியில், அல்லது உள்ளூர் அரசுப்பணிகளில் சேர வேண்டுமென்றால் ஒருவன் உள்ளூர்வாசி யாகவோ, அந்த மாகாணக் குடிமகனாகவோ இருக்க வேண்டும். சட்டம், மருத்துவம் போன்ற பொதுநலத் தொழில்களை நடத்த உரிமம் பெறுவதற்கு மாகாணத்தில் குடியிருத்தலோ, குடியுரிமையோ பெற்றிருக்க வேண்டும். மதுபானம் மற்றும் பங்குப் பத்திர விற்பனை போன்ற கடுமையான கட்டுப்பாடுகள் கொண்ட வர்த்தக நடவடிக் கைகளுக்கும் இவை பொருந்தும்.

ஒவ்வொரு மாகாணமும் தனது ஆட்சிப் பரப்பில் சில உரிமைகளைக் கொண்டுள்ளது. அதை தனது குடிமக்களின் மேம் பாட்டிற்காக பயன்படுத்துகிறது. காட்டுமிருகங்கள் மற்றும் மீன் துறைகள் மாகாணங்களுக்கு உரியவை. தனது குடிமக்களுக்கு விதிக்கப் படும் கட்டணத்தைவிட பிற மாகாண மக்களுக்கு வேட்டையாட வும், மீன்பிடிக்கவும் அதிகக்கட்டணம் வசூலிக்கப்படுகிறது. தனது பல்கலைக் கழகங்களிலும், கல்லூரிகளிலும் பிற மாகாணத்து மாணவர்கள் சேர்ந்து படிக்க அதிகக் கட்டணம் வசூலிக்கப்படு கிறது. நெருக்கடியான நிலைமைகளில் அன்றி வேறு சந்தர்பங் களில் பிற மாகாணத்தவர்கள் மருத்துவமனைகளிலும், ஆதரவற் றோர்கள் விடுதிகளிலும் அனுமதிக்கப்படுவதில்லை.

சுருக்கமாகக் கூறுவதென்றால் தனது குடிமகன்களுக்கு அல்லது தனது மாகாணத்தில் குடியிருப்பவர்களுக்கு ஒரு மாகாணம் பல உரிமைகளை வழங்க முடியும். சட்டப்படி பிற மாகாணத்தவர்

களுக்கு சில உரிமைகளை வழங்க மறுக்கலாம் அல்லது தனது மாகாணத்தவர்களைவிட அதிகமான நிபந்தனைகளை விதிக்கலாம். ஒரு மாகாணத்தின் குடியுரிமை பெற்றவர்களுக்கு அளிக்கப்படும் இந்த சிறப்புச்சலுகைகள் அந்த மாகாணத்தின் குடியுரிமைக்கான சிறப்புச் சலுகைகளாகும். இதையெல்லாம் கணக்கில் எடுத்துக்கொண்டு பார்த்தால் ஒரு மாகாணத்தின் குடியுரிமை பெற்றவர்களுக்கும் பெறாதவர்களுக்கும் இடையேயான முக்கிய வேற்றுமைகளைக் காண முடியும். தற்காலிகமாக சிறிது காலமே தங்கியிருப்பவர்களுக்கு சில இடையூறுகளும் தடைகளும் உள்ளன.

நாம் கொண்டுவரவுள்ள இந்திய அரசியல் சாசனம் ஒரே குடியுரிமை அளிக்கும் இரட்டை ஆட்சி அமைப்பு முறையிலானது. இந்தியா முழுவதற்குமாக ஒரே குடியுரிமையே இருக்கும். அது இந்தியக் குடியுரிமை எனப்படும். மாநிலக் குடியுரிமை கிடையாது. எந்த மாநிலத்தில் குடியிருந்தாலும் ஒவ்வொரு இந்தியனுக்கும் ஒரே வகையிலான உரிமைகள் இருக்கும்.

இந்திய அரசியல் சாசனத்தில் குறிப்பிட்டுள்ள இரட்டை ஆட்சி அமைப்பு அமெரிக்க இரட்டை ஆட்சி அமைப்புக்கு வேறு ஒரு வகையிலும் மாறுபட்டுள்ளது. அமெரிக்காவில் கூட்டரசு மற்றும் மாகாண அரசியல் சாசனங்களுக்கிடையேயான தொடர்பு நெருக்கமானதல்ல. கூட்டரசு மற்றும் மாகாண அரசுகளுக்கிடையேயான தொடர்புகளை திரு. பிரைஸ் பின்வருமாறு விளக்குகிறார்:

> "மத்திய அல்லது தேசிய அரசையும் மாகாண அரசுகளையும் ஒரே தரையில் கட்டப்பட்டுள்ள சிறிய கட்டடங்களுக்கும் ஒரு பெரிய கட்டடத்துக்கும் ஒப்பிடலாம். அவைகள் ஒரே தரையில் கட்டப்பட்டிருந்தாலும் ஒன்றுக்கொன்று வித்தியாசமானவைதான்"

அவை வேறுபாடானவைகள்தான். ஆனால் மாகாண அரசுகள் கூட்டரசிலிருந்து எவ்வளவு தூரம் வேறுபட்டிருக்கின்றன? பின்வரும் விஷயங்கள் இந்த வேறுபாடுகளை விளக்கும்:

1. குடியரசு ஆட்சி முறையை கடைப்பிடிக்க வேண்டும் என்ற நிபந்தனைக்கு உட்பட்டு ஒவ்வொரு மாகாணமும் தனது அரசியல் சாசனத்தை உருவாக்கிக் கொள்ளலாம்.
2. தேசிய அரசின் தலையீடின்றி ஒவ்வொரு மாகாணத்தவர்களும் தங்கள் அரசியல் சாசனத்தைத் திருத்தும் அதிகாரம் பெற்றுள்ளனர்.

மேலும் ''பிரைஸின் சொற்களில் கூறுவதென்றால்:

> ''ஒவ்வொரு மாகாணமும் (அமெரிக்காவில்) தனக்கென்று அரசியல் சாசனத்தைக் கொண்டுள்ளதால், பரஸ்பர நன்மையால் பிணைக்கப்பட்ட சுதந்திர மாகாணமாக அது திகழ்கிறது. மாகாணத்தின் எல்லா சட்டமன்ற, நிருவாக, நீதிமன்ற அதிகாரங்களும் அதன் அரசியல் சாசனத்தால் உரு வானவை, அதற்குக் கட்டுப்பட்டவை.''

உத்தேச இந்திய அரசியல் சாசனம் இதை ஏற்றுக்கொள்ள வில்லை. எந்த மாநிலமும் (எப்படி இருப்பினும் 1 பிரிவில் உள்ளவை) தங்களுக்கென்று ஓர் அரசியல் சாசனத்தை உருவாக்க முடியாது. ஒன்றிய மற்றும் மாநில அரசுகள் ஒரே அரசியல் சாசனத் தின் கீழ்தான் செயல்பட வேண்டும், அதற்கு வெளியேயிருந்து செயல்பட முடியாது.

அமெரிக்கக் கூட்டரசுக்கும் உருவாக்கப்படவுள்ள இந்தியக் கூட்டரசுக்கும் இடையேயான வேறுபாடுகளை இதுகாறும் உங்கள் கவனத்திற்குக் கொண்டு வந்தேன். கொண்டு வரப்படவுள்ள இந்திய கூட்டரசில் மேலும் சில விசேஷ அம்சங்கள் உள்ளன. அமெரிக்கக் கூட்டரசு மட்டுமின்றி மற்ற எல்லா கூட்டரசிலிருந்தும் இது எவ்வாறு மாறுபட்டதென்பதை அவை குறிக்கின்றன. அமெரிக்கக் கூட்டரசு அமைப்பு உட்பட எல்லாக் கூட்டரசு அமைப்பு முறைகளும் ஒரு இறுக்கமான கூட்டமைப்பு என்ற சட்டத்துக்குள் அடைக்கப்பட் டுள்ளன. எந்த சூழ்நிலை யிலும் அதன் வடிவத்தையோ, உருவத் தையோ மாற்ற முடியாது. அது ஒருபோதும் ஒற்றையரசு முறையாக செயல்பட முடியாது. ஆனால் அதே நேரத்தில் சூழ்நிலைகளைப் பொருத்து, வரைவு அரசியல் சாசனம் ஒற்றையரசு அல்லது கூட் டரசின் அரசியல் சட்டமாகச் செயல்படமுடியும். சாதாரண காலங் களில் அது ஒரு கூட்டாட்சி முறையில் செயல்பட வகை செய்யப் பட்டுள்ளது. ஆனால் போர்க்காலங்களில் அது ஒரு ஒற்றையரசின் அரசியல் சாசனமாகச் செயல்பட வகை செய்யப்பட்டுள்ளது. 275 ஆம் விதியில் செய்யப் பட்டுள்ள ஏற்பாட்டின்படி குடியரசுத் தலைவர் அதிகாரபூர்வ பிரகடனத்தை வெளியிட்டவுடன் காட்சி முற்றிலும் மாறிவிடுவதுடன் நாடு ஒற்றையரசு முறைக்கு மாறிவிடுகிறது. பிரகடனத்தின்படி ஒன்றிய அரசு விரும்பினால் பின்வரும் உரிமை களை எடுத்துக் கொள்ள முடியும் (1) மாநில பட்டியலிலுள்ள பொருள் எதிலும் சட்டமியற்றும்: அதிகாரம் (2) மாநில அரசுகள் தங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள துறைகளில் நிருவாகம் சம்பந்தமாக எப்படிச் செயல்படவேண்டும் என்று உத்திரவிடும் அதிகாரம் (3) எந்த

ஒரு அதிகாரிக்காவது, எந்த ஒரு காரணத்துக்காவது சட்ட உரிமை அளிக்கும் அதிகாரம். (4) அரசியல் சாசனத்தில் கூறப்பட்டுள்ள நிதி சம்பந்தமான ஏற்பாடுகளை தற்காலிகமாக நிறுத்தி வைக்கும் அதிகாரம். இந்த மாதிரி ஒற்றை அரசாக மாறும் அதிகாரத்தை வேறு எந்தக்கூட்டரசும் பெற்றிருக்கவில்லை. இவை, நமக்குத் தெரிந்த கூட்டரசு அமைப்புகளுக்கும் வரைவு அரசியல் சாசனத்தில் முன் மொழியப்பட்டுள்ள கூட்டரசு அமைப்புக்கும் இடையேயுள்ள வேறுபாடுகளாகும்.

இந்தியக் கூட்டரசு அமைப்புக்கும் மற்ற கூட்டாட்சி அமைப்புகளுக்குமிடையேயான வேறுபாடுகள் இவை மட்டு மல்ல. கூட்டாட்சி முறை திறமையாக இயங்கும் அரசல்ல என்று கூறப்படாவிட்டாலும் அது ஒரு பலவீனமான அரசு என்று கருதப் படுகிறது. அது இரண்டு பலவீனங்களைக் கொண்டுள்ளதாகக் குற்றம் சாட்டப்படுகிறது. கூட்டரசு அமைப்புமுறையில் இது உள்ளார்ந்த ஒன்றாக உள்ளது என்பதில் எந்த விதக் கருத்து வேற்றுமையும் இருக்க முடியாது. ஒரு கூட்டரசு அமைப்பு முறையின் அரசியல் சட்டம் எழுத்து வடிவத்தில்தான் இருக்கமுடியும். எழுத்து வடிவத் தில் இருக்கும் அரசியல் சாசனம் வளைந்து கொடுக்காத அரசியல் சாசனமாகத்தான் இருக்க முடியும். கூட்டரசு அமைப்பு முறை என்பது அரசியல் சாசன சட்டத்தின்படி கூட்டரசுக்கும் மாகாண அரசுகளுக் கும் இடையே இறையாண்மையை பிரிப்பதுதான். இதன் விளைவு கள் இரண்டு. மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ள துறையில் கூட்டரசு தலையிடுவது, அதேபோன்று கூட்டரசுக்கு ஒதுக்கப்பட்ட துறைகளில் மாநில அரசாங்கங்கள் தலையிடுவது. அரசியல் சாச னத்தை மீறுவதாகும். இந்த அரசியல் சாசன மீறல் நீதித்துறை யால் மட்டுமே தீர்மானிக்கப்பட வேண்டிய, நீதிமன்ற விசாரணைக் குட்பட்ட விஷயமாகும். கூட்டாட்சிக் கோட்பாட்டின் தன்மை இவ்வாறுள்ளதால் கூட்டாட்சி அரசியல் சாசனம், சட்டத்தை அதிக மாகச் சார்ந்துள்ளது என்ற குற்றச்சாட்டிலிருந்து தப்ப முடியாது. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் அரசியல் சாசனத்தில் இந்தக் குறைபாடு களைத் தெளிவாகக் காணமுடிகிறது.

பிந்தைய கட்டத்தில், கூட்டாட்சி முறையைப் பின்பற்றிய நாடுகள், அளவுக்கு அதிகமாக சட்டத்தைச் சார்ந்திருக்கும் தன்மை யையும் மற்றும் அதன் இறுக்கமான தன்மையையும் குறைப்பதற்கு

முயன்றுள்ளன. இது சம்பந்தமாக ஆஸ்திரேலியாவின் உதாரணத்தை எடுத்துக் கொள்ளலாம். இதற்காக ஆஸ்திரேலிய அரசியல் சாசனம் பின்வரும் வழிமுறைகளை ஏற்படுத்தியுள்ளது:

(1) கூட்டரசு மற்றும் மாநில அரசாங்கங்களுக்குப் பொதுவான துறைகளில் கூட்டரசின் நாடாளுமன்றத்துக்கு சட்டம் இயற்ற அதிக அதிகாரம் வழங்கப்பட்டுள்ளதுடன் தனிப் பட்ட முறையில் சட்டமியற்றும் அதிகாரமும் வழங்கப் பட்டுள்ளது.

(2) அரசியல் சாசனத்தில் தாற்காலிகமாக இடம்பெற்றிருக் கும் சில விதிகளை ''நாடாளுமன்றம் வேறுவிதமாக தீர் மானிக்கும் வரையில், அவை செல்லுபடியாவதற்கு'' வழிவகை செய்யப்பட்டுள்ளது.

ஆஸ்திரேலியா அரசியல் சாசனத்தின்படி ஆஸ்திரேலியா நாடாளுமன்றம் பல நடவடிக்கைகளை எடுக்கமுடியும் என்பது தெளிவாகத் தெரிகிறது. ஆனால் அமெரிக்கக் காங்கிரசுக்கு இந்தத் தகுதி அளிக்கப்படவில்லை. இப்படிச் செயல்பட வேண்டுமென் றால், அமெரிக்க அரசாங்கம் உச்சநீதிமன்றத்தை அணுகவேண்டும். இந்த அதிகாரத்தைப் பயன்படுத்துவதை நியாயப்படுத்துவதற்கு கோட்பாட்டைத் தயாரிப்பதில் அதற்குள்ள திறமையையும் கூர் மதியையும் பொறுத்துள்ளது இது.

சட்டத்தை அதிக அளவில் சார்ந்திருக்கும் தன்மையையும் மற்றும் நெளிவு சுளிவற்ற தன்மையையும் குறைப்பதற்கு, ஆஸ்தி ரேலிய திட்டத்தை ஆஸ்திரேலியாவை விட அதிக அளவில் வரைவு அரசியல் சட்டம் பின்பற்றியுள்ளது. சட்டம் இயற்றும் அதிகாரம் பெற்ற பொதுவான பட்டியல், ஆஸ்திரேலிய அரசியல் சட்டத் தில் உள்ளதைப் போன்று நீண்டதாகவுள்ளது. ஆஸ்திரேலிய அரசியல் சட்டத்தின்படி கூட்டரசுக்கும், மாநில அரசாங்கங்களுக்கும் பொதுவான விஷயங்கள் 39 ஆக உள்ளன. வரைவு அரசியல் சாசனப் படி இது 37 ஆக உள்ளன. ஆஸ்திரேலிய அரசியல் சாசனத்தைப் பின்பற்றி வரைவு அரசியல் சாசனத்தில் தற்காலிகமாக செயல் படும் விதிகள் ஆறு உள்ளன. அந்த ஏற்பாடுகளை எந்த நிமிடத் திலும் தேவைக்கு ஏற்ற வகையங்களாக நாடாளுமன்றத்தால் மாற்ற முடியும். தனிப்பட்ட சட்டங்களை இயற்றும் அதிகாரம் நாடாளு

மன்றத்துக்கு அளிக்கப்பட்டுள்ளது. ஆஸ்திரேலிய அரசியல் சாசனத்தை விட வரைவு அரசியல் சாசனம் பெரும் முன்னேற்றம் பெற்றுள்ளது என்றுதான் கூறவேண்டும். ஆஸ்திரேலிய அரசியல் சாசனத்தில் நாடாளுமன்றத் துக்குச் சட்டம் இயற்றும் தனிப்பட்ட அதிகாரம் 3 விஷயங்களுக்கு மட்டுமே விரிவுபடுத்தப்பட்டுள்ளது. ஆனால் இந்திய நாடாளு மன்றத்துக்கு இந்த தனிப்பட்ட அதிகாரம் வரைவு அரசியல் சாசனத்தின்படி 91 விஷயங்களுக்கு விரிவுபடுத்தப் பட்டுள்ளது. இவ்வகையில் வரைவு அரசியல் சாசனம் கூட்டாட்சி முறையில் அதிக அளவில் நெளிவு சுளிவுகளைக் கொண்டுள்ளது. அதன் இயற்கையான இறுக்கம் குறைந்துள்ளது.

வரைவு அரசியல் சாசனம் ஆஸ்திரேலியா அரசியல் சாசனத்தைப் பின்பற்றுகிறது அல்லது அதிக அளவில் பின்பற்றுகிறது என்று கூறினால் மட்டும் போதாது. கூட்டரசு முறையில் இயற்கையாக உள்ள இறுக்கத்தையும், சட்டத்தை அதிக அளவில் சார்ந்திருக்கும் தன்மையையும் குறைக்க அதில் புதிய வழிவகைகள் செய்யப் பட்டுள்ளன. இது சிறப்பானது என்பதுடன் வேறு எங்கும் காணப் படாததாகும்.

முதலாவது, சாதாரண காலங்களில் மாநிலங்களுக்கு மட்டுமே என்று ஒதுக்கப்பட்ட துறைகளில் நாடாளுமன்றம் சட்டம் இயற்றுவதற்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரம். 226, 227 மற்றும் 229 ஆவது விதிகளைத் தான் குறிப்பிடுகிறேன். 226 ஆவது விதியின் படி, மாநிலப் பட்டியலில் உள்ள ஒரு விஷயம் மாநிலத்திற்கு அக்கறை உள்ள விஷயம் என்பதிலிருந்து அது தேசிய முக்கியத்துவம் பெறும்போது, நாடாளுமன்றம் அது குறித்துச் சட்டம் இயற்றலாம். ஆனால் இதற்கு, இந்த அதிகாரத்தை மத்திய அரசு செயல்படுத்த வேண்டும் என்று மேல் அவையில் 2/3 பங்கு பெரும்பான்மை யுடன் தீர்மானம் நிறைவேற்றப்பட வேண்டும். தேசிய நெருக்கடி நிலையின்போது இம்மாதிரி அதிகாரம் 227 ஆவது விதியால் நாடாளுமன்றத்துக்கு அளிக்கப்படுகிறது. 229 ஆவது விதியின்படி மாநிலங்கள் ஏற்றுக்கொண்டால், இதே அதிகாரத்தை நாடாளு மன்றம் செயல்படுத்த முடியும். கடைசியாகக் குறிப்பிட்டுள்ள ஏற்பாடு ஆஸ்திரேலிய அரசியல் சாசனத்தில் காணப்பட்டாலும் முதல் இரண்டு வழிவகைகளும் வரைவு அரசியல் சாசனத்திற்கே உரிய சிறப்பம்சங்களாகும்.

அரசியல் சாசனத்தில் மாறுதல் செய்வதற்கான வழிவகைகள் அதன் இறுக்கத்தையும், சட்டத்தைப் பெருமளவு சார்ந்திருக்கும் தன்மையையும் தவிர்க்க இரண்டாவது வழிமுறையாக ஏற்கப்பட்டுள்ளது. அரசியல் சாசனத்தில் திருத்தங்கள் செய்வதற்கான ஏற்பாடுகள் அரசியல் சாசன விதிகளை இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கின்றன (அ) மாநில மற்றும் மத்திய அரசுகளின் சட்டம் இயற்றும் அதிகாரத்தின் பங்கீடு, (ஆ) நாடாளுமன்றத்தின் மாநிலங்களின் பிரதிநிதித்துவம் மற்றும் (இ) நீதிமன்றங்களின் அதிகாரம் ஆகியவை சம்பந்தமான விதிகள் ஒரு பிரிவில் சேர்க்கப்பட்டுள்ளன. மற்ற எல்லா விதிகளும் மற்றொரு பிரிவில் சேர்க்கப்பட்டுள்ளன. இரண்டாவது பிரிவில் சேர்க்கப்பட்டுள்ள விதிகள் அரசியல் சாசனத்தின் பெரும்பகுதி சம்பந்தப்பட்டவை. இரு பங்குப் பெரும்பான்மை மூலம் அதாவது அவைக்கு வருகை தந்துள்ள உறுப்பினர்களின் வாக்களிப்பில் 2/3 பங்கு பெரும்பான்மை மற்றும் ஒவ்வொரு அவையின் மொத்த உறுப்பினர்களின் பெரும்பான்மை மூலம் இந்த விதிகளுக்கு திருத்தம் கொண்டுவர முடியும். இந்த விதிகளுக்கான திருத்தங்கள் மாநிலங்களால் ஏற்கப்பட்டு உறுதி செய்யப்பட வேண்டிய அவசியமில்லை. முதல் பிரிவில் குறிப்பிட்ட விதிகளுக்கு மட்டுமே மாநிலங்கள் அந்தத் திருத்தங்களை ஏற்று உறுதி செய்ய வேண்டுமென்ற கூடுதல் பாதுகாப்பு அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது.

சட்டத்தை பெருமளவு சார்ந்திருக்கும் தன்மை, மற்றும் மாற்ற இயலாதத் தன்மை போன்ற குறைபாடுகளால் இந்தியக் கூட்டாட்சி பாதிக்கப்படாது என்று நிச்சயமாகக் கூறலாம். அதன் குறிப்பிடத்தக்க அம்சமே அது ஒரு வளைந்துக் கொடுக்கக்கூடிய அரசியல் சாசனம் என்பதுதான்.

மற்ற கூட்டாட்சிகளிலிருந்து இந்தியக் கூட்டாட்சியைப் பிரித்துக் காட்டக்கூடிய வேறு ஒரு சிறப்பம்சமும் உள்ளது. பிரிக்கப்பட்ட அதிகாரத்தின் அடிப்படையிலான இரட்டை அரசியலமைப்பு கூட்டாட்சியில், ஒவ்வொரு அரசும் தனிப்பட்ட சட்ட, ஆட்சி, நீதித்துறை அதிகாரங்களை கொண்டுள்ளதால், ஆட்சித்துறை மற்றும் நீதித்துறையில் மாறுபட்ட சட்டங்கள் உருவாகக்கூடும். ஒரு கட்டம் வரையில் இதைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. வட்டாரத் தேவைகளுக்கும், சூழ்நிலைகளுக்கும் ஏற்ப அரசாங்க அதிகாரத்தைப் பயன்படுத்தும் முயற்சி என்று இதை வரவேற்கக் கூடும். ஒரு குறிப்பிட்ட எல்லையைத் தாண்டும்போது இந்த வேறுபாடுகள் குழப்பத்தை உண்டாக்கக்கூடும். பல கூட்டாட்சி நாடுகளில் இவ்விதக் குழப்பங்கள் ஏற்பட்டுள்ளன. ஒன்றியத்தில்

இருபது மாகாணங்கள் இணைந்திருந்தால் திருமணம், விவாகரத்து, வாரிசுரிமை, குடும்ப உறவுகள், ஒப்பந்தங்கள், குற்றம், குற்றவியல், எடைகளும் அளவுகளும், காசோலைகள், வங்கி மற்றும் வர்த்தகம், நியாயம் பெறும் வழிமுறைகள், நிர்வாக நடைமுறைகள் ஆகிய பல்வேறு துறைகளில் இருபது விதச் சட்டங்களைச் சந்திக்க வேண்டியிருக்கும். இந்த நிலை மாகாணத்தைப் பலவீனப்படுத்துவதுடன் ஒரு மாகாணத்திலிருந்து மற்றொரு மாகாணத்துக்கு செல்பவர்கள், ஒரு மாகாணத்தில் சட்டப்படியாக உள்ள விஷயங்கள் மற்ற மாகாணங்களில் சட்டவிரோதமாக இருப்பதைக் கண்டு மனம் உடைந்து போவார்கள். நாட்டின் ஒற்றுமையை சீராக வைத்துக் கொள்ள தேவைப்படும் எல்லா அடிப்படை விஷ யங்களிலும் ஒரே சீரான தன்மையை உருவாக்கவும் அதே நேரத்தில் இந்தியா ஒரு கூட்டரசாக விளங்கவும், வழிமுறைகள் மற்றும் நடைமுறைகளை வரைவு அரசியல் சட்டம் ஏற்படுத்தியுள்ளது. வரைவு அரசியல் சாசனம் மேற்கொண்டுள்ள வழிமுறைகள் மூன்று. அவை வருமாறு:

(1) ஒரே நீதித்துறை

(2) ஒரே மாதிரியான அடிப்படைச் சட்டங்கள், குற்றவியல் மற்றும் உரிமையியல் சட்டங்கள்

(3) முக்கியமான ஆட்சிப் பதவி இடங்களை நிருவகிக்க ஒரு அகில இந்திய அரசுப் பணித்துறை.

ஒரு கூட்டாட்சியில் இயற்கையாகவே உள்ள இரட்டை ஆட்சி அமைப்பு முறையின் தர்க்கரீதியின் விளைவுகளே, இரட்டை நீதித்துறை, இரட்டைத் தொகுப்புச் சட்டங்கள், இரட்டை ஆட்சித் துறை ஆகியவைகள். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கூட்டரசின் நீதித்துறையும் மாகாணங்களின் நீதித்துறையும் தனித்தனியாகவே இயங்குகின்றன. இந்தியா ஓர் இரட்டை ஆட்சி அமைப்புடன் இருந்தாலும், இரட்டை நீதித்துறை கிடையாது. உயர்நீதிமன்றங்களும் உச்ச நீதிமன்றங்களும் ஒன்றிணைந்த நீதித்துறையாக இயங்கும். அரசியல் சாசனச் சட்டம், உரிமையியல் சட்டம் அல்லது குற்றவியல் சட்டம் ஆகியவைகளின் அடிப்படையில் எழும் எல்லா வழக்குகளையும் விசாரணைசெய்து தீர்ப்பளிக்கும் அதிகாரத்தை அவை பெற்றிருக்கும். எல்லாவித பரிகார நடவடிக்கைகளிலும்

வேறுபாடுகள் இல்லாமல் இருப்பதற்காகவே இந்த ஏற்பாடுகள். இதைப் போன்ற நிலை ஓரளவு கனடா நாட்டில் உள்ளது. ஆஸ்தி ரேலிய நாட்டின் நிலை கிட்டத்தட்ட இதே போன்றதுதான்.

நகர மற்றும் சமூக வாழ்வின் அடிப்படையான சட்டங் களின் ஒருமுகத் தன்மையை உறுதிப்படுத்தக் கவனம் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது. மிக முக்கியமான சட்டத் தொகுப்புகளான குற்ற விசாரணை முறையியல் சட்டம், உரிமையியல் சட்டம், சாட்சிச் சட்டம், சொத்து மாற்றுச் சட்டம், திருமணச் சட்டம், விவாகரத்துச் சட்டம், வாரிசுரிமைச் சட்டம் முதலியவை பொதுப் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளன. ஏனெனில் கூட்டரசு முறைக்குப் பாதகமின்றி இதன் மூலம் அந்தச் சட்டங்களை ஒரே சீரான முறை யில் செயல்படுத்த முடியும்.

கூட்டாட்சி முறையில் இயல்பாக உள்ள இரட்டை ஆட்சி முறையைத் தொடர்ந்து கூட்டரசுகளின் இரட்டை நிருவாகத் துறை களும் செயல்படுகின்றன. எல்லாக் கூட்டரசு நாடுகளிலும் கூட்டரசின் நிர்வாகத் துறையும் மாகாணத்தின் நிர்வாகத்துறையும் தனித் தனி யாகச் செயல்படுகின்றன. இந்தியக் கூட்டரசு இரட்டை ஆட்சி யமைப்பைக் கொண்டிருந்தாலும், ஒரு விதிவிலக்குடன் இரட்டை நிருவாகத்துறைகள் செயல்படும். நிர்வாகத் தரத்தைச் சீராக வைத்துக் கொள்ளும் நோக்குடன், சில பதவி இடங்கள் கேந்திரமானவை என்று கருதப்படுகின்றன. மிகவும் பரந்து விரிந்து கிடக்கும் நிருவாக எந்திரத்தில் இந்தப் பதவிகளைச் சுட்டிக் காட்டுவது அவ்வளவு எளிதல்ல. இந்தக் கேந்திரமான பதவி இடங்களுக்கு நியமிக்கப்படும் அரசு அதிகாரிகளின் திறமையைப் பொருத்தே நிர்வாகத்தின் தரம் இருக்கும் என்பதில் ஐயப்பாடு இருக்கமுடியாது. நல்லகாலமாக நாடு முழுவதுக்கும் பொதுவான ஒரு நிர்வாக எந்திரத்தை கடந்த காலத்திலிருந்து நாம் பெற்றுள்ளோம். எனவே எந்தப் பதவி இடங் கள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்பதை நாம் அறிவோம். மாநிலங்கள் தங்கள் நிர்வாகப் பணிகளுக்கான வழிவகைகளை உருவாக்க தடை எதுவுமின்றி அகில இந்திய அடிப்படையில் பொதுவான தகுதிகளுடனும், ஒரே மாதிரியான ஊதியத்துடனும் கூடிய, அகில இந்திய நிர்வாக அதிகாரிகள் மட்டுமே இந்தியா முழுவதிலுமுள்ள இந்தக் கேந்திரமான பதவிகளுக்கு நியமிக்கப் படுவார்கள்.

இதுதான் நாம் கொண்டு வரவுள்ள கூட்டாட்சியின் சிறப்பு அம்சங்களாகும். விமர்சகர்கள் என்ன கூறுகிறார்கள் என்பதை இப்போது பார்ப்போம்.

இந்த வரைவு அரசியல் சாசனத்தில் எந்தப் புதுமையும் இல்லை என்றும் 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தி லிருந்து பாதிக்குமேல் எடுக்கப்பட்டுள்ளதாகவும் மற்ற பகுதிகள் பல்வேறு நாட்டு அரசியல் சாசனங்களிலிருந்து எடுக்கப்பட்டதாக வும் கூறப்படுகிறது. சுயமாக இதில் எதுவுமில்லை.

உலக வரலாற்றில் இந்தக் காலகட்டத்தில் தயாரிக்கப்படும் எந்த அரசியல் சாசனத்திலாவது புதிதாக ஏதாவது இருக்க முடியுமா என்ற கேள்வியை எழுப்பத்தான் வேண்டும். எழுத்து வடிவிலான முதல் அரசியல் சாசனம் தயாரிக்கப்பட்டு நூறாண்டுகளுக்கு மேலாகின்றன.மேற்பட்ட காலம் உருண்டோடி விட்டது. அதைத் தொடர்ந்து பல நாடுகள் தங்கள் அரசியல் சாசனத்தை எழுத்து வடிவில் மாற்றிக் கொண்டுள்ளன. ஓர் அரசியல் சாசனத்தின் நோக்கமும், வீச்சும் என்ன என்பது வெகு காலத்துக்கு முன்பே முடிவு செய்யப்பட்டு விட்டது. அதேபோன்று ஓர் அரசியல் சாசனத்தின் அடிப்படைகள் யாவை என்பதையும் உலக நாடுகள் ஏற்றுக் கொண்டு விட்டுள்ளன. இவ்விதக் காரணங்களால் எல்லா அரசியல் சாசனங் களின் முக்கியப் பகுதிகளும் ஒரே மாதிரியாகத்தான் இருக்க முடியும். இவ்வளவு காலம் கடந்து உருவாக்கப்படும் புதிய அரசியல் சாசனம் ஒன்றில் ஏதாவது புதிதாக இருக்குமென்றால், அரசியல் சாசனங் களில் பொதுவாகக் காணப்படும் குறைகளை நீக்குவதற்கான மாற்று வழிகளும், அந்தக் குறிப்பிட்ட நாட்டின் தேவைகளைத் திருப்தி செய்யும் வழிமுறைகளும்தான் என்று கூற வேண்டும். இந்த அரசியல் சாசனத்தைச் சரியாகப் படித்துப் புரிந்து கொள்ளாதவர் களே இது வெளிநாட்டு அரசியல் சாசனங்களின் அப்பட்டமான நகல் என்று குறை கூறுகிறார்கள் என்று நிச்சயமாகக் கூறுவேன். இந்த வரைவு அரசியல் சாசனத்தில் உள்ள புதிய அம்சங்களை எடுத்து விளக்கியுள்ளேன். மற்ற அரசியல் சாசனங்களைப் படித்த, விருப்பு வெறுப்பின்றி இந்த விஷயத்தைப் பரிசீலிக்கத் தயாராக உள்ள வர்கள், வேறு அரசியல் சாசனங்களிலிருந்து கண்மூடித்தனமாக எடுத்த பல பகுதிகளைக் கொண்டு இந்த அரசியல் சாசனம் தயாரிக்கப்படவில்லை என்பதை ஏற்றுக்கொள்வார்கள்.

1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் பெரும் பாலான விதிகள் வரைவுச் சாசனத்தில் சேர்க்கப்பட்டுள்ளன என்ற குற்றச்சாட்டுக்கு நான் மன்னிப்புக் கோரப்போவதில்லை. வேறு ஒன்றிலிருந்து எடுத்துக் கையாளுவதில் வெட்கப்படுவதற்கு ஒன்று மில்லை. அது திருட்டுத்தனமான கையாடல் அல்ல. ஓர் அரசியல் சாசனத்தின் அடிப்படைக் கோட்பாடுகள் யாருடைய தனி உரிமை யாகவும் இருக்க முடியாது. 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்திலிருந்து எடுக்கப்பட்ட விதிகள் பெரும்பாலும் ஆட்சி முறை சம்பந்தமான விவரங்கள் என்பதை வருத்தத்துடன் கூறிக் கொள்கிறேன். அவற்றை அரசியல்சாசனத்தில் சேர்ப்பதை வரைவுக் குழு தவிர்க்க வேண்டுமென்றே விரும்புகிறேன். அவை சேர்க்கப் பட்டதன் நியாயத்தை எடுத்துக்காட்ட இதைக் கூறத்தான் வேண்டும். கிரேக்க வரலாற்று ஆசிரியர் இவ்வாறு கூறுகிறார்.

> ''விடுதலை பெற்று அமைதியான சூழ்நிலைக்குத் திரும்பிய பிறகு ஓர் அரசாங்கம் எடுக்க வேண்டிய அவசியமான நட வடிக்கை இதுதான். அரசியல் சாசனப் பண்பாட்டை பெரும் பான்மை சமுதாயத்தினரிடம் மட்டுமன்றி சமுதாயம் முழு வதற்குமே ஊட்டுவது அவசியம். ஏனெனில் வலிமை பெற்ற கண்மூடித்தனமாகச் செயல்படும் எந்தச் சிறுபான்மைக் குழு வும் தங்களுக்கு வெற்றிபெறும் சக்தி இல்லாததால், சுதந்திர அமைப்புகள் செயல்படுவதை சாத்தியமற்றதாக ஆக்கிவிடும்.

அரசியல் சாசனப் பண்பாடு என்பதை திரு.குரோட் இவ்வாறு விளக்குகிறார்: ''அரசியல் சாசனத்தின் பல்வேறு நடைமுறைகளின் பிரகாரமும், அதற்குட்பட்டும் உள்ள அதிகாரத்துக்குக் கீழ்ப்படிய வைக்கும் அரசியல் சாசன நடைமுறைகள் மீதான அசைக்க முடியாத மதிப்பும் மரியாதையுமாகும்; அத்துடன் திட்டவட்டமான சட்ட திட்டங்களுக்குட்பட்டு மனந்திறந்து கருத்துக்களை வெளியிடும் பழக்கமும், அதிகார வர்க்கத்தின் எல்லாப் பொதுநல நடவடிக்கை களைக் குறித்த தங்குதடையற்ற விமர்சனமும், அத்துடன் கட்சி பாகுபாடுகளினால் கசந்திருக்கும் ஒவ்வொரு குடிமகனிடமும் அரசியல் சாசனத்தின் மீதான நம்பிக்கையும், மரியாதையும் தான் கொண்டுள்ளதை விடக் குறைந்திருக்காது என்ற முழு நம்பிக்கையு மாகும்.''

ஒரு ஜனநாயக அரசியல் சாசனம் அமைதியான முறையில் செயல்பட அரசியல் சாசனப் பண்பாட்டை வளர்க்க வேண்டும் என்பதன் அவசியத்தை எல்லோரும் ஏற்றுக்கொண்டாலும், அத னுடன் பின்னிப் பிணைந்துள்ள இரு விஷயங்களைப் பொதுவாக ஏற்க மறுக்கிறார்கள். ஆட்சி நிருவாக அமைப்பு முறை, அரசியல் அமைப்பு முறைக்கு மிக நெருங்கிய தொடர்புடையது. அரசியல் சாசன முறையை மாற்றாது, ஆட்சி நிருவாக அமைப்பு முறையை மாற்றுவதன் மூலம் அரசியல் சாசனத்தின் அடிப்படைக்கு எதிரான, முரண்பாடான நிலையை உருவாக்கி அரசியல் சாசனத்தைச் செய லிழக்கச் செய்ய முடியும் என்று இதிலிருந்து அறிய முடிகிறது. திரு. குரோட்டே விளக்கியது போல் அரசியல் சாசனப் பண்பாடு போதுமான அளவுக்கு அதிகமாக இருப்பதை மக்கள் உணரும்போது, நிருவாக அமைப்பு விவரங்களை அரசியல் சாசனத்திலிருந்து நீக்கி விட்டு சட்டமன்றத்தின் தீர்மானத்துக்கு விட்டுவிட முடியும். ஆனால் அரசியல் சாசனப் பண்பாடு நம்மிடையே உள்ளதா என்பதே இப் போதையக் கேள்வி. அரசியல் சாசனப் பண்பாடு என்பது இயற்கை யாக உள்ள ஒரு மனப்பாங்கல்ல. அது வளர்க்கப்பட வேண்டிய ஒன்றாகும். நமது மக்கள் அதை இனிதான் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதை நாம் உணர வேண்டும். முக்கியமாக ஜனநாயகமற்ற இந்திய மண்ணில் ஜனநாயகம் ஒரு மேற்பூச்சாகவே உள்ளது.

இந்தச் சூழ்நிலைகளில் எவ்வகை நிருவாக அமைப்புகளை உருவாக்குவது என்பதை சட்டமன்றத்தின் தீர்மானத்துக்கு விட்டு விடுவது புத்திசாலித்தனமாக இருக்காது. அவை அரசியல் சாசனத் தில் சேர்க்கப்பட்டுள்ளதற்கான நியாயம் இதுதான்.

பண்டைய இந்திய அரசின் நடைமுறைகளை வரைவு அரசியல் சாசனத்தின் எந்தப் பகுதியும் பிரதிபலிக்கவில்லை என்று மற்றொரு குற்றச்சாட்டும் உள்ளது. பண்டைய இந்து தேசத்தில் வழக்கத்திலிருந்த அரசியல் நடைமுறைகள் போன்று புதிய அரசியல் சாசனம் தயாரிக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும், மேலைநாட்டுக் கோட்பாடுகளை எடுத்தாள்வதற்குப் பதிலாக கிராமப் பஞ்சாயத்து மற்றும் வட்டாரப் பஞ்சாயத்துகளின் அடிப்படையில் புதிய அர சியல் சாசனம் உருவாக்கப்பட்டிருக்க வேண்டும் என்றும் கருதப் படுகிறது. வேறு சிலர் மிகத் தீவிரமானக் கருத்துக்களை கொண் டுள்ளனர். மத்திய மற்றும் மாநில அரசுகள் எதையும் அவர்கள்

விரும்பவில்லை. இந்தியா பல கிராமக் குடியரசுகளைக் கொண் டிருந்தால் போதும் என்பது அவர்கள் கருத்து. இந்தியக் கிராமச் சமுதாயத்தின் மீது இந்திய அறிவு ஜீவிகளுக்குள்ள பற்றுதல் பரிதாபத்துக்குரியதாக இல்லா விடினும், நிச்சயமாக அளவிடற் கரியதுதான்! (சிரிப்பு) வெளி உறவுகள் ஏதுமன்றி, அனேகமாக தனித்து நின்று தங்களுக்குத் தேவைப் பட்டதைத் தாங்களே தயாரித்துக் கொண்டு, சிறுசிறு குடியரசுகளாக அவை விளங்கின என்று திரு. மெட்காபேயின் பெரும் புகழாரமே இதற்குக் காரணம் எனலாம். தனித்தனிச் சிறு நாடுகளாகத் திகழ்ந்த இந்தக் கிராமச் சமுதாயங் களே, மெட்காபேயின் கருத்துப்படி, அவை எதிர்கொண்ட பல புரட்சிகள் மற்றும் மாற்றங்களுக்கிடையே அவற்றைச் சிதைவுண்டு அழிந்து போகாமல் காப்பாற்றியது எனலாம். கிராம மக்களின் மகிழ்ச்சிக்கும் சுதந்திரம் மற்றும் சார்பற்ற நிலைக்கும் பேருதவியாக அவை இருந்தன. எல்லாம் அழிந்து சிதைந்து போனாலும் கிராம சமுதாயம் மட்டும் தலைதூக்கி நின்றது. கிராம சமுதாயத்தில் பெருமிதம் கொள்ளும் பலர் நாட்டின் விதியை நிர்ணயிப்பதில் அவை என்ன பங்காற்றியது என்பதைக் குறித்து அக்கறை கொள்வ தில்லை. அது ஏன்? நாட்டின் விதியைக் குறித்து அவற்றின் பங்கை மெட்காபே பின்வருமாறு விவரிக்கிறார்:

> "சாம்ராஜ்யங்கள் ஒவ்வொன்றாக வீழ்கின்றன. புரட்சிகளைத் தொடர்ந்து புரட்சிகள் வெற்றி பெறுகின்றன. இந்துக்கள், பதான்கள், முகலாயர்கள், மராத்தியர்கள், சீக்கியர்கள், ஆங்கிலேயர்கள் முதலானோர் ஒவ்வொரு வராக எஜமானர்களாகின்றனர். ஆனால் கிராம சமுதாயங்கள் மாற்றங்களி லின்றி அசைவற்றிருக்கின்றன. குழப்ப காலங்களில் அவை ஆயுதமேந்தித் தம்மைக் காத்துக்கொண்டன. எதிரிகளின் படைகள் நாட்டின் வழியாகச் செல்கின்றன. கிராம சமுதாயங்கள் தங்கள் கன்றுகாலிகளுடன் நான்கு சுவர்களுக்கிடையே அடைபட்டுக்கொண்டு எதிரிகளின் கோபத்தைக் கிள ராமல், அவர்கள் கடந்து செல்வதை அனுமதிக்கின்றன."

தங்கள் நாட்டு வரலாற்றில் கிராம சமதாயங்களின் பங்கு இதுதான். இதை அறிந்துகொண்ட பிறகும், பெருமை கொள்ள என்ன இருக்கிறது. வாழ்க்கைச் சுழலில் ஏற்படும் பல்வேறு மாற்றங்களி லிருந்து பிழைத்து வந்துள்ளனர் என்பது உண்மைதான். அவர்கள் அழிவிலிருந்து தப்பி விட்டனர் என்பது மட்டும் ஓர் அரிய விஷய மாகாது. எந்த நிலையில் அவர்கள் அழிவிலிருந்து தப்பித்தனர் என்பதே கேள்வி. நிச்சயமாக மிகவும் கீழான, சுயநலத்தினால்தான் இதைச் சாதிக்க முடிந்தது. இந்திய நாட்டின் அழிவிற்கு இந்தக்

கிராமக் குடியரசுகளே பொறுப்பு என நான் கருதுகிறேன். பிராந்திய வாதம் மற்றும் சாதிப்போக்குகளைக் கண்டிப்பவர்கள் கிராமங்களைத் தூக்கிப் பிடிப்பவர்களாக இருப்பது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. வட்டார வெற்றியின் சாக்கடைத் தொட்டியாகவும், அறியாமை நிறைந்த இருள் குகையாகவும் குறுகிய மனப்பான்மை மற்றும் ஜாதி ஆதிக்கத்தின் பிறப்பிடமாகவும் உள்ளதுதானே கிராமம்? எனவேதான் கிராமத்தை ஒதுக்கிவிட்டு அரசியல் சாசனம் தனி மனிதனைத் தன் அடிப்படை அலகாக வைத்துக் கொண்டுள்ளது.

சிறுபான்மையினருக்கு அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்புக் குறித்தும் வரைவு அரசியல் சாசனம் விமர்சிக்கப்படுகிறது. இதற்கு வரைவுக்குழுவைப் பொறுப்பாக்க முடியாது. அரசியல் நிர்ணய சபையின் முடிவுகளை அது பின்பற்றியுள்ளது. சிறுபான்மையினருக்கு இவ்வகை பாதுகாப்பை அரசியல் நிர்ணயசபை அளித்துள்ளது. மிகவும் விவேகமான செயல் இது என்று கருதுகிறேன். இந்நாட்டில் சிறுபான்மையினர் மற்றும் பெரும்பான்மையினர் இருவரும் தவறான ஒரு பாதையைப் பின்பற்றுகின்றனர். சமூகத்தில் சிறுபான்மையினர் இருப்பதை பெரும்பான்மையினர் காண மறுப்பது தவறான போக்காகும். சிறுபான்மையினர் தங்களை நிரந்தரமாக சிறுபான்மை யினராக நிலைநிறுத்திக் கொள்வதும் அதேபோன்று தவறான போக்காகும். இரண்டு பிரச்சினைகளுக்கும் முடிவு காண தீர்வு ஒன்று அவசியம். சிறுபான்மையினர் இருப்பதை அங்கீகரிப்பதிலிருந்துதான் இதை ஆரம்பிக்க வேண்டும். பெரும்பான்மையினரும் சிறுபான்மையினரும் ஒரு நாள், ஒன்றாக இணைந்து ஒரே நிலையை எட்டுவதற்கு வகை செய்வதாக அது இருக்க வேண்டும். இந்த இருவகை நோக்கங்களுக்கு இது தீர்வாக இருப்பதால் அரசியல் நிர்ணயசபையின் தீர்மானம் வரவேற்கத்தக்கதாகும். சிறுபான்மையினரின் பாதுகாப்புக்கு எதிராக ஒருவகை மதவெறியை வளர்த்துவரும் தீவிரவாதிகளுக்கு இரண்டு விஷயங்களைக் கூறிக் கொள்ள விரும்புகிறேன். சிறுபான்மையினர் எரிமலை சக்தியைப் போன்றவர்கள். வெடிக்க ஆரம்பித்தால் நாட்டின் முழுக் கட்டுமானமும் உடைந்து சுக்கலாகிவிடும். இந்த உண்மையை நிரூபிக்க ஐரோப்பிய வரலாற்றில் ஏராளமான உதாரணங்கள் உள்ளன. இந்திய சிறுபான்மையினர், தங்கள் வாழ்வை பெரும்பான்மையினரின் கையில் கொடுக்கச் சம்மதித்துள்ளனர். அயர்லாந்து பிளவு

படக்கூடாது என்பதற்காக நடைபெற்ற பேச்சுவார்த்தைகளின் போது கர்சனிடம் திரு.ரெட்மண்ட் இவ்வாறு கூறினார்: ''பிராட்டெஸ்டன்ட் சிறுபான்மையினருக்கு எந்தவிதப் பாதுகாப்பை வேண்டுமென்றாலும் கேளுங்கள். ஆனால் நமக்கு ஒன்றுபட்ட அயர்லாந்து இருக்க வேண்டும்.'' அதற்குக் கர்சன் அளித்த பதில் இதுதான்: ''உங்கள் பாதுகாப்புகள் நாசமாய்ப் போகட்டும். அந்தப் பாதுகாப்பு யாருக்கு வேண்டும்? உங்களால் ஆளப்படுவதை நாங்கள் விரும்பவில்லை'' இங்கு எந்தச் சிறுபான்மையினரும் இந்த நிலையை எடுக்கவில்லை. பெரும்பான்மையினரின் ஆட்சியை அவர்கள் விசுவாசத்துடன் ஏற்றுக் கொண்டுள்ளனர். அதுவும் அடிப்படையில் மதச்சார்பிலான பெரும்பான்மையே தவிர அரசியல் பெரும்பான்மையல்ல. சிறுபான்மையினரைப் பாகுபாடுடன் நடத்தக் கூடாது என்ற கடமையைப் பெரும்பான்மையினர் உணர வேண்டும். பெரும்பான்மையினர் நடந்துகொள்ளும் விதத்தைப் பொறுத்தே சிறுபான்மையினர் சிறுபான்மையினராகத் தொடர்ந்து இருப்பார்களா அல்லது பெரும்பான்மையினருடன் இணைந்து விடுவார்களா என்பது இருக்கிறது. சிறுபான்மையினரைப் பாகுபடுத்தி நடத்தும் வழக்கத்தை பெரும்பான்மையினர் கைவிட்டவுடன் சிறுபான்மையினர் சிறுபான்மையினராகத் தொடர்ந்து நீடிக்கும் நிலை மறைந்துவிடும். இவை யாவற்றையும் விட சிறுபான்மையினர் என்ற முறையில் அவர்கள் மறைந்து விடுவார்கள்.

அடிப்படை உரிமைகள் பற்றிய பகுதியே அதிக விமர்சனத்துக்குள்ளாகியது. அடிப்படை உரிமைகளை வரையறுத்துக் கூறும் விதி எண் 13 பல விதிவிலக்குகளைக் கொண்டுள்ளது. விதிவிலக்குகள் உரிமைகளை முற்றிலுமாக ஜீரணித்துவிட்டன. ஒருவித ஏமாற்று வித்தையே இது என்று குற்றம் சாட்டப்படுகிறது. விமர்சகர்களின் கருத்துப்படி அடிப்படை உரிமைகள், வரம்பற்ற உரிமைகளாக இருக்கும்போதுதான் அடிப்படை உரிமைகளாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் அரசியல் சாசனத்தின் மற்றும் அதன் முதல் பத்துத் திருத்தங்களில் அடங்கியுள்ள உரிமைகள் பட்டியலை தங்கள் கருத்துக்கு ஆதாரமாக எடுத்துக் காட்டுகிறார்கள். அமெரிக்க உரிமைகள் பட்டியல் உண்மையான அடிப்படை உரிமைகள். ஏனெனில் அவைகள் எந்தக் கட்டுப்பாட்டுக்கும் விதிவிலக்குக்கும் உட்பட்டதல்ல என்று கூறப்படுகிறது.

இந்த விமர்சனங்கள் முழுவதும் அடிப்படை உரிமைகள் பற்றிய தவறான கருத்துக்களின் விளைவாகத் தோன்றியவை என்பதை வருத்தத்துடன் கூறிக் கொள்கிறேன். முதலாவதாக, அடிப்படை உரிமைகளை மற்ற உரிமைகளிலிருந்து அது வேறுபடுத்திக் காட்டு கிறது என்ற விமர்சனம் சரியல்ல. அடிப்படை உரிமைகள் வரம் பற்றது என்றும், அதே நேரத்தில் மற்ற உரிமைகள் வரம்பிற்குட்பட்டது என்றும் கூறுவது தவறு. அடிப்படை உரிமைகள் சட்டத்தின் பரிசு. ஆனால் அதேநேரத்தில் மற்ற உரிமைகள் தரப்புகளுக்கிடையே யான ஒப்பந்தத்தின் அடிப்படையில் உருவாகின்றன. அடிப்படை உரிமைகள் அரசின் பரிசாக இருப்பதால் அதற்குச் சில கட்டுப்பாடு களை அரசு விதிக்க முடியாது என்று கொள்ள முடியாது.

இரண்டாவதாக, அமெரிக்காவில் அடிப்படை உரிமைகள் வரம்பற்றது என்று கூறுவது தவறு. அமெரிக்க அரசியல் சாசனத் தின் நிலைக்கும், நமது வரைவு அரசியல் சாசனத்தின் நிலைக்கும் இடையேயான வேறுபாடு, வடிவத்தில் மட்டும்தானே தவிர சாராம் சத்தில் அல்ல. அமெரிக்காவில் அடிப்படை உரிமைகள் வரம்பற்ற உரிமைகளல்ல என்பது விவாதத்திற்கு அப்பாற்பட்டது. வரைவு அரசியல் சாசனத்தில் அடிப்படை உரிமைகளுக்குக் கொடுக்கப் பட்டுள்ள விதிவிலக்குகள் ஒவ்வொன்றுக்கும் அமெரிக்க உச்சநீதி மன்றத்தின் தீர்ப்பொன்றையாவது எடுத்துக்காட்ட முடியும். வரைவு அரசியல் சாசனத்தின் 13 ஆவது விதியில் அடங்கியுள்ள பேச்சு சுதந்திரத்துக்கான கட்டுப்பாட்டை நியாயப்படுத்தும் உச்சநீதிமன்றத் தின் தீர்ப்பொன்றை எடுத்துக்கூறுவது பொருத்தமாக இருக்கும். கிட்லோ மற்றும் நியூயார்க்குக்கும் இடையேயான வழக்கில் நியூயார்க்கின் ''குற்றவியல் அராஜகம்'' என்ற சட்டம் அரசியல் சாசனத்திற்குட்பட்டதா என்பது பிரச்சினையாக இருந்தது. பலாத்கார மாற்றங்களைக் கொண்டுவரத் தூண்டும் பேச்சுகளுக்கு தண்டனை அளிக்க இந்தச் சட்டம் வகை செய்கிறது. இதை விசாரித்த உச்சநீதிமன்றம் பின்வருமாறு அறிவித்தது:

> "அரசியல் சாசனத்தால் உத்தரவாதம் செய்யப்பட்டுள்ள பேச்சு சுதந்திரம், பத்திரிகை சுதந்திரம் ஆகியவை நீண்டகாலமாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள முக்கியக் கோட்பாடுகளாகும். பொறுப்பற்ற முறை யில் பேசவோ, எழுதவோ அது வரம்பற்ற உரிமையை அளிக்கவில்லை. எந்தவித முறையிலும் உபயோகிக்க அது கட்டுப்பாடற்ற, தடையற்ற உரிமத்தை வழங்கவில்லை. அந்த சுதந்திரத்தைத் தவறுதலாக பயன் படுத்துபவர்களைத் தண்டிப்பதை தடுக்கவும் இல்லை.

எனவே, அமெரிக்காவில் அடிப்படை உரிமைகள் வரம்பற்றதென்றும், வரைவு அரசியல் சாசனத்தில் அளிக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகள் அப்படியல்ல என்றும் கூறுவது தவறாகும்."

அடிப்படை உரிமைக்கு ஏதேனும் வரையறை தேவைப் பட்டால், அமெரிக்காவில் உள்ளது போல் அரசியல் சாசனத்தில் குறிப்பிடப்பட வேண்டும். அப்படியில்லையென்றால் சம்பந்தப் பட்ட எல்லா நிலைமைகளையும் சீர்தூக்கி நீதித்துறையால் தீர் மானிக்கப்படுவதற்கு விட்டுவிட வேண்டும் என்று கூறப்படுகிறது. அமெரிக்க அரசியல் சாசனத்தைப் பற்றிய தவறான விளக்கமாகும் இது. இல்லையெனில் தவறாகப் புரிந்து கொண்டிருக்கக்கூடும் என்று வருத்தத்துடன் சொல்லிக் கொள்கிறேன். இதைப் போன்ற எதையும் அமெரிக்க அரசியல் சாசனம் கூறவில்லை. கூட்டம் கூடும் உரிமை விஷயம் ஒன்றைத் தவிர வேறு எந்த அடிப்படை உரிமை களிலும் அமெரிக்க அரசியல் சாசனம் அமெரிக்க மக்களுக்கு வரை யறை எதையும் விதிக்கவில்லை. அடிப்படை உரிமைகளில், வரை யறை விதிப்பது நீதித்துறைக்கு விடப்பட்டுள்ளது என்று கூறுவதும் தவறாகும். வரையறைகளை விதிக்கும் அதிகாரத்தை, அமெரிக்கக் காரங்கிரஸே பெற்றுள்ளது. விமர்சகர்களின் கற்பனைக்கு மாறாக உண்மை நிலை இருக்கிறது. அமெரிக்காவில் அரசியல் சாசன அடிப்படை உரிமைகள் ஐயத்துக்கிடமின்றி வரம்பற்றவை என்பது உண்மைதான். ஆனால் இதற்கு வரம்புகள் அவசியம் என்பதை காங் கிரஸ் வெகுவிரைவில் உணர்ந்துகொண்டது. அரசியல் சாசனப்படி இந்தக் கட்டுப்பாடுகள் செல்லுபடியாகுமா என்ற கேள்வி உச்ச நீதிமன்றத்தின் முன் எழுந்தபோது, அமெரிக்கக் காங்கிரசுக்கு இந்த வரையறைகளை விதிக்க அரசியல் சாசனம் எந்த அதிகாரத்தை யும் கொடுக்கவில்லை என்று வாதிட்டபோது, உச்ச நீதிமன்றம் காவல் அதிகாரம் என்ற கோட்பாட்டை முன்வைத்தது. ஒவ்வொரு அரசுக்கும் இயற்கையாக உள்ள காவல் அதிகாரம், அரசியல் சாச னத்தால் வெளிப்படையாக அளிக்கப்படவேண்டிய அவசியமில்லை என்று வரம்பற்ற அடிப்படை உரிமை ஆதரவாளர்களுக்கு அது பதிலடி கொடுத்தது. நான் ஏற்கனவே குறிப்பிட்ட வழக்கின் தீர்ப்பை உச்சநீதிமன்றத்தின் மொழியில் கூறுவதென்றால்,

''பொதுப்பண்பாட்டைச் சீரழிக்கும், வன்முறையைத் தூண்டி அமைதி யைச் சீர்குலைக்கும் பொதுநலன்களுக்கு எதிராக இயற்றப்படும் பேச்சுக் களின் மூலம் பேச்சுரிமையைத் தவறாகப் பயன்படுத்துபவர்கள் மீது தன்

காவல் அதிகாரத்தை ஒரு நாடு பயன்படுத்துவதை எவரும் தட்டிக் கேட்க முடியாது.''

அடிப்படை உரிமைகளை வரம்பற்றதாக வடிவமைத்து விட்டு, காவல் அதிகாரம் மூலம் நாடாளுமன்றத்துக்கு உச்சநீதி மன்றம் உதவிக்கு வரும் வழிமுறைக்குப் பதிலாக, அரசே நேரடியாக அடிப்படை உரிமைகளுக்கு வரம்பு விதிக்க வரைவு அரசியல் சாசனம் வழிவகுத்துள்ளது. இதனால் ஏற்படும் விளைவுகளில் எந்த மாற்றமும் இல்லை. ஓர் இடத்தில் நேரிடையாக செய்யப்பட்டுள்ள வழிமுறைகள் மற்ற இடத்தில் மறைமுகமாக செய்யப்பட்டுள்ளது. இரண்டு இடங்களிலும் அடிப்படை உரிமைகள் வரம்பற்றவை அல்ல.

அடிப்படை உரிமைகளைத் தொடர்ந்து அரசியல் சாசனத்தில் ''நெறிமுறைக் கோட்பாடுகள்'' கொடுக்கப்பட்டுள்ளன. நாடாளுமன்ற ஜனநாயகத்துக்கான அரசியல் சாசனத்தில் இது ஒரு புதுமையான அம்சம். நாடாளுமன்ற ஜனநாயகத்துக்கான அரசியல் சாசனத்தில் இந்த மாதிரி நெறிமுறைகள் கொடுக்கப்பட்டுள்ள ஒரே நாடு அயர்லாந்து ஆகும். இந்த நெறிமுறைகளும் விமர்சனங்களுக்கு உள்ளாயின. ஆனால் இந்த விமர்சனங்கள் மேலெழுந்தவாரியாகவே உள்ளன. இதை அரசியல் சாசனமே விளக்கியுள்ளது.

நெறிமுறைக்கோட்பாடுகளுக்குச் சட்ட ஆதரவு இல்லையென்று சொன்னால் அதை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் அவை எதையும் கட்டுப்படுத்தாது என்று சொல்வதை நான் ஏற்றுக் கொள்ளமுடியாது. சட்ட அடிப்படையில் அவை எதையும் கட்டுப் படுத்தமுடியாது என்பதால் அவை பயனற்றவை என்று கூறுவதையும் ஏற்றுக்கொள்ள முடியாது.

1935 ஆம் ஆண்டு அரசாங்கச் சட்டத்தின்படி பிரிட்டிஷ் அரசு, காலனி நாடுகள் மற்றும் இந்தியாவிலுள்ள கவர்னர் -ஜெனரல் மற்றும் ஆளுநர்களுக்கு அனுப்பிய செயல்துறைக் கட்டளை ஆவணங்களைப் போன்றவைதான் நெறிமுறைக் கோட்பாடுகள். இம் மாதிரியான ஆவணங்களைக் குடியரசுத் தலைவருக்கும் ஆளுநர்களுக்கும் அனுப்ப வரைவு அரசியல் சாசனம் வழிவகுத்துள்ளது. செயல்துறைக் கட்டளை ஆவணங்களின் வாசகங்களை அரசியல்

சாசனத்தில் VI ஆவது அட்டவணையில் காணலாம். நெறிமுறைக் கோட்பாடுகள் என்பவை செயல்துறைக் கட்டளை ஆவணங்களின் மறுபெயர் என்றுதான் கூறவேண்டும். ஒரே ஒரு வேறுபாடு என்ன வென்றால் அவை சட்டமன்றம் மற்றும் நிர்வாகத் துறைக்கான அறிவிப்புகளாகும். என்னைப் பொறுத்தவரையில் இந்த மாதிரியான விஷயங்கள் வரவேற்கப்பட வேண்டும். அமைதி, ஒழுங்கு, நல்லாட்சி ஆகியவைகளை செயல்படுத்தப் பொதுவான அதிகாரம் வழங்கப்படும் இடங்களில் அதன் செயல்பாடுகளை நெறிப்படுத்தக் கூடிய கட்டளைகள் அளிக்கப்படுவது அவசியமாகும்.

வரைவு அரசியல் சாசனத்தில் சேர்க்கப்பட்டுள்ள இவ்வகை அறிவுறுத்தல்கள் வேறு ஒரு காரணத்தினாலும் நியாயமாகிறது. வரைவு அரசியல் சாசனம் நாட்டின் அரசு எந்திரத்தை உருவாக்க மட்டும் வழிசெய்கிறது. வேறு சில நாடுகளில் உள்ளதுபோல் ஒரு குறிப்பிட்ட கட்சியைப் பதவிக்குக் கொண்டுவரும் உபாயமல்ல இது. யார் பதவியில் இருக்க வேண்டுமென்பது மக்கள் தீர்மானத் துக்கு விடப்பட்டுள்ளது. ஜனநாயகச் சோதனையில் இந்த முறை வெற்றிபெற வேண்டுமென்றால் இப்படித்தான் இருக்க வேண்டும். யார் அதிகாரத்துக்கு வந்தாலும் அதைத் தன் இஷ்டப்படி உபயோ கிக்கும் சுதந்திரம் இருக்கக்கூடாது. இந்த அதிகாரத்தைப் பயன் படுத்துகையில் நெறிமுறைக் கோட்பாடுகள் என அழைக்கப்படும் செயல்துறைக் கட்டளை ஆவண நெறிகளைப் பின்பற்றியாக வேண்டும். அதை யாரும் உதாசீனப்படுத்த முடியாது. அதை மீறி யதற்காக நீதிமன்றத்தில் பதில் அளிக்க வேண்டிய அவசியம் இருக்காது. ஆனால் மக்கள் மன்றத்தில் தேர்தல் நேரத்தில் நிச்சய மாக பதிலளிக்க வேண்டியிருக்கும். நியாயமான சக்திகள் அரசு அதிகாரத்தைப் பிடிக்க முயற்சிகள் செய்யும்போது, இந்த நெறிமுறைக் கோட்பாடுகளின் பலம் நன்றாக உணரப்படும்.

எதையும் கட்டுப்படுத்தும் அதிகாரம் அதற்கு இல்லை என்பது அதை அரசியல் சாசனத்தில் சேர்ப்பதற்கு எதிரான வாதமாக இருக்க முடியாது. அரசியல் சாசனத்தில் அதற்கு எந்த இடம் கொடுக்கப்பட வேண்டுமென்பதில் கருத்து வேற்றுமை இருக்கலாம். கண்டிப்பாக நிறைவேற்றப்பட வேண்டிய விதிகளுக்கிடையே

அதுபோன்றில்லாத அவசியமானால் நிறைவேற்றப்பட வேண்டிய விதிகளை சேர்த்துக் கொள்வது சற்று விசித்திரமாகத்தான் தெரிகிறது. என் கருத்துப்படி அதற்குப் பொருத்தமான இடம் IIIA, IV அட்டவணை ஆகும். அதில்தான் குடியரசுத் தலைவருக்கும் மற்றும் ஆளுநர் களுக்குமான செயல்துறை கட்டளை ஆவணம் உள்ளது. நான் ஏற்கனவே கூறியபடி நிர்வாகம், அதிகாரத்தை எப்படிப் பயன் படுத்த வேண்டும் என்பதை ஆட்சித்துறை மற்றும் சட்டமன்றங் களுக்கு அறிவுறுத்தும் ஆவணங் களாகும் இவை. ஆனால் இது விஷயங்களை ஒழுங்காகத் தொகுத்தளிக்கும் விஷயமே தவிர வேறன்று.

மத்திய அரசுக்கு அதிக அதிகாரம் உள்ளது என்பது சில விமர் சகர்களின் வாதம். வேறு சிலர் மேலும் அதிகாரம் அளிக்கப்பட வேண்டுமென்கின்றனர். இரண்டு நிலைகளுக்கும் இடைப்பட்ட நிலையை வரைவு அரசியல் சாசனம் எடுத்துள்ளது. மத்திய அரசுக்கு அதிகாரம் அளிக்க என்னதான் விரும்பவில்லையென்றாலும் மத்திய அரசு அதிக பலம் பெறுவதைத் தடுக்க முடியாது. இந்த நவீன உலகில், மத்தியில் அதிகாரக் குவியல் ஏற்படுவதைத் தவிர்க்க முடியாது. இதைப் புரிந்துகொள்ள ஒருவர் அமெரிக்கக் கூட்டரசின் வளர்ச்சியைக் கவனித்தாலே போதும். அரசியல் சாசனப்படி குறைந்த அளவு அதிகாரமே அதற்கு அளிக்கப்பட்டிருந்தாலும் அதன் ஆரம்ப நிலையிலிருந்து அது பூதாகரமாக வளர்ந்து மாகாண அரசுகளையே ஓரங்கட்டிவிட்டது. இது நவீன காலகட்டத்தின் விளைவாகும். இந்தச் சூழ்நிலைகளின் தாக்கத்திலிருந்து இந்திய அரசும் தப்ப முடியாது. யார் என்ன செய்தாலும், அது மேலும் பலம் பெறுவதைத் தடுக்க முடியாது. அதே வேளையில் அது அதிக பலம்பெறும் போக்கை நாம் தடுக்க வேண்டும். அதன் ஜீரணிக்கும் திறனுக்கு அதிகமாக அதற்கு ஊட்டிவிடக்கூடாது. அதன் பளுவுக்குத் தக்கபடி அதன் பலம் இருக்க வேண்டும். தன் பளுவைத் தாங்க முடியாமல் விழுந்துவிடும் அளவிற்கு அதன் பலத்தை அதிகரிப்பது முட்டாள் தனமாகும்.

மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் இடையேயான அரசியல் சாசனப்படியான உறவுகள் ஒரு வகையாகவும், மத்திய அரசுக்கும் இந்திய சமஸ்தானங்களுக்கும் இடையேயான அரசியல்

சாசனப்படியான உறவுகள் வேறு வகையாகவும் வரைவு சாசனத்தில் வகை செய்யப்பட்டுள்ளதும் விமர்சனத்துக்குள்ளாகியிருக்கிறது. ஒன்றியப் பட்டியலில் உள்ள எல்லா விஷயங்களையும் இந்திய சமஸ்தானங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. பாதுகாப்பு, வெளியுறவு, செய்தித்துறை ஆகியவற்றையே அவை ஏற்றுக் கொள்ளக்கூடும். பொதுப்பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ள விஷயங்களை அவை ஏற்றுக்கொள்ள மாட்டா. அதேபோல் வரைவு அரசியல் சாசனத்தில் உள்ள மாநிலப் பட்டியலையும் இந்திய சமஸ்தானங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டிய அவசியமில்லை. அவை தமது செந்த அரசியல் நிர்ணயசபையை நிறுவி, தமக்கென அரசியல் சாசனத்தைத் தயாரிக்க உரிமை பெற்றுள்ளன. இது உண்மையிலேயே வருந்தத்தக்கதுதான். ஆனால் எந்த சமாதானமும் சொல்ல முடியாத நிலையில் உள்ளேன். உறவுநிலையில் உள்ள இந்த வேறுபாடுகள் நாட்டின் திறமையான நிருவாகத்துக்கு ஆபத்தாக முடியும். இந்த வேறுபாடுகள் நீடிக்கும் வரை அகில இந்திய விஷயங்களில் மத்திய அரசின் அதிகாரம் வலுவிழந்துவிடும். எல்லா நேர்வுகளிலும் எல்லா இடங்களிலும் செலுத்த முடியாத அதிகாரத்தை அதிகாரம் என்றே கூற முடியாது. ஒரு யுத்த நிலை தோன்றும்போது முக்கிய அதிகாரங்களின் மீதான வரம்புகள் நாட்டின் முழு வாழ்க்கையில் பெரும் சீர்கேடுகளை உருவாக்கலாம். வரைவு அரசியல் சாசனப்படி இந்திய சமஸ்தானங்கள் தங்கள் சொந்தப் படைகளை வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டிருப்பது தான் இதைவிடக் கொடுமையானது. இது மிகவும் ஆபத்தான விதி என்பதுடன் நாட்டை பின்னுக்குத் தள்ளி விடக்கூடும். இதனால் இந்திய நாட்டின் ஒற்றுமை சின்னாபின்னப்படுவதுடன் மத்திய அரசே கவிழ்க்கப்படலாம். வரைவுக் குழுவின் சிந்தனையை நான் தவறாகப் புரிந்துகொள்ளவில்லையென்றால் அவர்கள் இந்த விஷயத்தில் மிகவும் அதிருப்தி கொண்டுள்ளனர். மாநிலங்கள் மற்றும் இந்திய சமஸ்தானங்கள் மத்திய அரசுடன் கொண்டுள்ள அரசியல் சாசன ரீதியான உறவுகள் ஒரே மாதிரியாக இருக்க வேண்டுமென்பதே அவர்கள் விருப்பம். நிலைமையைச் சீர்படுத்த துரதிருஷ்டவசமாக அவர்களால் எதையும் செய்ய முடியவில்லை. அரசியல் நிர்ணய சபையின் முடிவுக்கு அவர்கள் கட்டுப்பட்டிருந்தார்கள். இரண்டு ஒப்பந்தக் குழுக்களுக்கிடையே ஏற்பட்ட முடிவுக்கு அரசியல் நிர்ணயசபை இணங்க வேண்டியிருந்தது.

ஜெர்மனியில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் நமக்கு ஊக்கமளிக்கின்றன. 1870-ல் பிஸ்மார்க் நிறுவிய ஜெர்மன் பேரரசு ஒரு கூட்டர்சாக விளங்கியது. அது 25 உறுப்புகளைக் கொண்டிருந்தது. இந்த 25 உறுப்புகளில் 22 முடியாட்சி நாடுகளாகவும் 3 நகரக் குடியரசுகளாகவும் இருந்தன. காலம் செல்லச் செல்ல இந்த வேறுபாடுகள் மறைந்தன. ஜெர்மனி ஒரே மக்களைக் கொண்ட ஒரே நாடாக ஒரே அரசியல் சாசனத்தின் கீழ் வந்தது. ஜெர்மனியைவிட இந்திய சமஸ்தானங்கள் ஒருங்கிணைவது விரைவாக இருக்கும். 1947 ஆகஸ்டு 15ல் 500 இந்திய சமஸ்தானங்கள் இருந்தன. இன்று இந்திய சமஸ்தானங்கள் மாகாணங்களுடனும் தம்முள்ளும் ஒன்றுடன் ஒன்று இணைந்து, மத்திய அரசின் நேரடி நிருவாகத்திற்கு வந்த பகுதிகள் என்ற முறையில் 20-30 மாகாணங்களாக செயல்பட்டு வருகின்றன. இது ஒரு வேகமான மாற்றமாக, முன்னேற்றமாக உள்ளது. இந்திய மாநிலங்கள் எந்த உறவுகளின் அடிப்படையில் மத்திய அரசுடன் செயல்பட்டு வருகின்றனவோ, அதே அடிப்படையில் இந்த சமஸ்தானங்களும் ஒன்றியத்துடன் முழுமையாக இணைந்து செயல்படக் கேட்டுக்கொள்கிறேன். இதன் மூலம் இந்திய ஒன்றியத்துக்கு தேவைப்படும் வலிமையை அவற்றால் அளிக்க முடியும். தமக்கென ஓர் அரசியல் நிர்ணய சபையை நிறுவி, சொந்த அரசியல் சாசனத்தை தயாரிக்க வேண்டிய தொல்லை இருக்காது. அவை இழக்க வேண்டியது எதுவுமில்லை.

இந்தியாவை மாநிலங்களின் ஒன்றியம் என்று வரைவு அரசியல் சாசன விதி 1 கூறுவதை சிலர் விமர்சிக்கின்றனர். சரியாகக் கூறவேண்டுமென்றால் மாநிலங்களின் கூட்டரசு என்று அழைக்கப்பட வேண்டுமென்கின்றனர். ஒற்றையரசாகத் திகழும் தென் ஆப்பிரிக்கா ஒன்றியம் என்று அழைக்கப்படுகிறது. கூட்டரசாக உள்ள கனடாவும் ஒன்றியம் என்று அழைக்கப்படுகிறது. எனவே இந்தியாவை ஒன்றியம் என்று அழைப்பதை அதன் அரசியல் சாசனம் கூட்டரசுத் தன்மை கொண்டதாக இருப்பினும் தவறாகக் கொள்ளமுடியாது. வேண்டுமென்றுதான் ஒன்றியம் என்ற சொல் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது என்பது முக்கியம். கனடா அரசியல் சாசனத்தில் ஏன் ஒன்றியம் என்ற சொல் உபயோகப்படுத்தப்பட்டுள்ளது என்பது தெரியவில்லை. ஆனால் வரைவுக்குழு ஏன் இந்தச் சொல்லை உபயோகப்படுத்தியுள்ளது என்பதை நான் கூற

முடியும். இந்தியா ஒரு கூட்டரசாக இருக்கப் போகிறதென்றாலும், இந்த மாநிலங்களுக்கிடையேயான ஒப்பந்தத்தின் அடிப்படையிலான கூட்டரசல்ல இது. எனவே இந்தக் கூட்டரசிலிருந்து எந்த அரசும் பிரிந்து செல்ல முடியாது. இதைத் தெளிவாகத் தெரிவிக்க வரைவுக் குழு விரும்பியது. இந்தக் கூட்டரசு அழிக்க முடியாததாகையால் ஒன்றியம் என்றழைக்கப்படுகிறது. நிருவாக வசதிக்காக நாடும், மக்களும் பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டாலும், நாடு ஒன்றிணைந்த முழுமை யாகும். ஒரே ஆதாரத்தில் உதயமான ஒரு பேரரசின் கீழ் வாழும் ஒரே மக்கள் ஆவர். தங்களுடைய கூட்டரசை அழிக்க முடியாது, மாகாணங்கள் பிரிந்து செல்ல முடியாது என்பதற் காக அமெரிக்கா ஓர் உள்நாட்டு போரில் ஈடுபட வேண்டியிருந்தது. விவாதத்திற்கும், குழப்பத்திற்கும் விட்டுவிடாமல் ஆரம்பத்தி லேயே இதைத் தெளிவுபடுத்துவது சிறந்தது என்று வரைவுக்குழு முடிவு எடுத்தது.

அரசியல் சாசனத்தைத் திருத்துவது சம்பந்தமான விதிகள், வரைவு அரசியல் சாசன விமர்சகர்களிடம் பெருத்த கண்டனத் திற்குள்ளாயின. வரைவு அரசியல் சாசனத்தில் உள்ள வழிவகைகள் அரசியல் சாசனத்தைத் திருத்தம் செய்வதைக் கடினமாக்குகின்றன என்று அவர்கள் கூறுகின்றனர். சாதாரணப் பெரும்பான்மை மூலம் அரசியல் சாசனத்தைத் திருத்த சில ஆண்டுகளுக்காவது வழிவகைகள் செய்யவேண்டும் என்று கூறப்படுகிறது. இந்த வாதம் நுணுக்க மானதும் சாமர்த்தியமானதுமாகும். அரசியல் நிர்ணயசபை வயது வந்தோர் வாக்களிப்பின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட வில்லை. ஆனால் எதிர்கால நாடாளுமன்றம் வயதுவந்தோர் வாக் களிப்பின் அடிப்படையில் தேர்தெடுக்கப்படும். இருப்பினும் அர சியல் நிர்ணய சபை சாதாரணப் பெரும்பான்மை மூலம் அரசியல் சாசனத்தை நிறைவேற்றும் உரிமை பெற்றுள்ளது. ஆனால் எதிர்கால நாடாளுமன்றத்துக்கு அந்த உரிமை இல்லை. வரைவு அரசியல் சாசனத்தின் ஒரு விசித்திர நிலை இது என்று குற்றம் சாட்டப்படுகிறது. இதற்கு எந்த அடிப்படையும் இல்லாததால் இந்தக் குற்றச்சாட்டை நான் மறுக்கிறேன். அரசியல் சாசனத்தைத் திருத்துவதற்கான வழி முறைகள் எவ்வளவு எளிமையானவை என்பதைத் தெரிந்துகொள்ள அமெரிக்க மற்றும் ஆஸ்திரேலிய அரசியல் சாசனங்களை ஒப்பு நோக்கவேண்டும். அவற்றுடன் ஒப்பிட்டால் வரைவு அரசியல் சாச

னத்திலுள்ள வழிமுறைகள் மிகவும் எளிமையானவை என்பதைக் காணலாம். பொதுமக்கள் வாக்கெடுப்பு அல்லது கருத்துக் கணிப்பு போன்ற விரிவான, கஷ்டமான நடைமுறைகளைத் தவிர்த்துள்ளது. மத்திய, மற்றும் மாநிலச் சட்டசபைகளுக்கு இந்த அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. சில குறிப்பிட்ட விஷயங்களில் மட்டுமே, மாநில சட்டசபைகளின் ஏற்பு அவசியமாக உள்ளது. இவை அதிக எண்ணிக்கையில் இல்லை. ஒவ்வொரு அவையிலும் ஆஜராகி உள்ள உறுப்பினர்களின் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை, ஒவ்வொரு அவையின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் பெரும்பான்மை இருக்க வேண்டும் என்ற ஒரு கட்டுப்பாடு விதிக்கப் பட்டுள்ளது. அரசியல் சாசனத்தை திருத்துவதற்கு வேறு எளிய முறையை எண்ணிப் பார்ப்பது கடினமான விஷயம்.

அரசியல் நிர்ணயசபை மற்றும் எதிர்காலத்தில் அரசியல் சாசனத்தின் அடிப்படையில் உருவாகவுள்ள நாடாளுமன்றத்தைக் குறித்த தவறான கருத்தின் அடிப்படையில்தான் திருத்தம் சம்பந்த மான வழிமுறைகள் விவேகமற்றவையாக உள்ளன என்று கூறப் படுகிறது. அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் அரசியல் நிர்ணய சபை எந்த ஒரு கட்சி சார்பாகவும் செயல்படவில்லை. நன்கு செயல் படக்கூடிய ஓர் அரசியல் சாசனத்தை உருவாக்குவதைத் தவிர அரசியல் நிர்ணயசபைக்கு வேறு எந்த அக்கறையும் இல்லை. அர சியல் சாசன விதிகளைப் பரிசீலிக்கையில் ஒரு குறிப்பிட்ட நடை முறையை நிறைவேற்ற வேண்டுமென்று விசேஷ அக்கறை அதற்குக் கிடையாது. அரசியல் நிர்ணயசபை போன்று எதிர்கால நாடாளுமன்றம் தன் கூட்டத் தொடரை நடத்தினால் அதன் உறுப் பினர்கள் கட்சிச் சார்புடன் நடந்துகொள்வா. அரசியல் சாசன விதி களால் தடுக்கப்பட்ட சில கட்சி நடவடிக்கைகளை நிறைவேற்று வதற்காக அரசியல் சாசனத்தைத் திருத்த முயல்வார்கள். நாடாளு மன்றத்துக்கு இந்தமாதிரி சில அக்கறைகள் உள்ளபோது, அரசியல் நிர்ணயசபைக்கு இவை எதுவும் கிடையாது. இதுதான் நாடாளு மன்றத்துக்கும் அரசியல் நிர்ணயசபைக்கும் இடையேயான வேறுபாடு. வரம்புக்குட்பட்ட வாக்களிப்பின் மூலம் அரசியல் நிர்ணயசபை தேர்ந்தெடுக்கப்பட்டாலும், சாதாரண பெரும்பான்மை யின் மூலம் அரசியல் சாசனத்தை நிறைவேற்ற அது, அனுமதிக் கப்பட்டபோது, நாடாளுமன்றம் வயதுவந்தோர் வாக்களிப்பின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்டாலும் திருத்தத்துக்கு அது ஏன் அதே

சாதாரணப் பெரும்பான்மையின் மூலம் அனுமதிக்கப்படவில்லை என்பதற்கு இதுவே காரணம்.

வரைவு குழுவால் அறுதி செய்யப்பட்ட வரைவு அரசியல் சாசனத்திற்கு எதிராக எழுந்துள்ள விமர்சனங்களுக்கு பதிலளித்துள்ளேன் என நம்புகிறேன். கடந்த எட்டு மாதங்களாக மக்கள் முன் அரசியல் சாசனம் வைக்கப்பட்டிருந்தது. அப்பொழுது எழுந்த முக்கிய விம்ர்சனங்கள் மற்றும் கருத்துகள் எதையும் கவனிக்காமல் விட்டுவிடவில்லை. வரைவுக்குழு அளித்துள்ளபடி அரசியல் சாசனத்தை ஏற்றுக்கொள்வது அல்லது ஏற்றுக்கொள்ளும் முன் அதில் மாற்றங்கள் செய்வது, அரசியல் நிர்ணயசபையின் முடிவைப் பொறுத்து இருக்கிறது.

ஆனால் இதை நான் கூற விரும்புகிறேன். இந்தியாவின் சில மாநிலச் சட்டமன்றங்களில் அரசியல் சாசனம் விவாதிக்கப்பட்டது. பம்பாய், மத்திய மாகாணங்கள், மேற்கு வங்காளம், பீஹார், மெட்ராஸ், கிழக்கு பஞ்சாப் சட்டமன்றங்களில் விவாதிக்கப்பட்டது. அரசியல் சாசனத்தின் நிதி சம்பந்தமான விதிகளைக் குறித்து சில மாநிலச் சட்டமன்றங்கள் கடுமையான விமர்சனங்களை எழுப்பியுள்ளன. 226 ஆம் விதியை மெட்ராஸ் சட்டமன்றம் எதிர்த்துள்ளது. இதைத் தவிர அரசியல் சாசன விதிகளுக்கு எந்த மாநிலச் சட்டமன்றமும் எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. எந்த அரசியல் சாசனமும் முற்றிலும் குறையின்றி இருக்கும் என்று கூறமுடியாது. வரைவு அரசியல் சாசனத்தை மேலும் மேம்படுத்த வரைவுக்குழுவே சில திருத்தங்களை அளித்துள்ளது. மாநிலச் சட்டமன்றங்களில் நடைபெற்ற விவாதங்கள் வரைவுக் குழுவால் அறுதி செய்யப்பட்டுள்ள இந்த அரசியல் சாசனம் இந்த நாட்டின் தொடக்கத்திற்கு போதுமானது என்ற தைரியத்தை எனக்கு அளித்துள்ளது. அது நடைமுறைப்படுத்தக் கூடியது, வளைந்து கொடுக்கக் கூடியது என்பதுடன் சமாதான காலத்திலும் போர்க்காலத்திலும் நாட்டை ஒன்றுபடுத்தக்கூடியது என்று கருதுகிறேன். இந்தப் புதிய அரசியல் சாசனத்தால் நிலைமைகள் மோசமானால் அதற்குக் காரணம் அரசியல் சாசனம் மோசமானது என்பதால் அல்ல என்று உண்மையிலேயே அறுதியிட்டு உறுதியாகச் சொல்வேன். மனிதன்தான் தாழ்ந்துவிட்டான் என்று சொல்ல வேண்டும். ஐயா, வரைவு அரசியல் சாசனத்தை முன்மொழிகிறேன்.

*(டாக்டர் அம்பேத்கரின் உரைக்குப் பின்னர், அரசியல் நிர்ணயசபையின் உறுப்பினர்கள், எழுந்து நின்று வரைவு அரசியல் சாசனம் பற்றிப் பேசினார்கள். டாக்டர் அம்பேத்கரின் மற்றும் வரைவுக் குழுவின் பணியைப் பாராட்டிப் பேசியதன் சுருக்கம் கீழே தரப்படுகின்றது. -ஆர்.)*

[1]**திரு.பிராங்க் அந்தோணி**(மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் - பொது): திரு. அவைத்தலைவர் அவர்களே, டாக்டர் அம்பேத்கர் தற்பொழுது அவையில் இல்லாவிட்டாலும் குறைந்த பட்சம் ஒரு வழக்கறிஞர் என்ற முறையிலாவது நமது வரைவு அரசியல் சாசனத்திற்கு அடிப்படையாக உள்ள கோட்பாடுகள் பற்றி சமநிலையிலான, மற்றும் தெளிவான விளக்கம் அளித்ததற்காக அவரை நான் பாராட்டியாக வேண்டும். இந்த வரைவு அரசியல் சாசனத்தைப் பற்றி நாம் எத்தகைய மாறுபட்ட கருத்துக்களைக் கொண்டிருந்த போதிலும், வேறு எந்தக் கண்ணோட்டத்தில் இல்லா விட்டாலும், அதனுடைய பரிமாணம் என்ற கண்ணோட்டத்திலிருந் தாவது அது ஒரு மகோன்னதமான ஆவணம் என்பதை அனை வரும் ஒப்புக்கொள்வார்கள் என்று கருதுகிறேன். வரைவுக்குழுவின் உறுப்பினர்களுக்கு நாம் சிறப்பாக நன்றி கூறாவிட்டால், அது சிறுபிள்ளைத்தனமாக இருக்கும் என்று நினைக்கிறேன். ஏனெனில் இத்தகைய ஒரு மாபெரும் ஆவணத்தைத் தயாரிப்பதற்கு அவர்கள் அளவிடற்கரிய உழைப்பையும் திறமையையும் ஈடுபடுத்தியிருப் பார்கள் என்பது நிச்சயம்......

★ ★ ★

[2]கடைசியாக, அரசியல் சாசனத்தின் விதிகளை, சிறுபான்மை யோரின் சார்பில் பாராட்டிப்பேசியபோது டாக்டர் அம்பேத்கர் வெளிப்படுத்திய எண்ணத்தை நான் ஆமோதிக்க விரும்புகிறேன். சிறுபான்மையோரைப் பற்றியோ அல்லது சிறுபான்மையோர் பிரச்சினைகள் சம்பந்தமாகவோ பேசுவது (இந்தியா அனுபவித் துள்ள நிலைமைகளுக்குப் பின்னர்) ஆர்வம் ஏற்படுத்தாத ஒரு விஷய மாகும் என்பதை நான் அறிவேன். நான் அதைச் செய்யப் போவ தில்லை. சிறுபான்மையோர் சம்பந்தப்பட்ட விதிகளை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளுங்கள் என்றும் நான் உங்களிடத்தில் கூறப் போவதில்லை. ஏனெனில் ஆலோசனைக்குழு ஏற்கனவே அவற்றை

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, நவம்பர் 5, 1948, பக். 227.
2. அதே நூல், பக்கம் 227-229.
3. நட்சத்திரக் குறிகளும் தொடர்புள்ளிகளும் விடப்பட்ட பத்தியை குறிக்கிறது. -ஆர்.

ஒத்துக் கொண்டுவிட்டது; காங்கிரஸ் கட்சியும் அவற்றை ஏற்றுக் கொண்டு விட்டது. அரசியல் நிர்ணய சபையும் அவற்றை ஏற்றுக் கொண்டுவிட்டது. இந்தக் கடினமான பிரச்சினையின்பால் எதார்த்தபூர்வமான, மற்றும் ராஜதந்திர ரீதியிலான அணுகுமுறையைக் கடைப் பிடித்ததற்காகவும் காங்கிரஸ் கட்சிக்கு நான் நன்றி சொல்லியாக வேண்டும், அதைப் பராட்டியாக வேண்டும். குறிப்பாக, சர்தார் பட்டேலுக்கு அவருடைய மிகவும் எதார்த்தபூர்வமான மற்றும் சான்றாண்மைமிக்க அணுகுமுறைக்காகவும் நாம் நன்றி செலுத்த வேண்டும். சிறுபான்மையோர் இந்த நாட்டில் இருந்து வருகிறார்கள் என்ற உண்மையின்பால் நாம் கண்ணைமூடிக் கொள்வதோ, அல்லது அதைவிட்டு நழுவுவதோ சரியல்ல. ஆனால் காங்கிரஸ் இந்தப் பிரச்சினையை அணுகத் தொடங்கியுள்ள முறையில் நாம் இதை அணுகினோமேயானால், பத்தாண்டுக் காலத்தில் இந்த நாட்டில் சிறுபான்மையோர் பிரச்சினையே இல்லாமற் போய்விடும் என்று நம்புகிறேன். ஐயா, நான் கூறுவதை நம்புங்கள், இந்த நாடு சாத்தியமான மிகவும் குறுகிய காலத்தினுள் ஒரு மெய்யான, மதச்சார்பற்ற ஜனநாயக நாடு என்ற இலக்கை அடைவதைக் காணவிரும்பாத நல்லெண்ணம் படைத்த சிறுபான்மை நபர் எவரும் இருக்க மாட்டார் என்று கருதுகிறேன். அந்த இலக்கை அடைவதில்தான், இந்த நாட்டின் எந்த சிறுபான்மைப் பகுதியினருக்கும் மிகப் பெரிய உத்தரவாதம் அடங்கியுள்ளது என்று நாம் நம்புகிறோம்; நாம் நம்பியாக வேண்டும். டாக்டர் அம்பேத்கர் கூறியதுபோன்று இந்த விஷயத்தில் நாம் ஒரு சமநிலையான போக்கைக் கடைப்பிடித்து வந்துள்ளோம். சிறுபான்மையோரும் உதவிகரமாக இருந்து வந்துள்ளனர்......

இறுதியாக, ஐயா, நாம் இந்த உயரிய நிலையை இறுதியில் அடைவோமா என்பது அச்சிடப்பட்ட அரசியல் சாசனத்தின், எழுதப் பட்ட சொற்களை அவ்வளவாக சார்ந்திருக்காது, மாறாக, இந்த நாட்டின் தலைவர்களும், நிர்வாகிகளும் எந்த உணர்வில் நமது அரசியல் சாசனத்தை அமல்படுத்துகிறார்களோ அதையும், நம்மை எதிரிடும் ஏராளமான பிரச்சினைகளை எந்த உணர்வில் அணுகுகிறார்களோ அதையும் பொறுத்திருக்கும். நாம் அனைவரும் நம்புகின்ற லட்சியங்கள் எந்த அளவுக்கு நிறைவேற்றப்படும் என்பது இந்த அரசியல் சாசனத்தின் உணர்வை நாம் அமல்படுத்துவதையே சார்ந்திருக்கும் என்று கூற விரும்புகிறேன்.

★ தொடர்புள்ளிகள் விடுபட்ட பத்தியைக் குறிக்கின்றன. - ஆ-ர்.

[1]**திரு. கிருஷ்ண சந்திர சர்மா:** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): இந்த சபையின் முன்னால், நன்கு தயாரிக்கப்பட்ட திட்டத்தை முன் வைத்தமைக்காக டாக்டர் அம்பேத்கரைப் பாராட்டும் மகிழ்ச்சி கரமான பணியில் நானும் சேர்ந்து கொள்கிறேன். அவர் கடினமான பணியாற்றியிருக்கிறார். நேற்றைய தினம் மிகத் திறமையாகவும் தெளிவாகவும் பேசினார்.

ஐயா, ஓர் அரசியல் சாசனத்தைப் பரிசீலனை செய்யும் போது, அந்த அரசியல் சாசனம் அதோடு முடிந்து விடுவதில்லை என்ற உண்மையை நாம் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும். ஓர் அரசியல் சாசனம் சில குறிக்கோள்களுக்காக வகுக்கப்படு கிறது. மக்களின் நல்வாழ்வு, அரசின் ஸ்திரத்தன்மை மற்றும் தனி நபரின் வளர்ச்சி, அபிவிருத்தி ஆகியவையே அந்தக் குறிக்கோள்கள். இந்தியாவில் தனிநபரின் வளர்ச்சி, அபிவிருத்தி என்று நாம் பேசும் போது, அந்த நபர் தன்னைத்தானே புரிந்து கொள்வது, சுய வளர்ச்சி மற்றும் சுய-விழிப்புணர்வு அடைதல் என்று நாம் அர்த்தப்படுத்து கிறோம். மக்களின் வளர்ச்சி என்று நாம் கூறும்போது ஒரு வலுவான மற்றும் ஒன்றுபட்ட தேசம் என்று நாம் பொருள் கொள்கிறோம்....

★ ★ ★

[2]**திரு.டி.டி.கிருஷ்ணமாச்சாரி** (சென்னை: பொது): திரு. தலைவர் அவர்களே, ஐயா, இந்த அவையில் டாக்டர் அம்பேத்கரின் உரையை மிகவும் கவனமாகக் கேட்டவர்களில் நானும் ஒருவன். அரசியல் சாசனத்தின் முன்வடிவைத் தயாரிக்கும் பணியில் அவர் எவ்வளவு உழைப்பைச் செலுத்தியிருக்கிறார், உற்சாகத்துடன் செயல் பட்டிருக்கிறார் என்பதை நான் அறிவேன். அதே சமயத்தில், நமக்கு மிகவும் முக்கியமான ஓர் அரசியல் சாசனத்தைத் தயாரிக்கும் பணிக்குத் தேவையான கவனத்தை வரைவுக்குழுவால் செலுத்தப்படவில்லை என்பதையும் நான் உணருகிறேன். உங்களால் நியமனம் செய்யப்பட்ட ஏழு உறுப்பினர்களில் ஒருவர் இந்த அவையிலிருந்து ராஜினாமா செய்துவிட்டார் என்பதையும், அவருக்கு பதிலாக வேறொருவர் நியமிக்கப் பட்டுள்ளார் என்பதையும் இந்த அவை அறிந்திருக்கலாம். ஒருவர் இறந்துபோனார். அந்த இடத்திற்கு வேறோருவர் நியமனம் செய்யப்படவில்லை. ஒருவர் அமெரிக்காவில் இருக்கிறார். அந்த

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 5, 1948, பக். 229.
2. அதே நூல், பக்.231-32.

இடமும் பூர்த்தி செய்யப்படவில்லை. இன்னொரு நபர் அரசு விவகாரங்களைக் கவனித்து வருகிறார். அந்த அளவுக்கு வரைவுக் குழுவில் காலியிடங்கள் உள்ளன. ஒன்றிரண்டு நபர்கள் டில்லி யிலிருந்து தொலைதூரத்தில் இருக்கின்றனர். ஒருவேளை உடல்நலக் காரணங்களினால் அவர்களால் குழுக் கூட்டங்களில் கலந்து கொள்ள முடியாத நிலைமை இருக்கிறது. எனவே, இறுதியில் அரசியல் சாசனத்தைத் தயாரிக்கும் சுமை டாக்டர் அம்பேத்கரின் மீது விழுந்தது. ஐயத்திற்கிடமற்ற முறையில், மிகவும் பாராட்டத்தக்க விதத்தில் இந்தக் கடமையை சாதித்ததற்காக, நாம் அவருக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம். ஆனால் மெய்யாக நான் வலியுறுத்த விரும்புவது என்னவெனில், இதுபோன்ற ஒருவிஷயத்தில் செலுத்தப் பட வேண்டிய கவனம் குழு வினால் செலுத்தப்படவில்லை என்பதேயாகும். ஏப்ரல் மாதத்தில் ஒருசமயம், அரசியல் நிர்ணய சபையின் செயலகம் எனக்கும், இன்னும் சிலருக்கும் அனுப்பி யிருந்த ஒரு கடிதத்தில், ஒன்றிய அதிகாரங்கள் குழு, ஒன்றிய அரசியல் சாசனக் குழு, மற்றும் மாகாண அரசியல் சாசனக்குழு ஆகியவை எப்படியாயினும் அவற்றின் உறுப்பினர்களும், மற்றும் ஒருசில தேர்வு செய்யப்பட்ட நபர்களும் கூடி, இந்த அவையின் உறுப்பினர் களிடமிருந்தும் மற்றும் பொதுமக்கள் தரப்பிலிருந்தும் வந்துள்ள பல்வேறு திருத்தங்களைப் பற்றி விவாதிக்க வேண்டும் என்று நீங்கள் முடிவு செய்திருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. ஏப்ரல் கடைசியில் ஒரு கூட்டம் இரு நாட்கள் நடைபெற்றது; ஓர் அளவு நல்லபணி ஆற்றப்பட்டிருக்கிறது என்று நம்புகிறேன். குழுவின் சில பரிந்துரைகளை டாக்டர் அம்பேத்கர் ஏற்றுக் கொண்டார் என்று அறிகிறேன். ஆனால் அதற்குப் பிறகு இந்தக் குழுவைப் பற்றி எந்தத் தகவலும் இல்லை. இதன் பின்னர் முக்கியமாக டாக்டர் அம்பேத்கரும் திரு.மாதவராவும் சந்தித்து, திருத்தங்களைப் பரி சீலனை செய்துள்ளார்கள் என்றும், சில யோசனைகளை அவர்கள் கூறியுள்ளனர் என்றும் அறிகிறேன். ஆனால் இது முறையான வரைவுக்குழுவாக இல்லாமலிருக்கலாம். இந்த விஷயத்தில் உங்க ளுடைய முடிவை நான் ஆட்சேபிக்க மாட்டேன் என்ற போதிலும் ஒரு குழு தனது அறிக்கையை சமர்ப்பித்துவிட்டதென்றால், அதற்குப் பிறகு அந்தக் குழுவின் பணிமுடிந்து போகிறது என்பதை எல்லோரும் ஏற்றுக்கொள்வர். வரைவுக்குழுவை நீங்கள் மறுபடியும் அமைத்துள்ளதாக எனக்கு நினைவு இல்லை.....

★ ★ ★

[1]**திரு. விஸ்வநாத தாஸ்:** (ஒரிஸ்ஸா: பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே, ஐயா, அரசியல் நிர்ணயசபையில் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் சமர்ப்பித்த அரசியல் சாசனம் பற்றிய உன்னத மான பகுப்பாய்வுக்காக அவரைப் பாராட்டுகிறேன். அவருக்கு நன்றி கூறுகிறேன். ஐயா, இந்த அவையில் சமர்ப்பிக்கப்பட்டுள்ள அரசியல் சாசனத்தை உருவாக்குவதற்கு ஆறுமாதகாலம் கடினமாக உழைத்த அவருடைய சகாக்களுக்கும் அதே அளவு நன்றி செலுத்து கிறேன்....

[2]**திரு.வி. தாஸ்** (ஒரிஸ்ஸா:பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, ஐயா எடுத்த எடுப்பில், வரைவுக்குழுவைப் பாராட்டி யாக வேண்டும். அவர்கள் மிகவும் கடினமாகப் பணியாற்றி, அர சியல் சாசன மசோதாவை தக்கமுறையில் உருவாக்கி, இங்கு சமர்ப் பித்திருக்கிறார்கள். அதை நாம் இன்று பரிசீலனை செய்து வருகிறோம். நமது விருப்பப்படி நாம் அதை மாற்றலாம். அதன்மூலம் இந்தியா வுக்கு ஒருமுறையான இறையாண்மை உடைய அரசியல் சாசனம் உருவாக்கப்படும். டாக்டர் அம்பேத்கரையும் அவருடைய சகாக்களை யும் நான் பாராட்டும்போதே, உங்களுடைய ஆலோசகர்களையும் பாராட்டுகிறேன்.

★ ★ ★

[3]**திரு. லோகநாத் மிஸ்ரா** (ஒரிஸ்ஸா:பொது): ஐயா, இந்தியா வின் இறையாண்மையைப் பிரதிநிதித்துவப்படுத்துகிற, மற்றும் நமது சுதந்திரத்திற்கு உருவமும் வடிவமும் மதிப்பும் தருகிற இந்த அரசியல் நிர்ணயசபை, நமது வருங்காலத்திற்கு வழிகாட்டியாக இருக்கப்போகிற ஓர் அரசியல் சாசனத்தை விவாதித்து வருகிறது. அதைக் குறிக்கோளாகக் கொண்டு, நமது தலைவர்கள் கடினமாக உழைத்து, அரசியல் சாசனத்தின் முன்வரைவைத் தயாரித்திருக் கிறார்கள். இதை நாம் இப்பொழுது விவாதிக்கப்போகிறோம்.

ஐயா, என்னுடைய முதலாவது குறிப்பு இதுதான்: அரசியல் சாசனத்தின் முன்வரைவைப் பூரணமாக ஆய்வுசெய்து மிகவும் உன்னதமான, ஒளிவீசும், துணிச்சலான மற்றும் தெளிவான உரையை டாக்டர் அம்பேத்கர் நிகழ்த்தியிருந்த போதிலும் கூட.....

---

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 5, 1948, பக். 237.
2. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 5, 1948, பக். 239.
3. மேற்படி அதே நூல், பக். 240.

..... டாக்டர் அம்பேத்கரின் உரையைப் பகுப்பாய்வு செய்வதற்கு நான் மேலும் சிறிது நேரம் கூடுதலாக எடுத்துக் கொண்டிருந்திருப்பேன். அவருடைய அறிவுத்திறனுக்கு நான் தலைவணங்குகிறேன். அவருடைய தெளிவான உரைக்காக அவருக்குச் சிரம் தாழ்த்துகிறேன். அவருடைய துணிச்சலுக்காக அவருக்கு தலைவணங்குகிறேன். ஆனால் இவ்வளவு கற்றறிந்த ஒருமனிதர், இந்தியாவின் ஒரு மகத்தான புதல்வர் இந்தியாவைப் பற்றி இவ்வளவு குறைவான ஞானமுடையவராக இருப்பது குறித்து வியப்படைகிறேன். வரைவு அரசியல் சாசனத்தின் ஆன்மாவே அவர்தான் என்பதில் சிறிதும் ஐயமில்லை; அவர் அந்த முன்வரைவில் அளித்துள்ள சில விஷயங்கள் முற்றிலும் இந்தியாவுக்கு மாறுபட்டதாகும். இந்தியாவுக்கு மாறானது என்று கூறுவதன் மூலம் நான் என்ன அர்த்தப்படுத்துகிறேன் என்றால், அவர் இதை எவ்வளவு மறுத்த போதிலும் இது முற்றிலும் மேலையநாடுகளை அப்படியே யாந்திரீகமாகப் பகர்ப்பு செய்வதாகும். இல்லை, அதற்கும் மேலாக, அடிமைத்தனமாக சரணடைவதாகும்.

★ ★ ★

[1]**காஜி சையத் கரீமுத்தீன்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: முஸ்லீம்): தலைவர் அவர்களே, ஐயா, இந்தியாவின் அரசியல் சாசனத்தின் முன்வரைவைப் பரிசீலனை செய்வதற்கான பிரேரணையை இந்த அவையில் அறிமுகம் செய்திருப்பதற்காக டாக்டர் அம்பேத்கரைப் பாராட்டுகிறேன். அவர் ஆற்றிய உரை மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும்; அவருடைய பெயர் வருங்காலத்தில், அரசியல் சாசனத்தை உருவாக்கிய ஒரு மகத்தான வித்தகர் என்று புகழ்பெறும் என்பதில் எனக்கு சிறிதும் ஐயமில்லை.

[2]**பேராசிரியர் கே.டி.ஷா** (பீஹார்: பொது): ஐயா, இந்த் அவையின் முன் சமர்ப்பித்துள்ள மிகவும் விரிவான அரசியல் சாசன முன்வரைவுக்காக, வரைவுக்குழுவுக்கும் அதனுடைய தலைவருக்கும் வழங்கப்பட்டுள்ள பாராட்டுகளில் நானும் இணைந்து கொள்கிறேன். அரசியல் சாசனத்தின் முக்கியமான அம்சங்களை நமது பரிசீலனைக்காக மிகவும் தெளிவான முறையில் விளக்கியிருப்பதற்

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 5, 1948, பக். 242.
2. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 5, 1948, பக். 244.

காகவும், நமக்கு சிந்தனையைத் தூண்டும் கருத்துக்களை வழங்கி யிருப்பதற்காகவும், ஏன் சில அம்சங்கள் சேர்க்கப்பட்டுள்ளன, ஏன் வேறுசில அம்சங்கள் குறிப்பிட்ட முறையில் முன்வைக்கப்பட் டுள்ளன என்பதற்கான காரணங்களை வழங்கியிருப்பதற்காகவும் சட்ட அமைச்சரை நான் குறிப்பாகப் பாராட்டுவதற்குக் கடமைப் பட்டிருக்கிறேன்.

★ ★ ★

[1]*பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா* (மேற்கு வங்கம்: பொது): ஐயா, என்னுடைய பெருமதிப்பிற்குரிய நண்பரும், பழைய சகாவு மாகிய டாக்டர் அம்பேத்கரை, நேற்று அவர் ஆற்றிய மகத்தான உரைக்காக ஆரம்பத்திலேயே பாராட்டாவிட்டால் என் கடமை யிலிருந்து தவறியவனாவேன். அரசியல் சாசனத்தின் பிரேரணை களுக்குத் திட்டவட்டமான உருவம் கொடுப்பதில் பெருமளவான நேரத்தையும் ஆற்றலையும் ஈடுபடுத்தியுள்ளதற்காக இந்த அவை அவரைப் பாராட்டுகிறது.

★ ★ ★

[2]*திரு.ராம்நாராயண் சிங்* (பீஹார்:பொது): ஐயா, இந்த அரசியல் சாசன மசோதாவை அறிமுகம் செய்துவைப்பதற்கு என் னுடைய நண்பர் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கருக்கு வாய்ப்புக் கிடைத்தமைக்காக அவரைப் பாராட்டுகிறேன். அவருடைய பிரே ரணையை ஆதரிக்கிறேன்.

★ ★ ★

[3]*டாக்டர் பி.எஸ்.தேஷ்முக்:* (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது): ஐயா, முன்மொழியப்பட்டுள்ள வரைவு அர சியல் சாசனத்தைப் பற்றி என்னுடைய கருத்துக்களை எடுத்துக் கூறு வதற்கு இந்த வாய்ப்பை எனக்கு அளித்ததற்காக உங்களுக்கு நன்றி செலுத்துகிறேன். அவகாசம் குறைவாக இருப்பதால், என்னுடைய கருத்துக்கள் மிகவும் பொதுவான தன்மை உடையதாக மட்டுமே இருக்க முடியும். பல்வேறு ஷரத்துகளைப் பற்றிப் பரிசீலனை

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 5, 1948, பக். 246.
2. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 5, 1948, பக். 252.
3. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 5, 1948, பக்.250

நடைபெறும்போது, துரதிருஷ்டவசமாக நான் இங்கு இருக்க மாட்டேன். எனவே இப்பொழுது பேசுவதற்கு ஒரு சில நிமிஷங்கள் கிடைத்திருப்பது பற்றி மிகவும் நன்றிக் கடன்பட்டுள்ளேன்.

என்னுடைய நண்பர் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் ஆற்றிய உரை மிகச் சிறப்பான சொற்பொழிவாகும். முன்வைக்கப்பட்டுள்ள வரைவு சம்பந்தமாக நம்பிக்கை ஏற்படுத்தும் விளக்கமாக அது அமைந்திருந்தது. அவர் ஒரு புகழ்மிக்க வழக்கறிஞர் என்பது நன்கு தெரிந்ததே. தமக்கு முன்னுள்ள விஷயத்தைப் பற்றி அவர் திறமையாக வாதாடினார். அவருக்கு வாய்ப்பு இருந்திருக்குமேயானால், ஒருவேளை வேறுவிதமாக அவர் இதை உருவாக்கியிருக்கக் கூடும். எப்படியிருந்த போதிலும் அவர் நிர்வாகத்தை ஒரே நாளில் மாற்றிவிட முடியாது என்று கூறியபோது தம்முடைய சிரமங்களை முழுமையாக ஒத்துக்கொண்டார். தற்போதைய அரசியல் சாசனத்தைப் பற்றிச் சுருக்கமாகக் கூறுவதெனில், தற்போதுள்ள நிர்வாகத்துடன் பொருந்தி வருவதை நோக்கமாக கொண்டதாகும் அது.

★ ★ ★

[1]**திரு. எஸ். நாகப்பா:** திரு.துணைத் தலைவர் அவர்களே, ஐயா, வரைவுக்குழுவின் மாண்புமிகு தலைவரையும், அதனுடைய அனைத்து உறுப்பினர்களையும் முந்திய பேச்சாளர்களோடு இணைந்து நானும் பாராட்டுகிறேன். அனைத்துப் பிரச்சினைகளின் அனைத்து அம்சங்களையும் பல்வேறு குழுக்களின் அனைத்து அறிக்கைகளையும் அவர்கள் கவனத்துடன் ஒருங்கிணைத்து ஆய்வு செய்திருக்கின்றனர்.

ஐயா, ஒரு வலுவான மைய அரசு இருக்கவேண்டுமென்று கூறுபவர்களில் நானும் ஒருவன்; குறிப்பாக, நமது சுதந்திரத்தை மிகவும் சமீபத்தில்தான் நாம் வென்றிருக்கிறோம் என்பதை அனைவரும் அறிவோம். அந்த சுதந்திரத்தை உறுதிப்படுத்துவதற்கு நமக்குப் போதிய அவகாசம் வேண்டும்; அதை என்றென்றைக்கும் நீடித்து வைத்துக் கொள்வதற்கும் நமக்கு அவகாசம் தேவை. வேறொரு காரணத்திற்காகவும் மைய அரசு வலுவானதாக இருக்க வேண்டும். அதாவது நாம் ஏற்கனவே பல அம்சங்களில் உதாரணமாக

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 5, 1948, பக். 252.

வகுப்பு ரீதியாகவும், மத அடிப்படையிலும் பிரிந்துள்ளோம். இப்பொழுது மாகாணங்கள் அடிப்படையிலும் நாம் பிரிந்திருக்க வேண்டாம். எனவே எல்லா மாகாணங்களையும் ஒன்றுபடுத்து வதற்கும், கூடுதல் ஒற்றுமையை ஏற்படுத்துவதற்கும் ஒரு வலுவான மைய அரசு இருக்க வேண்டியது நாட்டின் நலன்களுக்கு உகந்த தாகும்.

நமக்கு ஒரு பலமான மைய அரசு இருக்க வேண்டுமென் பதற்கான மற்றொரு காரணத்தை இப்பொழுது கூறப் போகிறேன். போர் மனோபாவம் கொண்ட ஒரு பலமான மைய அரசு இருக்க வேண்டுமென்று சிலர் கூறுகிறார்கள். அத்தகைய மனோபாவம் நமக்குக் கூடவே கூடாது என்று கருதுகிறேன். அகிம்சாபூர்வமாக வும், உண்மையுடனும் இருப்பதற்கு நாம் பயிற்றுவிக்கப்பட்டுள் ளோம். இவை நமது கோட்பாடுகளாகும். இத்தகைய நிலைமை யில், போர் மனோபாவம் கொண்ட மைய அரசு இருப்பதற்கு சாத்தியமேயில்லை.

மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர், தமது அறிக்கையையும் அரசியல் சாசன முன்வரைவையும் அறிமுகம் செய்து வைத்துப் பேசுகையில், அரசியல் சாசனத்தின் கட்டமைப்பு கூட்டாட்சி (சமஷ்டி)த் தன்மை கொண்டதாகவும், அதே பொழுதில் ஒன்றுபட்ட மத்திய ஆட்சியைக் கொண்டதாக இருக்குமென்றும் குறிப்பிட் டார். ஐயா, குறிப்பாக இந்தக் கட்டத்தில் இத்தகைய ஓர் அரசியல் சாசனம் அவசியம் நமக்குத் தேவை என்று கருதுகிறேன். இந்திய அரசாங்கச் சட்டத்திலிருந்து சில விதிகளை அப்படியே அவர் எடுத் தாண்டிருக்கிறார் என்று நமக்குச் சொல்லப்பட்டது. அதில் சில விஷ யங்கள் நல்லதாக இருப்பதால், அவற்றை நாம் அப்படியே எடுத்துக் கொள்கிறோம். பிற அரசியல் சாசனங்களில் சில விஷயங்கள் பயனுள்ளவையாக இருந்தால், அவை நமக்குப் பொருத்தமானவை யாக இருந்தால், நமது மரபுகளுக்கும், கலாசாரத்திற்கும் ஏற்புடை யவையாக இருந்தால், அவற்றை அப்படியே ஏற்றுக்கொள்வதில் நமக்கு எந்தவிதப் பாதிப்பும் இருக்காது.

அரசியல் சாசனத்தில் சிறுபான்மையினருக்கு சிறந்த பாதுகாப்புகளுக்கு வகை செய்யப்பட்டுள்ளது. இதுகுறித்து மகிழ்ச்சி அடைகிறேன். சிறுபான்மையோரின் நலன்களைப் பாதுகாப்பதற் காக இந்த அவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்துள்ள பிரதிநிதி களும் இதுகுறித்து மகிழ்ச்சியடைகிறார்கள். இதற்காக நாம் பெரும்

பான்மை சமூகத்தினரைப் பாராட்ட வேண்டும். சிறுபான்மை யோருக்கு சில தனிச்சலுகைகளை வழங்கியதற்காகவும் பெரும் பான்மை சமூகத்தினரை நாம் பாராட்டியாக வேண்டும்.

ஐயா, இந்த அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதற்கு சிரமம் எடுத்துக் கொண்டதற்காக மாண்புமிகு டாக்டர் அம்பேத்கருக்கு மீண்டும் நன்றி செலுத்துகிறேன். இது ஒரு மிகப் பெரிய பணி யாகும், ஆயினும் அவர் மிகவும் வெற்றிகரமாகவும், மிகவும் குறுகிய காலத்திலும் இந்தப் பணியை ஆற்றியுள்ளார்.

★ ★ ★

[1]**திரு. அருண் சந்திர குஹா** (மேற்கு வங்கம்: பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, ஐயா.. அரசியல் சாசனத்தின் முன் வரைவைப் பொறுத்தமட்டிலும், வரைவுக்குழு வரைமுறைகளுக்கு அப்பால் சென்றுவிட்டது என்று அஞ்சுகிறேன். நமக்கு முன்னால் சமர்ப்பிக்கப்பட்டுள்ள வரைவு அரசியல் சாசனம் முழுவதும், அரசியல் நிர்ணயசபையினால் வகுத்தளிக்கப்பட்ட பிரதான கோட் பாடுகளுக்கு அப்பால் சென்றுவிட்டதாக அஞ்சுகிறேன். வரைவு அரசியல் சாசனம் முழுவதிலும், காங்கிரஸ் கண்ணோட்டத்தின் எந்த சாயலையும் காந்திய சமூக, அரசியல் கண்ணோட்டத்தின் எந்த சாயலையும் நாம் காணவில்லை. அறிஞர் டாக்டர் அம்பேத்கர் அவரது நீண்ட மற்றும் அறிவு சார்ந்த உரையில் காந்திஜியைப் பற்றியோ, அல்லது காங்கிரசைப் பற்றியோ ஒரு சந்தர்ப்பத்தில் கூடக் குறிப்பிடவில்லை. இது வியப்புக்குரியதல்ல, ஏனெனில், அரசியல் சாசனம் முழுவதிலும் காங்கிரஸின் லட்சியமோ, குறிப்பாகக் காங் கிரசின் சித்தாந்தமோ காணப்படவில்லை என்று கருதுகிறேன். நாம் ஓர் அரசியல் சாசனத்தை வகுக்கும்போது நாம் வகுக்கப்போவது ஓர் அரசியல் கட்டமைப்பு மாத்திரமல்ல; நாம் ஏற்படுத்தப்போகும் ஒரு நிர்வாக இயந்திரம் மட்டுமல்ல; அது நாட்டின் சமூக மற்றும் பொருளாதார வருங்காலத்திற்கான ஒரு கருவியுமாகும்.

அடிப்படை உரிமைகளைப் பொறுத்தமட்டிலும், டாக்டர் அம்பேத்கர் - அவர் ஒரு கற்றறிந்த பேராசிரியர், அவருடைய ஞானத்தையும் திறமையையும் நான் அங்கீகரிக்கிறேன் - அரசியல் சாசனத்தின் முன்வரைவு பிரதானமாக அவரால் உருவாக்கப்பட்டதே

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 4, 1948, பக். 255-256.

யாகும் என்று கருதுகிறேன். தமது அறிமுக உரையில், அவர் ஒருவகைப்பட்ட பொருண்மைசாராத விவாதத்தில் இறங்கினார். அவர் ஒரு புதிய சொல்லைப் பயன்படுத்தினார்: ஐயா, உலகில் முற்ற முழுமையான உரிமை எதுவும் கிடையாது என்று நான் உணர்கிறேன். ஒவ்வொரு உரிமையும் ஓரளவு கடமையைக் கொண் டுள்ளது; கடமையில்லாது எத்தகைய உரிமையும் இருக்க முடியாது...

★ ★ ★

**திரு. துணைத் தலைவர்:** (டாக்டர் எச்.ஸி.முகர்ஜி): அடுத்த உறுப்பினரை இந்த சபையின் முன்பேசுவதற்கு நான் அழைப்ப தற்கு முன்னால், பேசுவதற்கு விரும்பும் நாற்பது உறுப்பினர்களின் துண்டுசீட்டுகள் என்னிடம் வந்துள்ளன என்பதை உங்களுடைய கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன். விஷயம் மிகவும் அவசர மானதும் மிகவும் முக்கியமானதுமாகையினால், வரைவு அரசியல் சாசனத்தைப் பற்றி ஒவ்வொருவரும் தமது கருத்துக்களைக் கூறு வதற்கு வாய்ப்புக் கொடுக்க வேண்டும் என்று விரும்புகிறேன். எனவே, பேசுபவர்கள், நான் நிர்ணயித்துள்ள நேர வரம்பை, பத்து நிமிடங்களை மீற வேண்டாம் என்று கேட்டுக்கொள்கிறேன்.

[1]**திரு.டி.பிரகாசம்:** (சென்னை-பொது): ஐயா, அரசியல் சாசனத்தை வரைவதற்குப் பொறுப்பாயுள்ள மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் பிரேரணை செய்துள்ள அரசியல் சாசனத்தின் முன்வரைவு மிகவும் பெரிய ஆவணமாகும். இதைத் தயாரிப்பதற்கு அவரும், அவருடன் இணைந்து பணியாற்றிய உறுப்பினர்களும் மெய்யாகவே மிக அதிகமான சிரமம் எடுத்துக் கொண்டிருக்கிறார் கள். என்னுடைய மதிப்புமிக்க நண்பர் திரு. டி.டி.கிருஷ்ணமாச்சாரி பேசுகையில், குழுவின் ஐந்து அல்லது ஆறு உறுப்பினர்கள் விலக்கிக் கொண்டதாலும், அவர்களின் இடங்கள் பூர்த்தி செய்யப் படாததாலும் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் எத்துணை இடர்ப் பாட்டுடன் செயல்பட வேண்டியிருந்தது என்பதை விளக்கினார்....

★ ★ ★

[2]**டாக்டர் ஜோஸப் ஆல்பன் டி சௌஸா** (பம்பாய்-பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, ஆயிரக்கணக்கான ஆண்டுகள்

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 6, 1948, பக். 257.
2. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 6, 1948, பக். 260

தொன்மை மிக்க இந்த மகத்தான தேசத்தின் வரலாற்றில் இந்த மதிப்புமிக்க அவை ஒரு சுதந்திரமான, இறையாண்மை உடைய, ஜனநாயக இந்தியக் குடியரசின் அரசியல் சாசனத்தின் முன்வரைவை ஷரத்துவாரியாக, விதிவாரியாக பரிசீலனை செய்துவரும் இந்த மிகவும் ஜீவாதாரமான, மகத்தான சந்தர்ப்பத்தின்போது - சோதாரப் பான்மையிலான விட்டுக் கொடுக்கும் தன்மை மற்றும் ஒத்துழைப்புக் கான தேவை, நமது ஒவ்வொருவரின் மனச் சாட்சியையும் அமைதி யாகவும் மனப்பூர்வமாகவும் ஆத்ம சோதனை செய்து கொள்வ தற்குமான மிக அதிகமான தேவை இப்போதுபோல் முன் எப் பொழுதும் ஏற்பட்டதில்லை. ஒருவேளை இனி எப்பொழுதும் ஏற்படாது என்றும் கூட நான் கூறமுடியும். இதன்மூலம், சமாதானம், நல்லிணக்கம், பரஸ்பர இசைவு ஆகியவை நமது தனிநபர் வாழ்வின் அதுபோன்றே கூட்டு வாழ்வின் தரக்குறியீடு முத்திரை களாக இருக்கும். போதிய அளவு அகண்ட பார்வை நமக்குத் தேவை. அப்பொழுதுதான், இந்த அரசியல் சட்ட கட்டமைப்பு சம்பந்தமாக நாம் எதிர்கொள்ள வேண்டியிருக்கும் சிக்கலான மற்றும் சிரமமான பிரச்சினைகளை நாடு முழுமையின் சுபீட்சம், முன்னேற்றம் என்ற விரிவான கோணத்திலிருந்து ஆய்வு செய்ய முடியும்; கடைசியாக, ''உங்களைப் போன்றே உங்களுடைய அண்டை வீட்டுக்காரரையும் நேசியுங்கள்'' என்ற பிரபலமான மூதுரை போதிய அளவு பெருந் தன்மையுடனும் பொது நலப்பண்பு நோக்கத்துடனும் வெளிப் படுத்தப்பட வேண்டும். அப்பொழுதுதான், நாடு முழுமையின் உயர்ந்த நலன்களுக்காக, நாடு முழுமையையும் பாதிக்கும் அடிப் படைக் கொள்கை சம்பந்தமான முடிவுகளில் உணர்ச்சிசார்ந்த, மனவெழுச்சி சார்ந்த, குறிப்பிட்ட குறுகிய போக்குகள் அசாதாரண மான செல்வாக்குச் செலுத்த அனு மதிக்கப்படாமல் செய்யலாம். அரசியல் சாசன முன்வரைவு ஒரு மிகச் சிறந்த ஆவணம் என்று பல உறுப்பினர்கள் குறிப்பாக எனக்கு முன்னால் பேசிய ஒவ்வொரு உறுப்பினரும் ஒத்துக்கொண்டுள்ளனர். மாண்புமிகு டாக்டர் அம்பேத் கரும் அவருடைய வரைவுக் குழுவும் பல மாதங்கள் கடும் உழைப் புக்குப் பின்னர் தயாரித்து நம் முன்வைத்துள்ள இந்த வரைவு அரசியல் சாசனம் ஒரு மகோன்னதமான படைப்பு என்று பாராட்டு கிறேன். அவர்கள் ஆற்றிய பணி மிகுந்த நிபுணத்துவம் வாய்ந்த பணி என்று திட்ட வட்டமாகக் கூறலாம். தொடக்கம்முதல் இறுதி வரையில் அது ஒப்பில்லாததாகவும், தேர்வுசெய்யப்பட்ட தன்மை உடையதாகவும், திறமையானதாகவும் அமைந்துள்ளது.

★ ★ ★

[1]**மாண்புமிகு திரு.கே.சந்தானம்:** ...வரைவுக்குழு மிகச் சிறந்த பணியாற்றியிருக்கிறது. ஆனால் அதே சமயத்தில் இரு தகுதிவாய்ந்த விமர்சனங்களிலிருந்து அவர்கள் தப்பித்துக் கொள்ள முடியாது என்று நினைக்கிறேன். அந்தக் குழுவினர் நியாயமற்ற முறையில் தங்களை அரசியல் சாசனக் குழுவாகவே மாற்றிக் கொண்டு விட்டார்கள். இந்த சபையினால் பகிரங்கமாக ஏற்றுக் கொள்ளப்பட்ட சில ஜீவதாரமான விதிகளை மாற்றும் பொறுப்பை அவர்களே எடுத்துக் கொண்டுவிட்டார்கள்...

★ ★ ★

[2]**திரு.ஆர்.கே.சித்வா** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது): திரு.துணைத்தலைவர் அவர்களே, ஐயா, ஒரு திறமையான மற்றும் தகுதிமிக்க வழக்கறிஞராகிய மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் அரசியல் சாசனத்தின் முன்வரைவை மிகவும் தெளிவான முறையில் இந்த அவையில் சமர்ப்பித்துள்ளார். அவர் இதன் மூலம் வெளி உலகத்தின் மீதும் இங்குள்ள சில மதிப்புமிக்க உறுப்பினர்கள் மீதும் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளார்; ஆனால் அரசியல் சாசனத்தை மதிப்பிடுவதற்கு அது அளவு கோலல்ல. இந்த அரசியல் சாசனம் இந்த நாட்டில் ஜனநாயகத்தை நிறுவுவதற்காகத் தயாரிக்கப்பட்டதாகும். ஆனால் டாக்டர் அம்பேத்கர், ஸ்தலஸ்தாபனங்களையும் கிராமங்களையும் புறக்கணித்ததன் மூலம் ஜனநாயகம் என்ற கருத்தையே மறுதலித்துள்ளார்....

★ ★ ★

[3]**திரு. ஜெய்நாராயண் வியாஸ்** (ஜோத்பூர்): திரு. துணைத் தலைவர் அவர்களே, ஐயா, நமக்கு முன்னால் உள்ள அரசியல் சாசனத்தின் முன்வரைவைத் தயாரிப்பதில் டாக்டர் அம்பேத்கரும் அவருடைய சகாக்களும், அதுபோன்றே, தட்டச்சுப் பொறியாளர்களும், நகல் தயாரிப்போரும் ஆற்றியுள்ள அரியபணிக்காக அவர்களுக்கு நன்றி செலுத்த வேண்டும். இது ஒரு மிகப் பெரிய முன் வரைவு, இதில் பல விஷயங்கள் அடங்கியுள்ளன...

★ ★ ★

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 6, 1948. பக்கம் 262.
2. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 6, 1948. பக்கம் 265.
3. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 6, 1948. பக்கம் 269.

[1]**திரு. பி.ஏ. மண்ட்லோய்** (மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்: பொது) திரு. துணைத்தலைவர் அவர்களே, ஐயா, முன் வரைவுக் குழுவின் தலைவர் டாக்டர் அம்பேத்கர் மிகவும் தெளிவான முறையில், அரசியல் சாசனத்தின் முன்வரைவின் முக்கியமான அம்சங்களை விளக்கினார். அரசின் வடிவம் என்ன, நாட்டின் அரசியல் சாசனம் என்ன என்று எழுப்பப்பட்ட கேள்விகளுக்கு பதிலளிக்கும் வகையில், அது ஒரு சமஷ்டி(கூட்டாட்சி) வகைப்பட்ட அரசு, வலுவான மைய அரசைக் கொண்டிருக்கும், நாடாளுமன்ற வகைப்பட்ட அரசாக இருக்கும், ஒற்றை நீதித்துறை, அடிப்படை சட்டங்கள் ஒரு சீரான தன்மையுடையவையாக இருக்கும் என்று அவர் சுட்டிக்காட்டினார். ஸ்திரத்தன்மையைக் காட்டிலும் பொறுப்புத் தன்மை வலியுறுத்தப்பட்டுள்ளது என்றும் அவர் கூறினார். சமாதான காலத்திலும், போர்க்காலத்திலும் அந்த அரசு போதிய அளவு வலுவானதாக இருக்கும். அரசியல் சாசனத்தின் முன் வரைவுக்கு எதிராகக்கூறப்பட்ட பல்வேறு விமர்சனங்களுக்கு அவர் தமது உரையில் பதிலளித்தார். அவரது உரை அரசியல் சாசனத்தின் முன்வரைவின் மிகவும் தெளிவான விளக்கமாகும் என்று கூறிக் கொள்ள விரும்புகிறேன். வரைவுக்குழு தயாரித்துள்ள அரசியல் சாசனத்தின் முன்வரைவானது, பல்வேறு குழுக்களின் அறிக்கைகளை, அதாவது ஒன்றிய அதிகாரக்குழு, மாகாண அரசியல் சாசனக் குழு, ஆலோசனைக்குழு, சிறுபான்மையோர் குழு ஆகியவற்றின் அறிக்கைகளை அடிப்படையாகக் கொண்டது. அரசியல் நிர்ணயசபை, தனது முதலாவது அமர்விலேயே, நமது அரசியல் சாசனத்தின் குறிக்கோள் சம்பந்தமாக ஒரு தீர்மானம் நிறைவேற்றியுள்ளது. அந்தத் தீர்மானம் நமது பெருமதிப்பிற்குரிய தலைவர் பண்டிட் ஜவஹர்லால்நேருவினால் முன்மொழியப்பட்டு, ஒருமனதாக நிறைவேற்றபட்டது. நமது அரசியல்சாசனம் அந்த அடிப்படையான தீர்மானத்தை அந்த குறிக்கோள்கள் பற்றிய தீர்மானத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதை நாம் பார்க்க வேண்டும். அதில் நீதி, சுதந்திரம், சமத்துவம் மற்றும் சகோதரத்துவத்திற்கான உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. அரசியல் சாசனத்தின் முன்வரைவில் குறிப்பிடப்பட்டிருக்கும் குறிக்கோள்கள் தீர்மானத்தின் மெய்யான பிரதிபலிப்பாகும். எனவே, அது நமது நோக்கத்தை நிறைவேற்றியுள்ளது என்று கூறமுடியும்.

நமது நாட்டினுடைய, நமது தேசத்தினுடைய குறிக்கோளை அரசியல் சாசனத்தின் முன்வரைவு நிறைவேற்றுகிறதா என்று பார்ப்

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 6, 1948. பக்கம் 271.

பதற்கு மற்றொரு உரைகல் இருக்கிறது. அது நமது சுதந்திரத்தையும், விடுதலையையும், நமது ஜனநாயக, மதச்சார்பற்ற அரசையும் கட்டிக் காக்குமா என்பதே அந்த உரைகல்லாகும். அந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தாலும்கூட, இந்த அரசியல் சாசனத்தின் முன்வரைவு நமது நோக்கத்தை நிறைவேற்றுகிறது என்று கருதுகிறேன்.

ஐயா, நமது அரசியல் சாசனமானது, உலகம் முழுவதிலும் நாகரிக நாடுகளில் இருந்துவரும் பல்வேறு அரசியல் சாசனங்களை ஒப்பிட்டுப்பார்த்து நம்மால் உருவாக்கப்பட்ட அரசியல் சாசனமாகும். அனைத்து அரசியல் சாசனங்களிலிருந்தும் பல்வேறு நல்ல அம்சங்களும், நம் நாட்டின் நலன்களுக்கு ஏற்ப அவசியமான மாற்றங்களுடன் சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ளன. நாம் விசுவாசத்துடனும், நேர்மையாகவும் அரசியல் சாசனத்தை அமலாக்கினால், நமது நாடு சுபீட்சமடையும், மகிழ்ச்சியடையும், வலுப்பெறும்; நாம் நம்முடைய சுதந்திரத்தைப் பராமரிக்க முடியும்; நமது சுதந்திரத்தைப் பராமரிப்பது மட்டுமன்றி, காலஞ்சென்ற நமது தலைவர், தேசப்பிதாவின் மகத்தான லட்சியத்தை நாம் நிறைவேற்றியவர்களுமாவோம்; இனிமேல் நாம் பிற அடிமை நாடுகளை விடுதலை செய்யும் நிலைமையிலிருப்போம்; உலகம் முழுவதிலும் சமாதானத்தையும் சுபீட்சத்தையும் ஏற்படுத்துவோம் என்று அவர் கூறியிருந்தார்.

இந்த உரையுடன் ஐயா, டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த பிரேரணையை இந்த அவை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

★ ★ ★

[1]**பண்டிட் பாலகிருஷ்ண** சர்மா (ஐக்கிய மாகாணங்கள்: பொது): திரு.துணைத்தலைவர் அவர்களே, ஐயா, பல நண்பர்கள் இந்த அரசியல் சாசனத்தின் முன்வரைவுக்குப் பொறுப்பாயிருந்த மாண்புமிகு சட்ட அமைச்சரைப் பாராட்டிப் பேசியுள்ளனர். அதே வாழ்த்துரைகளை நான் மீண்டும் கூறினால் அது அனேகமாக சொன்னதையே கூறிய வெறும் சொல்லடுக்காகப் போய்விடக் கூடும். ஆனால் நமது பரிசீலனைக்காக, இந்த அரசியல் சாசனத்தின் முன்வரைவை மிகவும் தெளிவான முறையில் இங்கு சமர்ப்பித்ததற்காக என்னுடைய பணிவான மற்றும் மரியாதையுடன் கூடிய பாராட்டுகளை அவருக்கு நான் தெரிவித்துக் கொள்ளவிட்டால் என்னுடைய கடமையில் தவறியவனாவேன்.

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 6, 1948, பக். 272-273.

பல நண்பர்களும் விமர்சகர்களும் நமது அரசியல் சாசனத்திற்கு எதிராக சில குற்றச்சாட்டுகளைக் கூறியிருக்கிறார்கள். பல நண்பர்கள் திரும்பத் திரும்பக் கூறிய ஒரு குற்றச்சாட்டு என்னவென்றால், நமது அரசியல் சாசனம் அளவில் மிகவும் பெரியதாக இருக்கிறது என்பதாகும். இதை முன்மொழிந்தவரே, இதன் விரிவான தன்மையைப் பற்றிக் கூறியிருக்கிறார். பல்வேறு இதர அரசியல் சாசனங்களின் விதிகளையும் ஷரத்துக்களையும் நாம் உண்மையிலேயே பரிசீலித்துப் பார்த்தால், நமது அரசியல் சாசனம் மெய்யாகவே ஒரு விரிவான அரசியல் சாசனம்தான் என்ற முடிவுக்கே நாம் வருவோம். ஐயா, அதில் 315 விதிகள் இருக்கின்றன என்பதை நீங்கள் அறிவீர்கள். ஆனால் பிரிட்டிஷ்-வட அமெரிக்காவின், அதாவது கனடாவின் அரசியல் சாசனம் 147 விதிகளை மட்டுமே கொண்டுள்ளது. ஆஸ்ட்ரேலிய காமன்வெல்த் சட்டம் 128 விதிகளைக் கொண்டுள்ளது; தென் ஆப்பிரிக்க யூனியன் சட்டம் 153 விதிகளைக் கொண்டுள்ளது; ஐரிஷ் அரசியல் சாசனம் 63 விதிகளைக் கொண்டுள்ளது; அமெரிக்க அரசியல் சாசனம் 28 விதிகளைக் கொண்டுள்ளது. சோவியத் யூனியனின் அரசியல் சட்டம் 146 விதிகளைக் கொண்டுள்ளது; ஸ்விட்சர்லாந்து சமஷ்டி அரசியல் சாசனம் 123 விதிகளைக் கொண்டுள்ளது. ஜெர்மன்ரீச் அரசியல் சாசனம் 181 விதிகளைக் கொண்டுள்ளது; ஜப்பானிய அரசியல் சாசனம் 103 விதிகளைக் கொண்டுள்ளது. இந்த அரசியல் சாசனங்களை எல்லாம் கண்ணோட்டமிடும்போது, அவற்றில் எதுவும் 200க்கு அதிகமான விதிகளைக் கொண்டிருக்கவில்லை என்று தெரிகிறது. அதே பொழுதில் நமது அரசியல் சாசனம் 315 விதிகளைக் கொண்டுள்ளது.

நமது அரசியல் சாசனத்தைப் பற்றிக் குறை கூறுவோர் அதன் அளவைப் பற்றி மிகவும் பெரிதுபடுத்திப் பேசுவதற்கு முயன்றுள்ளனர்; ஆனால் நமது நாடு 33 கோடி மக்களைக் கொண்ட மிகப் பெரிய நாடு என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. மனித சமுதாயத்தின் அனேகமாக ஐந்தில் ஒரு பங்கினருக்கு நாம் அரசியல் சாசனத்தைத் தயாரித்துக் கொண்டிருக்கிறோம். எனவே நமது அரசியல் சாசனம் மிக விரிவாக இருப்பது வியப்புக்குரியது ஒன்றுமல்ல...

ஐயா, நமது நாடு, தனக்கே உரிய பற்பலப் பிரச்சினைகளைக் கொண்டது. உலகில் வேறு எந்த நாட்டிலும் சுதேச சமஸ்தானங்கள் என்று நாம் அழைக்கும் பகுதிகள் கிடையாது, எனவே, இந்தப் பல்வேறு அம்சங்களை தற்கால ஜனநாயகக் கோட்பாடுகளுக்கு இசைவாகக் கொண்டு வருவதற்காக, நமது அரசியல் சட்டத்தைத் தயாரித்தவர்கள், அவர்கள் செய்ய விரும்பியதையெல்லாம் ஒரு

சில விதிகளுக்குள் அடக்க முடியாமற் போனதில் வியப்பில்லை. எனவே நமது அரசியல் சாசனத்திற்கு எதிராக, அது பெரிய அளவில் இருக்கிறது என்று கூறப்படும் குற்றச்சாட்டு கேலிக்கூத்தானதாகவே எனக்குத் தோன்றுகிறது....

★ ★ ★

[1]**பண்டிட் தாகூர்தாஸ் பார்க்கவா** (கிழக்கு பஞ்சாப்: பொது): நான் ஆங்கிலத்தில் பேச வேண்டுமென்று என்னுடைய நண்பர்கள் வற்புறுத்துவதால், அவர்களுடைய விருப்பங்களுக்கு தலைவணங்கு கிறேன். இந்தியில் நான் கூடுதல் லாவகமாகப் பேச முடியும் என்பது மெய்யே. அதேசமயத்தில் அவையின் எல்லா உறுப்பினர் களும் நான் பேசுவைதைப் புரிந்து கொள்ள வேண்டுமென்று விரும்பு கிறேன்.

வரைவுக்குழுவுக்கு இந்த அவையில் சூட்டப்பட்ட புகழ் மாலையில் நானும் இணைந்துகொள்ள விரும்புகிறேன். ஆனால் அதேபொழுதில் எனக்கு ஒரு தயக்கமிருக்கிறது. சில நண்பர்கள் இங்கே சில புகார்கள் கூறினார்கள். வரைவுக்குழு, அதனிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டதை அது செய்யவில்லை என்று அவர்கள் உணர்ந் ததைப் போலவே நானும் உணருகிறேன். சில உறுப்பினர்கள் வர வில்லை, சிலர் சேர்ந்து கொள்ளவில்லை, சிலர் தங்கள் மனதைப் பூரணமாக ஈடுபடுத்தவில்லை. இந்தியாவின் மெய்யான ஆன்மா இந்த அரசியல் சாசனத்தினால் பிரதிநிதித்துவப்படுத்தப்படவில்லை. கிராமங்களின் சுயாட்சி இங்கு பூரணமாக விளக்கிக் கூறப்பட வில்லை. இந்தியா எவ்வாறு இருக்க வேண்டுமென்று பலர் விரும்பு கிறார்களோ அந்த மெய்யான படத்தை இந்தக் கேமராவினால் (அரசியல் சாசனத்தின் முன்வரைவைத் தனது கையில் எடுத்துக் காட்டி) காட்டமுடியாது. வரைவுக் குழுவுக்கு காந்திஜி பற்றிய எண்ணம் இருக்கவில்லை. இந்தியாவின் கோடிக்கணக்கான மக்கள். இந்தக் கேமராவினால் (சித்தரித்து) காட்டப்பட வேண்டும் என்று கருதுபவர்களின் மனம் வரைவுக் குழுவுக்கு இருக்கவில்லை. இப்படி யெல்லாம் இருந்தபோதிலும், ஐயா, இந்த அரசியல் சாசனத்தைத் தயாரிப்பதற்கு டாக்டர் அம்பேத்கர் மேற்கொண்ட உழைப்பு, விடா முயற்சி, திறமை ஆகியவற்றை நான் பாராட்டாமலிருக்க முடியாது. இந்த அவையின் முன்னால் டாக்டர் அம்பேத்கர் வெளிப்படுத்திய அனைத்து எண்ணங்களையும் (மனோநிலைகளையும்) நான் ஒத்துக் கொள்ளும் அவசியம் இல்லாமலேயே, அவர் ஆற்றிய சொற்பொழி வுக்காக அவரை பாராட்டுகிறேன்.

---

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 6, 1948, பக்கம் 275.

ஐயா, இந்த அரசியல் சாசனத்தின் ஆன்மா அதனுடைய முகப்புரையில் அடங்கியுள்ளது. முகப்புரையில் 'சகோதரத்துவம்' என்ற கருத்தை சேர்த்ததற்காக டாக்டர் அம்பேத்கருக்கு மகிழ்ச்சியுடன் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஐயா, இப்பொழுது, இந்த முகப்புரை என்னும் உரைகல்லை இந்த அரசியல் சாசனம் முழுமைக்கும் பிரயோகிக்க விரும்பு கிறேன். நீதி, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவை இந்த அரசியல் சாசனத்தில் காணப்படுகிறதென்றால், இந்த லட்சி யத்தை இந்த அரசியல்சாசனம் மூலமாக நாம் எய்த முடியுமென்றால், இந்த அரசியல் சாசனம் நல்ல சாசனமாகும் என்று கருதுகிறேன்.

★ ★ ★

[1]**பேராசிரியர் சிபன் லால் சாக்சேனா** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, நமது அரசியல் சாச னத்தின் முன்வரைவின் அடிப்படையான கோட்பாடுகள் குறித்து விவாதம் செய்வதற்காக இன்று நாம் அழைக்கப்பட்டிருக்கிறோம். முதன் முதலில், நமக்கு முன்னால் இந்தப் பிரேரணையை வைத்துள்ள அறிவுசார்ந்த டாக்டர் அவர்களை நான் பாராட்டியாக வேண்டும். அவர் ஆற்றிய உரையை பலதடவை படித்தேன். அது நமது அர சியல் சாசனம் பற்றிய மிகவும் தெளிவான, உன்னதமான உரை யாகும். அரசியல் சாசனத்தின் முன்வரைவுக்கு ஆதரவாக இதைக் காட்டிலும் கூடுதல் திறமையாக வேறு யாரும் வாதிட்டிருக்க முடியாது என்று நான் நிச்சயமாகக் கருதுகிறேன்....

★ ★ ★

[2]கடைசியாக, ஐயா, மிகவும் சிறந்த அரசியல் சாசனத்தை நமக்கு அளித்தமைக்காக, வரைவுக் குழுவுக்கு நன்றி செலுத்து கிறேன். திருத்தங்களைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளும் கட்டத் தில் எனது யோசனைகள் விவாதிக்கப்படும் என்று கருதுகிறேன். இறுதியாக அவை நமது நாட்டின் அரசியல் சாசனத்தில் இடம்பெறும் என்று நம்புகிறேன். ஐயா, இந்த வார்த்தைகளோடு, இந்தப் பிரே ரணையை ஏற்றுக்கொள்ளுமாறு அவையைக் கேட்டுக் கொள்கிறேன்.

★ ★ ★

[3]**திரு. சாரங்கதர் தாஸ்** (ஒரிஸ்ஸா சமஸ்தானங்கள்): திரு. துணைத்தலைவர் அவர்களே, ஐயா, அனைத்து முந்திய பேச்சாளர் களைப்போலவே, வரைவுக் குழுவையும், குறிப்பாக, அதன் தலைவர் டாக்டர் அம்பேத்கரையும், அவர்களது கடினமான உழைப் புக்காகப் பாராட்டுகிறேன். அதேசமயத்தில், அவருடைய உரையில் காணப்பட்ட சில விஷயங்களை நான் ஏற்றுக்கொள்ள இயலாது....

---

1. அ.நி.வி, தொகுதி 7, நவம்பர் 6, பக். 284
2. அ.நி.வி, தொகுதி 7, நவம்பர் 6, பக். 286
3. அ.நி.வி, தொகுதி 7, நவம்பர் 6, பக். 286

[1]**திரு. ஆர்.ஆர். திவாகர்** (பம்பாய்:பொது): திரு.துணைத்தலைவர் அவர்களே, ஐயா, எனக்கு முன்னால் பேசிய மதிப்பிற்குரிய உறுப்பினர்கள், போதுமான விஷயங்களைப் பற்றிப் பேசியுள்ளனர். எனவே, அதே விஷயங்களைப் பற்றிப் பேசி சபையின் அதிக நேரத்தை எடுத்துக் கொள்வதற்கு நான் விரும்பவில்லை. நமது நாட்டுக்கு ஒரு புதிய அரசியல் சாசனத்தை நாம் வழங்கவிருக்கும் தருணத்தில், என்னுடைய கண்ணோட்டத்தில் மிகவும் முக்கியமானவை என்று நான் கருதும் சில விஷயங்களைப் பற்றி மட்டும் எடுத்துக் கூறுவதற்கு விரும்புகிறேன். ஒரு விஷயத்தை நான் மிகவும் தெளிவாகக் கூற விரும்புகிறேன்: அதாவது; நமக்கு முன்னால் உள்ள அரசியல் சாசனத்தின் முன்வரைவு மெய்யாகவே ஒரு மகத்தான சாதனையாகும்; அதற்காக நாம் அனைவரும், வரைவுக் குழுவுக்கும் இந்த அவையில் அதை முன்வைத்துள்ள குழுவின் தலைவருக்கும் ஏற்கனவே நம் பாராட்டுகளைத் தெரிவித்துக் கொண்டுள்ளோம். அதேசமயத்தில், வரைவுக் குழுவானது அரசியல் நிர்ணயசபையின் முடிவுகளைத் தயாரித்தது மட்டுமன்றி, அதற்கும் அப்பால் அது சென்றுள்ளது என்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயமாகும். அந்த முடிவுகளை அது மறுஆய்வு செய்து, சில முடிவுகளில் அது திருத்தம் செய்துள்ளது. பலவற்றை அது மாற்றியமைத்திருப்பதும் சாத்தியம் என்றும் கூறுவேன். இன்றுள்ள சூழ்நிலையில் அவ்வாறு செய்வது தவிர்க்க முடியாததாக இருக்கக் கூடும். ஆனால் அதேசமயத்தில், முன்வரைவை நாம் பரிசீலனை செய்யும்போது, நமது திருத்தங்களையும் வழங்குவதற்கு நாம் சிந்தித்துக் கொண்டிருக்கையில் இந்த உண்மையை நாம் மனதில் கொள்ள வேண்டும்...

★ ★ ★

[2]**மஹபூப் அலி பெய்க் சாஹிப் பகதூர்** (சென்னை: முஸ்லீம்): திரு. துணைத்தலைவர் அவர்களே, ஐயா, டாக்டர் அம்பேத்கரின் பகுப்பாய்வும், பரிசீலனையும் மிக மிகத் தெளிவாக இருந்தன; திறமையானவையாக இருந்தன; மிகவும் அறிவூட்டுவதாகவும் விளக்கமாகவும் இருந்தன. அவருடைய கருத்துக்களை ஒருவர் ஏற்றுக் கொள்ளாமல் இருக்கலாம். ஆனால் இந்த அவையின் பரிசீலனைக்கான பிரேரணையை அவர் அறிமுகம் செய்துவைத்து அவர் ஆற்றிய உரை தனிச் சிறப்பானதாக இருந்ததற்காக அவரைப் பாராட்டாமல் எவரும் இருக்க முடியாது.

1. அ.நி.வி, தொகுதி 7, நவம்பர் 6, பக். 291.
2. அ.நி.வி, தொகுதி 7, நவம்பர் 8, பக். 295.

[1]**திரு. இஜட்.எச். லாரி:** ...அரசியல் சாசனத்தின் விதிகளின் மதிப்பை மதிப்பீடு செய்வதற்கு, நாம் இரண்டு விஷயங்களை மனதிற் கொள்ள வேண்டும்; முதலாவதாக, தீர்மானத்தைப் பிரேரணை செய்த மாண்புமிகு உறுப்பினர், அதாவது மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் ஒத்துக் கொண்டுள்ள சில விஷயங்கள்; இரண்டாவதாக, சுதந்திரம் பெற்றதற்குப் பின்னால், கடந்த பதினைந்து மாதங்களில் ஜனநாயகத்தை செயல்படுத்தியதில் நமக்கேற்பட்ட அனுபவம். அரசியல் சாசன முன்வரைவுக்கு அடிப்படையாக உள்ள தீர்மானங் களை இந்த அவை ஏற்றுக்கொண்டபோது, நமக்கு முன்னால் அத் தகைய அனுபவம் ஏதும் இருக்கவில்லை; ஆனால் இப்பொழுது அனுபவம் பெற்றுள்ளோம். தீர்மானத்தைப் பிரேரணை செய்த மாண்புமிகு உறுப்பினர் ஒப்புக்கொண்ட முதல் விஷயம் - அவர் கூறிய சொற்களை அப்படியே நான் திரும்பக் கூறுகிறேன்: ''ஜனநாயக மானது இந்திய மண்ணில் நுனிப்புல் மேய்வது போன்றதேயாகும். அது சாராம்சத்தில் ஜனநாயகமற்றதேயாகும்''... ''நிர்வாகத்தின் வடி வங்களை பரிந்துரைப்பதற்கு சட்டப்பேரவைகளை நம்பாமலிருப் பதே விவேகமாகும்.'' அவர் பிரதானமாக சரியாகவே கூறினார் என்று மரியாதையுடன் கூறுகிறேன்.

★ ★ ★

[2]**திரு. உசேன் இமாம்:** ....வரைவுக் குழுத் தலைவரின் நிலைமை மிகவும் சங்கடமானது என்று நான் காண்கிறேன். அவர் சோவியத் அரசியல் சாசனத்தைப் பகர்ப்பு செய்யாததற்காக இடது சாரிகள் அவரைத் தாக்குகின்றனர், கிராமப் பஞ்சாயத்தை ஆரம்ப யூனிட்டாக ஏற்படுத்தாததற்காக வலதுசாரிகள் அவரைத் தாக்கு கின்றனர். இந்தியர்கள் அனுபவிக்கின்ற எல்லாத் தீமைகளுக்கும் அரசியல் சாசனம் பரிகாரம் அளிக்க வேண்டுமென்று நமது நண்பர் கள் விரும்புகிறார்களென்றால், அவர்களின் மனதில் ஓரளவு குழப்பம் இருக்கிறது என்று நான் கருதுகிறேன். உணவும் துணியும் வழங்க வேண்டுமென்பது அரசியல் சாசனத்தின் ஒரு பாகமல்ல. அதற்கு இந்த அரசியல் சாசனத்தில் ஏதும் வகை செய்யப்படவில்லை என்று இந்த அரசியல் நிர்ணய சபையின் ஒரு மிகவும் மதிப்புக்குரிய உறுப் பினர் குறைப்பட்டுக் கொண்டார். ஐயா, அரசியல் சாசனமானது எந்த

1. அ.நி.வி., தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 298.
2. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 302.

நாட்டிற்குப் பிரயோகிக்கப்படுகிறதோ அதனுடைய தேவைகளை அடிப்படையாகக் கொண்டதாகும் என்று நான் கூறிக் கொள்ள விரும்புகிறேன். இந்த அரசியல் சாசனம் நமது பிரத்தியேகமான சொந்த நிலைமைகளின் அத்தியாவசியத் தேவைகளை அது வழங்கு கிறதா என்று நாம் பார்க்க வேண்டும்...

★ ★ ★

[1]**பீகம் அய்ஜாஸ் ரசூல்** (ஐக்கிய மாகாணங்கள்: முஸ்லீம்): ஐயா, அரசியல் சாசன வரைவை மிகவும் தெளிவாகவும் விளக்க மாகவும் எடுத்துக் கூறியதற்காக, மாண்புமிகு டாக்டர் அம்பேத் கரைப் பாராட்டுகிறேன். அவரும் வரைவுக் குழுவும் மிகவும் அசாதாரணமான பணியைச் செய்துள்ளனர், அதற்காக அவர் களுக்கு நன்றி செலுத்துவதற்கு, நாம் கடமைப்பட்டுள்ளோம்.

ஐயா, அரசியல் சாசனத்தை வகுக்கும் பணியில் நானும் இணைந்திருந்ததை ஒரு பெரும் பேறாகக் கருதுகிறேன். இந்தச் சந்தர்ப்பத்தின் புனிதத் தன்மையை நான் உணர்ந்திருக்கிறேன். இரண்டு நூற்றாண்டுக் கால அடிமைத்தனத்திற்குப் பின்னால், இந்தியா அடிமைத்தன இருளில் இருந்து சுதந்திர வெளிச்சத்தினுள் பிரவேசித்துள்ளது. இன்று, வரலாற்றுச் சிறப்பான இந்தச் சந்தர்ப் பத்தில், சுதந்திர இந்தியாவிற்கான ஓர் அரசியல் சாசனத்தைத் தயாரிப் பதற்காக இங்கே நாம் கூடியிருக்கிறோம். அது நம்முடைய வருங் காலப் பாதையை உருவாக்கி, இந்தப் பரந்த துணைக் கண்டத்தில் வாழும் முப்பது கோடி மக்களின் சமூக, அரசியல் மற்றும் பொரு ளாதார அந்தஸ்தை நிர்ணயிக்கும். எனவே நாம் நம் பொறுப்புக் களைப் பூரணமாக உணர வேண்டும்; இங்கு வாழும் மக்களின் தேவைகள், கோரிக்கைகள், கலாசாரம், மற்றும் மேதைமைக்கு மிகவும் பொருத்தமான ஓர் அமைப்பை எவ்வாறு சிறந்த முறையில் உரு வாக்குவது என்ற கண்ணோட்டத்துடன் நாம் இந்தப் பணியை மேற் கொள்ள வேண்டும்....

கிராம நிர்வாகம் சம்பந்தமாக டாக்டர் அம்பேத்கர் கூறி யதைப் பற்றி நிறைய விமர்சனம் செய்யப்பட்டுள்ளது. ஐயா, அவர் கூறியதை நான் முழுமையாக ஏற்றுக் கொள்கிறேன். எந்தக் கூட் டமைப்புக்கும் எதிராக குடிமகனின் உரிமையை வலியுறுத்துவது தான் நவீனப்போக்கு ஆகும், கிராமப் பஞ்சாயத்துக்கள் மிகவும் சர்வாதிகாரமாக நடந்துகொள்ள முடியும்.

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, நவம்பர் 8, 1948, பக். 305.

ஐயா, பாலினம் காரணமாக எந்தப் பாகுபாடும் செய்யப்பட மாட்டாது என்ற வாக்குறுதி குறித்து, ஒரு பெண் என்ற முறையில் நான் மிகவும் திருப்தி அடைகிறேன். அரசியல் சாசன முன்வரைவில் அத்தகைய ஒரு விதி சேர்க்கப்பட்டிருப்பது மிகவும் பொருத்தமான தாகும். புதிய நீதிமன்றத்தின்கீழ் சமத்துவ வாய்ப்பைப் பெண்கள் நிச்சயமாக எதிர்பார்க்கலாம்.

★ ★ ★

[1]**டாக்டர் மன்மோகன் தாஸ்** (மேற்கு வங்காளம்: பொது): திரு. துணைத் தலைவர் அவர்களே, நமது திறமையான சட்ட அமைச்சரும், முன்வரைவுக் குழுவின் தலைவருமாகிய டாக்டர் அம்பேத்கர் இந்த அவையில் அரசியல் சட்ட முன்வரைவை அறிமுகம் செய்து வைத்து சில நாட்கள் ஆகிவிட்டன. இந்த சில நாட்களின்போது, இந்த அவையின் பல்வேறு உறுப்பினர்கள், அரசியல் சாசன முன் வரைவைக் கடுமையாக விமர்சனம் செய்துள்ளனர். ஒரு சில உறுப் பினர்கள் மட்டுமே, அரசியல் சாசன முன்வரைவை நிறைவேற்று வதற்கு இந்த அவைக்குள்ள தகுதியையும், அதிகாரத்தையும் குறித்து ஐயப்பாடு எழுப்பியுள்ளனர். பிற உறுப்பினர்கள் அனைவரும் ஒரு மனதாகத் தமது ஆதரவை அளித்துள்ளனர். அவர்கள் சில ஷரத்து களிலும் விதிகளிலும் சில மாற்றங்கள், சேர்ப்புகள் மற்றும் சிலவற் றைக் கைவிடுவது ஆகியவற்றுடன் அரசியல் சாசன முன்வரைவை, செயல்படுத்தத்தக்க ஒன்றுதான் என்று ஏற்றுக்கொண்டனர். இந்த அரசியல் சாசனத்தில் மிகவும் மனத் திருப்தி அளிக்கக்கூடிய ஓர் அம்சம் ஒரே குடிஉரிமை ஏற்றுக் கொள்ளப்பட்டிருப்பதாகும். வரைவுக் குழுவின் தலைவர் கூறியது போன்று அமெரிக்க அரசியல் சாசனம் போல் அன்றி, நமது அரசியல் சாசன முன்வரைவு ஒரே குடியுரிமையை - இந்தியக் குடியுரிமையை வழங்கியிருக்கிறது. மாகாணவாதம் தலைதூக்கியிருக்கும் இந்த நாட்களில், ஒவ்வொரு மாகாணமும், தனது அண்டை மாகாணங்களின் தோள்களில் ஏறி முன்னேற விரும்பும்போது, அண்டை மாகாணங்களின் ஆதரவை யும், நல்லிணக்கத்தையும் நாம் இழந்துவிட்டுள்ள நிலையில், இது உண்மையில் மிகவும் மனத்திருப்தி அளிக்கும் அம்சமாகும். நான், மேற்கு வங்கத்திலிருந்து வந்துள்ள ஓர் உறுப்பினன் என்ற வகை யில், இனிமேல் இந்த அரசியல் சாசனம் நிறைவேற்றப்பட்டவுடன்,

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 307.

இந்தியா முழுமையிலும் சம உரிமைகளுடனும் சலுகைகளுடனும் கூடிய ஒரே குடியுரிமை விதி நிறைவேற்றப்பட்டவுடன் அண்டை மாநிலங் களின் கதவு நமக்குத் திறக்கப்பட்டுவிடும், அப்பொழுது கிழக்குப் பாகிஸ்தானிலுள்ள துரதிருஷ்டமான நமது சகோதரர்கள் நமது அண்டை மாநிலங்களில் பிரவேசிப்பதற்கு வசதி ஏற்படும் என்பது குறித்து மிகவும் பரவசமடைகிறேன்....

★ ★ ★

[1]**திரு. வி.ஐ. முனுசாமி பிள்ளை** (சென்னை: பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, இந்த அவையின் அங்கீகாரத்திற்காக அரசியல் சாசன முன் வரைவை சமர்ப்பித்துள்ள வரைவுக் குழுவின் முயற்சிகளையும், அது ஆற்றியுள்ள சேவையையும் இந்தப் பெருமை வாய்ந்த அவையில் உள்ளவர்களோ அல்லது வெளியில் உள்ளவர்களோ யாரும் குறைத்து மதிப்பிட முடியாது. இன்று உலகத் திலுள்ள பல்வேறு அரசியல் சாசனங்களை இந்த வரைவுக்குழு தன் வயப்படுத்தி, இந்த மாபெரும் துணைக் கண்டத்தை முன்னேற்று வதற்குத் தேவையான விதிகளைக் கெல்லி யெடுத்துக் கொள்ள முடிந்துள்ளதற்காக வருங்காலத் தலைமுறையினர் மிகவும் பெரு மிதம் கொள்வார்கள்...

இந்த சிறு கருத்துரையுடன், அரசியல் சாசன முன்வரைவை இந்த அவையில் சமர்ப்பித்துள்ளதன் மூலம் மகத்தான சேவை புரிந் துள்ள வரைவுக் குழுவின் தலைவரையும் அதனுடைய உறுப்பினர் களையும் பாராட்டி இந்தப் பிரேரணையை ஏற்கும்படி சபைக்குப் பரிந்துரை செய்கிறேன்.

[2]**திருமதி தாட்சாயணி வேலாயுதன்** (சென்னை: பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே, இப்பொழுது இந்திய அரசியல் சாசன முன்வரைவு, பொது விவாதத்திற்காக நமக்கு முன்னால் இருக் கிறது. அதன்மீது என்னுடைய கருத்துக்களைக் கூறுவதற்கு அனு மதிக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன். திறமையான மற்றும் தெளிந்த சிந்தனையுடைய வரைவுக் குழுவின் தலைவர், புதிய இந்திய நாட்டின் பொதுவான கட்டமைப்பு வீச்சுக்குள் தமது கடமையை

1. *அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 308.*
2. *அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 310.*

மிகச் சிறப்பாகச் செய்துள்ளார். அவர் விரும்பியிருந்தால் கூட, அதிகார மாற்றம் நடைபெற்ற பொதுவான கோட்பாடுகளுக்கு அப்பால் அவரால் சென்றிருக்க முடியாது; எனவே அவருக்கு எதிராகக் கூறப்படும் எந்த விமர்சனமும் முற்றிலும் நியாயமற்றதும் தகுதி யற்றதுமாகும் என்று கருதுகிறேன். ஏதாவது குறை இருக்கிறதென் றால் - அவ்வாறு இருக்கிறதென்று நான் நினைக்கிறேன் - அதற்கு இங்குள்ளவர்களும், அரசியல் சாசனத்தை வகுப்பதற்காக அனுப்பப் பட்டவர்களும்தான் பொறுப்பாவர். அவர்களுக்குத் தான் இந்த நாட்டின் கோடிக்கணக்கான வாயில்லாப் பூச்சிகளான மக்களால் பொறுப்புக்கள் வழங்கப்பட்டுள்ளன; அவர்கள் நம்மை இந்தப் பேரவைக்கு அனுப்பியபோது சுதந்திரத்திற்காகப் பெரும் துன்ப துயரங்களை அனுபவித்த அவர்கள் நம் மீது பெரும் நம்பிக்கை வைத்திருந்தனர். ஆனால், இதனால், முன்வரைவைப் பற்றி எனக்கு விமர்சனம் ஒன்றும் இல்லை என்று பொருளல்ல..

[1]திரு. தேசபந்து குப்தா (டில்லி): திரு. தலைவர் அவர்களே, இந்த அவையின் பல்வேறு உறுப்பினர்களிடமிருந்து பாராட்டுக் களைப் பெற்ற வரைவுக் குழுவின் தலைவர் டாக்டர் அம்பேத் கரை நான் பாராட்ட முடியாததற்காக வருந்துகிறேன்...

.... நான் கூற விரும்புவது இதுதான்: டில்லியையும் பிற இடங்களையும் பொறுத்தமட்டிலும் டில்லி தலைநகரம் என்ற வகையில், அதற்கு ஒரு சிறப்பு அந்தஸ்து கொடுக்கப்பட வேண்டும் என்பதை நாம் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும் என்று வலி யுறுத்த விரும்புகிறேன். இந்தப் பிரச்சினையில் லாலா தேசபந்து குப்தா கூறியுள்ளதை நான் ஒத்துக் கொள்கிறேன். ஆனால் ஆஜ்மீர்-மீர்வாரா, குடகு, பந்திபிப்ளோடா முதலியன அண்டை மாகா ணங்களுடன் இணைக்கப்பட வேண்டும். அவற்றை மத்திய அரசி னால் நிர்வகிக்கப்படும் பிரதேசங்களாக மாற்றுவதில் பயனில்லை. இதனை டாக்டர் சாகிபின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்பு கிறேன். அவர் ஒரு பெரிய அறிஞர், எனவே அவர் இந்த நாட்டை யும் விவேகம் நிறைந்த ஒரு நாடாகக் கருத வேண்டும். இந்த அரசியல் சாசனத்தில் இந்தியாவின் ஆன்மாவுக்கும் அவர் ஓரிடமளிக்க வேண்டும் என்று அவருக்கு வேண்டுகோள் விடுக்கிறேன்....

★ ★ ★

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 312 -317.

[1]**கியானி குர்முக் சிங் முஸாபிர் (கிழக்கு பஞ்சாப்: சீக்கியர்):** திரு. தலைவர் அவர்களே, என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் திரு. தேசபந்து குப்தாவைப் போன்று, வரைவுக்குழுவின் தலைவர் டாக்டர் அம்பேத்கர், எத்தகைய பாராட்டுக்கும் உரியவர் அல்ல என்று நான் கூற முடியாது. பல விஷயங்கள் சம்பந்தமாக பல காரணங்களுக்காக அவர் பாராட்டுக்குரியவராகிறார். இந்த முதலாவது அரசியல் சாசனத்தை உருவாக்குவதில் குழுவின் பணி நிச்சயமாகப் பாராட்டப் பட வேண்டியதேயாகும். அப்படியிருந்த போதிலும், யாராவது எந்தத் தவறையாவது கண்டுபிடித்தால், அவர், தாம் புரிந்து கொண்டுள்ள அளவிற்கேற்ப அதனை எடுத்துக் கூறுகிறார்...

[2]**மாண்புமிகு ரெவரண்ட் ஜே.ஜே.எம். நிகோல்ஸ் ராய் (அஸ்ஸாம்: பொது):** திரு. துணைத் தலைவர் அவர்களே, ஐயா, இந்த அரசியல் சாசன முன்வரைவை உருவாக்குவதற்கு டாக்டர் அம்பேத்கரும், வரைவுக் குழுவின் பிற உறுப்பினர்களும் மேற்கொண்ட உன்னதமான பணிக்காக அவர்களைப் பாராட்டுவதில் என்னையும் இணைத்துக் கொள்வதற்கு உண்மையில் நான் பெரும்பேறு பெற்றவனாகிறேன். நம்முடைய சிறந்த பாராட்டுக்களுக்கு அவர்கள் உரியவர்களாகிறார்கள்...

[3]அஸ்ஸாமின் மலை மாவட்டங்களில் சுயாட்சியுடன் கூடிய மாவட்டக் கவுன்சில்களை உருவாக்குவதற்கான முன்வரைவை ஏற்றுக் கொண்டதற்காக, வரைவுக் குழுவை குறிப்பாகப் பாராட்டுகிறேன், நன்றி தெரிவிக்கிறேன். ஆறாவது அட்டவணையில் அவை சுயாட்சி மாவட்டங்கள் என்று குறிப்பிடப்பட்டுள்ளன.

★ ★ ★

[4]**திரு. முகம்மது இஸ்மாயில் சாகிபு (சென்னை: முஸ்லீம்):** திரு. துணைத் தலைவர் அவர்களே... அரசியல் சாசன முன்வரைவைப் பரிசீலனை செய்யுமாறு அவையின் முன் சமர்ப்பித்து மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர், உண்மையில் ஒரு மகத்தான சொற்பொழிவு ஆற்றியிருக்கிறார். கருத்துத் தெளிவிலும், எவரையும் ஈர்த்து ஏற்றுக்

---

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 324.
2. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 327.
3. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 327.
4. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 330.

கொள்ளச் செய்வதிலும், கேட்போரிடையே பெரும் தாக்கம் ஏற்படுத்துவதிலும் தருக்கத் திறமையிலும் இந்த உரையை எதுவும் விஞ்ச முடியாது என்று நினைக்கிறேன். அவரை முழு நிறைவாகப் பாராட்டுகிறேன். ஆனால் இதனால், இந்த உரையில் அவரால் கூறப்பட்ட யாவற்றையும் நான் ஏற்றுக் கொள்கிறேன் என்று பொருளல்ல...

★ ★ ★

[1]**திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர்** (சென்னை: பொது) ஐயா, அரசியல் சாசன முன்வரைவைப் பற்றி ஒரு சில கருத்துக்களைக் கூறுவதற்கு முன்னால், அரசியல் சாசன முன்வரைவின் கோட்பாடுகளைத் தெளிவாகவும், திறமையாகவும் விளக்கியதற்காக, டாக்டர் அம்பேத்கருக்கு அளிக்கப்பட்ட பாராட்டுக்களில் நானும் இணைந்து கொள்கிறேன். ஆனால் அதேசமயத்தில் என்னுடைய மதிப்புக்குரிய நண்பர், இந்தியாவிலுள்ள கிராம சமுதாயங்களை பொதுவாகக் கண்டனம் செய்ததை என்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. அதே போன்று, இந்தியாவில் ஜனநாயகம் என்பது இந்திய மண்ணில் நுனிப் புல் மேய்வதுபோல் இருக்கிறது என்று அவர் கூறியதற்கும் என்னுடைய கடுமையான எதிர்ப்பைத் தெரிவித்துக் கொள்கிறேன். அரசியல் சாசன முன்வரைவைப் பற்றி என்னுடைய கருத்துக்களை கூறத் தொடங்குவதற்கு முன்னர், வரைவுக் குழுவின் பணி பற்றியும் அதன் உறுப்பினர்களின் பங்கு பற்றியும் என்னுடைய மதிப்புக்குரிய நண்பர் திரு. டி.டி. கிருஷ்ணமாச்சாரி கூறிய சில கருத்துக்கள் சம்பந்தமாக, என்னுடைய நிலையை இந்த அவையின் முன்னே விளக்கிக் கூறுவதற்குக் கடமைப்பட்டுள்ளேன். குழுவின் ஓர் உறுப்பினர் என்ற முறையில் என்னுடைய உடல் நலம் சரியாக இல்லாமலிருந்த போதிலும், அரசியல் சாசன முன்வரைவு வெளியிடப்படுவதற்கு முன்னதாக நடைபெற்ற அதனுடைய பல கூட்டங்களில் நான் ஓரளவு செயலூக்கமாகப் பங்கெடுத்துக் கொண்டேன். அதனுடைய கூட்டங்களில் கலந்து கொள்ள முடியாத நிலைமை இருந்தபோதும், நான் என்னுடைய குறிப்புகளையும் ஆலோசனைகளையும் என்னுடைய சகாக்களின் பரிசீலனைக்காக அனுப்பியிருக்கிறேன். முன்வரைவு வெளியிடப்பட்டதற்குப் பின்னர், உடல்நிலைக் காரணங்களினால், அதனுடைய விவாதங்கள் எதிலும் என்னால் கலந்து கொள்ள இயலவில்லை. முன்வரைவைத் திருத்துவது சம்பந்த

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 334.

மான ஆலோசனைகளை முன்வைத்ததாக எந்த உரிமையும் நான் கொண்டாட முடியாது....

[1]... அரசியல் சாசன முன்வரைவை சுருக்கமாக ஆய்வு செய்து பார்த்தால், அது ஜனநாயக அரசின் ஆரோக்கியமான கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டுள்ளது என்பதை உறுப்பினர்கள் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும்; மேலும் வளர்ச்சிக்கும் முன்னேற்றத்துக்கும் தேவையான கூறுகள் அதனுள்ளேயே அடங்கியிருக்கின்றன; தவிரவும், அது உலகின் மிகவும் முன்னேற்றமான ஜனநாயக அரசியல் சாசனத்திற்கு இசைவானதாக அமைந்துள்ளது. சொல்லப்போனால் ஓர் அரசியல் சாசனமானது அதை நாம் எவ்வாறு பயன்படுத்துகிறோம் என்பதைப் பொறுத்ததேயாகும் என்பது நன்கு நினைவில் கொள்ளத்தக்கது. இதற்கான சிறந்த உதாரணத்தை அமெரிக்க அரசியல் சாசனத்தில் காணலாம். அமெரிக்காவின் பல்வேறு மாகாணங்கள் அதை இறுதியாக ஏற்றுக்கொண்ட போது, அவை எவ்வித உற்சாகமும் காட்டவில்லை. ஆனால் அது காலத்தின் சோதனையைச் சமாளித்து நின்றுள்ளது; அது ஒரு முன்மாதிரி அரசியல் சாசனம் என்று ஜனநாயக உலகின் பிற பகுதிகளால் கருதப்படுகிறது.

★ ★ ★

[2]**பண்டிட் கோவிந்த மாளவியா:** ஐயா, நான் வேறு எதையும் கூறுவதற்கு முன்னதாக, நமக்கும், வரைவுக் குழுவுக்கும், அதனுடைய பல்திறத் தலைவரும், நமது நண்பருமான டாக்டர் அம்பேத்கருக்கும் இந்த அரசியல் சாசன முன்வரைவை நமக்கு அளித்ததில் அவர்கள் ஆற்றியுள்ள மிகச் சிறந்த பணிக்காக என்னுடைய உளமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். அவர்கள் மிகவும் சிக்கலான பிரச்சினையை எதிர்கொள்ள வேண்டியிருந்தது. இதனை அவர்கள் மிகவும் உன்னதமான முறையில் சமாளித்துள்ளனர். அரசியல் சாசன முன்வரைவில் பல விஷயங்கள் சிறிது மாறுபட்ட முறையில் இருந்திருக்கலாம் என்று ஒருவர் விரும்பக்கூடும், ஆனால் அவ்வாறு பார்த்தால் வேறு எந்த நாட்டில் உருவாக்கப்படும் எந்த அரசியல் சாசனம் குறித்தும் அவ்வாறு கூறப்பட முடியும்...

★ ★ ★

*1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 338.*
*2. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 340.*

[1]**திரு. ஆர். சங்கர் (திருவிதாங்கூர்):** ஐயா, ஆரம்பத்தி லேயே, அரசியல் சாசன முன்வரைவை உருவாக்கியவர்கள் தமது கடமையை மிகவும் திறமையான முறையில் நிறைவேற்றியுள்ள தற்காக, அவர்களைப் பாராட்டுகிறேன். குறிப்பாக, தம்முடைய ஒளி வீசும் உரையின் மூலம், நமக்கு வழங்கியுள்ள அரசியல் சாசன முன் வரைவின் கோட்பாடுகளை மிகவும் தெளிவாகவும், திறமையாக வும் விளக்கியதற்காக டாக்டர் அம்பேத்கரைப் பாராட்டியாக வேண்டும். அரசியல் சாசன முன்வரைவின் விவரங்களுக்குள் நான் போகப் போவதில்லை; அதனுடைய இரண்டொரு அம்சங்களைப் பற்றி மட்டும் எடுத்துக் கூறுவதுடன் முடித்துக் கொள்கிறேன். அரசியல் சாசன முன்வரைவின் மிகவும் முக்கியமான அம்சங்கள் ஒரு மிகவும் வலுவான மத்திய அரசும், ஓரளவு பலவீனமான, ஆனால் ஒருங்கிசைவான மாகாணங்களும்தான் என்று நான் நினைக் கிறேன். டாக்டர் அம்பேத்கர் சுதேச சமஸ்தானங்களின் பிரதிநிதி களுக்கு ஓர் உருக்கமான வேண்டுகோள் விடுத்துள்ளார். எல்லா சமஸ்தானங்களும் மாகாணங்களும் ஒரே பாதையைப் பின்பற்றும் படி அவர் கேட்டுக் கொண்டுள்ளார்; காலப்போக்கில், சமஸ்தானங் களுக்கும் மாகாணங்களுக்கும் இடையில் எத்தகைய வேறுபாடும் இல்லாதவாறு சமஷ்டியின் ஒருங்கிசைவான அங்கங்களாக அவற்றை நிறுவும்படியும் அவர் கேட்டுக் கொண்டுள்ளார்...

★ ★ ★

[2]**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்** (சென்னை: பொது): ஐயா; வரைவுக் குழுவினரால் முன்வைக்கப்பட்டுள்ள அரசியல் சாசன முன்வரைவுக்கு அடிப்படையில் முக்கியத்துவமுள்ள ஆட் சேபனைகள் எழுப்பப்பட்டுள்ளன. நமது பண்டையக் கலாசாரத் தையோ அல்லது பாரம்பரியங்களையோ பிரதிபலிக்கின்ற சிறப் பானவை எதுவும் இந்த அரசியல் சாசனத்தில் இல்லை என்பதை நான் ஒத்துக் கொள்கிறேன். இது மேலைய நாடுகளின் பழைய அரசியல் சாசனங்களின் ஒரு ஒட்டுப் பிளாஸ்திரி என்பது மெய்யே - மேலைய நாடுகளின் சில நவீன அரசியல் சாசனங்களின் அம்சங்கள் கூட இதில் இல்லைதான். 1935ம் வருட இந்திய அரசாங்கச் சட்டத் தின் ஒரு மறு பதிப்பாக இது இருக்கிறது. இவையாவும் ஒன்று

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 9, 1948, பக். 345.
2. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 9, 1948, பக். 352.

சேர்க்கப்பட்டு, ஒரு முழுமையாக்கப்பட்டிருக்கிறது. டாக்டர் அம்பேத்கர் இதற்குப் பொறுப்பாளி அல்ல. அரசியல் சாசனத்தின் இந்த குணாம்சத்திற்கு நாம் மட்டுமே பொறுப்பாளியாவோம். நம்முடைய பண்டையக் கலாசாரத்தை மீண்டும் நம் நினைவுக்குக் கொண்டு வரும் வகையில் ஒரு புதிய குணாம்சத்தை இதன் மீது பதியச் செய்ய வேண்டும் என்று நாம் நினைக்கவில்லை. இது பெரு மளவுக்கு நம்முடைய தவறேயன்றி, டாக்டர் அம்பேத்கரின் தவறு அல்ல.

★ ★ ★

[1]**திரு. ரோகிணி குமார் சௌதுரி** (அஸ்ஸாம்: பொது): ஐயா, மகத்தான முக்கியத்துவம் வாய்ந்த இந்த விவாதத்தில் பங்கெடுத்துக் கொள்ளும் வாய்ப்பு அளித்தமைக்காக உங்களுக்கு ஆழ்ந்த நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால் நான் பேசத் தொடங்குவதற்கு முன்னால், வரைவுக் குழுவின் உறுப்பினர்களுக்கும், அதனுடைய தகுதிமிக்க தலைவருக்கும், யாவருக்கும் மேலாக நம்முடைய அரசியல் சட்ட ஆலோசகருக்கும் என்னுடைய பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். தம்முடைய இளம் வயதில் எங்களுடைய ஏழை மாகாணமான அஸ்ஸாமுக்கு அவர் ஆற்றிய சேவைகள் இன்னும் அன்புடனும் நன்றியுடனும் நினைவுகூரப்படு கின்றன...

★ ★ ★

[2]**திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி** (சென்னை: பொது): திரு. துணைத்தலைவர் அவர்களே... அரசியல் சட்ட முன்வரைவை மதி நுட்பத்துடனும் உன்னதமான முறையிலும் விளக்கம் செய்தமைக்காக டாக்டர் அம்பேத்கர் இந்த அவையின் பாராட்டுக்களைப் பெறுவ தற்குத் தகுதி பெற்றவராகிறார். முன்வரைவிலுள்ள விதிகளுக்காக அவர் பாராட்டுக்குரியவர் அல்ல. ஏனெனில் இதற்குக் காரணம் இந்த விதிகள் அவர் உருவாக்கியவை அல்ல. அரசியல் சாசன முன்வரைவிலுள்ள பெரும்பாலான விதிகள் இந்த சபையில் விவா திக்கப்பட்டு, வாதப் பிரதிவாதம் செய்யப்பட்டு, முடிவு செய்யப் பட்டவையாகும். மிகச் சில விஷயங்கள் மட்டுமே வரைவுக் குழு

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 354.
2. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 365.

வினரால் சேர்த்துக் கொள்ளப்படுவதற்கு விட்டுவைக்கப்பட்டிருந் தன. ஆயினும், அவற்றை ஒழுங்கமைத்துத் தருவதற்கு அவர் மேற் கொண்ட முயற்சிகளுக்காக இந்த அவை அவருக்கு நன்றி தெரி வித்துக் கொள்கிறது...

★ ★ ★

[1]**திரு. விஸ்வாம்பர் தயாள் திரிபாதி** (ஐக்கிய மாகாணங்கள்: பொது): ஐயா... நேரடியாக நான் விஷயத்திற்கு வருகிறேன். வரைவுக் குழுவின் உறுப்பினர்களையும், அதன் தலைவரையும் அவர்கள் ஆற்றியுள்ள பணிக்காகவும், மற்றும் அரசியல் சாசனத்தின் சிறப்புக் களுக்காகவும் அனேகமாக எல்லாப் பேச்சாளர்களும், சம்பிரதாய மாக, அவர்களைப் பாராட்டினார்கள். நான் அந்த சம்பிரதாயத்தைக் கடைப்பிடிக்கப் போவதில்லை. அவர்கள் பெருமளவு பாடுபட்டிருக் கிறார்கள். அதன் பயனாக, இந்த அரசியல் நிர்ணய சபையில் நாம் வகுத்தளித்த கோட்பாடுகளின் அடிப்படையில் ஓர் அரசியல் சாச னத்தின் முழு வடிவத்தை நம் முன் வைத்துள்ளார்கள் என்பதில் ஐயமில்லை. அரசியல் சாசன முன்வரைவில் பெருமளவு சிறப்புக் கள் உள்ளன என்பதை நானும் அறிந்துள்ளேன். அவர்கள் பல்வேறு நாடுகளது அரசியல் சாசனங்களைத் துப்புறவாக ஆய்வு செய்துள் ளார்கள் என்பதில் சந்தேகமில்லை. அதன் பயனாக, அவற்றிலிருந்து ஒரு தேர்வைச் செய்வதற்கும், அந்த அரசியல் சாசனங்களை இந்த நாட்டின் தேவைகளுக்கு ஏற்ப அமைத்துக் கொள்வதற்கும் முயன் றிருக்கிறார்கள். அரசியல் சாசன முன்வரைவின் பிரதானத் தகுதி இது தான். ஒரே சொல்லில் கூற வேண்டுமெனில், இது ஒரு 'மரபு ரீதி யான' அரசியல் சாசனம்...

★ ★ ★

[2]**திரு. எஸ்.வி. கிருஷ்ணமூர்த்தி ராவ்** (மைசூர்): திரு. துணைத் தலைவர் அவர்களே, அரசியல் சாசன முன்வரைவு குறித்துப் பேசுவதற்கு எனக்கு ஒரு வாய்ப்புக் கொடுத்தமைக்காக உங்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். வரைவுக்குழுவுக்கும், அதன் தலைவர் டாக்டர் அம்பேத்கருக்கும் ஒருங்கிணைந்த முறையில் பாராட்டுத் தெரிவித்த பல்வேறு பேச்சாளர்களுடன் நானும் இணைந்து

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 369.
2. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 8, 1948, பக். 382.

கொள்கிறேன். உலகிலுள்ள பல்வேறு ஜனநாயக பூர்வமான அரசியல் சாசனங்களின் - ஒற்றைத் தலைமையின் கீழான மற்றும் சமஷ்டித் தன்மை கொண்டவற்றின் - சிறந்த அனுபவங்களை இதில் இணைப் பதற்கான முயற்சி செய்யப்பட்டுள்ளது. எந்த ஓர் அரசியல் சாசனமும் முழுச் செம்மையாக இருக்க முடியாது என்பது மெய்யே. நம் முடைய அரசியல் சாசனமும் கூட, இந்த அவையிலிருந்து அது முழுமையாக நிறைவு பெறுவதற்கு முன்னால், சில மாற்றங்களுக்கு உள்ளாகவே நேரும்...'

★ ★ ★

[1]திரு. என். மாதவ ராவ் (ஒரிஸ்ஸா சமஸ்தானங்கள்): திரு. துணைத்தலைவர் அவர்களே, இந்த விவாதத்தில் பங்கு கொள் வதற்கு நான் எண்ணியிருக்கவில்லை. ஆனால் இந்த விவாதத்தின் போக்கில், அரசியல் சாசன முன்வரைவின் விதிகள் மீது மட்டு மன்றி, வரைவுக்குழு தன் பணியை மேற்கொண்ட விதம் பற்றியும் பல விமர்சனங்கள் செய்யப்பட்டுள்ளன. குழுவின் செயல்பாடு மற்றும் அது செய்யத் தவறியவை என்பதாகக் கூறப்பட்டு விமர்சனம் செய்யப்பட்டது. குழுவின் சார்பில் நேற்று பேசிய திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரும், சிறிது நேரம் கழித்துப் பேசவிருக்கும் திரு. சாதுல்லாவும் இந்த விமர்சனத்துக்கு அடிப்படையாக உள்ள தவறான கருத்துக்களைப் போக்கி தெளிவுபடுத்தியுள்ளனர் அல்லது தெளிவு படுத்துவார்கள். நான் குழுவில் சேர்ந்ததற்குப் பின்னர் அதனுடைய பல கூட்டங்களில் பங்கெடுத்துக் கொண்டு, குழுவின் ஓர் உறுப் பினன் என்ற முறையில், இந்த அவையின் எந்தப் பகுதி உறுப்பினர் களிடையிலாவது இந்தத் தவறான ஐயப்பாடுகள் (அச்சங்கள்) இருந்தால், அவற்றைப் போக்குவதில் நானும் என்னுடைய பங்கை ஆற்ற வேண்டுமென்று உணர்ந்தேன்.

வரைவுக் குழு எல்லா விஷயங்களையும் கணக்கிலெடுத்துக் கொள்ளவில்லை என்பது மெய்யே; அல்லது, நாம் தனிப்பட்ட முறை யில் ஒவ்வொருவரும் விரும்பும் வகையில் அதில் பல விஷயங்கள் இல்லாமலிருக்கலாம். உதாரணமாக, அரசியல் சாசனத்தின்படி பசு வதை தடை செய்யப்படவில்லை என்றும், அடிப்படை உரிமைகள் மிகப் பெருமளவில் நிபந்தனைக்குட்படுத்தப் பட்டுள்ளன என்றும், தேசப்பிதாவைப் பற்றியும், தேசியக் கொடி, தேசிய கீதம் பற்றியும் அதில் ஒரு குறிப்பும் இல்லை என்றும் மதிப்புக்குரிய உறுப்பினர்கள்

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, நவம்பர் 9, 1948, பக். 369.

சுட்டிக்காட்டியுள்ளனர். அரசியல் சாசன முன்வரைவில் கடவுளைப் பற்றியும்கூட குறிப்பிடப்படவில்லை என நமது மதிப்புக்குரிய இரு நண்பர்கள் சரியாகவே எடுத்துக் காட்டியுள்ளனர். நமக்கு விருப்ப மான பல கருத்துக்களை நாம் கூறியுள்ளோம். ஆனால் பிற சந்தர்ப் பங்களில் அவை உள்ளார்ந்த முறையில் எவ்வளவு தகுதியானவை யாகவும் அல்லது மதிப்புமிக்கவையாகவும் இருந்தபோதிலும், அவை, அரசியல் சட்டத்தின் நோக்கத்திற்கு சம்பந்தப்பட்டவை யாகவும், அரசியல் நிர்ணய சபையினால் ஏற்றுக்கொள்ளப்படக் கூடியவையாகவும் இருந்தாலொழிய அவற்றை அரசியல் சாசனத் தில் இணைத்துக் கொள்ள முடியாது.

காந்தியத் தத்துவத்தின் முத்திரை அரசியல் சாசனத்தில் இல்லையென்றும், 1935ம் வருட இந்திய அரசு சட்டம் உள்ளிட்ட அன்னிய ஆதாரங்களிலிருந்து அதனுடைய சில விதிகள் கடன் வாங்கப் பட்டுள்ள அதேபொழுதில் பண்டைய இந்திய அரசியலின் எந்தக் கூறுகளும் அதனுடைய கட்டுமானத்தில் சேர்க்கப்படவில்லை என்றும் பல பேச்சாளர்கள் முன்வரைவை விமர்சனம் செய்துள் ளனர். காந்தியக் கருத்துக்களைக் கொண்டுள்ள நமது நண்பர்கள் அந்தக் கருத்துக்களை தர்க்கரீதியான இறுதி முடிவு வரை கடைப் பிடிப்பதற்கு அவர்கள் தயாராக உள்ளனரா? உதாரணமாக, ஆயுதப் படைகளுக்கு விடை கொடுப்பது, சட்டமன்ற அமைப்புகளை ரத்து செய்வது ஆகிய வற்றுக்கு அவர்கள் தயாரா? சட்டமன்ற அமைப்பு களின் பணி கால விரயமேயாகும் என்று காந்திஜி கருதினார் என்று பொறுப்புள்ள ஒருவரால் நமக்குக் கூறப்பட்டது. நமது நீதித்துறை முறையை ரத்து செய்துவிட்டு, நீதி வழங்குவதற்கான சாதாரண, சம்பிரதாயமற்ற வழிமுறைகளைக் கடைப்பிடிப்பதற்கு அவர்கள் தயாரா? எந்த அரசு ஊழியரோ அல்லது பொதுநல ஊழியரோ மாதம் ரூ. 500க்கு மேல், அல்லது இறுதியாக நிர்ணயிக்கப்படும் தொகைக்கு மேல் வாங்கக் கூடாது என்று வற்புறுத்துவதற்கு அவர்கள் தயாரா? இவை யெல்லாம் நடைமுறைப்படுத்தப்பட வேண்டும், நடைமுறைப்படுத்த முடியும் என்று மனப்பூர்வமாக நம்பும் சில காங்கிரஸ் தலைவர்கள் இருக்கிறார்கள் என்பதை நானறிவேன். ஆனால், அரசியல் நிர்ணய சபையினால், கடந்த தடவை முடிவு செய்யப்பட்டுவிட்ட அரசியல் சாசனத்தைப் பற்றி இப்பொழுது நாம் பேசிக்கொண்டிருக்கிறோம்....

★ ★ ★

[1]**சையது முகம்மது சாதுல்லா** (அஸ்ஸாம்: முஸ்லீம்): திரு. துணைத்தலைவர் அவர்களே, ...வரைவுக்குழு தானாக உருவாகி இருந்து வருவதல்ல. என்னுடைய ஞாபகம் சரியானதெனில், 1947 ஆகஸ்டில் இந்த அவையின் ஒரு தீர்மானத்தின் மூலம் அது உரு வாக்கப்பட்டது. நான் அப்பொழுது கடுமையாக நோய்வாய்ப் பட்டிருந்தேன். அந்த அமர்வில் நான் கலந்து கொள்ள முடிய வில்லை. ஆனால், குறிக்கோள் தீர்மானத்தின் வரையறைக்கு உட் பட்டு, அரசியல் சாசனத்தை வகுக்குமாறு வரைவுக்குழு கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறது என்று, நடவடிக்கைக் குறிப்பிலிருந்து நான் காண்கிறேன். எனவே, அதற்கு அப்பால் சென்றால் இப் பொழுது நாம் கேட்டது போன்று, நாம் குறை கூறப்படுவோம். அந்த நாட்களிலும் கூட, விவேகிகள், இதை எதிர்பார்த்துள்ளனர். மற்றும் அதிகாரபூர்வமான தீர்மானத்திற்கு கூர்மதி படைத்த பம்பாய் பிரதமர் திரு. கெர் ஒரு திருத்தமே பிரேரேபித்துள்ளார். அதில் நமக்கு இந்த வழிகாட்டல் அடங்கியுள்ளது. அவருடைய உரையிலிருந்து நான் படிக்கிறேன். இந்த வரைவுக்குழு அமைப்பதற்கான அசல் தீர்மானத் திற்கு அவர் ஒரு திருத்தத்தைப் பிரேரணை செய்தார்... அதில் அவர் கூறியிருப்பதாவது: ''அரசியல் சாசன ஆலோசகரால் தயாரிக்கப் பட்ட இந்திய அரசியல் சாசனத்தின் வாசகத்தின் முன்வரைவை ஆய்வு செய்து சரிபார்க்கும் பொறுப்பு வரைவுக் குழுவுக்குக் கொடுக்கப் பட வேண்டும்; ஏற்கனவே அரசியல் நிர்ணய சபையில் எடுக்கப் பட்ட முடிவுகளை - துணை விஷயங்களாக உள்ள எல்லா விஷ யங்களையும் - அல்லது இத்தகைய ஓர் அரசியல் சாசனத்தில் இருக்க வேண்டியவற்றை நடைமுறைக்குக் கொண்டு வந்து, குழு வால் மறு ஆய்வு செய்யப்பட்ட வகையில் அரசியல் சாசன முன் வரைவின் வாசகத்தை பேரவையின் பரிசீலனைக்காக சமர்ப்பிக்க வேண்டும்''...

... அவையினால் ஏற்கப்பட்ட திருத்தம் அதுதான். ஐயா, அவையினால் ஏற்கப்பட்ட, மதிப்புக்குரிய திரு. கெர்ரின் இந்தத் திருத்தத்திற்குப் பின்னர், நாங்கள் எங்களுடைய எல்லை வரம்புக்கு மிகவும் அப்பால் சென்றுவிட்டதாக அரசியல் நிர்ணய சபை உறுப் பினர்கள் கூறுவது சரியல்ல...

★ ★ ★

1. அ.நி.ச. விவாதங்கள், தொகுதி VII, நவம்பர் 9, 1948, பக். 388.

**திரு. துணைத்தலைவர்:** இனி நாம் விவாதத்தைத் தொடர்வோம்.

[1]**சையது முகம்மது சாதுல்லா:** ... நாங்கள் கடுமையாக உழைத்தோம், பாடுபட்டோம் என்பதை எவ்வாறு நான் மதிப்புக்குரிய உறுப்பினர்களுக்குக் கூறமுடியும்? மூன்று வெவ்வேறு கண்டங்களிலிருந்தான பண்டைய மற்றும் சமீபத்திய, அறியப்பட்டுள்ள எல்லா அரசியல் சாசனங்களையும் நாங்கள் அலசி ஆராய்ந்த பின்னர் இந்த முன்வரைவை உருவாக்கினோம். ஆனால் இதை ஒட்டுப் பிளாஸ்திரி வேலை என்று சில உறுப்பினர்கள் குறை கூறுகிறார்கள்! ஆனால் ஒட்டுப் பிளாஸ்திரி வேலையின் மூலமாகக் கூட எழில்மிக்க பாணிகளை, மிகவும் விரும்பத்தக்க வடிவங்களை உருவாக்க முடியும் என்பதைக் கலைஞர்கள், கைவினைப் பொருட்களை நேசிப்பவர்கள் நன்கு அறிவார்கள். எங்களுடைய முன்வரைவில் குறைபாடுகள் இருந்தபோதிலும், ஒரு முழு சித்திரத்தை உருவாக்குவதற்கு, சாத்தியமான வரையில் ஒரு முழுமையான ஆவணத்தை இந்த அவையில் சமர்ப்பிப்பதற்கு முயன்றுள்ளோம் என்று நான் உரிமை கொண்டாட முடியும். இது இந்த அவையில் விவாதத்திற்கான அடிப்படையாக அமைய முடியும். இதுதான் அரசியல் சாசனத்தின் இறுதி வடிவம் என்றோ, அதன் விதிகள் நிலையானவை அல்லது அவை மாற்றப்பட முடியாதவை என்றோ வரைவுக்குழு ஒருபோதும் உரிமை கொண்டாடியதில்லை. இந்த வரைவு, இறுதியாக ஏற்றுக் கொள்ளப்படுவதற்காக இந்த மாண்புறு அவையின் முன்னே சமர்ப்பிக்கப்பட்டிருப்பதே நாங்கள் ஏதோ ஒரு கொள்கைக்குக் கடப்பாடு உடையவர்கள் அல்ல என்பதைக் காட்டுகிறது. குழுக்களின் பரிந்துரைகளிலிருந்து நாங்கள் வேறுபட்டுள்ள விஷயங்கள், அல்லது இந்த மாண்புறு அவையினால் ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள கோட்பாடுகளிலிருந்து இங்கொன்றும் அங்கொன்றுமாக ஏதாவது ஒரு சொல்லை மாற்றுவதற்கு நாங்கள் துணிவு கொண்டோமென்றால், அடிக்குறிப்புகளில் அது பற்றி நாங்கள் போதிய அளவு சுட்டிக் காட்டியுள்ளோம். எனவே ஒளிவுமறைவாக எதையும் அங்கு புகுத்தி விட முடியாது. ஏற்கனவே ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள கோட்பாடுகளிலிருந்து, அல்லது குழுக்களின் பரிந்துரைகளிலிருந்து தாங்கள் மாறிச் செல்ல வேண்டுமென்று வரைவுக் குழு கருதிய இனங்கள்

1. அ.நி.வி. தொகுதி 7, நவம்பர் 9, 1948, பக். 389.

குறித்து அவை தனது கருத்துக்களை வெளிப்படுத்தலாம் என்று இந்த அவையின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டுள்ளது.

(திரு. சாதுல்லாவின் உரைக்குப் பின்னர் தீர்மானம் கீழ்வருமாறு வாக்கெடுப்புக்கு விடப்பட்டது - ஆர்)

**திரு. துணைத் தலைவர்:** பிரேரணை என்னவெனில்:

> "1947 ஆகஸ்டு 29ம் தேதியப் பேரவையின் தீர்மானத்தின்படி நியமிக்கப்பட்ட வரைவுக்குழுவினால் இறுதியாக்கப்பட்ட இந்தியாவின் அரசியல் சாசனத்தின் முன்வரைவை அரசியல் நிர்ணய சபை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம்."

இந்தத் தீர்மானம் ஏற்கப்பட்டது.

*(அரசியல் சாசனத்தின் முன்வரைவு இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. அரசியல் சாசனத்தின் முன்வரைவின் ஒவ்வொரு விதியின் மீதான விவாதம் தொடர்ந்தது. இந்தத் தொகுதியின் அடுத்த இரண்டு பாகங்களில் டாக்டர் அம்பேத்கர் அரசியல் சாசன முன்வரைவைப் பிரரேபித்து ஒவ்வொரு விதியாக எடுத்துரைத்ததைக் காணலாம்-ஆர்)*

பதிவு எண் : எல். 8181

# தி கெஜெட்  ஆப் இந்தியா

சிறப்பிதழ்

அதிகாரப்பூர்வமாக வெளியிடப்படுகிறது

புது டில்லி, வியாழக்கிழமை, பிப்ரவரி 26, 1948

## இந்தியாவின் அரசியல் நிர்ணய சபை

**புதுடில்லி, பிப்ரவரி 26, 1948**

எண். அ.நி./99/கான்ஸ்/47 - அரசியல் நிர்ணயசபையின் வரைவு குழுவினால் இறுதியாக்கப்பட்டபடி இந்திய அரசமைப்பின் முன்வரைவும் அரசியல் நிர்ணய சபையின் தலைவருக்கு குழுவின் தலைவர் எழுதிய கடிதமும் பொதுத் தகவலுக்காக இங்கு வெளியிடப் படுகின்றன. இந்த முன்வரைவு அரசியல் நிர்ணய சபையின் அடுத்த கூட்டத்தில் விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்படும்.

புதுடில்லி, பிப்ரவரி 21, 1948

பெறுநர்

மாண்புமிகு தலைவர்,
இந்திய அரசியல் நிர்ணயசபை
புதுடில்லி.

அன்புள்ள ஐயா,

முன்னுரை: 1947 ஆகஸ்டு 29ம் தேதிய அரசியல் நிர்ணயசபையின் தீர்மானத்தின்படி நியமிக்கப்பட்ட வரைவுக் குழுவால் இறுதியாக்கப்பட்டபடி இந்திய முன்வரைவை வரைவுக் குழுவின் சார்பில் சமர்ப்பிக் கிறேன்.

குழுவின் உறுப்பினர்களின் சார்பில், முன்வரைவில் கையெழுத்திடுவதற்கு எனக்கு அதிகாரமளிக்கப்பட்டிருந்த போதிலும், குழுவின் எல்லாக் கூட்டங்களிலும் எல்லா உறுப்பினர்களும் பிரசன்னமாகியிருக்கவில்லை என்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். ஆனால் எந்த ஒரு முடிவும் எடுக்கப்பட்ட ஒவ்வொரு கூட்டத்திலும், தேவையான எண்ணிக்கையில் உறுப்பினர்கள் பிரசன்னமாயிருந்தனர்; முடிவுகள் ஒருமனதாகவோ அல்லது வந்திருந்தவர்களின் பெரும்பான்மை ஆதரவுடனோ எடுக்கப்பட்டன.

முன்வரைவைத் தயாரிப்பதில் வரைவுக் குழுவானது அரசியல் நிர்ணய சபையினால் அல்லது அரசியல் நிர்ணய சபையினால் நியமிக்கப்பட்ட பல்வேறு குழுக்களில் மேற்கொள்ளப்பட்ட முடிவுகளைப் பின்பற்ற வேண்டும் என்று இயல்பாகவே எதிர்பார்க்கப்பட்டது. இதை வரைவுக் குழு சாத்தியமான வரையில் கடைப்பிடிக்க முயன்றுள்ளது. ஆயினும் சில விஷயங்கள் சம்பந்தமாக சில மாற்றங்களை பரிந்துரைப்பது அவசியமென்று வரைவுக்குழு உணர்ந்தது. அத்தகைய மாற்றங்களெல்லாம் சம்பந்தப்பட்ட பகுதிகளைக் கோடிட்டுக் காட்டுவதன் மூலம் அல்லது பக்கவாட்டில் பிரசுரிப்பதன் மூலம் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. அத்தகைய ஒவ்வொரு மாற்றத்திற்கான காரணங்களை விளக்கி அடிக்குறிப்பிடுவதற்கும் வரைவுக் குழு கவனம் எடுத்துக் கொண்டுள்ளது. ஆயினும் விஷயத்தின் முக்கியத்துவத்தைக் கருதி, இந்த மாற்றங்களின் மிகவும் முக்கியமானவற்றை உங்களுடைய கவனத்திற்கும் அரசியல் நிர்ணய சபையின் கவனத்திற்கும் கொண்டு வர விரும்புகிறேன்.

**2. முகப்புரை:** 1947 ஜனவரியில் அரசியல் நிர்ணய சபையினால் ஏற்கப்பட்ட குறிக்கோள்கள் பற்றிய தீர்மானம், இந்தியா இறையாண்மையுடைய ஒரு சுதந்திரமான குடியரசாக இருக்கும் என்று பிரகடனம் செய்கிறது; வரைவுக்குழு, இறையாண்மையுடைய ஜனநாயகக் குடியரசு என்று மாற்றியுள்ளது,

ஏனெனில் சுதந்திரமானது, வழக்கமாக ''இறையாண்மை'' என்ற சொல்லிலேயே உள்ளார்த்தமாக அடங்கியுள்ளது. எனவே, ''சுதந்திரமான'' என்ற சொல்லை சேர்ப்பதன் மூலம் புதிதாக எதுவும் பெறப்படுவதில்லை. இந்த ஜனநாயகக் குடியரசுக்கும் பிரிட்டிஷ் காமன்வெல்த்துக்கும் இடையிலான உறவுமுறை பின்னர் முடிவு செய்யப்பட வேண்டியுள்ளது.

சகோதரத்துவம் பற்றிய ஒரு ஷரத்தை அது குறிக்கோள்கள் தீர்மானத்தில் காணப்படவில்லை என்ற போதிலும் முகப்புரையில் குழு இதைச் சேர்த்துள்ளது. இந்தியாவில் சகோதரத்துவ ஒத்திசைவு மற்றும் நல்லிணக்கத்தின் தேவை முன்னெப்போதையும் விட இப்பொழுது அதிகமாக உள்ளது; எனவே, புதிய அரசியல் சாசனத்தின் இந்தக் குறிப்பிட்ட குறிக்கோள் முகப்புரையில் சிறப்பாகக் குறிப்பிடுவதன் மூலம் வலியுறுத்தப்பட வேண்டும்.

மற்ற அம்சங்களில், குறிக்கோள்கள் தீர்மானத்தின் உணர்வையும் சாத்தியமான வரையில் அதன் வாசகத்தையும் முகப்புரையில் அமைந்திருக்கும்படிச் செய்வதற்கு குழு முயன்றுள்ளது.

விதி 1

**3. இந்தியாவைப் பற்றிய விவரணம்:** முன்வரைவின் 1வது விதியில், இந்தியா மாநிலங்களைக் கொண்டதோர் ஒன்றியம் என்று வர்ணிக்கப்பட்டுள்ளது. ஒரு சீராக இருக்க வேண்டுமென்பதற்காக, ஒன்றியத்தின் அங்கங்களை - தற்பொழுது அவை ஆளுநர்களின் மாகாணங்கள், அல்லது பிரதம கமிஷனர்களின் மாகாணங்கள் அல்லது இந்திய சமஸ்தானங்கள் என்று அழைக்கப்பட்டு வந்துள்ள போதிலும் - புதிய அரசியல் சட்டத்தில் மாநிலங்கள் என்று வர்ணிப்பது விரும்பத்தக்கது என்று குழு கருதியது. புதிய அரசியல் சாசனத்திலும் கூட அந்த அங்கங்களினிடையில் சில வேறுபாடுகள் இருக்கும் என்பதில் ஐயமில்லை; இந்த வேறுபாட்டைக் குறிப்பதற்காக, மாநிலங்களைக் குழு மூன்று பிரிவுகளாகப் பிரித்துள்ளது. முதலாவது

அட்டவணையின் முதலாவது பாகத்தில் குறிப்பிடப் பட்டுள்ளவை, இரண்டாம் பாகத்தில் குறிப்பிடப் பட்டுள்ளவை, மற்றும் மூன்றாம் பாகத்தில் குறிப்பிடப் பட்டுள்ளவை. இவை முறையே தற்போதுள்ள ஆளுநர் களின் மாநிலங்கள், பிரதம கமிஷனர்களின் மாநிலங் கள், மற்றும் இந்திய சமஸ்தானங்கள் ஆகியவற்றுக்கு இணையானவையாகும்.

சமஷ்டி (கூட்டாட்சி) என்பதற்கு பதிலாக, யூனியன் (ஒன்றியம்) என்ற சொல்லைக் குழு உப யோகித்திருப்பதைக் காணலாம். பெயரில் அதிக வேறுபாடு இல்லை. ஆனால், 1867ம் வருட பிரிட்டிஷ் வட அமெரிக்க சட்டத்தின் முகப்புரையின் வாசகத்தைப் பின்பற்றுவது உசிதமானது என்று குழு கருதியது; இந்தியாவை, அதனுடைய அரசியல் சாசனம் சமஷ்டிக் கட்டமைப்பைக் கொண்டிருந்த போதிலும், ஒன்றியம் என்று வர்ணிப்பதில் அனுகூலங்கள் உள்ளன என்றும் குழு கருதியது.

விதி 5ம் 6ம்

*4. குடியுரிமை:* ஒன்றியத்தின் குடியுரிமைப் பிரச் சினையைச் ஆழ்ந்த அக்கறையுடன், நீண்ட காலம் குழு பரிசீலனை செய்தது. ஆரம்ப முதற் கொண்டே ஒன்றியத்தின் ஒரு குடிமகனாக இருப்பதற்கு, ஒரு நபர் ஒன்றியத்துடன் ஏதாவதொரு வகையில் பிரதேசத் தொடர்புடையவராக - பிறப்பினாலேயோ, வம்சா வளியினாலோ அல்லது குடியேறியதன் மூலமாகவோ இருப்பது அவசியம் என்று குழு கருதியது. இந்தியாவின் பிரதேசத்துடன் அத்தகைய எந்தத் தொடர்பும் இல்லாத நபர்களை - அவர்கள் ஒன்றியத்துக்கு விசுவாசமாக இருப்பதாகப் பிரமாணம் எடுத்துக் கொள்வதற்கு தயாராயிருந்தாலும் அவர்களைப் பிரஜைகளாக அனுமதிப்பது விவேகம்தானா என்று குழு ஐயப்பாடு கொள்கிறது; ஏனெனில், பிற நாடுகள் விஷயத்தில் இத்தகைய ஒரு விதியைப் பகர்ப்பு செய்வதெனில், இந்தியாவில் பிறந்து நிரந்தரமாக இங்கே வசித்து வந்தபோதிலும் - ஓர் அந்நிய நாட்டுக்கு விசுவாசம் தெரிவிக்கக் கூடிய ஏராளமான நபர்கள் ஒன்றியத்துக்குள்

இருந்துவரும் நிலைமை ஏற்படும். ஆயினும், அண்மை மாதங்களில் இந்தியாவுக்குள் குடிபுக நேர்ந்துள்ள ஏராளமான, வெளியேற்றப்பட்ட நபர்களின் தேவைகளையும் குழு கவனத்தில் எடுத்துக் கொண்டு, இந்தியாவில் நிலையாகக் குடியிருப்பதற்கும், அதன் மூலம் குடியுரிமை பெறுவதற்கும் விசேடமாக எளிதான வழி முறையை அவர்களுக்கு ஏற்படுத்தியுள்ளது. அவர்கள் என்ன செய்ய வேண்டுமென்றால், (அவர்கள் அவர்களின் பெற்றோர்களில் யாராவது ஒருவர், அல்லது அவர்களின் தாத்தா, பாட்டி யாராவது இந்தியாவிலோ அல்லது பாகிஸ்தானிலோ பிறந்தவர்கள் என்று கருதி) -

(a) தாங்கள் இந்தியாவில் நிலையாகக் குடியேற விரும்புவதாக ஒரு மாவட்ட குற்றவியல் நடுவர் முன்னால் பிரகடனம் செய்ய வேண்டும்.

(b) இந்தப் பிரகடனத்திற்குக் குறைந்தபட்சம் ஒரு மாதத்திற்கு முன்னால் இந்தியாவில் வசித்திருக்க வேண்டும்.

விதிகள் 7-27

***5. அடிப்படை உரிமைகள்:*** இந்த உரிமைகளையும், அவற்றின் முக்கிய எல்லை வரம்புகளையும் சாத்தியமான வரையில் திட்டவட்டமாக்குவதற்குக் குழு முயன்றுள்ளது. ஏனெனில், இவை நீதிமன்றங்களின் தீர்ப்புக்கு உட்பட்டவை.

விதி 59

***6. ஒன்றியத் (குடியரசு) தலைவரின் அதிகாரங்கள்:*** இந்திய மாநிலத்தில் அதுபோன்றே பிற அங்கங்களிலும் - ஆட்சியாளரின் அதிகாரங்களுக்கு பாதிப்பு இல்லாமல், தீர்ப்புக் கூறப்பட்ட மரண தண்டனைகளை நிறுத்தி வைக்கவோ, ரத்து செய்யவோ அல்லது குறைக்கவோ குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் வழங்குவது விரும்பத்தக்கது என்று குழு கருதியது.

*விதி 278.*

*சில குறிப்பிட்ட சூழ்நிலைமைகளில் அரசியல் சட்டத்தின் சில ஷரத்துகளை நிறுத்தி வைப்பதற்கான பிரகடனம் வெளியிடுவதற்குப் புதிய அரசியல் சட்டம் ஆளுநருக்கு அதிகாரமளித்திருப்பது நினைவிருக்கும்; அவர் இரண்டு வார காலத்திற்கு மட்டுமே அவ்வாறு செய்ய முடியும். மற்றும் இந்த விஷயத்தை அவர் குடியரசுத் தலைவருக்குத் தெரிவிக்க வேண்டும். ஆளுநரின் அறிக்கைக் கிடைத்தவுடனே, குடியரசுத் தலைவர் அந்தப் பிரகடனத்தை ரத்து செய்ய முடியும் அல்லது அவர் தமது சொந்தப் பிரகடனத்தை வெளியிட முடியும். இதற்குக் குழு வகை செய்துள்ளது. இதன் விளைவாக, மாநில நிர்வாகத்தின் பொறுப்பை மத்திய நிர்வாகம் எடுத்துக் கொள்ளும். அதுபோன்றே மாகாண சட்டப் பேரவைகளின் பொறுப்புகளை மத்தியச் சட்டப்பேரவை எடுத்துக்கொள்ளும். அதுபோன்றே நடைமுறையில், சம்பந்தப்பட்ட மாநிலம் - பிரகடனம் அமலி லிருக்கும் காலத்தின்போது - மைய அரசினால் நிர்வாகம் செய்யப்படும் பிரதேசமாகும். இது 1935ம் வருட சட்டத்தின் கீழான, ''93வது பிரிவின்படியான ஆட்சியை'' அப்புறப்படுத்தும்.*

*விதி 60*

**7. பொதுப் பட்டியலில் உள்ள விஷயங்கள் சம்பந்தமாக நிர்வாக அதிகாரம் :** *தற்போதைய அரசியல் சட்டத்தின்படி பொதுப் பட்டியலில் உள்ள ஒரு விஷயம் சம்பந்தமான நிர்வாக அதிகாரம் மாகாணத்தினுடையதாக இருக்கும், சில விஷயங்களில் இது மத்திய அரசின் அதிகாரத்திற்கு உட்பட்டதாகும். நிர்வாக அதிகாரம் எவ்வாறு பிரயோகிக்கப்பட வேண்டும் என்று மாநில அரசுக்கு அது ஆணையிடும். (1935ம் வருட இந்திய அரசு சட்டத்தின் ஏழாவது அட்டவணையில் உள்ள பொதுச் சட்டமன்றப் பட்டியலின் Iவது மற்றும் IIவது பாகங்களைக் காண்க.)*

*அரசியல் சட்ட முன்வரைவில், இந்தத் திட்டத்திலிருந்து குழு சிறிது விலகிச் சென்றுள்ளது; மற்றும் நிர்வாக அதிகாரம் மாகாணத்திடம் (தற்பொழுது இது*

மாநிலம் என்று அழைக்கப்படுகிறது) அமைந்திருப் பதற்கு வகை செய்துள்ளது.

''இந்த அரசியல் சாசனத்திலோ, அல்லது நாடாளுமன்றத்தினால் இயற்றப்பட்ட எந்தச் சட்டத் தினாலோ இதற்குத் தெளிவாக வகை செய்யப்பட் டிருக்க வேண்டும்.'' இந்தக் காப்பு விதியின் விளை வானது, இது, புதிய அரசியல் சாசனத்தின்கீழ் ஒன்றிய நாடாளுமன்றம் விரும்பினால் ஒன்றிய அரசுக்கு நிர்வாக அதிகாரத்தை வழங்கலாம்; அல்லது தேவைப் பட்டால், மாநில அரசு எவ்வாறு நிர்வாக அதிகாரத்தை செலுத்துவது என்பது சம்பந்தமாக ஆணைகள் இடு வதற்கு ஒன்றிய அரசுக்கு அதிகாரமளிக்கிறது. இந்த ஷரத்தை சேர்த்திருப்பதன் மூலம், நிர்வாக அதிகார மானது பெரும்பாலும் சட்டமியற்றும் அதிகாரத்துடன் இணைந்திருக்க வேண்டும் என்ற கோட்பாட்டைக் குழு கவனத்தில் எடுத்துக்கொண்டது.

விதி 67

**8. மாநிலங்கள் அவையின் இயைபு:** அரசியல் நிர்ணய சபை மேற்கொண்ட ஒரு முடிவுக்கு ஏற்ப, மாநிலங்களவைக்கு 250க்கு மேற்படாத மொத்த உறுப்பினர்களில் 25க்கு மேற்படாத உறுப்பினர்கள் செயல்படும் அடிப்படையில், பட்டியல்களிலிருந்து அல்லது தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்படுவர். இந்தப் பட்டியல் முறை எந்த நாட்டிலிருந்து (அயர்லாந்து) பின்பற்றப்பட்டதோ அந்த நாட்டிலேயே இதுவரையில் அது திருப்தியற்ற முறையில் இருந்து வந்ததினால், இலக்கியம், கலை, விஞ்ஞானம் முதலியவற்றில் சிறந்து விளங்குபவர்களிடமிருந்து 15 உறுப்பினர் களை குடியரசுத் தலைவர் நியமிப்பதற்கு வகை செய்வது சிறந்ததாக இருக்கும் என்று கருதியது. இந்த நியமனங்களில் தொழிலாளர்கள், அல்லது வாணிபம், தொழில்துறை ஆகியவற்றுக்குத் தனிப் பிரதிநிதித் துவம் ஏதும் அவசியமில்லை என்று குழு கருதுகிறது, ஏனெனில், வயது வந்தோருக்கான வாக்குரிமை காரண மாக, ஒன்றிய நாடாளுமன்றத்தில் தேர்ந்தெடுக்கப் படுவோர் பிரிவில் இவர்கள் நிச்சயமாகப் போதிய பிரதிநிதித்துவம் பெறுவர்.

*விதி 63 மற்றும் 151*

**9. ஒன்றிய நாடாளுமன்றம் மற்றும் மாநில சட்டப் பேரவைகளின் ஆயுட்காலம்:** நாடாளுமன்ற முறையின்கீழ், குறிப்பாக வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையில் ஒரு புதிய அரசியல் சாசனம் நடைமுறைக்கு வர ஆரம்பிக்கும்போது நான்காண்டுகளுக்கு அதிகமான ஆயுட்காலம் விரும்பத்தக்கதாகும். புதிய அமைச்சர்கள் அரசு நிர்வாகத்தின் விவரங்களைப் பரிச்சயம் செய்து கொள்வதற்கு சில காலம் தேவைப்படும். அவர்களது பதவியின் கடைசி ஆண்டு, வழக்கமாக அடுத்த பொதுத் தேர்தலுக்குத் தயாரிப்புச் செய்வதற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுவிடும். எனவே, நான்காண்டு ஆயுட்காலத்தில் எவ்வகைப்பட்ட திட்டமிட்ட நிர்வாகத்திற்கும் போதிய அவகாசமிருக்காது.

*விதி 107 மற்றும் 200:*

**10. உச்சநீதிமன்றமும் உயர்நீதிமன்றங்களும்:** பிரிட்டன் மற்றும் அமெரிக்காவில் இருந்துவரும் நடைமுறையைப் பின்பற்றி, சில சூழ்நிலைமைகளில், உச்சநீதிமன்றத்திலும் உயர்நீதிமன்றங்களிலும் ஓய்வு பெற்ற நீதிபதிகளை, குறிப்பிட்ட வழக்குகளில் சேவை புரியுமாறு அழைக்கப்படலாம் என்று குழு பரிந்துரைத்துள்ளது.

*விதி 131.*

**11. ஆளுநர்களைத் தேர்வு செய்யும் முறை:** மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் ஆளுநரும், சட்டப் பேரவைக்குப் பொறுப்பான ஒரு முதலமைச்சரும் ஒரே சமயத்தில் இருந்து வருவது மோதலுக்கு இட்டுச் செல்லக்கூடும் என்று குழுவின் சில உறுப்பினர்கள் கருதினர். எனவே, ஆளுநர்களை நியமிக்கும் ஒரு மாற்று வழியைக் குழு யோசனை கூறியுள்ளது. சட்டப் பேரவை நான்கு நபர்களின் ஒரு பட்டியலைத் தேர்ந்தெடுக்க வேண்டும் (அவர்கள் அந்த மாநிலவாசிகளாக இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை). குடியரசுத் தலைவர், அந்த நால்வரில் ஒருவரை ஆளுநராக நியமிக்க வேண்டும்.

*விதி 138.*

**12. துணைநிலை ஆளுநர்கள்:** துணைநிலை ஆளுநர்கள் நியமனம் சம்பந்தமாக ஏதும் வழிவகை

அவசியமென்று குழு நினைக்கவில்லை; ஏனெனில், ஆளுநர் இருக்கின்ற வரையிலும் துணைநிலை ஆளுநருக்கு செய்வதற்கு எந்தப் பணியும் இருக்காது. மத்தியில் நிலைமை வேறானது. ஏனெனில் துணை ஜனாதிபதி, தனது பதவியின் காரணமாக மாநிலங்களவைத் தலைவராகவும் இருப்பவர். ஆனால் பெரும்பாலான மாநிலங்களில் சட்ட மேலவை இருக்காது. மேலும், துணை ஜனாதிபதியின் பணிகள் போன்றவற்றை துணை ஆளுநருக்கு அளிப்பதும் சாத்தியமல்ல. எந்த ஓர் எதிர்பாராத நிலைமையிலும் ஆளுநரின் செயல்பாடுகளை ஆற்றுவதற்குத் தேவையான ஏற்பாடுகளை மாநிலத்தின் சட்டப்பேரவையோ (அல்லது ஜனாதிபதியோ) செய்வதை சாத்தியமாக்கும் ஒரு ஷரத்து முன் வரைவில் இருக்கிறது.

*விதி 212, 213 மற்றும் 214*

**13. மத்திய அரசினால் நிர்வாகம் செய்யப்படும் பிரதேசங்கள்:** அரசியல் நிர்ணய சபையின் ஒரு தீர்மானத்தின்படி, தலைவராகிய நீங்கள், மத்திய அரசினால் நிர்வகிக்கப்படும் பிரதேசங்களான டில்லி, ஆஜ்மீர்-மேர்வாரா, குடகு, பந்த் பிப்லோடா, மற்றும் அந்தமான்-நிகோபார் தீவுகள் ஆகியவற்றில் அரசியல் சட்ட மாற்றங்களைப் பரிந்துரை செய்வதற்கு ஏழு உறுப்பினர்களைக் கொண்ட ஒரு குழுவை நியமித்தீர்கள். அந்தக் குழு தனது அறிக்கையை, 1948, அக்டோபர் 21ல் சமர்ப்பித்தது. குழுவின் பரிந்துரைகள் சுருக்கமாகப் பின்வருமாறு:

(1) டில்லி, ஆஜ்மீர்-மேர்வாரா மற்றும் குடகு ஆகியவை ஒவ்வொன்றும், துணைநிலை ஆளுநரைக் கொண்டிருக்கும். இவர் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுவார்.

(2) இந்த மாநிலங்கள் ஒவ்வொன்றும் வழக்கமாக சட்டப்பேரவைக்குப் பொறுப்பாகவுள்ள அமைச்சரவையால் நிர்வகிக்கப்பட வேண்டும்.

(3) இந்த மாகாணங்கள் ஒவ்வொன்றும் ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டப்பேரவையைக் கொண்டிருக்க வேண்டும்.

பந்த் பிப்லோடாவைப் பொறுத்தமட்டிலும், அது ஆஜ்மீர்-மீர்வாராவுடன் இணைக்கப்பட வேண்டுமென்று குழு பரிந்துரை செய்தது. அந்தமான்-நிக்கோபார் தீவுகளைப் பொறுத்தமட்டிலும், அவை தொடர்ந்து தற்போது இருப்பது போன்றே, இந்திய அரசினால் நிர்வகிக்கப்பட வேண்டும், தேவையான சீரமைவுகளைச் செய்து கொள்ளலாம்; வேறு சொற்களில் கூறுவதெனில், இந்தத் தீவுகள் பிரதம கமிஷனரின் மாகாணமாகத் தொடர்ந்து இருக்க வேண்டும். இந்தக் குழுவில் ஆஜ்மீர்-மீர்வாராவைப் பிரதிநிதித்துவப்படுத்தும் உறுப்பினரும், குடகைப் பிரதிநிதித்துவப்படுத்தும் உறுப்பினரும் குழுவின் அறிக்கைக்கு ஒரு குறிப்பை பின்சேர்க்கையாகச் சேர்த்துள்ளனர். அதில் அவர்கள், இந்தப் பிரதேசங்களின் சிறிய அளவு, பூகோள நிலைமை, செல்வ ஆதாரங்கள் மிகவும் சொற்பமாக இருப்பது ஆகியவற்றிலிருந்து எழும் பிரத்தியேகப் பிரச்சினைகள் அண்மை வருங்காலத்தில், இவை ஒவ்வொன்றும் அண்டையிலுள்ள பிரதேசங்களுடன் இணைந்து கொள்வதை அவசியப்படுத்தும். எனவே, சம்பந்தப்பட்ட மக்களின் விருப்பங்களைத் தெரிந்து கொண்ட பின்னர், இதை சாத்தியமாக்குவதற்கு அரசியல் சட்டத்தில் ஒரு குறிப்பான ஷரத்து இருக்க வேண்டுமென்று அவர்கள் வலியுறுத்தினர். டில்லியைப் பொறுத்தமட்டிலும், இந்தியாவின் தலைநகர் என்ற வகையில், அது ஒரு ஸ்தல நிர்வாகத்தின் கீழ் இருக்க முடியாது என்று குழு அபிப்பிராயப்பட்டது. அமெரிக்காவில் அரசின் தலைமையகம் என்ற வகையில், காங்கிரஸ் அதன் மீது தனியுரிமையான சட்டமியற்றும் அதிகாரத்தைச் செலுத்துகிறது. ஆஸ்திரேலியாவிலும் அதே போன்றுதான். எனவே, விசேடக் குழு பரிந்துரை செய்ததைக் காட்டிலும் ஒரு சர்வாம்சத் திட்டம் விரும்பத்தக்கது என்ற முடிவுக்கு வரைவுக் குழு வந்தது. அதன்படி, மத்திய அரசின் கீழுள்ள இந்தப் பிரதேசங்கள்

இந்திய அரசினால், ஒரு பிரதம கமிஷனர் மூலமாக, அல்லது ஒரு துணைநிலை ஆளுநர் மூலமாக, அல்லது ஓர் அண்டை மாநிலத்தின் ஆளுநர் அல்லது மன்னர் மூலமாக நிர்வகிக்கப்பட வேண்டும் என்று வரைவுக் குழு ஆலோசனை கூறியுள்ளது. ஒரு குறிப்பிட்ட பிரதேசம் சம்பந்தமாக என்ன செய்ய வேண்டும் என்பது குடியரசுத் தலைவர் முடிவு செய்து உத்தரவிடுவதற்கு விடப்பட்டுள்ளது; அவர், பிற விஷயங்களைப் போன்றே, பொறுப்பாயுள்ள அமைச்சர்களின் ஆலோசனையின் பேரில் செயல்படுவார் என்பதை எடுத்துச் சொல்லத் தேவையில்லை. அப்படி ஆலோசனை கூறப் பட்டால், டில்லிக்கு ஒரு துணைநிலை ஆளுநரை நியமிக்கலாம். அவர், அதேபோல், இவ்வாறு ஆலோசனை கூறப்பட்டால், குடகை சென்னை மாகாணத்தின் ஆளுநர் வாயிலாக, அல்லது மைசூர் மன்னர் வாயிலாக - குடகின் மக்களது விருப்பங்களைத் தெரிந்து கொண்டபின் - நிர்வகிக்கலாம். மேலும் அவர் ஓர் உத்தரவின் மூலம் ஒரு ஸ்தல சட்டப் பேரவையை அல்லது ஓர் ஆலோசகர்கள் கவுன்சிலை நிறுவலாம். அதற்குரிய அரசியல் சட்டத்தையும், அதிகாரங்களையும் செயல்பாடுகளையும் - ஒவ்வொன்றுக்கும் தனித் தனியாக - ஏற்படுத்தலாம். அவரது உத்தரவில் இவற்றைக் குறிப்பிடலாம். இது ஒரு நெளிவுசுழி வான திட்டம் என்று வரைவுக் குழுவுக்குத் தோன்று கிறது. இதை சம்பந்தப்பட்ட பிரதேசங்களின் வெவ் வேறான தேவைகளுக்கு ஏற்ப இசைவாக்கிக் கொள்ள முடியும்.

மத்திய அரசுக்கு முழு மற்றும் தனி ஆட்சி உரிமையையும், எல்லை வரம்பையும் மற்றும் அதி காரங்களையும் விட்டுக் கொடுத்துள்ள (ஒரிஸ்ஸா குழுவைப் போன்று) இந்திய சமஸ்தானங்கள் - அவை மத்திய அரசினால் நிர்வகிக்கப்படும் பிரதேசங்களைப் போன்றே நிர்வகிக்கப்படுவதற்கும், அதாவது, ஒரு பிரதம கமிஷனர் வாயிலாக, அல்லது துணைநிலை ஆளுநர் வாயிலாக, அல்லது ஒரு அண்டை மாகாணத் தின் ஆளுநர் அல்லது மன்னர் வாயிலாக ஒவ்வொரு

பிரதேசத்தின் தேவைகளுக்கு ஏற்ப நிர்வகிக்கப்படுவதற்கும் குழு வகை செய்துள்ளது.

*விதிகள் 216-முதல் 232 வரையில்.*

**14. சட்டமியற்றும் அதிகாரங்களின் வினியோகம்:** பெரும்பாலும் ஒன்றிய அதிகாரங்கள் குழுவினால் பரிந்துரை செய்யப்பட்டு, அரசியல் நிர்ணய சபையினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட சட்டமியற்றும் பட்டியல்களில் வரைவுக்குழு எந்த மாற்றமும் செய்யவில்லை, ஆனால், வரைவுக் குழு மாற்றங்கள் செய்துள்ள மூன்று விஷயங்கள் சம்பந்தமாக உங்கள் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன்:

(அ) வழக்கமாக மாநிலத்தின் பட்டியலிலுள்ள ஒரு விஷயம் தேசிய முக்கியத்துவத்தைப் பெறும்போது, ஒன்றிய நாடாளுமன்றம் அது சம்பந்தமாக சட்டமியற்றுவதற்கு வகை செய்யப்பட்டுள்ளது. மாநிலத்தின் அதிகாரங்கள் மீது அவசியமற்ற அத்துமீறலைத் தடுப்பதற்கு, அங்கங்கள் என்ற வகையில் மாநிலங்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் மாநிலங்கள் அவை, இது சம்பந்தமாக மூன்றிலிரண்டு பங்கு பெரும்பான்மையுடன் ஒரு தீர்மானம் நிறைவேற்றினால் மட்டுமே இதைச் செய்ய முடியும் என்று முன்வரைவில் வகை செய்யப்பட்டுள்ளது.

(ஆ) விவசாய நிலமல்லாத சொத்துக்கு மட்டுமே வாரிசுரிமை என்பதற்குப் பதிலாக, வாரிசுரிமை விஷயம் முழுவதையும் பொதுப் பட்டியலில் சேர்ப்பது விரும்பத்தக்கது என்று, குழு கருதுகிறது. இதுபோன்றே, இப்பொழுது தனிநபர் சம்பந்தமான சட்டத்தின் ஆளுகைக்கு உட்பட்டுள்ள தரப்புகள் குறித்த எல்லா விஷயங்களையும் குழு பொதுப் பட்டியலில் சேர்த்துள்ளது. இது, இந்த விஷயங்களில் இந்தியா ஒரு சீரான சட்டத்தை இயற்றுவதற்கு வகை செய்யும்.

(இ) ஒன்றியத்தின் காரியத்திற்காக நிலத்தை ஆர்ஜிதம் செய்வதை ஒன்றியப் பட்டியலிலும் ஒரு மாநிலத்தின் காரியத்திற்காக நில ஆர்ஜிதம் செய்வதை மாநிலப் பட்டியலிலும் வைக்கும் அதேபொழுதில், நிலத்தை எடுத்துக் கொள்வதற்கு நஷ்டஈடு வழங்குவதற்கான கோட்பாடுகள் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பொதுப் பட்டியலில் இடம் பெறுவதற்கு குழு வழிவகை செய்துள்ளது. இந்த விஷயத்தில் ஓரளவு ஒரு சீரான தன்மை இருக்க வேண்டுமென்பதற்காகவே குழு இவ்வாறு செய்துள்ளது.

மேலும், தற்போதைய அசாதாரணமான சூழ்நிலையை முன்னிட்டு அத்தியாவசியமான சப்ளைகள் மீது மத்தியக் கட்டுப்பாடு தேவைப்படும் நிலையில், அரசியல் சட்டம் அமலுக்கு வருவதிலிருந்து ஐந்தாண்டு காலத்திற்கு, சில அத்தியாவசியப் பண்டங்களில் வாணிகம் மற்றும் அவற்றின் உற்பத்தி, சப்ளை, வினியோகம் ஆகியவையும், அதுபோன்றே புலம்பெயர்ந்த நபர்களுக்கான நிவாரணம் மற்றும் மறுவாழ்வும் பொதுப்பட்டியல் விஷயங்களைப் போன்றே அதே அடிப்படையில் வைக்கப்படுவதற்குக் குழு வகை செய்துள்ளது. இந்தப் பாதையை மேற்கொள்ளும்போது, குழு, 1946ம் வருடத்திய இந்திய (மத்திய அரசு மற்றும் சட்டப் பேரவைகள்) சட்டத்தின் விதிகளைப் பின்பற்றியுள்ளது.

விதிகள் 247 முதல் 269 வரையில்

**15. நிதி சம்பந்தமான ஷரத்துகள்:** பொதுவாகக் கூறுமிடத்து, நிதி நிபுணர் குழுவின் பரிந்துரைகளை - மையத்திற்கும் மாநிலங்களுக்கும் இடையில் வருமான வினியோகம் சம்பந்தப்பட்டவை நீங்கலாக - வரைவுக் குழு முன்வரைவில் இணைத்துக் கொண்டுள்ளது. இந்தத் துறையில் தற்பொழுது இருந்து வருகிற ஸ்திரமற்ற நிலைமைகளை முன்னிட்டு, வருமானங்களின் விநியோக விஷயத்தில் ஒரு ஐந்தாண்டு காலகட்டத்திற்கு இப்பொழுது உள்ள நிலைமையை அப்படியே

நீட்டித்து வைத்துக் கொள்வதுதான் சிறந்ததென்று வரைவுக்குழு கருதியது. அதற்குப் பின்னர் ஒரு நிதிக் கமிஷன் நிலைமையை மறு ஆய்வு செய்யக்கூடும்.

*விதிகள் 281, 282, 283.*

**16. பணியங்கள்:** பணியங்கள் சம்பந்தமாக, எத்தகைய விரிவான விதிகளையும் குழு அரசியல் சாசனத்தில் சேர்க்கவில்லை. அவை, சம்பந்தப்பட்ட சட்டப் பேரவையின் சட்டங்களினால் முறைப்படுத்தப்பட வேண்டுமேயன்றி, அரசியல் சட்ட விதிகளினால் அல்ல என்று குழு கருதுகிறது; ஏனெனில், இந்த நாட்டில், வருங்கால சட்டப் பேரவைகள், பிற நாடுகளில் போன்றே, பணியங்கள் சம்பந்தமாக நியாயமாக நடந்து கொள்ளும் என்று நம்பலாம் என்று குழு கருதுகிறது.

*விதிகள் 289, 290 மற்றும் 291:*

**17. தேர்தல்கள், வாக்குரிமை முதலியன:** தொகுதிகளை வரையறுப்பது உள்ளிட்ட தேர்தல் நடைமுறை விவரங்களை அரசியல் சாசனத்தில் இணைப்பதை அவசியம் என்று குழு கருதவில்லை. இவை, துணைச் சட்டங்களினால் வகை செய்யப்படுவதற்கு விட்டு வைக்கப்பட்டுள்ளது.

*விதி 304:*

**18. அரசியல் சாசனத் திருத்தம்:** சில வரையறுத்துக் கூறப்பட்ட விஷயங்கள் சம்பந்தமாக, மாநில சட்டப் பேரவைகளுக்கு ஓர் எல்லைக்குட்பட்ட அரசியல் சட்ட அதிகாரத்தை வழங்கும் ஒரு விதியை குழு இணைத்துள்ளது.

*விதிகள்292, 294 மற்றும் 305:*

**19. சிறுபான்மையோருக்குப் பாதுகாப்பு:** சட்டப் பேரவைகளில் இடங்களை ஒதுக்குவது மற்றும் பொது பணியங்களிலான பதவிகள் சம்பந்தமாக, அரசியல் நிர்ணய சபையின் மற்றும் ஆலோசனைக் குழுவின் முடிவுகளை முன்வரைவு இணைத்துக் கொண்டுள்ளது. இந்த விதிகள் இந்திய சமஸ்தானங்களுக்கு விரிவுபடுத்தப்படாவிட்டாலும், இந்தியாவின் பொது நலன்களை முன்னிட்டு, இந்திய சமஸ்தானங்கள் அங்குள்ள சிறுபான்மையோருக்கு இதுபோன்ற விதிகளை இயற்ற வேண்டும். இந்த விஷயத்தின் முக்கியத்

துவத்தை உங்களுடைய கவனத்திற்குக் கொண்டு வரும்படி வரைவுக்குழு குறிப்பாக என்னைக் கேட்டுக் கொண்டுள்ளது.

முதலாவது அட்டவணை

**20. மொழிவாரி மாநிலங்கள்** முதலாவது அட்டவணையின் (ஷெட்யூல்) I-ம் பாகத்தையும், அதற்குக் கொடுக்கப்பட்டுள்ள அடிக்குறிப்பையும் உங்களுடைய குறிப்பான கவனத்திற்குக் கொண்டு வருவதற்கு நான் விரும்புகிறேன். அரசியல் சாசனம் இறுதியாக ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு முன்னால் ஆந்திரா அல்லது வேறு எந்த மொழிவழிப் பிராந் தியமோ இந்த அட்டவணையில் குறிப்பிட வேண்டு மென்றால், அரசியல் சாசன முன்வரைவு இறுதியாக ஏற்கப்படுவதற்கு முன்னால், 1935ம் வருடத்திய இந்திய அரசு சட்டத்தின் 290வது விதியின்கீழ், அவற்றைத் தனியான ஆளுநர் மாகாணங்களாக்குவதற்கு உடனடி யாக நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். புதிய மாநிலங்களை உருவாக்குவதற்குப் புதிய அர சியல் சட்டத்திலேயே விதிகள் உள்ளன என்பது மெய்யே. ஆனால், புதிய அரசியல் சட்டம் அமலுக்கு வந்ததற்குப் பின்னர்தான் இது ஏற்பட முடியும்.

ஐந்தாவது ஆறாவது அட்டவணைகள்

**21. ஷெட்யூல்ட் பழங்குடிகள், ஷெட்யூல்டுப் பிரதேசங்கள் மற்றும் பழங்குடிப் பிரதேசங்கள்:** அரசியல் சாசனத்தின் அட்டவணைகளில் இந்த விஷ யங்கள் சம்பந்தமான துணைக்குழுக்களின் பரிந்துரை களைக் குழு இணைத்துக் கொண்டுள்ளது.

22. சில விஷயங்கள் மீது (கோட்பாடு சம்பந் தப்பட்ட எந்தப் பிரச்சினையும் இதில் அடங்கியிருக்க வில்லை) திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யரின் ஒரு தனிக் குறிப்பு, அவருடைய வேண்டுகோளின் பேரில், இந்த முன்வரைவுடன் சேர்க்கப்பட்டிருக்கிறது.

23. இந்த அரசியல் சாசன முன்வரைவை உங்க ளுக்கு அனுப்பும்போது, இந்தக் கடினமான பணியில் சர். பி.என். ராவ் (அரசியல் சட்ட ஆலோசகர்), திரு.

எஸ்.என். முகர்ஜி (இணைச் செயலாளர், மற்றும் இதன் வாசகத்தை வரைந்தவர்) மற்றும் அரசியல் நிர்ணய சபையின் செயலக அலுவலர்கள் ஆகியோரிடமிருந்து பெற்ற உதவிக்கு குழுவின் நன்றி உணர்வைப் பதிவு செய்யாமல் இருக்க முடியாது.

தங்களின் உண்மையுள்ள,
**பி.ஆர். அம்பேத்கர்**

# இந்திய அரசமைப்பின் முன்வரைவு

முகப்புரை

இந்திய மக்களாகிய நாம், இந்திய நாட்டினை இறையாண்மையும் மக்களாட்சி முறையும் அமைந்த ஒரு குடியரசாக[1] நிறுவுவதென மனப்பூர்வமாக முடிவு செய்வதோடு,

அதன் குடிமக்கள் அனைவரும் சமுதாய, பொருளியல் மற்றும் அரசியல் நீதி, எண்ணம், அதன் வெளியீடு, கோட்பாடு, சமய நம்பிக்கை வழிபாடு இவற்றில் தன்னுரிமை, சமுதாயப் படிநிலை மற்றும் வாய்ப்பு நலங்களில் சமத்துவம் எய்திடச் செய்யவும்.

அவர்கள் அனைவரிடையேயும் தனிமனிதனின் மாண்பும் நாட்டுமக்களின் ஒற்றுமையையும் உறுதிப்படுத்தி உடன்பிறப்பாண்மையை வளரச் செய்யவும்;

நம்முடைய அரசமைப்புப் பேரவையில் இந்த ______________ (கி.பி.1948, மே ________ நாளில்) இதன் மூலம் இந்த அரசமைப்பினை ஏற்று, இயற்றி நமக்கு நாமே வழங்கிக் கொள்கிறோம்.

---

1. இது, அரசமைப்புப் பேரவையில் எடுக்கப்பட்ட முடிவினைப் பின்பற்றியதாகும். இந்த மக்களாட்சி குடியரசுக்கும் பிரிட்டனின் காமன்வெல்த் நாடுகளுக்கிடையிலான உறவு தொடர்பான வினாவிற்கும் பிறகு முடிவு செய்யப்படவேண்டியுள்ளது.

# பகுதி - I

## ஒன்றியமும் அதன் ஆட்சி நிலவரையும் அதிகார எல்லையும்

ஒன்றியத்தின் பெயரும் ஆட்சி நிலவரையும்

[1] 1. (1) இந்தியா மாநிலங்களைக் கொண்டதோர் ஒன்றியமாக இருக்கும்.

(2) மாநிலங்கள் என்பவை தற்பொழுது முதலாவது இணைப்புப் பட்டியலில் பகுதிகள் I, II மற்றும் IIIல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களாகும்.

(3) இந்தியாவின் ஆட்சி நிலவரை -

(அ) மாநிலங்களின் ஆட்சி நிலவரைகளையும்;

(ஆ) முதலாவது இணைப்புப்பட்டியலில் பகுதி IVல் தற்பொழுது குறிப்பிடப்பட்டுள்ள ஆட்சி நிலவரைகளையும்; மேலும்

(இ) அடையப் பெறக்கூடிய பிற ஆட்சி நிலவரைகளையும் உள்ளடக்கியதாக இருக்கும்.

புதிய மாநிலங்களை ஏற்று இணைத்தலும் நிறுவுதலும்

2. நாடாளுமன்றம், அவ்வப்பொழுது தான் தக்கதென கருதுகின்ற வரையுரைகள் மற்றம் வரைக்கட்டுகளுக்கு இணங்க சட்டத்தின் மூலம் புதிய மாநிலங்களை ஒன்றியத்துள் ஏற்றுக் கொள்ளலாம் அல்லது நிறுவலாம்.

புதிய மாநிலங்களைஉருவாக்குதலும் நிலவுறும் மாநிலங்களின் பரப்பிடங்களை, எல்லைகளை அல்லது பெயர்களை மாற்றம் செய்தலும்.

3. நாடாளுமன்றம், சட்டத்தினால் -

(அ) எந்தவொரு மாநிலத்திலிருந்தும் ஆட்சி நிலவரையைப் பிரித்தோ அல்லது இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களை அல்லது மாநிலங்

1. பிரிட்டிஷ் வடஅமெரிக்கச் சட்டம், 1867 ன் முகப்புரையில் உள்ள சொற்களின்படி, இந்தியாவின் அரசமைப்பு அடிப்படையில் கூட்டமைப்பாக இருந்தபோதிலும் இந்தியாவை ஓர் ஒன்றியம் என விளக்குவது பொருந்தமற்றதாகிவிடாது என இக்குழு கருதுகின்றது.

களின் பகுதிகளை ஒன்றிணைத்தோ அல்லது புதிய மாநிலம் ஒன்றை உருவாக்கலாம்;

(ஆ) எந்தவொரு மாநிலத்தின் பரப்பிடத்தையும் விரிவாக்கலாம்;

(இ) எந்தவொரு மாநிலத்தின் பரப்பிடத்தையும் குறைக்கலாம்;

(ஈ) எந்தவொரு மாநிலத்தின் எல்லைகளையும் மாற்றலாம்;

(உ) எந்தவொரு மாநிலத்தின் பெயரையும் மாற்றலாம்.

வரம்புரையாக: இந்திய அரசின் மூலமோ அல்லது

(அ) ஒன்று -

(i) எந்த மாநிலத்தின் ஆட்சிநிலவரை பிரிக்கப்படுகிறதோ அல்லது விலக்கப்படுகிறதோ அந்த மாநில சட்டப்பேரவையின் பெரும்பான்மையான பிரதிநிதிகளிடமிருந்து குடியரசுத்தலைவருக்கு இதன் பொருட்டான கோரிக்கை மனு கொடுக்கப்பட்டோ, அல்லது;

(ii) எந்தவொரு மாநிலத்தின் எல்லைகளோ அல்லது பெயரோ, முன்மொழியப்படும் இந்த சட்ட முன்வடிவிற்குள் சேர்க்கப்படுவதால் பாதிக்கப்படுமோ அந்த மாநில சட்டப்பேரவையில் இதன் பொருட்டான தீர்மானம் நிறைவேற்றப்படுவதன் மூலமும்;

(ஆ) தற்பொழுது முதலாவது அட்டவணை - பகுதி IIIல் உள்ள ஒரு மாநிலம் அல்லாது, வேறு எந்த மாநிலத்தின் எல்லைகளோ அல்லது பெயரோ முன்

1. முதலாம் அட்டவணை - பாகம் IIIல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலத்தைத் தவிர பிற மாநிலத்தைப் பொருத்தவரையில் அந்த மாநிலத்தின் முன் ஒப்புதல் தேவையிலை எனவும், அந்த மாநில சட்டப் பேரவையின் கருத்துக்களைக் குடியரசுத்தலைவர் பெற்றால் போதுமென்பதும் இக்குழுவின் கருத்தாகும்.

மொழியப்படும் சட்ட முன்வடிவில் உள்ளபடி பாதிக்கப் படுமாயின், அந்த சட்டமுன்வடிவு கொண்டு வருவ தற்கான செயற்குறிப்பு தொடர்பாகவும், அதில் உள்ள நிபந்தனைகள் குறித்தும், [1]அந்த மாநில சட்டப் பேரவையின் கருத்துக்களை குடியரசுத் தலைவர் பெற்றிருக்கவும், அத்தகைய முன்மொழிதல் முதலாவது அட்டவணை பகுதி-IIIல் அந்த காலக்கட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள எந்தவொரு மாநிலத்தின் எல்லை களோ அல்லது பெயரோ பாதிக்கப்படுமாயின், அத்தகைய முன்மொழிதலுக்கு அந்த மாநிலத்தின் முன் ஒப்புதலைப் பெற்றிருந்தால் அன்றியும்,

இதன் பொருட்டான சட்ட முன்வடிவு எதனை யும் நாடாளுமன்றத்தின் ஈரவைகள் எதிலும் அறிமுகப் படுத்துதல் ஆகாது.

முதலாம் இணைப்புப் பட்டியலைத் திருத்துவதற் காகவும், இடைநிகழ்வாகவும் மற்றும் விளைவுறுத்தும் பொருட்களுக்காகவும் 2, 3 ஆகிய உறுப்புக்களின் படி சட்டம் இயற்ற வகை செய்தல்.

4. 1. இந்த அரசமைப்பின் 2-ஆம் உறுப்பிலோ அல்லது 3-ஆம் உறுப்பிலோ குறிப்பிடப்படும் எந்த சட்டமும், அந்தச் சட்டத்தின் வழிவகைகளைச் செயல்திறப்படுத்துவதற்குத் தேவை எனக் கருதப் படும் வகையங்கள் முதலாம் அட்டவணைப் பட்டி யலைத் திருத்துவதற்கு உள்ளடங்கியவையாகவும், நாடாளுமன்றம் தேவை எனக் கருதும் இடைநிகழ்வு கள், விளைவுறுத்தும் பொருட்களை உள்ளடக்கியவை யாகவும் இருக்கலாம்.

2. மேற்சொன்ன சட்டம் எதுவும், 304-ஆம் உறுப்பைப் பொருத்தவரை, இந்த அரசமைப்பின் திருத்தமாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

# பகுதி II

## குடிமை

அரசமைப்பின் தொடக்க நாளில் குடிமை

5. இந்த அரசமைப்பின் தொடக்க நாளில் -

(அ) யார் ஒருவர், அல்லது எவருடைய பெற்றோர்களில் ஒருவர், அல்லது எவருடைய பெற்றோரைப் பெற்றவர்களில் எவரேனும் ஒருவர், இந்த அரசமைப்பில் வரையறுக்கப்பட்டுள்ள இந்திய ஆட்சி நிலவரைக்குள் பிறந்தவராகவும், 1947-ஆம் ஏப்ரல் முதல் நாளிற்குப் பிறகு வேறு நாட்டில் தன்னுடைய நிலையான இருப்பிடத்தைக் கொள்ளாதவருமான ஒவ்வொருவரும்;

(ஆ) யார் ஒருவர், அல்லது எவருடைய பெற்றோர்களில் ஒருவர், அல்லது எவருடைய பெற்றோரைப் பெற்றவர்களில் எவரேனும் ஒருவர், 1935 - ஆம் ஆண்டின் இந்திய அரசு சட்டத்தில் (மூல சட்டம் இயற்றியவாறு) வரையறுக்கப்பட்ட இந்தியாவிலோ, பர்மாவிலோ, இலங்கையிலோ அல்லது மலேசியாவிலோ பிறந்தவராகவும் இந்த ஆட்சி நிலவரைக்குள் தங்கள் குடியிருப்பைக் கொண்ட ஒவ்வொருவரும்,

இந்த அரசமைப்பு தொடக்க தேதிக்கு முன்பாக வேறு எந்த ஒரு வெளிநாட்டு குடிமையும் பெறாமல் இருப்பாரேயானால் அவர் இந்தியாவின் குடிமகன் ஆவர்.

**விளக்கம்:** இந்த உறுப்பின் (ஆ) விதிக்காக,

(i) ஒருவருக்கு 1925-ஆம் ஆண்டின் இந்திய வாரி

சுரிமை சட்டத்தின்- பகுதி II பொருத்தமாக்கப்பட்டு அதனடிப் படையிலான ஆட்சி நிலவரைக்குள் அவருடைய குடியிருப்பைப் பெற்றிருக்கக் கூடியவராக இருப்பினும், அல்லது

[1](ii) இந்த அரசமைப்பு தொடக்க தேதிக்கு முன்பாக, எத்தகைய குடியிருப்புநிலை பெற வேண்டுமென்ற தன்னுடைய விருப்பத்தை எழுத்து மூலமான வெளியீடாக மாவட்ட குற்றவியல் நடுவர் அலுவலகத்தில் தாக்கல் செய்து, அவ்வாறு வெளியிடும் தேதிக்கு ஒருமாதம் முன்பிருந்து இந்திய ஆட்சி நிலவரைக்குள் குடியிருப்பவரானால் அவர் இந்தியாவின் ஆட்சி நிலவரைக்குள் குடியிருப்புநிலை உடையவராக ஏற்றுக்கொள்ளப்படுவார்.

*நாடாளுமன்றம் சட்டத்தினால் குடிமை உரிமையை ஒழுங்குறுத்தல்:*

6. நாடாளுமன்றம், சட்டத்தின் மூலம் குடிமை பெறுதல், குடிமை அறுதல் பொறுத்தும், அது தொடர்பான பிற அனைத்து பொருட்பாடுகள் தொடர்பாகவும் மேற்கொண்டு வகையங்கள் செய்யலாம்.

1. விளக்கத்தின் விதி (ii) தொடர்பான வெளியீடுகளைப் பெறுவதற்கு, அத்தகைய வெளியீடுகளுக்கான பதிவேடுகள் மற்றும் இடைநிகழ்வுகளுக்காகவும்; சட்டம் இயற்றுவதன் மூலமோ அல்லது ஏனைய முறையிலோ, இந்த அரசமைப்பு தொடக்கத்திற்கு முன்னதாக விரைவான செயல்திட்டம் வகுக்கப்பட வேண்டுமென இக்குழு கருதுகின்றது.

# பகுதி III

## அடிப்படை உரிமைகள்

### பொதுவியல்

பொருள் வரையறை

7. இந்தப் பகுதியில், தறுவாயின் தேவை வேறானாலன்றி, 'அரசு' என்பது இந்தியாவின் அரசாங்கத்தையும் நாடாளுமன்றத்தையும், மாநிலங்கள் ஒவ்வொன்றின் அரசாங்கத்தையும் சட்டமன்றத்தையும், இந்திய ஆட்சி நிலவரைக்குள் உள்ள உள்ளாட்சி அல்லது பிறவகை அதிகார அமைப்புகள் அனைத்தையும் உள்ளடக்கும்.

விலக்குகள்

8. (1) இந்த அரசமைப்பு தொடங்கப்படுவதற்கு முன்பு அண்மைக்காலம் வரையில் இந்தியாவின் ஆட்சி நிலவரைக்குள் வழக்கிலுள்ள அனைத்து சட்டங்களும் இந்தப் பகுதியின் வகையங்களுக்கு முரண்படுமாயின், அத்தகைய முரண்பாட்டை பொருத்தமட்டில் அவை செல்லுபடியற்றவை ஆகிவிடும்.

2. இந்தப் பகுதியில் வழங்கப்பட்டுள்ள உரிமைகள் பறிக்கப்படக்கூடிய அல்லது சுருக்கப்படக்கூடிய சட்டம் எதையும் அரசு இயற்றக்கூடாது. இந்த விதிக்கு எதிரிடையான சட்டம் இயற்றப்பட்டால், அத்தகைய எதிரிடையைப் பொருத்தமட்டில் சட்டம் செல்லுபடியற்றதாகிவிடும்.

[1]வரம்புரையாக, நடைமுறையில் உள்ள சட்டத்தினால் ஏற்படும் சமன்மை இன்மை, ஒப்பிசைவின்மை, வசதியின்மை, அல்லது வேறுபாடுகாட்டுதல் ஆகியவற்றைக் களைவதற்குச் சட்டம் இயற்றுவதை இந்த விதியின் எதுவும் தடுக்க முடியாது.

---

1. இந்த வரம்புரை, நடைமுறையிலுள்ள வேறுபடுத்துதலை களைவதற்கு ஏதுவாக அரசுசட்டம் இயற்றுவதற்காக சேர்க்கப்பட்டுள்ளது. ஒரு கருத்தில் அந்தகைய சட்டங்கள் அவசியமான வேறுபாடு காட்டுதலாயிருக்கும்; ஏனென்றால் இதுவரையில் மட்டுமிஞ்சிய அனுகூலங்களை அனுபவித்து வந்தவர்களுக்கு எதிராக அவை செயல்படும்.

3. இந்த உறுப்பில் 'சட்டம்'' என்பது, இந்திய ஆட்சியின் நிலவரைக்குள் அல்லது அதனுடைய ஏதாவது பகுதிக்குள் சட்டச் செல்லாற்றல் கொண்ட அவசரச் சட்டம், ஆணை, துணைவிதி, விதி, ஒழுங்குறுத்தும் விதி, அறிவிக்கை, வழக்கம் அல்லது வழக்காறு இவற்றை உள்ளடக்கும்.

## சமன்மைக்கான உரிமைகள்

சமயம், இனம், சாதி, பாலினம் காரணமாக வேற்றுமை காட்டுதலுக்குத் தடை:

9. (1) அரசு, குடிமகன் எவர்மாட்டும், சமயம், இனம், சாதி, பாலினம் இவற்றை மட்டுமே அல்லது இவற்றில் ஏதாவதொன்றை மட்டுமே காரணமாகக் கொண்டு வேற்றுமை காட்டுதல் ஆகாது.

குறிப்பாக, குடிமகன் எவரையும்

(அ) கடைகள், பொது உண்டிச்சாலைகள், உணவு விடுதிகள், பொது கேளிக்கையிடங்கள் ஆகியவற்றிற்குச் சென்று வருவதையோ;

(ஆ) அரசு நிதியினை முழுவதுமாகவோ, பகுதியாகவோ கொண்டு பேணப்படும் அல்லது பொது மக்களின் பயன்பாட்டுக்கு உரித்தாக்கப்பட்டுள்ள கிணறுகள், குளங்கள், சாலைகள், பொதுமக்கள் சாருமிடங்கள்' ஆகியவற்றைப் பயன்படுத்தவதையோ பொறுத்துச் சமயம், இனம், சாதி, பாலினம் இவற்றை மட்டுமே அல்லது இவற்றுள் ஏதொன்றையும் மட்டுமே காரணமாகக் கொண்டு இயலாமை, கடப்பாடு, வரைதடை அல்லது நிபந்தனை எதற்கும் உட்படுத்துதல் ஆகாது.

2. மகளிருக்காகவும் சிறுவர்களுக்காகவும் அரசு தனி ஏற்பாடு எதனையும் செய்வதற்கு இந்த உறுப்பிலுள்ள எதுவும் தடையூறு ஆவதில்லை.

பொது வேலையமர்த்தங்கள் தொடர்பாகச் சமன்மையான வாய்ப்புநலம்:

10. (1) அரசின் கீழுள்ள வேலையமர்த்தம் தொடர்பாக குடிமக்கள் அனைவருக்கும் சமன்மையான வாய்ப்பு நலம் இருத்தல் வேண்டும்.

(2) குடிமக்கள் எவரையும், சமயம், இனம், சாதி, பாலினம், மரபுவழி, பிறப்பிடம் இவற்றுள் ஏதாவது ஒன்றை மட்டுமே காரணமாகக் கொண்டு அரசின் கீழுள்ள பதவி எதனையும் பொறுத்துத் தகுதி அற்றவ ராக்குதல் ஆகாது.

(3) இந்த உறுப்பிலுள்ள எதுவும், அரசின் கீழுள்ள பணியங்களில் போதிய அளவிற்கு இடம்பெறவில்லை என அரசு கருதும் [1]பிற்படுத்தப்பட்ட வகுப்பு எதனை யும் சேர்ந்த குடிமக்களின் நலம் சார்பாக பதவியமர்த் தங்களை அல்லது பணியிடங்களை ஒதுக்கீடு செய் வதற்கான ஏற்பாடு எதனையும் அரசு செய்வதற்கு தடையூறு ஆவதில்லை.

(4) இந்த உறுப்பிலுள்ள எதுவும், சமயம் அல்லது சமயக் கிளை சார்ந்த நிறுவனம் ஒன்றின் அலுவற் பாடுகள் தொடர்பாக ஒரு பதவி வகிப்பவரோ அதன் ஆட்சிக் குழும உறுப்பினர் எவருமோ ஒரு குறிப் பிட்ட சமயத்தைப் பின்பற்றுபவராகவோ ஒரு சமயக் கிளையைச் சேர்ந்தவராகவோ இருத்தல் வேண்டு மென வகை செய்கிற சட்டம் எதுவும் செயற்படு வதைப் பாதிப்பதில்லை.

*தீண்டாமை ஒழிப்பு*

11. 'தீண்டாமை'' ஒழிக்கப்படுகிறது; அதனை எவ் வகையிலும் கடைப்பிடிப்பது கடிந்து தடை செய்யப் படுகிறது. 'தீண்டாமை'' காரணமாக எழும் தகவுக்கேடு செயலுறுத்துவது சட்டப்படி தண்டனையுறு குற்றச் செயலாகும்.

*விருதுப் பட்டங்கள் ஒழிப்பு:*

12. (1) விருதுப் பட்டம் எதனையும் அரசு வழங்குதல் ஆகாது.

(2) இந்தியாவின் குடிமகன் எவரும், அயல்நாட்டு

1. ''வகுப்பு எதனையும் சேர்ந்த குடிமக்களின்'' என்ற வார்த்தை களுக்கு முன்பு ''பிற்படுத்தப்பட்ட'' என்ற வார்த்தை சேர்க்கப் பட வேண்டுமென்பது இக்குழுவின் கருத்தாகும்.

அரசு எதனிடமிருந்தும் விருதுப் பட்டம் எதனையும் ஏற்றுக்கொள்ளுதல் ஆகாது.

(3) அரசின்கீழ் ஊதியத்திற்குரிய அல்லது நம்பிக்கைக்குரிய பதவி ஒன்றை வகிக்கின்ற எவரும், குடியரசுத் தலைவரின் இசைவின்றி, அயல்நாட்டு அரசு எதனிடமிருந்தும் பரிசு, பதவியூதியம், பட்டம் எதனையும் அல்லது அவ்வரசு எதன் கீழும் எவ்வகைப் பதவியையும் ஏற்றுக்கொள்ளுதல் ஆகாது.

பேச்சுச் சுதந்திரம் முதலியவை பற்றிய குறிப்பிட்ட சில உரிமைகளுக்குப் பாதுகாப்பு

13. (1) இந்த உறுப்பின் ஏனைய வகையங்களுக்கு உட்பட்டு, குடிமக்கள் அனைவரும்-

(அ) பேச்சு, சிந்தனை வெளிப்படுத்துகை ஆகியவற்றிற்கான சுதந்திரத்திற்கும்;

(ஆ) அமைதியாக ஆயுதங்கள் இன்றி கூடுவதற்கும்;

(இ) சங்கங்கள் அல்லது கூட்டமைவுகள் அமைப்பதற்கும்;

(ஈ) இந்திய ஆட்சி நிலவரை எங்கணும் தடையின்றி சென்று வருவதற்கும்;

(உ) இந்திய ஆட்சி நிலவரையின் எப்பகுதியிலும் குடியிருப்பதற்கும் நிலையாகக் குடியமர்வதற்கும்;

(ஊ) சொத்து தன்னுடைமையாக்குவதற்கும், கட்டுப்பாட்டில் வைத்திருப்பதற்கும், செயல்முடிவு கட்டுவதற்கும்;

(எ) விழைதொழில் எதனையும் புரிந்து வருவதற்கும், அல்லது வாழ்தொழில், வாணிகம் அல்லது பெருவாணிகம் எதனையும் நடத்தி வருவதற்கும் உரிமை உடையோர் ஆவர்.

2. இந்த உறுப்பின் (1) ஆம் கூறின் (அ) உட்கூறிலுள்ள எதுவும், அவதூறு எழுதுதல், பொய்யுரை

பழிசுமத்துதல், புகழைக் கெடுத்தல், ஆட்சியை எதிர்த்து கிளர்ச்சி செய்ய தூண்டுதல், அல்லது தகைமை, நல்லொழுக்கத்திற்கு எதிராக தீங்கு விளைவித்தல், அல்லது அரசின் அடிப்படைக் கோட்பாடு, ஆணை உரிமையைத் தகர்க்கக்கூடிய வேறு எந்த செயல் தொடர்பாகவும் நிலவுறும் சட்டத்தின் செயல்பாட்டினைப் பாதிப்பதுமில்லை அல்லது அரசு எந்தவித சட்டம் இயற்றுவதற்கும் தடையூறு ஆவதுமில்லை.

(3) மேற்சொன்ன கூறின், (ஆ) உட்கூறிலுள்ள எதுவும், அந்த உட்கூறினால் வழங்கப்படும் உரிமையினைத் துய்த்தல் பொறுத்து, பொது ஒழுங்கமைதியின் நலங்கருதி வரைத்தடைகளை விதிக்கின்ற அளவிற்கு, நிலவுறும் எந்த ஒரு சட்டத்தின் செயற்பாட்டினையும் பாதிப்பதுமில்லை; அத்தகைய சட்டம் எதனையும் அரசு இயற்றுவதற்குத் தடையூறு ஆவதுமில்லை.

(4) மேற்சொன்னகூறின் (இ) உட்கூறிலுள்ள எதுவும், அந்த உட்கூறினால் வழங்கப்படும் உரிமையினைத் துய்த்தல் பொறுத்து, பொதுமக்களின் நலங்கருதி வரைத்தடைகள் விதிக்கின்ற அளவிற்கு, நிலவுறும் எந்த ஒரு சட்டத்தின் செயற்பாட்டினையும் பாதிப்பதுமில்லை. அத்தகைய சட்டம் எதனையும் அரசு இயற்றுவதற்குத் தடையூறு ஆவதுமில்லை.

(5) மேற்சொன்ன கூறின் (ஈ), (உ), (ஊ) ஆகிய உட்கூறுகளிலுள்ள எதுவும், அந்த உட்கூறுகளினால் வழங்கப்படும் உரிமைகளில் எதனையும் துய்த்தல் பொறுத்து, பொதுமக்களின் நலங்கருதியோ தொன்முதிய பழங்குடியினரின் நலங்களைப் பாதுகாப்பதற்காகவோ[1] வரைத்தடைகளை விதிக்கின்ற அளவிற்கு, நிலவுறும் எந்த ஒரு சட்டத்தின் செயற்பாட்டினையும் பாதிப்பது

1. இந்த உறுப்பில் எந்தவொரு சிறுபான்மையினர் குழுவிற்கும் பாதுகாப்பு தேவையில்லை என இக்குழு கருதுகின்றது.

மில்லை; அத்தகைய சட்டம் எதனையும் அரசு இயற்று வதற்கு தடையூறு ஆவதுமில்லை.

(6) மேற்சொன்ன கூறின் (எ) உட்கூறிலுள்ள எதுவும், அந்த உட்கூறினால் வழங்கப்படும் உரிமையினைத் துய்த்தல் பொறுத்து, குறிப்பாக விழைதொழில் எதனை யும் புரிந்து வருவதற்கு அல்லது வாழ்தொழில், வாணிகம் அல்லது பெருவாணிகம் எதனையும் நடத்தி வருவதற்குத் தேவையான விழைதொழில் சார்ந்த அல்லது தொழில்நுட்பம் சார்ந்த தகுதிப்பாடுகளை விதிமுறை செய்வதற்கு அதிகாரமுடையவரை நியமனம் செய்வதற்கும் அதிகாரமளிப்பதற்கும்; பொது ஒழுங் கமைதி, நல்லொழுக்கம், நல்வாழ்வு இவற்றின் நலங்கருதி, வரை தடைகளை விதிக்கின்ற அளவிற்கு, நிலவுறும் எந்தவொரு சட்டத்தின் செயல்பாட்டினைப் பாதிப்பதுமில்லை, அது பொறுத்த சட்டம் எதனையும் அரசு இயற்றுவதற்குத் தடையூறு ஆவதுமில்லை.

குற்றச் செயல்களுக்கான குற்றத் தீர்ப்பு பொறுத்த பாதுகாப்பு

14. (1) ஒருவர் மீது குற்றமெனச் சார்த்தப்பட்ட செயல் எதுவும், அது இழைக்கப்பட்ட காலத்தில் செல்லாற்றலிலிருந்த சட்டம் ஒன்றை மீறியதாகயிருந் தாலன்றி, அவரைக் குற்றத்தீர்ப்புக்கு உள்ளாக்குதல் ஆகாது; அத்துடன், அக்குற்றச் செயல் இழைக்கப் பட்ட காலத்தில் செல்லாற்றலிலிருந்த சட்டத்தின்படி விதித்திருக்கக்கூடிய தண்டனையை விட அதிகமான தண்டனைக்கு அவரை உட்படுத்தலும் ஆகாது.

(2) ஒருவர் ஒரே குற்றத்திற்காக ஒருமுறைக்கு மேல் தண்டிக்கப்படுதல் ஆகாது.

(3) குற்றஞ்சார்த்தப்பட்ட ஒருவரை தமக்கெதிர் சான்றளிப்பவராக இருக்குமாறு கட்டாயப்படுத்துதல் ஆகாது.

உயிருக்கும், உடல்சார் உரிமைக்கும், சட்டத்தின் முன் சமன்மைக்கும் பாதுகாப்பு

[1]15. இந்திய ஆட்சி நிலவரைக்குள் ஒருவரது உயிரோ உடல்சார் உரிமையோ, சட்டம் விதித்தமைத்துள்ள நெறிமுறையின்படி அன்றி, பறிக்கப்படுதலோ, அல்லது சட்டத்தின் முன் சமன்மை என்றநிலை அல்லது சட்டங்களுக்குச் சமன்மையானது பாதுகாவல் மறுக்கப்படுவதோ ஆகாது.

இந்திய ஆட்சி நிலவரை முழுவதிலும் வாணிகம், பெருவாணிகம், வாணிகப் போக்குவரத்து தொடர்பு ஆகியவற்றிக்குச் சுதந்திரம்:

[2]16. இந்த அரசமைப்பின் 244-ஆம் உறுப்பிலுள்ள வகையங்களுக்கும் நாடாளுமன்றத்தினால் இயற்றப்படும் எந்த ஒரு சட்டத்திற்கும் உட்பட்டு, இந்திய ஆட்சி நிலவரை முழுவதிலும் வாணிகம், பெரு வாணிகம் மற்றும் வாணிகப்போக்குவரத்து தொடர்பு கொள்வதற்கும் சுதந்திரம் உண்டு.

---

1. 'உரிமை' என்ற சொல்லிற்கு முன் 'உடல்சார்' என்ற சொல்லைச் சேர்ந்துக் குறிப்பிடவில்லை என்றால், அந்தச் சொல் மிகுந்த விரிவான பொருள்கொள்ளப்பட்டு, முன்னதாக உறுப்பு-13ல் விளக்கப்பட்டுள்ள சுதந்திரங்களையும் உள்ளடக்கியவை ஆகிவிடலாம் என்பது இக்குழுவின் கருத்தாகும்.

   ''சட்டத்தின் முறைப்படியான செயல்பாட்டினாலன்றி'' என்ற சொற்களைவிட ''சட்டம் விதித்தமைத்துள்ள நெறிமுறையின் படி'' என்ற சொல்லமைப்பு தெளிவாக உள்ளதால் இவ்வார்த்தைகள் இக்குழுவினால் மாற்றி அமைக்கப்பட்டுள்ளன. (1946-ஆம் ஆண்டின் ஜப்பானிய அரசமைப்பு XXXI உறுப்பிலிருந்து) ஐரிஷ் நாட்டின் இணையான வகையம் பின்வருமாறு குறிப்பிடுகிறது: ''சட்டத்தின் ஒப்புதலின்றி ஒரு குடிமகனுடைய உடல்சார் உரிமை பறிக்கப்படுதல் ஆகாது.''

   அமெரிக்க நாட்டின் அரசமைப்பு (1865) உறுப்பு XIV ன் விதி -1ல் உள்ளவாறு, ''சட்டத்தின் முன் சமன்மை'' என்ற சொற்களுக்குப் பிறகு, ''அல்லது சட்டங்களுக்குச் சமன்மையான பாதுகாவல்'' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டுமென்பது இக்குழுவின் கருத்தாகும்.

2. அரசமைப்புப் பேரவையினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட வகையங்களில் ''வாணிகம், பெருவாணிகம் மற்றும் வாணிகப் போக்குவரத்துத் தொடர்பு'' என்ற சொற்களுக்குப் பிறகு காணப்படும், ''குடிமக்களாலும் அவர்களுக்கு இடையிலும்'' என்ற சொற்கள் இக்குழுவினால் விடப்பட்டுள்ளது. இந்த விளக்கவுரை சொற்களினால், நாட்டின் எல்லைகளிலுள்ள பொருட்களை அனுப்புவர் - ஏற்றுக்கொள்பவர் ஆகியோருடைய தேசியத் தன்மை பற்றிய மிகவும் விரிவான விசாரணைக்குத் தேவை ஏற்படலாம் என்பதனால் இவ்வார்த்தைகள் விடப்பட்டுள்ளன.

*மனிதரை வணிகப்பொருளாக்குதல், வலுக்கட்டாயமாக வேலை சுமத்துதல் ஆகியவற்றிற்குத்தடை*

17. (1) மனிதரை வணிகப் பொருளாக்குதலும், 'பேகார்'' வழக்கமும், அதுபோன்ற வலுக்கட்டாயமாக வேலை சுமத்தும் பிற வழக்கங்களும் தடைசெய்யப் படுகின்றன; மேலும் இந்த வகையத்தின் மீறுகை எதுவும், சட்டப்படி தண்டனையுறு குற்றச்செயலாகும்.

(2) இந்த உறுப்பிலுள்ள எதுவும், பொது நோக்கங்களுக்காக அரசு கட்டாயப்பணியைச் சுமத்துவதற்குத் தடையூறு ஆவதில்லை. அரசு அத்தகைய பணியைச் சுமத்துகையில் இனம், சமயம், சாதி, வகுப்பு இவற்றைக் காரணமாகக் கொண்டு எவ்வாறான வேற்றுமையும் காட்டுதல் ஆகாது.

*தொழிற்சாலைகள் முதலியவற்றில் சிறார்களை வேலையமர்த்தம் செய்தலுக்குத் தடை*

18. பதினான்கு வயதுக்குக் குறைந்த சிறார் எவரையும் தொழிற்சாலை அல்லது சுரங்கம் எதிலும் வேலையமர்த்துதல் அல்லது இடர்மிகு வேலையமர்த்துதல் எதிலும் ஈடுபடுத்தலும் ஆகாது.

## சமயம் தொடர்பான உரிமைகள்

*மனச்சான்றுவழிஒழுகுவதற்கான சுதந்திரமும், சுதந்திரமாகச் சமயநெறி ஓம்புதலும், ஒழுகுதலும், ஓதிப் பரப்புதலும்:*

19. (1) பொது ஒழுங்கமைதி, ஒழுக்கநெறி, நலவாழ்வு ஆகியவற்றிற்கும் இந்தப் பகுதியின் பிற வகையங்களுக்கும் உட்பட்டு, அனைவரும், மனச்சான்றுவழி ஒழுகுவதற்கான சுதந்திரத்திற்கும் சுதந்திரமாகச் சமயநெறி ஓம்புதல், ஒழுகுதல், ஓதிப் பரப்புதல் ஆகியவற்றிற்கான உரிமைக்கும் சரிசமமாக உரிமை கொண்டவர் ஆவர்.

**விளக்கம்:** கிர்பான்கள் தரிப்பதும் தாங்கிச் செல்வதும் சீக்கிய சமயத்தை ஓம்புவதில் உள்ளடங்கியனவாகக் கொள்ளப்படும்.

(2) இந்த உறுப்பிலுள்ள எதுவும் -

(அ) சமயநெறி ஒழுகலாற்றலுடன் இணைந்திருக்கும் பொருளியல், நிதியியல், அரசியல் நட

வடிக்கை அல்லது சமயச் சார்பற்ற பிறநடவடிக்கை எதனையும் ஒழுங்குறுத்துவதான அல்லது கட்டுப் படுத்துவதான,

(ஆ) சமுதாய நலப்பாடு மற்றும் சீர்திருத்தத் ததிற்கு அல்லது பொதுமத்தன்மை வாய்ந்த இந்து சமய நிறுவனங்களை இந்துக்களின் எந்தவொரு வகுப்பினருக்கும் பிரிவினருக்கும் திறந்து விடுதலுக் கான நிலவுறும் சட்டம் ஒன்றன் செயற்பாட்டைப் பாதிப்பதுமில்லை; அத்தகைய சட்டத்தை இயற்றுவதி லிருந்து அரசைத் தடுப்பதுவுமில்லை.

சமயம் சார்ந்த காரியங்களை நிர்வகிக்கவும், சமய, அற நோக் கங்களுக்காக சொத்துக்களைச் சொந்தமாக வைத்திருக்க வும், ஈட்டுவதற் கும் ஆண்டு வருவதற்குமான சுதந்திரம்.

20. ஒவ்வொரு சமயக்கிளையும் அல்லது அதன் பிரிவு எதுவும் -

(அ) சமய நோக்கங்களுக்காகவும் அற நோக்கங் களுக்காகவும் நிறுவனங்களை நிறுவுவதற்கும் பேணி வருவதற்கும்,

(ஆ) சமயம் சார்ந்தவற்றில் தனக்குரிய காரியங் களை நிருவகிப்பதற்கும்,

(இ) அசைவியல் சொத்தினையும் நிலையியல் சொத்தினையும் சொந்தமாக வைத்திருப்பதற்கும் ஈட்டு வதற்கும்,

(ஈ) அத்தகைய சொத்தினைச் சட்டத்திற்கிணங் கிய வகையில் ஆண்டுவருவதற்கும் உரிமை உடையது ஆகும்.

குறிப்பிட்ட சமயம் அல்லது சமயக்கிளை ஒன்றை வளர்ப் பதற்கோ பேணிக்காப் பதற்கோ ஆகும் செலவிற்கு வரி கள் செலுத்துவது குறித்த சுதந்திரம்.

21. குறிப்பிட்ட சமயம் அல்லது சமயக்கிளை ஒன்றை வளர்ப்பதற்கோ பேணிவருவதற்கோ ஆகும் செலவுகளைச் செய்வதற்கெனக் குறித்தொதுக்கப் பட்டுள்ள தொகைகளை ஈட்டுவதற்கான வரிகள் எவற்றையும் செலுத்துமாறு எவரையும் கட்டாயப் படுத்தக்கூடாது.

*குறித்த சில கல்வி நிறுவனங்களில் சமய போதனை பயில வருவது அல்லது சமய வழிபாட்டுக்கு வருகை தருவது குறித்த சுதந்திரம்.*

*[1]22.(1) முழுவதுமாகவே அரசு நிதியங்களைக் கொண்டு பேணிவரப்படும் கல்வி நிறுவனம் எதிலும் சமயப் போதனை எதனையும் செய்தல் ஆகாது;*

*வரம்புநிலையாக இந்தக் கூறிலுள்ள எதுவும், கல்விநிறுவனம் ஒன்று அரசினால் நிருவகிக்கப்பட்டு வருவதாயினும்கூட, அதில் சமய போதனை செய்யப் பட வேண்டும் என்று வேண்டுறுத்துகிற நிலைக் கட்டளை அல்லது பொறுப்புக் கட்டளை ஒன்றன்படி அது நிறுவப்பட்டதாயிருப்பின், அத்தகைய நிறுவனத் திற்குப் பொருந்துறுதல் ஆகாது.*

*(2) அரசினால் ஏற்பளிக்கப்பட்டிருக்கிற அல்லது அரசு நிதியங்களிலிருந்து உதவி பெறுகிற கல்வி நிறு வனம் ஒன்றில் பயிலவரும் எவரும், அத்தகைய நிறு வனத்தில் புகட்டப்படும் சமயபோதனை எதிலும் கலந்துகொள்ள வேண்டுமென்றும், அத்தகைய நிறு வனத்தில் அல்லது அதனுடன் இணைந்த வளாகம் ஒன்றில் நடத்தப்படும் சமய வழிபாடு எதற்கும் வருகை தரவேண்டுமென்றும், அவரோ, அவர் இளவராக இருப்பின், அவருடைய காப்பாளரோ அதற்கு இசைவு அளித்திருந்தாலன்றி, அவரை வேண்டுறுத்துதல் ஆகாது.*

*(3) இந்த உறுப்பில் எதுவும், எந்த ஒரு சமூகமும் அல்லது சமயக் கிளையும் அந்த சமூகத்தை அல்லது சமயக் கிளையைச் சார்ந்த மாணவர்களுக்கு ஒரு கல்வி நிறுவனத்தில் அதன் வேலை நேரத்திற்குப் பிறகு சமயபோதனை வழங்கப்படுவதைத் தடைசெய்தல் ஆகாது.*

## பண்பாடு, கல்வி பற்றிய உரிமைகள்

*சிறுபான்மையினர் நலன்களுக்குப் பாதுகாப்பு.*

*23.(1) இந்திய ஆட்சி நிலவரையில் அல்லது அதன்பகுதி எதிலும் குடியிருந்துவரும் குடிமக்களில் எப்பிரிவினரும், தமக்கெனத் தனிவேறான மொழி,*

*1. இந்த உறுப்பு தனிக் குழுவின் பரிந்துரையைப் பின்பற்றியதாகும்.*

எழுத்து வடிவம் அல்லது பண்பாடு உடையவரா யிருப்பின் அவற்றைப் பேணிக் காக்கும் உரிமை உடை யவர் ஆவர்.

2. சமயம், சமூகம், மொழி அடிப்படையிலான சிறுபான்மையினர், அரசினால் பேணிவரப்படும் கல்விநிறுவனம் எதிலும் சேர்ப்பதற்கு, அத்தகைய சிறுபான்மையினரைச் சார்ந்த எவரையும் வேற்றுமைப் படுத்துதல் ஆகாது.

3. (அ) சமயம், சமூகம், மொழி அடிப்படை யிலான அனைத்து சிறுபான்மையினருக்கும் தங்கள் விருப்பம்போல் கல்வி நிறுவனங்களை நிறுவுவதற் கும் நிர்வகிப்பதற்கும் உரிமை உண்டு.

(ஆ) கல்வி நிறுவனங்களுக்கு உதவி வழங்கு கையில், கல்வி நிறுவனம் ஒன்று, சமயம், சமூகம் அல்லது மொழி எதன் அடிப்படையிலும் சிறுபான்மை யினராக உள்ளவர்களின் மேலாண்மையில் இருக்கிற தென்னும் காரணத்தைக்கொண்டு அதற்கு எதிராக அரசு வேற்றுமை காட்டுதல் ஆகாது.

## சொத்துக்கான உரிமை

*சொத்தினைக் கட்டாயமாகக் கையகப்படுத் துதல்:*

24. (1) சட்டத்தின் அதிகாரத்தாலன்றி எந்த ஒரு மனிதருடைய சொத்தும் பறிக்கப்படுதல் ஆகாது.

(2) சொத்தினைக் கையகப்படுத்துவதற்கு அல்லது ஈட்டுவதற்கு இழப்பீடுவழங்க சட்டத்தில் வகை செய்யப்பட்டு இழப்பீட்டுத் தொகை முடிவு செய்யப்பட்டு அல்லது எந்த செயல்முறைக் கொள்கை யின்படி எந்தமுறையில் இழப்பீடு வழங்குவதென முடிவுசெய்யப்பட்டாலன்றி, அசைவியல் சொத்து, நிலவியல் சொத்து, சொந்தமான எந்த ஒரு சமூக கூட்டுக்கழகம், வாணிகம் அல்லது தொழில்சார்ந்த நிறுவனம் எதிலும் பொறுப்புரிமைப் பங்கு ஆகிய எந்த சொத்தையும் பொதுச்செயல் நோக்கத்திற்காக

கையகப்படுத்துவதற்கும் ஈட்டுவதற்கும் அதிகாரமளிக்கும் எந்த ஒரு சட்டத்தின்படியும் அவ்வாறு கையகப்படுத்துதலோ, ஈட்டுதலோ ஆகாது.

(3) இந்த உறுப்பின் (2) வது கூறு -

(அ) நிலவுறும் சட்டத்தின் வகையங்கள் எதனையும், அல்லது

(ஆ) எந்த ஒரு வரி சுமத்துதலுக்கோ, வரி விதிப்பதற்கோ அல்லது பொதுமக்கள் நல்வாழ்வு, உயிருக்கும் உடைமைக்கும் தீங்கு நேராமல் தடுப்பது போன்ற காரணங்களுக்காகவும் அரசு இனிமேல் ஏற்படுத்தும் சட்ட வகையங்களையும் பாதிக்காது.

## அரசமைப்பு தீர்வழிகளுக்கான உரிமை

இந்தப் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகளைச் செயலுறுவதற்கான தீர்வழிகள்.

25. (1) இந்தப் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகளைச் செயலுறுத்துவதற்காக, உரிய நடவடிக்கைகள் மூலம் உச்சநீதிமன்றத்தை அணுகிக் கோரும் உரிமைக்கு உத்தரவாதமளிக்கப்படுகிறது.

(2) இந்தப் பகுதியினால் வழங்கப்படும் உரிமைகளில் எதனையும் செயலுறுத்துவதற்காக, பணிப்புரைகள் அல்லது ஆணைகள் அல்லது ஆட்கொணர் விப்பு, செயலுறுத்து, தடையுறுத்து, தகுதிவினவு, நெறிமுறை கேட்பு ஆகியவற்றின் தன்மையில் நீதிப் பேராணைகளில் பொருத்தமான நீதிப்பேராணைகள் இவற்றைப் பிறப்பிப்பதற்கு உச்சநீதிமன்றம் அதிகாரம் உடையது ஆகும்.

(3) இந்த உறுப்பின் (2) ஆம் கூறின்படி உச்ச நீதிமன்றம் செலுத்துவதாகும் அதிகாரங்கள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும், பிற நீதிமன்றம் எதுவும் அதற்குரிய அதிகாரவரம்பு எல்லைக்குள் செலுத்தி வருவதற்கு நாடாளுமன்றம் சட்டத்தினால் அதிகாரம் அளிக்கலாம்.

(4) இந்த உறுப்பினால் உத்தரவாதமளிக்கப் பட்டுள்ள உரிமை, இந்த அரசமைப்பினால் பிறவாறு வகை செய்யப்பட்டுள்ளபடி அல்லாமல், இடை நிறுத்தி வைக்கப்படுதல் ஆகாது.

*இந்தப் பகுதியில் உத்தரவாதமளிக்கப்பட்டுள்ள உரிமைகளைப் படையினருக்குப் பொருந்துறச் செய்கையில் அவற்றை மாற்றமைவு செய்ய நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம்.*

26. இந்தப் பகுதியில் உத்தரவாதமளிக்கப்பட்டுள்ள உரிமைகளில் எதனையும் ஆயுதப் படையினருக்கு அல்லது பொது ஒழுங்கமைதியைப் பேணும் பொறுப் புடைய படையினருக்குப் பொருந்துறச் செய்வதில், அவர்களுடைய கடமைகள் முறையாக ஆற்றப் படுவதையும், அவர்களிடையே ஒழுங்குக் கட்டுப்பாடு பேணிவரப்படுவதையும் உறுதிப்படுத்தும் வகையில் எந்த அளவுக்கு கட்டுப்படுத்த வேண்டும் அல்லது நீக்கறவு செய்ய வேண்டும் என்பதை நாடாளு மன்றம் சட்டத்தினால் தீர்மானிக்கலாம்.

*இந்தப் பகுதியின் வகையங்களுக்குச் செல்திறம் அளிப்பதற்காகச் சட்டமியற்றுதல்.*

27. இந்த அரசமைப்பில் வேறேதாவது இடத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது எவ்வாறிருப்பினும், முதல் பட்டியலின் பகுதிI அல்லது பகுதி-IIIல் நிகழ்வில் குறிப்பிடப்பட்டுள்ளவாறு-

(அ) இந்தப் பகுதியில் நாடாளுமன்றத்தினால் சட்டமியற்ற வகையம் செய்யப்பட்டுள்ள பொருட் பாடுகள் எதனைப் பொருத்தும்,

(ஆ) இந்தப் பகுதியின்படி குற்றச் செயல்கள் என விளம்பப்பட்டிருக்கிற செயல்களுக்குத் தண்டனையை வகுத்துறைப்பதற்காகவும்;

சட்டங்களை இயற்றுவதற்கான அதிகாரம் நாடாளு மன்றத்திற்கே உள்ளது; மாநில சட்டமன்றத்திற்கு இல்லை. மேலும், நாடாளுமன்றம், இந்த அரசமைப் பின் தொடக்க நிலைக்குப் பின்பு, கூடியவிரைவில், அத்தகைய பொருட்பாடுகளுக்கும், அத்தகைய செயல் களுக்குத் தண்டனையை வகுத்துறைப்பதற்காகவும் சட்டங்களை இயற்றுதல் வேண்டும்.

இந்திய ஆட்சி நிலவரையில் அல்லது அதன் பகுதி எங்காவது இந்த உறுப்பின் கூறு (அ)வில் குறிப்பிடப்பட்டுள்ள பொருட்பாடுகள் எதனைப் பொருத்தும் அல்லது இந்தப்பகுதியில் குற்றச் செயல்கள் என விளம்பப்பட்டு தண்டனைக்கு வகையம் செய்வதற்கென செல்லாக்கத்திலிருக்கும் சட்டம் எதுவும், நாடாளுமன்றத்தினால் அல்லது தகுதியுடைய அதிகாரம் உடையவர் மூலம் மாற்றமோ, நீக்கறவோ செய்கின்ற வரையில், தொடர்ந்து செல்லாக்கத்திலிருக்கும்.

# பகுதி - IV

## அரசுக் கொள்கையினை நெறிப்படுத்தும் கோட்பாடுகள்

*பொருள் வரையறை.*

28. இந்தப் பகுதியில், தறுவாயின் தேவை வேறானாலன்றி, 'அரசு'' என்பது, இந்த அரசமைப்பின் -III ஆம் பகுதியில் கூறப்பட்டுள்ள அதே பொருளை உடையதாகும்.

*இந்தப் பகுதியில் அறிவிக்கப்பட்டுள்ள கோட்பாடுகளைப் பயன்படுத்துதல்.*

29. இந்தப் பகுதியில் அடங்கியுள்ள வகையங்கள் நீதிமன்றம் எதனாலும் செயலுறுத்துப்படுவன அல்ல; ஆயினும், இதில் விதிக்கப்பட்டுள்ள கோட்பாடுகள் நாட்டின் ஆட்சிநெறிக்கு அடிப்படையாக அமையும்; மேலும், சட்டங்கள் இயற்றுகையில் இந்தக் கோட் பாடுகளைப் பயன்படுத்துவது அரசின் கடமை ஆகும்.

*மக்கள் நலப்பாட்டை வளர்க்கும் வகையில், சமுதாய முறையமைவினை எய்திடுமாறு அரசு செய்தல் வேண்டும்.*

30. அரசு, தேசிய வாழ்வின் அமைவனங்கள் அனைத்திலும் சமுதாய, பொருளியல், அரசியல் நீதி நிறைந்து நிலவுவதான ஒரு சமுதாய முறையமைவினைப் பயனுறு எய்திப் பாதுகாத்து, மக்களின் நலப்பாட்டை வளர்த்திட அரிதின் முயலுதல் வேண்டும்.

அரசு பின்பற்ற வேண்டிய குறித்த சில கொள்கைக் கோட்பாடுகள்.

31. குறிப்பாக, பின்வருவனவற்றை எய்திடுமாறு அரசு தன் கொள்கையை நெறிப்படுத்துதல் வேண்டும் -

(i) குடிமக்கள், ஆண்களும் பெண்களும் சரிநிகராக, வாழ்க்கைக்குப் போதுமான வழிவகைக்கு உரிமை உடையவராதல்;

(ii) பொதுமக்கள் நலன்களுக்கு நனிசிறக்க உதவும்வகையில், சமுதாயத்தின் பொருள்வளங்கள் மீதான சொத்துரிமையினையும் கட்டாள்கையினையும் பகிர்ந்தளித்தல்;

(iii) பொருளியல் முறைமையின் செயற்பாட்டினால் செல்வவளமும் உற்பத்திச்சாதனங்களும், பொதுநலனுக்கு ஊறுவிளைவிக்கும் வகையில் ஒரு சிலரிடம் குவிந்துவிடாது இருத்தல்;

(iv) ஆண், பெண் இருபாலாரும் ஒத்த வேலைக்கு ஒத்த சம்பளம் பெறுதல்;

(V) ஆண், பெண் உழைப்பாளர்களின் உடல் வலிவு, உடல்நலம், சிறார்களின் இளம்பருவம் இவற்றை நெறிதவறிப் பயன்படுத்தாமை; மேலும், பொருளியல் தேவையுறுத்தும் காரணமாகக் குடிமக்கள் தங்கள் வயதுக்கோ உடல்வலிவுக்கோ பொருந்தாத பிழைப்புப்பாடுகளில் ஈடுபடுமாறு இறுக்கப்படாமை;

(VI) பிறர் நலனுக்காகக் குழந்தைப் பருவத்தினரும் இளமைப் பருவத்தினரும் கருவிகளாக்கப் படுவதினின்றும், ஒழுக்கமும் உயிர்வாழ் வசதியும் அற்றுப் போகுமாறு கைவிடப்படுவதினின்றும் பாதுகாத்தல்.

வேலை, கல்வி குறித்த சில நேர்வுகளில் பொதுநலஉதவி ஆகியவற்றைப் பெறுவதற்கான உரிமை.

32. அரசு, தன் பொருளியல் திறனுக்கும் வளர்ச்சிக்கும் அடங்கியவாறு, வேலைபெறுதல், கல்வி பெறுதல், மேலும், வேலையின்மை, முதுமை, பிணி, உடல் ஊனம் ஆகிய நேர்வுகளிலும், பிற தகாத வறுமை

நேர்வுகளிலும் பொதுநல உதவி பெறுதல் இவற்றுக்கான உரிமையினை எய்திடுவதற்குப் பயனுறு ஏற்பாட்டினை மேற்கொள்ள வேண்டும்.

இசைவானதும் இதமானதுமான வேலைச் சூழல்களுக்கும் பேறுகால உதவிக்கும் ஏற்பாடு செய்தல்.

*33.* அரசு, இசைவானதும் இதமானதுமான வேலைச் சூழல்களை எய்திடவும் பேறுகால உதவி கிடைக்கவும் ஏற்பாடு செய்தல் வேண்டும்.

தொழிலாளர்களுக்கு வாழ்வுக்கேற்ற கூலி முதலியன.

*34.* விசைத்தொழில் அல்லது பிறவகைத் தொழிலாளர் அனைவரையும், வேலை, வாழ்வுக்கேற்ற கூலி, சீர்மையான வாழ்க்கைத்தரத்தையும் ஓய்வு நேரத்தை நிறைவுற நுகர்தலையும் உறுதியாக அளிக்கும் வேலைச் சூழல்கள், சமுதாய, பண்பாட்டு வாய்ப்பு நலன்கள் ஆகியவற்றை எய்திடச் செய்வதற்கு, தகுந்த சட்டமியற்றல் அல்லது பொருளியல் அமைப்பு வழியாகவோ, பிற வழியாகவோ அரசு முனைந்து முயலுதல் வேண்டும்.

குடிமக்களுக்கு ஒரே சீரான உரிமையியல் தொகுப்புச் சட்டம்.

*35.* குடிமக்கள் அனைவரும், இந்திய ஆட்சி நிலவரை எங்கணும், ஒரே சீரான உரிமையியல் தொகுப்புச் சட்டத்தினை எய்திடச் செய்வதற்கு அரசு முனைந்து முயலுதல் வேண்டும்.

இலவசத் தொடக்கக் கல்வி அளிக்க ஏற்பாடு செய்தல்.

*36.* ஒவ்வொரு குடிமகனும் இலவச தொடக்கக் கல்வி பெற உரிமையுடையவராவர். இந்த அரசமைப்பின் தொடக்க நிலையிலிருந்து பத்தாண்டுக் கால அளவுக்குள் சிறார்கள் அனைவருக்கும், அவர்களுக்குப் பதினான்கு வயது முடியும் வரை இலவசக் கட்டாயக் கல்வி அளிக்க ஏற்பாடு செய்வதற்கு அரசு முனைந்து முயலுதல் வேண்டும்.

பட்டியலில் கண்ட சாதியினர், பட்டியலில் கண்ட பழங்குடியினர், பிற நலிந்த பிரிவினர் ஆகியோரின் கல்வி, பொருளியல் நலன்களை வளர்த்தல்.

*37.* மக்களில் நலிந்த பிரிவினர், குறிப்பாக பட்டியலில் கண்ட சாதியினர், பட்டியலில் கண்ட பழங்குடியினர் ஆகியோரின் கல்வி, பொருளியல் நலன்களை அரசு தனிப் பொறுப்புணர்வுடன் வளர்த்தல் வேண்டும்; மேலும், சமுதாய அநீதியிலிருந்தும் அனைத்து வகைப்பட்ட சுரண்டல்களிலிருந்தும் அவர்களைப் பாதுகாத்தலும் வேண்டும்.

உணவுச் சத்தின் தரநிலை, வாழ்க்கைத்தரம் ஆகியவற்றை உயர்த்தவும் மக்களின் உடல்நலத்தை மேம்படுத்தவும் அரசிற்குரிய கடமை.

38. மக்களின் உணவுச்சத்தின் தரநிலை, வாழ்க்கைத் தரம் ஆகியவற்றை உயர்த்துவதும், மக்களின் உடல் நலத்தை மேம்படுத்துவதும் தன்னுடைய தலையாய கடமைகளுள் அமைவன என்பதை அரசு கருத்திற் கொள்ளுதல் வேண்டும்.

தேசிய முக்கியத்துவம் வாய்ந்த நினைவுச் சின்னங்கள், இடங்கள் பொருள்கள் ஆகியவற்றைப் பாதுகாத்தல் பேணுதல் மற்றும் பராமரித்தல்:

39. தேசிய முக்கியத்துவம் வாய்ந்ததென நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தால் விளம்பப்படும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த நினைவுச் சின்னம், இடம் அல்லது பொருள் எதனையும் கவர்ந்து செல்லல், அழித்தல், அகற்றுதல், அயலடைவு செய்தல், ஏற்றுமதி செய்தல் இவற்றிலிருந்து பாது காப்பதும், அத்தகைய நினைவுச் சின்னங்கள், இடங்கள், பொருட்கள் அனைத்தையும் நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தின்மூலம் பேணுதலும் பராமரித்தலும் அரசின் கடமைப்பாடாக இருத்தல் வேண்டும்.

பன்னாடுகளிடையே அமைதியையும் காப்புணர்வையும் வளர்த்தல்.

40. அரசு, நாடுகளிடையே நேர்மையும் நன்மதிப்புணர்வும் கொண்ட உறவுகளைப் பேணுவதற்கான விதிமுறைகளை வெளியிட்டும், அரசாங்கங்களுக்கிடையே உண்மையான செயல்முறை விதிகளைப் பன்னாட்டு சட்டத்தின் உணர்வுகளின் உறுதியான அடிப்படையில் வகுப்பதன் வாயிலாகவும், ஒழுங்கமைவுள்ள மக்களினங்கள் உடன்படிக்கை கடமைப்பாடுகளில் நீதியையும் மதிப்பையும் பேணிக் காத்துப் பன்னாட்டு அமைதியையும் காப்புணர்வையும் வளர்க்க வேண்டும்.

# பகுதி - V

## ஒன்றியம்

## அத்தியாயம் I - ஆட்சித்துறை

### குடியரசுத் தலைவரும் துணைத் தலைவரும்

இந்தியக் குடியரசுத்தலைவர்.

*41. இந்தியக் குடியரசுத் தலைவர் ஒருவர் இருப்பார்.*

ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரம்.

*42. (1) ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரம் குடியரசுத் தலைவரிடம் உற்றமைந்திருக்கும்; இந்த அரசமைப்பு மற்றும் சட்டத்திற்கு இணங்க அவரால் செயல்படுத் தலாம்.*

*(2) மேலேகண்ட வகையத்தின் பொதுப்பாங் கிற்குக் குந்தகமின்றி, இந்தியப் பாதுகாப்புப் படை களின் மீதான உயர் தனி ஆணையதிகாரம் குடியரசுத் தலைவரிடம் உற்றமைந்திருக்கும்; மேலும் அதைச் செலுத்துவது சட்டத்தினால் ஒழுங்குறுத்தப்படும்.*

*(3) இந்த உறுப்பிலுள்ள எதுவும் -*

*(அ) நிலவுறும் சட்டம் ஒன்றினால் மாநிலம் ஒன்றன் அரசாங்கத்திற்கோ பிறவகை அதிகார அமைப் பிற்கோ வழங்கப்பட்ட பதவிப்பணிகள் எவற்றை யும் குடியரசுத் தலைவருக்கு மாற்றுவதாகக் கொள்ளப் படுதல் ஆகாது; அல்லது*

*(ஆ) நாடாளுமன்றம் சட்டத்தினால், குடியரசுத் தலைவர் அல்லாத பிறவகை அதிகார அமைப்புகளுக் குப் பதவிப் பணிகளை வழங்குவதற்குத் தடையூறு ஆவதில்லை.*

*43. குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுத்தல்:*

குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுத்தல்

*குடியரசுத் தலைவர்-*

*(அ) நாடாளுமன்ற, ஈரவைகளிலுமுள்ள உறுப் பினர்களையும்,*

(ஆ) மாநிலங்களின் சட்டமன்றப் பேரவைகளிலுள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களையும் கொண்ட வாக்காளர் குழாத்தின் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பெறுவார்.

குடியரசுத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறை.

44. (1) குடியரசுத் தலைவர் தேர்தலில் பல்வேறு மாநிலங்களுக்குள்ள பிரதிநிதித்துவம் இயலுமளவு ஒருபடித்தாக இருத்தல் வேண்டும்.

[1](2) அத்தகைய ஒருபடித்தான நிலையை எய்திடும் பொருட்டு, நாடாளுமன்றத்திற்கும் மாநிலம் ஒவ்வொன்றின் சட்டமன்றத்தின் பேரவைக்கும் தேர்ந்

---

1. உறுப்பு 44 கூறு(2)ல் வரையறுக்கப்பட்டுள்ள கணக்கீட்டுமுறை கீழ்க்கண்டவாறு தெளிவாக்கப்படலாம்:

கூறு (2) துணைக்கூறுகள் (அ) மற்றும் (ஆ) விற்கு எடுத்துக்காட்டு:

i. பம்பாயின் மக்கள்தொகை 20,849,840. பம்பாய் சட்டமன்றப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கையை 208 என எடுத்துக்கொள்ளலாம். (அதாவது ஒரு லட்சம் மக்கள்தொகைக்கு ஓர் உறுப்பினர் பிரதிநிதியாவார்). குடியரசுத்தலைவர் தேர்தலில் அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட ஒவ்வொரு உறுப்பினரும் எத்தனை வாக்குகள் அளிக்க தகுதி படைத்தவர்கள் என்பதனை அறிய, நாம் முதலில் 20,849,840 (மக்கள் தொகையை) 208(மொத்தம் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள்) ஆல் வகுக்கப்பட வேண்டும். பிறகு, வகுத்துவந்த ஈவு எண் 1000 ஆல் வகுக்கப்பட வேண்டும். இந்த எடுத்துக்காட்டில் வகுத்து வந்த எண் 100239. அத்தகைய உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் வாக்களிக்க தகுதிபெற்ற வாக்குகளின் எண்ணிக்கை 100,239/1000, அதாவது 100 (மீதமுள்ள 239, ஐநூறுக்குக் குறைவாக உள்ளதால் தள்ளுபடி செய்து விடவும்) ஆக இருக்கும்.

ii. மீண்டும், பிகானீரின் மக்கள்தொகை, 1,292,938. பிகானீர் சட்டமன்றப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கையை 130 (அதாவது தோராயமாக பத்தாயிரம் மக்கள் தொகைக்கு ஒரு பிரதிநிதி உறுப்பினர்) என வைத்துக்கொள்வோம். தற்பொழுது, மேலே கூறப்பட்டுள்ள வழிமுறைப்படி நாம் 1,292,938 (அதாவது மக்கள்தொகை)யை 130 (தேர்ந்தெடுக்கப்பட்ட மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை) ஆல் வகுத்தால், ஈவு எண் 9945. ஆகையினால், பிகானீர் சட்டமன்றப் பேரவை உறுப்பினரும் வாக்களிக்க தகுதிபெறும் வாக்குகளின் எண்ணிக்கை 9945/ 1000 அதாவது - 10 (மீதமுள்ள 945. ஐநூறுக்கு அதிகமாக இருப்பதால் 1000க்கு சமமென கணக்கிடவும்) ஆக இருக்கும்.

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

தெடுக்கப் பெற்ற உறுப்பினர் ஒவ்வொருவரும் அத் தேர்தலில் எத்தனை வாக்குகள் அளிப்பதற்கு உரிமை கொண்டவர் என்பதைப் பின்வரும் முறையில் தீர் மானித்தல் வேண்டும்:

(அ) ஒரு மாநில சட்டமன்றப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர் ஒவ்வொருவருக் கும், அந்த மாநிலத்தின் மக்கள் தொகையை அச் சட்டமன்ற பேரவை உறுப்பினர்களின் மொத்த எண் ணிக்கையால் வகுத்திடவரும் ஈவு எண்ணில் எத்தனை ஆயிரங்கள் உள்ளனவோ அத்தனை வாக்குகள் உண்டு.

(ஆ) மேற்சொன்ன அத்தனை ஆயிரங்கள் போக, எஞ்சிய எண்ணிக்கை ஐந்நூறுக்குக் குறையாமல் இருக்குமாயின், அப்போது இந்தக் கூறின் (அ) உட் கூறில் குறிப்பிடப்பட்டுள்ள உறுப்பினர் ஒவ்வொரு வருக்குமுள்ள வாக்கு எண்ணிக்கையுடன் மேலும் ஓரெண்ணைச் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

(இ) நாடாளுமன்ற ஈரவைகள் ஒவ்வொன் றுக்கும் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர் ஒவ்வொரு வருக்கும் இந்தக்கூறின் (அ), (ஆ) ஆகிய உட்கூறு களின்படி மாநிலச் சட்டமன்றம் பேரவைகளின் உறுப் பினர்களுக்குக் குறித்தளிக்கப்பட்ட வாக்குகளின் மொத்த எண்ணிக்கையை, அத்தகைய மொத்த உறுப் பினர்களின் எண்ணிக்கையால் வகுத்து, அதில் அரைக்கு

---

*(முன்பக்கத் தொடர்ச்சி)*

கூறு(2) துணைக்கூறு (இ) க்கு எடுத்துக்காட்டு:

மேலே குறிப்பிடப்பட்டுள்ள கணக்கீட்டு முறைப்படி மாநிலங்களின் சட்டமன்றப்பேரவை உறுப்பினர்களுக்கு அளிக்கப் பட்டுள்ள வாக்குகளின் மொத்த எண்ணிக்கை 74,940 ஆகவும், நாடாளுமன்றத்தின் இரு அவைகளுக்கும் தேர்ந்தெடுக்கப்பட்ட மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை 750 எனக்கொண்டால், குடியரசுத்தலைவர் தேர்தலில் நாடாளுமன்றத்தின் இரு அவைகளின் வாக்குகளின் எண்ணிக்கையை அறிந்துகொள்வதற்கு, 74,940 ஐ 750 ஆல் வகுக்கப்பட வேண்டும். இவ்வாறு அத்தகை ஒவ்வொரு உறுப்பினரும் வாக்களிக்க தகுதிபெறும் வாக்குகளின் எண்ணிக்கை = 74,940/750 = 99 23/25 அதாவது 100 (23/25 என்ற பகுதி ஒரு பாதிக்கு மேல் இருப்பதால் ஒன்று என கணக்கிடவும்) ஆக இருக்கும்.

மேற்பட்ட பின்னங்களை ஒன்று எனக் கொண்டும், பிற பின்னங்களைத் தள்ளியும் கணக்கிட்டால் எத்தனை வாக்குகள் வருமோ அத்தனை வாக்குகள் உண்டு.

(3) குடியரசுத் தலைவரின் தேர்தல், ஒற்றை மாற்றுவாக்கு வழியிலான விகிதாச்சார முறைக்கிணங்க நடத்தப்படுதல் வேண்டும்; மேலும் அத்தகைய தேர்தலில் வாக்களித்தல், மறைவான வாக்களிப்பு என்ற முறையில் இருத்தல் வேண்டும்.

விளக்கம் - இந்த உறுப்பில் ''ஒரு மாநில சட்டமன்றம்'' என்ற சொல், எங்கு ஈரவை சட்டமன்றங்கள் உள்ளனவோ அங்கு கீழவை சட்டமன்றம் என பொருள்கொள்ளப்படும்; மேலும், ''மக்கள் தொகை'' என்ற சொல், கடைசி முறை மக்கள் கணக்கெடுப்பின் படி கண்டறியப்பட்ட மக்கள் தொகை என்று பொருள் படும்.

குடியரசுத் தலைவரின் பதவிக் காலம்

45. குடியரசுத் தலைவர், தாம் பதவி ஏற்கும் தேதியிலிருந்து ஐந்தாண்டுக் காலத்திற்குப் பதவி வகிப்பார்.

வரம்புரையாக-

(அ) குடியரசுத் தலைவர், தம் கையொப்பமிட்டு, மாநிலங்களவைத் தலைவருக்கும் மக்களவைத் தலைவருக்கும் பதவி விலகல் கடிதம் எழுதி பதவி விலகலாம்;

(ஆ) இந்த அரசமைப்பை மீறிய நடத்தைக்காக, இந்த அரசமைப்பின் 50-ஆம் உறுப்பில் வகை செய்யப்பட்டுள்ள முறைப்படி, அவையில் பழி சாட்டப்பட்டு குடியரசுத் தலைவர் பதவியிலிருந்து அகற்றப்படலாம்;

(இ) குடியரசுத் தலைவர், தம் பதவிக் காலம் கழிவுற்றாலுங்கூட, அவருக்கு அடுத்து வருபவர் பதவி ஏற்கும் வரையில் தொடர்ந்து பதவி வகித்து வருவார்.

*மீண்டும் தேர்ந் தெடுக்கப் பெறுவதற்கான தகுமை*

46. குடியரசுத் தலைவராகப் பதவி வகிக்கும் அல்லது வகித்திருந்த ஒருவர் மீண்டும் ஒரே ஒருமுறை மட்டும் அந்தப் பதவிக்குத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்குத் தகுதியுடையவர் ஆவார்.

*குடியரசுத்தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பெறுவதற்கான தகுதிப்பாடுகள்*

47. (1) ஒருவர்

(அ) இந்தியாவின் குடிமகனாகவும்,

(ஆ) முப்பத்தைந்து வயது முடிந்தவராகவும்,

(இ) மக்களவையின் ஓர் உறுப்பினராகத் தேர்ந் தெடுக்கப்படுவதற்கான தகுதிப்பாடுடையவராகவும் இருந்தாலன்றி அவர் குடியரசுத் தலைவராகத் தேர்ந் தெடுக்கப் பெறுவதற்கான தகுதியுடையவர் ஆகார்.

(2) ஒருவர், இந்திய அரசாங்கத்தின் அல்லது மாநில அரசாங்கம் ஒன்றன் கீழோ அவற்றில் ஒன்றன் கட்டாள்கைக்கு உட்பட்டிருக்கிற உள்ளாட்சி அல்லது பிறவகை அதிகார அமைப்பின் கீழோ ஊதியப் பதவி அல்லது பொறுப்பு எதனையும் வகிப்பாராயின், அவர் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்கான தகுமையுடையவர் ஆகார்.

விளக்கம் - இந்தக் கூறினைப் பொறுத்தவரை,

(அ) அவர் இந்தியாவின் அமைச்சராகவோ, நிகழ்விலுள்ள முதல் இணைப்புப் பகுதி-1ல் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு மாநிலத்தின் அமைச்சராகவோ, அல்லது

(ஆ) நிகழ்விலுள்ள முதல் அட்டவணை பகுதி-IIIல் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு மாநிலத்தின் அமைச்சராக இருந்து, அந்த மாநில சட்டமன்றப் பேரவைக்கோ, ஈரவை உள்ள மாநிலமாயிருப்பின் சட்டமன்ற கீழ் அவைக்கோ, மேலும் நான்கில் மூன்று பகுதி சட்டமன்றப் பேரவை உறுப்பினர்கள் தேர்வு செய்யப்பட்டவராயிருப்பின் அதற்கேற்றவாறு, அவர்

பொறுப்புடையவராயிருப்பாரானால், அத்தகைய ஒரே காரணத்திற்காக ஒருவர் ஊதியப் பதவி அல்லது பொறுப்பு எதனையும் வகிப்பவராக கொள்ளுதல் ஆகாது.

குடியரசுத்தலைவரின் பதவிக்கான வரைமுறைகள்

*48. (1)* குடியரசுத் தலைவர் நாடாளுமன்றத்திலோ அல்லது எந்த ஒரு மாநிலத்தின் சட்டமன்றத்திலோ உறுப்பினராக இருத்தல் ஆகாது; மேலும் நாடாளுமன்றத்தில் அல்லது ஏதாவதொரு மாநிலத்தின் சட்டமன்றத்தில் உறுப்பினராக உள்ள ஒருவர் குடியரசுத் தலைவராக தேர்ந்தெடுக்கப் பெறுவாராயின், அவர் குடியரசுத் தலைவராகப் பதவி ஏற்கும் தேதியன்று நாடாளுமன்றத்தின் அல்லது அத்தகைய சட்டமன்றத்தின் பதவியை விட்டகன்றவராக கொள்ளப் பெறுவார்.

*(2)* குடியரசுத் தலைவர் பிற ஊதியப் பதவி அல்லது பொறுப்பு எதனையும் வகித்தல் ஆகாது.

*(3)* குடியரசுத் தலைவர் பதவிக்குரிய உறைவிடம் ஒன்றை உடையவராயிருப்பார்; குடியரசுத் தலைவருக்கு, நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் முடிவு செய்யப்படும் பதவி ஊதியமும் படித்தொகைகளும் வழங்கப்படும்; இது தொடர்பான வகையங்கள் செய்யப்படும்வரை இரண்டாவது பட்டியலில் குறிப்பிட்டுள்ளவாறு பதவி ஊதியமும் படித்தொகைகளும் வழங்கப்படும்.

*(4)* குடியரசுத் தலைவருக்குரிய பதவி ஊதியங்களையும் படித்தொகைகளையும் அவருடைய பதவிக்காலத்தின்போது குறைத்துவிடுதல் ஆகாது.

*49.* குடியரசுத் தலைவர் ஒவ்வொருவரும், குடியரசுத் தலைவராகச் செயலுறும் அல்லது குடியரசுத் தலைவருக்குரிய பதவிப் பணிகளை ஆற்றிவரும் ஒவ்வொருவரும் தாம் பதவி ஏற்பதற்கு முன்பு, இந்தியத் தலைமை நீதிபதியின் முன்னிலையில், ஓர் ஆணை

குடியரசுத்தலைவர், அல்லது குடியரசுத்தலைவராக செயலுறுபவர் அல்லது பதவிப் பணிகளை ஆற்றி வருபவர் பதவி ஏற்பதற்கு முன்பு எடுத்துக் கொள்ள வேண்டிய ஆணைமொழி அல்லது உறுதி மொழி

மொழியை அல்லது உறுதிமொழியைப் பின்வரும் சொன்முறையில் உள்ளபடி ஏற்றுக் கையொப்பமிடுதல் வேண்டும்; அதாவது -

"அ.ஆ. ஆகிய நான் உண்மையான பற்றுடன் இந்தியக் குடியரசுத் தலைவரின் பதவிப் பொறுப்பை நிறைவேற்றி வருவதோடு (அல்லது இந்தியக் குடியரசுத் தலைவருக்குற்ற பதவிப் பணிகளை ஆற்றி வருவதோடு) அரசமைப்பு முறையினையும் சட்ட நெறியினையும் என் முழுத்திறன் கொண்டு புரந்தும் பேணியும் புறங்காத்தும் நிற்பேன் என்றும், இந்திய மக்களின் நற்பணிக்கும் நல்வாழ்வுக்கும் முற்றுமாக என்னை நான் ஆட்படுத்திக் கொள்வேன் என்றும் உள்ளார்ந்து உறுதிமொழிகின்றேன் (ஆணை மொழிகின்றேன்)."

50. (1) இந்த அரசமைப்பை மீறிய நடத்தைக்காக குடியரசுத் தலைவர் மீது அவையில் பழிசாட்டப்படுவதாயின், அதற்கான குற்றச்சாட்டு, நாடாளுமன்றத்தின் ஈரவைகளில் ஒன்றில் கொண்டு வரப்படுதல் வேண்டும்.

(2) அத்தகைய குற்றச்சாட்டு கொண்டு வரப்பட வேண்டுமெனில் -

(அ) அக்குற்றச்சாட்டினை கொண்டு வரவிருக்கும் செயற்குறிப்பு, ஒரு தீர்மானத்தின் வடிவில் இருத்தல் வேண்டும்; அந்த அவையின் முப்பதிற்குக் குறையாத உறுப்பினர்கள் அத்தீர்மானத்தை முன்மொழியவிருப்பதாகவுள்ள தங்கள் கருத்தினை எழுத்து மூலம் தெரிவித்து கையொப்பமிட்டு அத்தீர்மானம் முன்மொழியப்பட்டிருத்தல் வேண்டும்; அத்துடன்

(ஆ) அத்தீர்மானம் அந்த அவையின் மொத்த உறுப்பினர்களில் மூன்றிலிரண்டு பங்கிற்குக் குறையாதவர்களால் ஆதரிக்கப்பட்டிருக்க வேண்டும்.

குடியரசுத்தலைவர் மீது அவையில் பழிசாட்டுவதற்கான நெறிமுறைகள்

(3) நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றினால் ஒரு குற்றச்சாட்டு அவ்வாறு கொண்டு வரப்பட்டிருக்குமாயின், மறு அவை அந்தக்குற்றச்சாட்டினை ஆய்வு செய்தலோ செய்வித்தலோ வேண்டும்; மேலும் அத்தகைய ஆய்வின்போது, குடியரசுத் தலைவர் தாமே நேரில் வருவதற்கும் பிரதிநிதியை வைத்துக் கொள்வதற்கும் உரிமையுடைவர் ஆவார்.

(4) அத்தகைய ஆய்வின் விளைவாக, குடியரசுத் தலைவர் மீது கொண்டுவரப்பட்ட அக்குற்றச்சாட்டு மெய்ப்பிக்கப்பட்டுள்ளது என விளம்பும் தீர்மானம் ஒன்றை, அக்குற்றச்சாட்டினை ஆய்வு செய்த அல்லது செய்வித்த அவையின் மொத்த உறுப்பினர்களில் மூன்றிலிரண்டு பங்கிற்குக் குறையாதோரால் ஆதரித்து நிறைவேற்றப் பெற்றால், அத்தீர்மானம் அவ்வாறு நிறைவேற்றப்படும் தேதியிலிருந்து குடியரசுத் தலைவரை அவர்தம் பதவியிலிருந்து அகற்றிய செல்திறம் உடையது ஆகும்.

குடியரசுத்தலைவரின் பதவி காலியிடமாகும் போது அதை நிரப்புவதற்காகத் தேர்தல் நடத்த வேண்டிய காலமும் இடைநேர்வான காலியிடத்தை நிரப்புவதற்காகத் தேர்ந்தெடுக்கப் பெறுபவரின் பதவிக்காலமும்.

51. (1) குடியரசுத் தலைவரின் பதவிக் காலம் முடிவடைவதால் ஏற்படும் காலியிடத்தை நிரப்புவதற்கான தேர்தலை, அந்தக் காலம் முடிவடைவதற்கு முன்பே நடத்தி முடித்தல் வேண்டும்.

(2) குடியரசுத் தலைவரின் இறப்பு, பதவி விலகல் அல்லது பதவியகற்றுதல் காரணத்தினாலோ பிறவாறாகவோ அவருடைய பதவி காலியிடமாகுமானால், அதை நிரப்புவதற்கான தேர்தல், அது காலியான தேதிக்குப் பின்பு, இயன்ற அளவு விரைவிலும், எந்நேர்விலும் அந்தத் தேதியிலிருந்து ஆறு மாதங்களுக்குப் பிற்படாமலும் நடத்தப்படுதல் வேண்டும்; மேலும் அந்தக் காலியிடத்தை நிரப்புவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பெறுபவர், இந்த அரசமைப்பின் உறுப்பு 45-ல் வகை செய்யப்பட்டுள்ளவாறு முழுப் பதவிக் காலமாகிய ஐந்தாண்டுகள் பதவி வகிப்பதற்கு உரிமை கொண்டவர் ஆவார்.

இந்தியக் குடியரசுத் துணைத் தலைவர்.

52. இந்தியக் குடியரசுத் துணைத்தலைவர் என்று ஒருவர் இருப்பார்.

குடியரசுத் துணைத்தலைவர் மாநிலங்கள் அவைக்குப் பதவிவழித் தலைவராக இருப்பார்.

53. குடியரசுத் துணைத்தலைவர் மாநிலங் களவைக்குப் பதவிவழித் தலைவராக இருப்பார்; அவர் வேறு எந்த ஊதியப் பதவி அல்லது பொறுப்பையும் வகித்தல் ஆகாது.

வரம்புரையாக: குடியரசுத் துணைத்தலைவர் இந்த அரசமைப்பின் 54-ஆம் உறுப்பின்படி குடியரசுத் தலைவராக செயலுறும்போதும், குடியரசுத் தலை வரின் பதவிப் பணிகளை ஆற்றி வரும்போதும் மாநிலங் களவையின் தலைவர் பதவிக்குரிய கடமைகளைச் செய்தல் ஆகாது.

குடியரசுத்தலைவரின் பதவி இடைநேர்வாகக் காலியிடமாகும் போது அல்லது குடியரசுத்தலைவர் இல்லாத போது குடியரசுத் துணைத்தலைவர், குடியரசுத் தலைவராகசெயலுறுவார்அல்லது அவருடைய பதவிப் பணிகளை ஆற்றி வருவார்.

54. (1) குடியரசுத் தலைவரின் இறப்பு, பதவி விலகல் அல்லது பதவியகற்றுகை காரணத்தினாலோ பிறவாறவாகவோ அவருடைய பதவி காலியிடமாகு மானால், இந்த அத்தியாயத்தின் வகையங்களுக்கு இணங்க, அத்தகைய காலியிடத்தை நிரப்புவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பெறும் ஒரு புதிய குடியரசுத்தலைவர் தம் பதவியை ஏற்கும் தேதிவரையிலும், குடியரசுத் துணைத் தலைவர், குடியரசுத் தலைவராகச் செய லுறுவர்.

(2) குடியரசுத் தலைவர், தம் இருத்தலின்மை, உடல்நலமின்மை அல்லது பிற காரணம் எதனாலும் தம் பதவிப்பணிகளை ஆற்ற இயலாதபோது, அவர் தம் பணிகளை மீண்டும் மேற்கொள்ளும் தேதி வரை யிலும், அவருடைய பதவிப் பணிகளைக் குடியரசுத் துணைத்தலைவர் ஆற்றிவருவார்.

(3) அவ்வாறு குடியரசுத் தலைவராகச் செய லுறும் போதும், குடியரசுத் தலைவருடைய பதவிப் பணிகளை ஆற்றிவரும்போதும், அக்கால அளவைப் பொறுத்தும், குடியரசுத் தலைவருக்குள்ள அனைத்து அதிகாரங்களையும் காப்புரிமைகளையும் குடியரசுத் துணைத்தலைவர் உடையவர் ஆவார்.

குடியரசுத் துணைத் தலைவரைத் தேர்ந்தெடுத்தல்.

55. (1) குடியரசுத் துணைத்தலைவர், நாடாளுமன்ற ஈரவைகளிலுமுள்ள உறுப்பினர்களின் கூட்டுக் கூட்டத்தில் சரிவீதப் பிரதிநிதித்துவ முறையில் ஒற்றை மாற்றுவாக்கு வழியில் தேர்ந்தெடுக்கப் பெறுவார்; மேலும், அத்தகைய தேர்தலில் வாக்களித்தல், மறைவான வாக்களிப்பு முறையில் இருத்தல் வேண்டும்.

(2) குடியரசுத் துணைத் தலைவர், நாடாளுமன்றத்திலோ அல்லது எந்தவொரு மாநிலத்தின் சட்டமன்றத்திலோ உறுப்பினராக இருத்தல் ஆகாது; மேலும் நாடாளுமன்றத்தில் அல்லது எந்தவொரு மாநில சட்டமன்ற உறுப்பினராகவுள்ள ஒருவர் குடியரசுத் துணைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெறுவாராயின், நிலைமைக்கு ஏற்றவாறு, அவர் குடியரசுத் துணைத் தலைவராகப் பதவி ஏற்கும் தேதியன்று அந்த அவையிலுள்ள தம் பதவியிடத்தை விட்டகன்றவராகக் கொள்ளப்பெறுவார்.

(3) ஒருவர்-

(அ) இந்தியாவின் குடிமகனாகவும்,

(ஆ) முப்பத்தைந்து வயது முடிந்தவராகவும்,

(இ) மாநிலங்களவையின் ஓர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்கான தகுதிப்பாடுடைய வராகவும்

இருந்தாலன்றி, அவர் குடியரசுத் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்கான தகுதியுடைவர் ஆகார்.

(4) ஒருவர் இந்திய அரசாங்கத்தின் அல்லது மாநில அரசாங்கம் ஒன்றின் கீழோ, அவற்றில் ஒன்றின் கட்டாள்கைக்கு உட்பட்டிருக்கின்ற உள்ளாட்சி அல்லது பிறவகை அதிகார அமைப்பின் கீழோ ஊதியப்பதவி அல்லது பொறுப்பு எதனையும் வகிப்பாராயின், அவர் குடியரசுத் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்கான தகுமையுடையவர் ஆகார்.

**விளக்கம்** - இந்தக் கூறினைப் பொருத்தவரை, ஒருவர்

(அ) முதலாவது அட்டவணை - பகுதி I-ல் குறிப்பிட்டுள்ளவாறு அந்தக் காலக் கட்டத்தில், இந்தியாவின் அல்லது ஏதாவதொரு மாநிலத்தின் அமைச்சராகவோ, அல்லது

(ஆ) முதலாவது அட்டவணை - பகுதி 3-ல் குறிப்பிட்டுள்ளவாறு, அந்தக் காலக் கட்டத்தில், ஏதாவதொரு மாநில அமைச்சராக, மாநில சட்டமன்றம் அல்லது மாநிலத்தில் இரண்டு சட்டப்பேரவைகள் இருப்பின் அவற்றில் கீழவையிலும், அத்தகைய சட்டமன்றம் அல்லது அவையின் உறுப்பினர்களில் நான்கில் மூன்று பகுதிக்குக் குறையாமல் தேர்ந்தெடுக்கப் பட்டவராயிருப்பின், நிலைமைக்கேற்ப, அந்தச் சட்டமன்றத்திற்குப் பொறுப்புடையவராக இருப்பாரனால் அந்த ஒரே காரணத்திற்காக அவர் ஊதியப் பதவி அல்லது பொறுப்பு எதனையும் வகிப்பவராக கருதப்படுதல் ஆகாது.

(5) குடியரசுத் துணைத் தலைவரின் பதவிக் காலம் முடிவடைவதற்கு முன்பாகவே, பதவிக் காலம் முடிவடைவதால் ஏற்படும் காலி இடத்தை நிரப்புவதற்கான தேர்தல் நடத்தி முடிக்கப்பட வேண்டும்.

(6) இறப்பு, பதவி விலகல் அல்லது விலக்குதல் அல்லது இதர காரணங்களினால் குடியரசுத் துணைத்தலைவர் பதவியிடம் காலியாகுமாயின், அத்தகைய காலியிடம் ஏற்பட்டபிறகு முடிந்த அளவு விரைவாக தேர்தல் நடத்தி காலியான இடத்தை நிரப்பவேண்டும். இந்த அரசமைப்பின் உறுப்பு 56ல் வரையறுக்கப்பட்டுள்ளபடி அவ்வாறு பதவிக் காலியிடத்தை நிரப்பவுதற்காக தேர்ந்தெடுக்கப் பெறுபவர்

முழுப் பதவிக் காலமான ஐந்து ஆண்டுகளுக்கு பதவியிலிருக்க தகுதி உடையவராவார்.

குடியரசுத் துணைத்தலைவரின் பதவிக் காலம்.

56. குடியரசுத் துணைத்தலைவர், தாம் பதவி ஏற்கும் தேதியிலிருந்து ஐந்தாண்டுக் காலத்திற்குப் பதவி வகிப்பார்.

வரம்புரையாக -

(அ) ஒரு குடியரசுத் துணைத் தலைவர், தம் கையொப்பமிட்டு குடியரசுத் தலைவருக்கு எழுத்து வழித் தெரிவித்துத் தம் பதவியை விட்டு விலகிக் கொள்ளலாம்;

(ஆ) ஒரு குடியரசுத் துணைத்தலைவர் தகுதியின்மை அல்லது நம்பிக்கையின்மை காரணத்திற்காக மாநிலங்களவையின் அப்போதைய அனைத்து உறுப்பினர்களில் பெரும்பான்மையினரால் நிறைவேற்றப்பட்டு, மக்களவையிலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட தீர்மானம் ஒன்றினால் அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம்; ஆனால் இந்தக் கூறினைப் பொருத்தவரை அத்தகைய தீர்மானம் எதுவும், அதை முன்மொழியவிருக்கும் கருத்தினைத் தெரிவித்துப் பதினான்கு நாட்களுக்குக் குறையாமல் முன்னறிவிப்பு கொடுத்திருந்தாலன்றி, முன்மொழியப்படுதல் ஆகாது;

(இ) ஒரு குடியரசுத் துணைத் தலைவர், தம் பதவிக்காலம் முடிவுற்றாலுங்கூட, அவருக்கு அடுத்து வருபவர் பதவி ஏற்கும் வரையிலும் தொடர்ந்து பதவி வகித்து வருவார்.

பிற எதிர்பாராத நிகழ்வுகளில் குடியரசுத் தலைவரின் பதவிப் பணிகளை ஆற்றுவதற்கு வழிவகுக்க நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம்.

57. இந்த அத்தியாயத்தில் வகை செய்யப்பட்டிராத எதிர்பாராத நிகழ்வுகள் எதிலும் குடியரசுத் தலைவரின் பதவிப் பணிகளை ஆற்றி வருவதற்கு நாடாளுமன்றம் தான் தக்கதெனக் கருதுகிற ஏற்பாட்டினைச் செய்யலாம்.

குடியரசுத்தலைவரை அல்லது துணைத் தலைவரைத் தேர்ந்தெடுத்தல் பற்றிய அல்லது அதன் தொடர்பான பொருட்பாடுகள்.

58. (1) குடியரசுத் தலைவரை அல்லது குடியரசுத் துணைத் தலைவரைத் தேர்ந்தெடுத்தல் பற்றியோ அதன் தொடர்பாகவோ எழும் அனைத்து ஐயப்பாடுகளையும்...எதிர் வழக்குகளையும், உச்சநீதிமன்றம் விசாரித்து முடிவு செய்யும்; அதன் முடிவே இறுதியானது ஆகும்.

(2) இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, குடியரசுத் தலைவரையோ குடியரசுத் துணைத்தலைவரையோ தேர்ந்தெடுத்தல் பற்றிய அல்லது அதன் தொடர்பான பொருட்பாடு எதனையும் நாடாளுமன்றம் சட்டத்தினால் ஒழுங்குறுத்தலாம்.

குறித்த சில நேர்வுகளில் குற்றமன்னிப்புகள் முதலியன அளிப்பதற்கும் மற்றும் தீர்ப்புத் தண்டனைகளைத் தற்காலிகமாக நிறுத்தி வைப்பதற்கு, இறுத்தல் செய்வதற்கு அல்லது மாற்றிக் குறைப்பதற்கும் குடியரசுத்தலைவருக்குற்ற அதிகாரம்.

59. (1)

(அ) படைத் துறையாட்சி நீதிமன்றத்தால் தண்டனை அல்லது தீர்ப்புத் தண்டனை விதிக்கப்படுகிற அனைத்து நேர்வுகளிலும்;

(ஆ) எந்தவொரு சட்டத்தின்கீழ் குற்றம் நடைபெற்று, அதற்கான தண்டனை அல்லது தீர்ப்புத் தண்டனை தொடர்பாக சட்டங்கள் இயற்றும் அதிகாரம், அத்தகைய குற்றம் நடைபெற்ற மாநிலத்தின் சட்டமன்றத்திற்கு இல்லாமலும் நாடாளுமன்றத்திடம் உள்ளதுமான அனைத்து நேர்வுகளிலும்;

[1](இ) தீர்ப்புத் தண்டனை, மரண தண்டனையாகவுள்ள அனைத்து நேர்வுகளிலும்

ஒரு குற்றச்செயலுக்காக குற்றத் தீர்ப்பளிக்கப்பட்ட ஒருவரின் தண்டனை பொறுத்து குற்றமன்னிப்புகள்

1. ஆளுநர் அல்லது ஆட்சியருடைய அதிகாரத்திற்குப் பாதிப்பு ஏற்படாமல், எந்தவொரு மாநிலத்தில் அளிக்கப்பட்ட மரண தண்டனையையும் தற்காலிகமாக நிறுத்திவைக்க, இறுத்தல் செய்ய அல்லது மாற்றிக் குறைப்பதற்கான அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு இருக்கவேண்டுமென இக்குழு கருதுகின்றது.

அளிக்கவும், தண்டனையை நிறுத்தி வைக்கவும், அதை நிறைவேற்றுவதைத் தள்ளிவைக்கவும் அல்லது எஞ்சி யுள்ள தண்டனையை இறுத்தல் செய்யவும் அல்லது தீர்ப்புத் தண்டனையைத் தற்காலிகமாக நிறுத்திவைக்க, இறுத்தல் செய்ய அல்லது மாற்றிக் குறைக்கவும் குடியரசுத் தலைவர் அதிகாரம் உடையவர் ஆவார்.

(2) இந்த உறுப்பின் கூறு(1) ன் (அ) உட்கூறிலுள்ள எதுவும், படைத்துறையாட்சி நீதிமன்றத்தால் விதிக்கப்பட்ட ஒரு தீர்ப்புத் தண்டனையைத் தற்காலிகமாக நிறுத்தி வைப்பதற்கோ, இறுத்தல் செய்வதற்கோ, மாற்றிக் குறைப்பதற்கோ இந்திய ஆயுதப்படைகளின் அலுவலர் எவருக்கும் சட்டத்தினால் வழங்கப்பட்ட அதிகாரத்தைப் பாதிப்பதில்லை.

(3) இந்த உறுப்பின் கூறு (1) ன் (இ) உட்கூறிலுள்ள எதுவும், அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள சட்டம் எதன்படியும் ஒரு மரண தண்டனையைத் தற்காலிகமாக நிறுத்திவைக்க, இறுத்தல் செய்ய அல்லது மாற்றிக் குறைக்க மாநில ஆளுநர் அல்லது ஆட்சியர் செலுத்தத்தக்க அதிகாரத்தைப் பாதிப்பதில்லை.

ஒன்றியத்து ஆட்சி அதிகாரத்தின் அளவு.

60. (1) இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு -

(அ) சட்டங்களை இயற்றுவதற்கு நாடாளு மன்றம் அதிகாரம் கொண்டுள்ள பொருட்பாடுகளையும்,

(ஆ) உடன்படிக்கை அல்லது உடன்பாடு ஒன்றன் காரணமாக இந்திய அரசாங்கம் செலுத்துவதாகும் உரிமைகள், பெற்ற அதிகாரம், உற்ற அதிகாரம் ஆகியவற்றைச் செலுத்துவதையும் ஒன்றியத்து ஆட்சி அதிகாரம் அளாவி நிற்கும்.

[1]வரம்புரையாக: இந்தக் கூற்றின் உட்கூறு(அ) வில் சுட்டப்பட்ட ஆட்சி அதிகாரமானது இந்த அரசமைப் பிலோ நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் ஒன்றிலோ தெரிநிலையாக வகை செய்யப்பட்டிருந் தாலன்றி, சட்டங்கள் இயற்றுவதற்கு ஒரு மாநில சட்டமன்றமும் அதிகாரம் கொண்டுள்ள பொருட் பாடுகளைப் பொறுத்து, அந்த மாநிலத்தில் அளாவி நிற்றல் ஆகாது.

(2) இந்த உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், நாடாளுமன்றத்தால் பிறவாறு வகை செய்யப்படும் வரையில் ஒரு மாநிலமும் அந்த மாநிலத்தின் அலு வலர் எவரும் அல்லது அதிகார அமைப்பு எதுவும் அந்த மாநிலத்திற்காகச் சட்டங்கள் இயற்ற நாடாளு மன்றம் அதிகாரம் கொண்டுள்ள பொருட்பாடு களைப் பொறுத்து இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டமுன்பு செலுத்தக்கூடியதாக இருந்த ஆட்சி அதிகாரத்தையோ பதவிப் பணிகளையோ அந்த மாநிலம் அல்லது அதன் அலுவலர் அல்லது அதிகார அமைப்பு தொடர்ந்து செலுத்தி வரலாம்.

## அமைச்சரவை

குடியரசுத் தலைவருக்கு அமைச்சரவை உறுதுணையாக இருத்தலும் தேர்வுரை வழங்குதலும்.

61. (1) குடியரசுத் தலைவருக்கு உறுதுணையாக இருப்பதற்கும் தேர்வுரை வழங்குவதற்கும் தலைமை அமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சரவை ஒன்று இருத்தல் வேண்டும்.

(2) குடியரசுத் தலைவருக்கு அமைச்சர்கள் தேர்வுரை எதுவும் வழங்கினார்களா, அவ்வாறாயின்

1. இந்த அரசமைப்பிலோ அல்லது நாடாளுமன்றத்தினால் இயற்றப்பட்ட பிறசட்டத்தினாலோ பிறவாறு வகைசெய்யப் பட்டிருந்தாலன்றி, ஒருங்கியல் பட்டியலில் உள்ள பொருட் பாடுகள் தொடர்பான ஆட்சிஅதிகாரம் அடிப்படையில், தொடர்புடைய மாநிலத்திடம் இருக்க வேண்டுமென்ற நோக்கத் துடன் இந்தக்குழு இந்த வரம்புரையைச் சேர்த்துள்ளது.

அது யாது என்பது பற்றி நீதிமன்றம் எதிலும் விசாரிக்கப் படுதல் ஆகாது.

அமைச்சர்களைப் பற்றிய பிற வகையங்கள்.

62. (1) தலைமை அமைச்சர், குடியரசுத் தலைவரால் பதவியில் அமர்த்தப் பெறுவார்; பிற அமைச்சர்கள், தலைமை அமைச்சரின் தேர்வுரையின்படி குடியரசுத் தலைவரால் பதவியில் அமர்த்தப் பெறுவர்.

(2) அமைச்சர்கள், குடியரசுத் தலைவர் விழையுமளவும் பதவிவகிப்பர்.

(3) இந்த அவை, மக்களவைக்குக் கூட்டுப் பொறுப்புடையதாக இருக்கும்.

(4) அமைச்சர் ஒருவர் தம் பதவியை ஏற்றுக் கொள்வதற்கு முன்பு, குடியரசுத் தலைவர், அவரைப் பதவியும் மறைகாப்பும் பற்றிய ஆணைமொழிகளை, மூன்றாம் இணைப்புப் பட்டியலில் அதற்கென தொகுக்கப்பட்டுள்ள சொன்முறைகளுக்கு இணங்க ஏற்கச் செய்தல் வேண்டும்.

(5) அமைச்சர் ஒருவர், நாடாளுமன்ற ஈரவைகளில் ஏதேனுமொன்றில் தொடர்ந்து ஆறு மாத கால அளவிற்கு உறுப்பினராக இல்லாவிடில், அந்தக் கால அளவு முடிவுற்றதும் தம் அமைச்சர் பதவியை இழந்தவர் ஆவார்.

(6) அமைச்சர்களின் வரையூதியங்களும் படித் தொகைகளும் நாடாளுமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் தீர்மானிக்கிறவாறு இருக்கும்; நாடாளுமன்றம் அவ்வாறு தீர்மானிக்கிற வரையில், அவை இரண்டாம் இணைப்புப் பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ளவாறு இருந்துவரும்.

## இந்தியாவின் தலைமை வழக்கறிஞர்

இந்தியாவின் தலைமை வழக்கறிஞர்

[1]63. (1) குடியரசுத் தலைவர், உச்சநீதிமன்றத்தின் நீதிபதியாக அமர்த்தப் பெறுவதற்குத் தகுதிப்பாடுடைய

1. இந்தக் குழு, மாநில தலைமை வழக்குரைஞர் பதவியிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதற்காகவும் இங்கிலாந்து, அமெரிக்கா

ஒருவரை இந்தியாவின் தலைமை வழக்கறிஞராக அமர்த்துவார்.

(2) குடியரசுத் தலைவரால், அவ்வப்போது குறித்தனுப்பப்படும் சட்டப் பொருட்பாடுகளைப் பொறுத்து இந்திய அரசாங்கத்திற்கு ஆய்வுரை அளிப்பதும், அவரால் தமக்குக் குறித்தளிக்கப்படும் சட்டப் பாங்குடைய பிற கடமைகளைப் புரிவதும், இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ அல்லது நிகழுறு காலத்தில் செல்லாற்றலிலுள்ள பிற சட்டத் தாலோ அதன் வழியாலோ தமக்கு வழங்கப்படும் பதவிப் பணிகளை ஆற்றுவதும் தலைமை வழக்கறி ஞரின் கடமை ஆகும்.

(3) தலைமை வழக்கறிஞர், தம் கடமைகளைப் புரிகையில், இந்திய ஆட்சி நிலவரையிலுள்ள அனைத்து நீதிமன்றங்களிலும் வாதிடும் உரிமை உடையவர் ஆவார்.

(4) தலைமை வழக்கறிஞர், குடியரசுத் தலைவர் விழையுமளவும் பதவி வகிப்பார்; குடியரசுத் தலைவர் தீர்மானிக்கும் பணியூதியத்தைப் பெறுவார்.

## அரசாங்க அலுவல் நடைமுறை

இந்திய அரசாங் கத்தின் அலுவல் நடத்துமுறை.

64. (1) இந்திய அரசாங்கத்தின் ஆட்சித்துறை நடவடிக்கைகள் அனைத்தும், குடியரசுத் தலைவரின் பதவிப் பெயரால் எடுக்கப்படுவதாக இயம்பப் பெறுதல் வேண்டும்.

(2) குடியரசுத் தலைவரின் பதவிப் பெயரால் பிறப்பிக்கப்படும் ஆணைகளும் ஆக்கப்படும் முறை யாவணங்களும், குடியரசுத் தலைவர் வகுக்கும் விதி

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

போன்ற நாடுகளில் நடைமுறையில் உள்ள சொற்றொடரைப் பின்பற்றவேண்டுமென்பதற்காகவும், ''இந்தியாவின் அட்வகேட் ஜெனரல்'' என்ற பதவிச் சொற்களை ''இந்தியாவின் அட்டர்னி ஜெனரல்'' என மாற்றியுள்ளது.

களில் குறித்துரைக்கப்படும் முறையில் உறுதிச் சான்றிடப்படுதல் வேண்டும்; அவ்வாறு உறுதிச் சான்றிடப்பட்ட ஆணை அல்லது முறையாவணம் குடியரசுத் தலைவரால் பிறப்பிக்கப்பட்ட ஆணை அல்லது ஆக்கப்பட்ட முறையாவணம் அன்று என்னும் காரணங்காட்டி, அதன் செல்லுத்தன்மையை எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

குடியரசுத்தலைவருக்குத்தகவல் தருவது முதலியவை பொறுத்த தலைமை அமைச்சருக்குள்ள கடமைகள்.

65. பின்வருவன தலைமை அமைச்சரின் கடமைகள் ஆகும் -

(அ) ஒன்றியத்து அலுவல் நடவடிக்கைகளை நிருவகித்தல் தொடர்பாக அமைச்சரவையின் முடிவுகள் மற்றும் சட்டமியற்றுவதற்கான செயற்குறிப்புகள் அனைத்தையும் குடியரசுத் தலைவருக்குத் தெரிவித்தல்;

(ஆ) ஒன்றியத்து அலுவல் நடவடிக்கைகளை நிருவகித்தல் மற்றும் சட்டமியற்றுவதற்கான செயற்குறிப்புகள் தொடர்பாகக் குடியரசுத் தலைவர் கேட்டனுப்பும் தகவலைத் தருதல்; மற்றும்

(இ) ஓர் அமைச்சரால் முடிவு எடுக்கப்பட்டு, ஆனால் அமைச்சரவையால் ஆராய்வுக்கு ஏற்றுக்கொள்ளப்படாத பொருட்பாடு எதனையும், ஆராய்வுக்காக அமைச்சரவையின் முன்வைக்குமாறு குடியரசுத் தலைவர் வேண்டுறுத்துவாராயின், அவ்வாறு செய்தல்.

## அத்தியாயம் - II -

## நாடாளுமன்றம் பொதுவியல்

நாடாளுமன்றத்தின் அமைப்பு

66. ஒன்றியத்திற்கென நாடாளுமன்றம் ஒன்று இருக்கும்; அது, குடியரசுத் தலைவரையும் மாநிலங்களவை, மக்களவை எனப்படும் இரண்டு அவைகளையும் கொண்டதாக இருக்கும்.

நாடாளுமன்ற அவைகளின் கட்டமைப்பு

*67. (1)* மாநிலங்களவை இருநூற்று ஐம்பது உறுப்பினர்களைக் கொண்டதாக இருக்கும், அவற்றில் -

*(அ)* இந்த உறுப்பின் கூறு(2) ன் வகையங்களுக்கு இணங்க பதினைந்து உறுப்பினர்கள் குடியரசுத் தலைவரால் நியமனம் செய்யப்படுவர்; மேலும்

*(ஆ)* மீதமுள்ளவர்கள் மாநிலங்களின் பிரதி நிதிகளாவர்.

வரம்புரையாக -

முதல் அட்டவணைப் பட்டியல் பகுதி-IIIல் தற்பொழுது குறிப்பிடப்பட்டுள்ளவாறு மாநிலங்களின் பிரதிநிதிகளின் மொத்த எண்ணிக்கை மீதமுள்ளவர்களில் நாற்பது விழுக்காட்டிற்கு மிகையாகாமல் இருத்தல் வேண்டும்.

[1](2). இந்த உறுப்பின் கூறு(1)ன் உட்கூறு (அ) வின்படி குடியரசுத் தலைவரால் நியமனம் செய்யப்

---

1. இக்குழு, வயதுவந்தவர்களுக்கான வாக்குரிமை காரணமாக, தனிஉரிமைகளை முன்வைக்க மாநிலங்கள் அவையில் பதினைந்து உறுப்பினர்களுக்கு மிகையாகாமல் குடியரசுத்தலைவர் நியமனம் செய்யலாமென்றும், தொழிலாளர், வர்த்தகம் மற்றும் தொழில்களுக்காகத் தனிப் பிரதிநிதித்துவம் தேவையில்லை எனவும் கருதுகின்றது. ஐரிஷ் அரசமைப்பின்படி இதுவரையில் செல்லாற்றலிலிருந்த பெயர்ப்பட்டியல் தேர்தல் முறை செயல்பாட்டில் மிகவும் திருப்தியளிக்கவில்லை என்பதை இக்குழு உணர்கின்றது. இக்குழு, ஒரு குறிப்பிட்ட அளவில் செயல்முறை சார்ந்த பிரதிநிதித்துவம் இருக்க வேண்டுமென வைத்துக் கொள்ளும்போது, இந்தப் பொருட்பாட்டில் வேறு எந்த வழிகாட்டு முறையும் இல்லாததால், தேர்தலுக்குக்குப் பதிலாக குடியரசுத்தலைவரால் நியமனம் செய்வதற்கு வகையம் செய்துள்ளது. இக்குழு, தேர்தலுக்கு மாற்றாக நியமன முறையை வகுக்க வேண்டியிருப்பதாலும், தொழிலாளர், வர்த்தகம் மற்றும் தொழில்களுக்குத் தனிப்பிரதிநிதித்துவம் தேவையில்லை என இக்குழு கருதுவதாலும், பதினைந்து நியமன உறுப்பினர்களுக்கு வகையகம் செய்வது போதுமானது என்பது இக்குழுவின் கருத்தாகும்.

பெறும் உறுப்பினர்கள், பின்வருவன போன்ற பொருட்பாடுகளைப் பொறுத்துச் சிறந்த தனியறிவோ செயலுறு பட்டறிவோ உடையவர்களாக இருத்தல் வேண்டும் :-

(அ) இலக்கியம், கலை, அறிவியல் மற்றும் கல்வி;

(ஆ) விவசாயம், மீன்வளம் மற்றும் தொடர்புடைய பொருட்பாடுகள்;

(இ) பொறியியல் மற்றும் கட்டிடக்கலை;

(ஈ) பொதுநிர்வாகம் மற்றம் சமுதாயப் பணி.

3. முதலாவது அட்டவணை பகுதி I அல்லது பகுதி IIIல் நிகழுறுகாலத்தில் குறிப்பிடப்பட்டுள்ள ஒவ்வொரு மாநிலத்தின் மாநில அவைப் பிரதிநிதிகள் -

(அ) எந்த மாநிலத்தில் சட்டமன்றம் ஈரவைகளாக உள்ளனவோ அங்கு தேர்ந்தெடுக்கப் பெற்ற கீழவை உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப் பெறுவர்;

(ஆ) எந்த மாநிலத்தில் சட்டமன்றம் ஒரே ஒரு, அவையாக உள்ளதோ அந்த அவையின் தேர்ந்தெடுக்கப்பெற்ற உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப் பெறுவர்;

(இ) எந்த மாநிலத்தில் சட்டமன்றப் பேரவை இல்லையோ அங்கு நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் வகுக்கப்படும் முறையில் தேர்வு செய்யப் பெறுவர்.

(4) முதலாவது அட்டவணை பகுதி IIல் நிகழுறு காலத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களின் மாநில அவைப் பிரதிநிதிகள் நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் வகுக்கப்படும் முறையில் தேர்வு செய்யப் பெறுவர்.

(5) (அ) இந்த அரசமைப்பின் 292 மற்றும் 293 ஆம் உறுப்புக்களின் வகையங்களுக்கு உட்பட்டு, மக்களவை, மாநிலங்களின் நிலவரைகளில் வாக்காளர் களால் நேரடியாகத் தேர்வுசெய்யப்பட்ட மக்கள் பிரதி நிதிகள் ஐநூறுக்கு மேற்படாதவர்களைக் கொண்ட தாக இருக்கும்.

(ஆ) உட்கூறு (அ) வினைப் பொறுத்தவரை, இந்திய மாநிலங்கள் நிலவரை தொகுதிகளாகப் பிரிக் கப்பட்டு, ஒருங்கிணைக்கப்பட்டு அல்லது உருவாக்கப் பட்டு, அத்தகைய ஒவ்வொரு தொகுதிக்கும் ஒதுக்கப் படும் பிரதிநிதிகளின் எண்ணிக்கை, 7,50,000 மக்கள் தொகைக்கு ஒரு பிரதிநிதிக்குக் குறையாமலும், 5,00,000 மக்கள் தொகைக்கு ஒரு பிரதிநிதிக்கு மேற்படாமலும் இருக்கின்றவாறு உறுதி செய்து முடிவு செய்யப் பெறுதல் வேண்டும்.

வரம்புரையாக: முதலாவது இணைப்புப் பட்டி யல் பகுதி IIIல் குறிப்பிடப்பட்டுள்ளவாறு, நிகழுறு காலத்தில் மாநிலங்களின் பிரதிநிதிகளின் மொத்த எண்ணிக்கையும் அவற்றின் மொத்த மக்கள் தொகைக் குமான விகிதம், அதே இணைப்பு பட்டியலில் பகுதி கள் I மற்றும் IIல் குறிப்பிடப்பட்டுள்ளவாறு நிகழுறு காலத்தில் அந்த மாநிலங்களின் மொத்தப் பிரதிநிதி களின் எண்ணிக்கையும் அதே மாநிலங்களின் மொத்த மக்கள் தொகைக்கான வீதத் தொடர்பிற்கு மேற்படா மல் இருத்தல் வேண்டும்.

(இ) எந்தவொரு காலக்கட்டத்திலும், ஒவ் வொரு நிலவரை தொகுதிக்காக தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கைக்கும் அந்தத் தொகுதியில் கடைசி முறை மக்கள் கணக் கெடுப்பின் படியான மக்கள் தொகைக்கும் இடையி லான விகிதம், இயலுமளவு, இந்தியா முழுவதற்கும் ஒருபடித்தாய் இருத்தல் வேண்டும்.

(6) மக்களவைக்கான தேர்தல் வயது வந்தவர் வாக்குரிமை என்ற அடிப்படையிலிருக்கும். அதாவது, இருபத்தொரு வயதிற்குக் குறையாமலும், குடியுரிமை யற்றவர், மனநோய் நிலையிலுள்ளவர், தண்டனைக் குரிய குற்றம் அல்லது ஊழல் அல்லது சட்டத்திற்குப் புறம்பான செயலில் ஈடுபடுதல் ஆகிய காரணங்களுக் காக இந்த அரசமைப்பினாலோ அல்லது நாடாளு மன்றத்தின் எந்தவொரு சட்டத்தினாலோ தகுதியற்ற வராக்கப்படாமலும் உள்ள ஒவ்வொரு குடிமகனும் அத்தகைய தேர்தல்களில் வாக்காளராக பதிவு செய்யப் படுவதற்குத் தகுதியுடைவராவார்.

(7) மாநிலங்களைத் தவிர ஏனைய ஆட்சி நிலப் பகுதிகளுக்கு மக்களவையில் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் வகை செய்யலாம்.

(8) இந்த அரசமைப்பின் உறுப்பு - 289க்கு உட்பட்டு, ஒவ்வொரு முறையும் மக்கள் கணக்கெடுப்பு முடிவடைவதன் மேல், மாநிலங்களின் அவையி லுள்ள பல மாநிலங்களுக்கும் மக்களவையிலுள்ள பல நிலவரைத் தேர்தல் தொகுதிகளுக்குமான பிரதி நிதித்துவம், நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் முடிவு செய்யப்படும் தேதியிலிருந்து தக்க அதிகார அமைப் பாலும் தக்கமுறையிலும் மறுநேரமைவு செய்யப் படுதல் வேண்டும்.

(9) முதலாவது இணைப்புப்பட்டியல் பகுதி IIIல் குறிப்பிடப்பட்டுள்ளவாறு நிகழுறு காலத்தில் மாநிலங்கள் அவைக்கு பிரதிநிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்புவதற்காக மாநிலங்களை ஒருங்கிணைக்கும் போது, இந்த உறுப்பிற்காக ஒருருவாய் அமைக்கப் படும் மொத்தக் குழுவும் ஒற்றை மாநிலமாகக் கருதப் படும்.

நாடாளுமன்ற அவைகளின் காலவரை

68. (1) மாநிலங்களவை கலைப்புக்கு உள்ளாவதில்லை; ஆனால், நாடாளுமன்றம் சட்டத்தினால் இதன்பொருட்டு வகுக்கும் வகையங்களுக்கு இணங்க, ஒவ்வொர் இரண்டாம் ஆண்டும் கழிவுறுவதன் மேல், கூடியவிரைவில், அந்த அவையின் உறுப்பினர்களில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பகுதியினர் விலகிவிடுதல் வேண்டும்.

(2) மக்களவை, அது முன்னதாகவே கலைக்கப்பட்டாலன்றி, அதன் முதல்கூட்டத்திற்காகக் குறிக்கப்பட்ட தேதியிலிருந்து [1]ஐந்தாண்டுகள் தொடர்ந்து இருக்கும்; அதற்கு மேல் நீடித்தல் ஆகாது; மேற்சொன்ன [1]ஐந்தாண்டுக் கால அளவு கழிவுறுங்கால், அந்த அவை கலைக்கப்பட்டதாக ஆகிவிடும்.

**வரம்புரையாக:** நெருக்கடிநிலைச் சாற்றாணை ஒன்று, செயற்பாட்டில் இருக்குங்கால், மேற்சொன்ன கால அளவை, ஒரு தடவையில் ஓர் ஆண்டுக்கு மேற்படாமலும், எந்நேர்விலும், அந்தச் சாற்றாணை செயற்பாடு அற்றுப்போன பின்பு ஆறு மாதக்கால அளவிற்கு மேற்படாமலும், குடியரசுத் தலைவரால் நீட்டிக்கலாம்.

---

1. நாடாளுமன்ற அரசு முறையில் ஒரு அமைச்சரின் பணியின் முதலாவது ஆண்டு பொதுவாக நிர்வாகப் பணிகள் பற்றிய அனுபவ அறிவு பெற எடுத்துக்கொள்ளப்படுவதாலும், கடைசி ஆண்டு அடுத்த பொதுத் தேர்தலுக்கான தயாரிப்புகளுக்காக எடுத்துக் கொள்ளப்படுவதாலும், இரண்டு ஆண்டுகள் தான் பயனுடைய பணியாற்ற விடப்பட்டுள்ளது. திட்டமிடப்பட்ட நிர்வாகத்தைச் செயல்படுத்த இது மிகவும் குறுகிய காலம் எனக் கருதுவதனால் மக்களவையின் காலவரையை ''நான்கு ஆண்டுகள்'' என்பதற்குப் பதிலாக 'ஐந்து ஆண்டுகள்'' என இக்குழு இடையில் சேர்ந்துள்ளது.

நாடாளுமன்றக் கூட்டத்தொடர்கள், அக் கூட்டத்தொடர்களை இறுதி செய்தல்மற்றும் கலைத்தல்.

69. (1) நாடாளுமன்றத்தின் அவைகள் ஒவ்வொரு ஆண்டிலும் குறைந்தது இரண்டு முறையாவது கூட்டப்படுதல் வேண்டும்; ஒரு கூட்டத் தொடரின் கடைசி அமர்வுக்கும் அடுத்த கூட்டத் தொடரின் முதல் அமர்வுக்கெனக் குறிப்பிடப்படும் தேதிக்கும் இடையேயுள்ள கால அளவு ஆறு மாதங்களுக்குக் குறைவாகவே இருத்தல் வேண்டும்.

(2) இந்த உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, குடியரசுத் தலைவர் அவ்வப்போது -

(அ) தாம் தக்கதெனக் கருதும் காலத்திலும் இடத்திலும் கூடுமாறு நாடாளுமன்றத்தின் அவைகளுக்கும் அல்லது ஏதாவதொரு அவைக்கும் அழைப்பாணை விடுப்பார்;

(ஆ) அவைகளின் கூட்டத்தொடரை இறுதி செய்யலாம்;

(இ) மக்களவையைக் கலைத்து விடலாம்.

நாடாளுமன்ற அவைகளில் உரையாற்றவும் அவற்றிற்குச் செய்தியுரை அனுப்பவும் குடியரசுத் தலைவருக்குள்ள உரிமை:

70. (1) குடியரசுத் தலைவர் நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றில் அல்லது ஈரவைகளின் ஒருங்கமர் கூட்டத்தில் உரையாற்றலாம்; அதற்காக உறுப்பினர்களின் வருகையை வேண்டுறுத்தலாம்.

(2) குடியரசுத் தலைவர், நாடாளுமன்றத்தில் அப்போது ஓர்விலுள்ள ஒரு சட்ட முன்வடிவைப் பொறுத்தோ பிற எதனையும் பொறுத்தோ நாடாளுமன்றத்தின் ஈரவைகளில் எதற்கும் செய்தியுரை அனுப்பலாம்; அவ்வாறான செய்தியுரையினைப் பெற்றுள்ள அவை, அச்செய்தியுரையில் ஓர்வுக்கு எடுத்துக் கொள்ள வேண்டுமென வேண்டுறுத்தப் பட்ட பொருட்பாட்டை ஒல்லும் விரைவுடன் ஓர்வு செய்தல் வேண்டும்.

71. (1) ஒவ்வொரு கூட்டத்தொடரின் தொடக்கத்திலும் நாடாளுமன்ற ஈரவைகளின் ஒருங்கமர் கூட்டத்தில் குடியரசுத் தலைவர் உரையாற்றி, அதனைக்

கூட்டியதற்கான காரணங்களையும் நாடாளுமன்றத்திற்குத் தெரிவிப்பார்.

நாடாளுமன்றத்தின் ஒவ்வொரு கூட்டத் தொடரின் தொடக்கத்தில் குடியரசுத் தலைவரின் சிறப்புரையும்; உரையில் குறிப்பிடப்படும் பொருட்பாடுகளைப் பற்றி நாடாளுமன்றத்தில் விவாதம் செய்தலும்.

(2) அவ்வுரையில் குறிப்பிடப்பட்ட பொருட்பாடுகளைப் பற்றி விவாதம் செய்வதற்கு நேரம் ஒதுக்குவதற்காகவும் அவையின் ஏனைய நடவடிக்கைகளில் இந்த விவாதத்திற்கு முன்னுரிமை அளிக்கவும், ஈரவைகளின் நெறிமுறையை ஒழுங்குறுத்தும் விதிகளின் வழிவகை செய்யப்படுதல் வேண்டும்.

நாடாளுமன்ற அவைகள் தொடர்பாக அமைச்சர்களுக்கும் தலைமை வழக்கறிஞருக்கும் உள்ள உரிமைகள்.

(72) அமைச்சர் ஒவ்வொருவரும், இந்திய தலைமை வழக்கறிஞரும், ஈரவைகளில் எதிலும் அல்லது அவைகளின் கூட்டு அமர்வு எதிலும் அல்லது தாம் உறுப்பினராகக் குறிக்கப்பெறும் நாடாளுமன்றக் குழு எதிலும் உரையாற்றவும் பிறவகையில் அதன் நடவடிக்கைகளில் பங்குகொள்ளவும் உரிமை உடையவர் ஆவார்; ஆனால், இந்த உறுப்பின் பயன்திறனை வைத்து அவர் வாக்களிக்கும் உரிமை கொண்டவர் ஆகார்.

## நாடாளுமன்றப் பதவியாளர்கள்

மாநிலங்கள் அவைத் தலைவரும் துணைத் தலைவரும்.

73.(1) இந்தியக் குடியரசுத் துணைத்தலைவர் தம் பதவி வழியில் மாநிலங்களவைத் தலைவராக இருப்பார்.

(2) மாநிலங்களவை, அந்த அவையின் உறுப்பினர் ஒருவரை அதன் துணைத்தலைவராக கூடிய விரைவில் தெரிந்தெடுத்தல் வேண்டும்; மேலும், துணைத்தலைவர் பதவி காலியாகுந்தோறும் மற்றோர் உறுப்பினரை அதன் துணைத்தலைவராக அந்த அவை தெரிந்தெடுத்தல் வேண்டும்.

மாநிலங்கள் அவைத்துணைத் தலைவர் பதவியை விட்டகலுதலும் பதவி விலகுதலும் பதவியிலிருந்து அகற்றப்படுதலும்.

74. மாநிலங்களவைத் துணைத் தலைவராகப் பதவி வகிக்கும் ஓர் உறுப்பினர் -

(அ) மாநிலங்களவையின் உறுப்பினராக இருப்பது அற்றுப் போய்விடின் அவர் தம் பதவியை விட்டகலுதல் வேணடும்;

(ஆ) மாநிலங்களவைத் தலைவருக்குத் தம் கையொப்பமிட்டு எழுத்து வழித் தெரிவித்து, எந்த நேரத்திலும், தம் பதவியை விட்டு விலகிக் கொள்ளலாம்; மற்றும்

(இ) தகுதியின்மை அல்லது நம்பிக்கையின்மை காரணத்துக்காக, மாநிலங்கள் அவையின் அப்போதைய அனைத்து உறுப்பினர்களின் பெரும்பான்மையினர் அந்த அவையில் நிறைவேற்றும் தீர்மானம் ஒன்றினால் அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம்.

**வரம்புரையாக:** இந்த உறுப்பின் கூறு (இ) யினைப் பொறுத்த தீர்மானம் எதுவும் அத்தீர்மானத்தை முன்மொழியவிருக்கும் கருத்தினைத் தெரிவித்து பதினான்கு நாட்களுக்குக் குறையாமல் முன்னறிவிப்புக் கொடுத்தாலன்றி, முன்மொழியப்படுதல் ஆகாது.

மாநிலங்கள் அவைத் தலைவரின் பதவிக்குரிய கடமைகளைப் புரிந்து வரவோ தலைவராகச் செயலுறவோ துணைத்தலைவருக்குஅல்லது பிற உறுப்பினருக்கு உள்ள அதிகாரம்.

75. (1) மாநிலங்களவைத் தலைவரின் பதவி காலியாக இருக்குங்கால் அல்லது இந்த அரசியலமைப்பின் உறுப்பு - 54ன் கீழ், குடியரசுத் துணைத் தலைவர் குடியரசுத் தலைவராகச் செயலுறும் காலத்தில் அல்லது குடியரசுத் தலைவரின் பதவிப் பணிகளை ஆற்றிவரும் காலத்தில் மாநிலங்கள் அவைத் தலைவரின் பதவிக்குரிய கடமைகளை, அவைத் துணைத் தலைவரும் அவைத் துணைத்தலைவர் பதவியும் காலியாக இருப்பின், குடியரசுத் தலைவர் அதன் பொருட்டு அமர்த்தும் மாநிலங்களவையின் உறுப்பினர் எவரும் புரிந்து வருதல் வேண்டும்.

(2) மாநிலங்களவையின் அமர்வு எதிலும் அவைத்தலைவர் இல்லாதபோது துணைத் தலைவரும், அவரும் இல்லாதிருப்பின் அவையின் நெறிமுறை விதிகளின்படி தீர்மானிக்கப்பெறும் உறுப்பினர் எவரும், அத்தகையவரும் இல்லாதிருப்பின், அவையினால் தீர்மானிக்கப்பெறும் பிற உறுப்பினர் எவரும் அவைத் தலைவராகச் செயலுறுதல் வேண்டும்.

மக்களவைத்தலைவரும் துணைத் தலைவரும்

76. மக்களவை, அந்த அவையின் உறுப்பினர்கள் இருவரை முறையே அதன் தலைவராகவும் துணைத் தலைவராகவும், கூடிய விரைவில், தெரிந்தெடுத்தல் வேண்டும்; மேலும் அவைத்தலைவர் அல்லது துணைத்தலைவர் பதவி காலியாகுந்தோறும், மற்றோர் உறுப்பினரை, நேர்வுக்கேற்ப, அதன் தலைவராக அல்லது துணைத் தலைவராக அந்த அவை தெரிந்தெடுத்தல் வேண்டும்.

மக்களவைத் தலைவர், துணைத்தலைவர் ஆகியோர் பதவியை விட்டகலுதலும் பதவி விலகுதலும் பதவியிலிருந்து அகற்றப்படுதலும்.

77. மக்களவைத் தலைவராகவோ துணைத் தலைவராகவோ பதவி வகிக்கும் ஓர் உறுப்பினர்-

(அ) மக்களவையின் உறுப்பினராக இருப்பது அற்றுப் போய்விடின், அவர் தம் பதவியை விட்டகலுதல் வேண்டும்.

(ஆ) அந்த உறுப்பினர் அவைத் தலைவராக இருப்பின், துணைத் தலைவருக்கும் அந்த உறுப்பினர் துணைத் தலைவராக இருப்பின் அவைத் தலைவருக்கும், தம் கையொப்ப மிட்டு எழுத்துவழித் தெரிவித்து, எந்த நேரத்திலும், தம் பதவியை விட்டு விலகிக் கொள்ளலாம்; மற்றும்

(இ) மக்களவையின் அப்போதைய அனைத்து உறுப்பினர்களில் பெரும்பான்மையினர் அந்த அவையில் நிறைவேற்றும் தீர்மானம் ஒன்றினால், தகுதியின்மை அல்லது நம்பிக்கையின்மை காரணத்திற்காக, அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம்.

வரம்புரையாக: இந்த உறுப்பின் (இ) கூறினைப் பொறுத்த தீர்மானம் எதுவும், அத்தீர்மானத்தை முன்மொழிய விருக்கும் கருத்தினைத் தெரிவித்துப் பதினான்கு நாட்களுக்குக் குறையாமல் முன்னறிவிப்புக் கொடுத்திருந்தாலன்றி, முன்மொழியப்படுதல் ஆகாது.

மேலும் வரம்புரையாக: மக்களவை கலைக்கப்படும் பொழுது, அடுத்து மக்களவையின் முதல் கூட்டம் தொடங்குவதற்கு முன்பு வரையில், அவைத்தலைவர் தம் பதவியை விட்டகல வேண்டியதில்லை.

*மக்களவைத் தலைவரின் பதவிக்குற்ற கடமைகளைப் புரிந்துவரவோ தலைவராகச் செயலுறவோ துணைத்தலைவருக்கு அல்லது பிற உறுப்பினருக்குள்ள அதிகாரம்.*

78. (1) மக்களவைத் தலைவரின் பதவி காலியாக இருக்கும்பொழுது, அப்பதவிக்குற்ற கடமைகளை அவைத் துணைத்தலைவரோ, அல்லது அவைத் துணைத்தலைவர் பதவியும் காலியாக இருப்பின், குடியரசுத்தலைவரால் அதன் பொருட்டு அமர்த்தப் படும் மக்களவை உறுப்பினரோ புரிந்து வருதல் வேண்டும்.

(2) மக்களவையின் அமர்வு எதிலும், அவைத் தலைவர் இல்லாதபோது துணைத் தலைவரும், அவரும் இல்லாதிருப்பின், அவையின் நெறிமுறை விதிகளின்படி தீர்மானிக்கப்பெறும் உறுப்பினர் எவரும், அத்தகையவரும் இல்லாதிருப்பின், அந்த அவையி னால் தீர்மானிக்கப் பெறும் பிற உறுப்பினர் எவரும் அவையின் தலைவராகச் செயலுறுதல் வேண்டும்.

*மாநிலங்கள் அவைத் தலைவர், துணைத் தலைவர், மக்களவைத் தலைவர், துணைத் தலைவர் ஆகியோரின் வரையூதியங்களும் படித்தொகைகளும்.*

79. மாநிலங்களவைத் தலைவர், துணைத் தலைவர், மக்களவைத்தலைவர், துணைத்தலைவர் ஆகியோருக்கு முறையே நாடாளுமன்றம் சட்டத் தினால் நிருணயிக்கும் வரையூதியங்களும் படித்தொகை களும் வழங்கப்படும்; அவ்வாறு அதன் பொருட்டு வகை செய்யப்படும் வரையில், இரண்டாம் இணைப்புப் பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியங் களும் படித்தொகைகளும் வழங்கப்பட்டுவரும்.

## அலுவல் நடத்துமுறை

*நாடாளுமன்ற அவைகளில் வாக்களித்தல், காலியிடங்கள் இருந்த போதிலும் செயலுறுவதற்கு அவைகளுக்குள்ள அதிகாரம் மற்றும் குறைவெண்.*

80. (1) இந்த அரசமைப்பில் பிறவாறு வகை செய்யப்பட்டிருப்பது நீங்கலாக, எந்தவொரு அமர் விலோ அல்லது அவைகளின் கூட்டமர்விலோ எழும் வினாக்கள் அனைத்தும், மாநிலங்களவைத் தலைவர் அல்லது மக்களவைத் தலைவர் அல்லது அவ்வாறு செயலுறுகின்றவரைத் தவிர்த்து, வந்திருந்து வாக்களிக் கும் ஏனைய உறுப்பினர்களின் பெரும்பான்மை வாக்குகளால் தீர்மானிக்கப்படுதல் வேண்டும்.

மாநிலங்களவைத் தலைவரோ மக்களவைத் தலைவரோ அல்லது அத்தகையவராகச் செயலுறுகின்றவரோ முதற்கண் வாக்களித்தல் ஆகாது; ஆனால், வாக்குகள் சமன்மையாக அமையுமானால், அவருக்கு அறுதிசெய் வாக்கு ஒன்று உண்டு; அதனை அவர் அளித்தல் வேண்டும்.

(2) நாடாளுமன்ற ஈரவைகள் ஒவ்வொன்றிலும் உறுப்பினர் பதவியில் காலியிடம் எதுவும் இருந்த போதிலும், அந்த அவை செயலுறுவதற்கு அதிகாரம் உடையது ஆகும்; மேலும், நாடாளுமன்ற நடவடிக்கைகளின்போது அவையில் அமர்ந்திருக்கவோ வாக்களிக்கவோ பிறவாறாகப் பங்கு கொள்ளவோ உரிமை கொண்டிராத எவரும் அவ்வாறு செய்தார் எனத் தெரிய வந்த போதிலும் அந்நடவடிக்கைகள் செல்லுந் தன்மையுடையன ஆகும்.

(3) ஓர் அவையின் கூட்டம் நடைபெறும்போது எச்சமயத்திலேனும் கூட்டத்தில் இருப்பவர்களின் எண்ணிக்கை அந்த அவையின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கையில் ஆறில் ஒரு பகுதிக்குக்குறைவாக இருக்குமானால், குறைந்தது ஆறில் ஒரு பகுதி உறுப்பினர்கள் கூட்டத்தில் கலந்துகொள்ளும் வரையில், அந்தக்கூட்டத்தைத் தற்காலிகமாக நிறுத்திவைப்பதோ, ஒத்திவைப்பதோ மாநிலங்களவைத் தலைவரின் அல்லது மக்களவைத் தலைவரின் அல்லது அத்தகையவராகச் செயலுறகிறவரின் கடமை ஆகும்.

## உறுப்பினர்களின் தகுதிக்கேடுகள்

உறுப்பினர்களின் உறுதிமொழி வெளியீடு.

81. நாடாளுமன்ற ஈரவைகளின் ஒவ்வொரு உறுப்பினரும் தன்னுடைய பதவியை ஏற்றுக் கொள்வதற்கு முன்பு, குடியரசுத் தலைவர் அல்லது அதற்கென அவரால் நியமனம் செய்யப்பட்ட யாராவது ஒருவர் முன்னிலையில், மூன்றாவது இணைப்புப் பட்டியலில் அதற்கென வரையறுக்கப்பட்டுள்ள படிவத்

பதவியிடங்களை விட்டகலுதல்.

தில் கையொப்பமிட்ட ஓர் உறுதிமொழியினை வெளியிடுதல் வேண்டும்.

82. (1) எவர் ஒருவரும் நாடாளுமன்ற ஈரவைகளிலும் உறுப்பினராக இருத்தல் ஆகாது; ஒருவர் ஈரவைகளுக்கும் உறுப்பினராகத் தெரிந்தெடுக்கப் பெற்றிருப்பாராயின், அவர், அவ்விரு அவைகளில் ஏதாவது ஒன்றில் தம் பதவியிடத்தை விட்டகலுவதற்கு நாடாளு மன்றம் சட்டத்தினால் வகை செய்தல் வேண்டும்.

(2) நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றின் உறுப்பினர் ஒருவர்-

(அ) பின்தொடரும் உறுப்பினர் (1) ஆம் கூறில் குறிப்பிடப்பட்ட தகுதிக்கேடுகளில் எதற்கேனும் உள்ளாகி விடுவாராயின்; அல்லது

(ஆ) நேர்வுக்கேற்ப மாநிலங்களவைத் தலைவருக்கோ அல்லது மக்களைவத் தலைவருக்கோ தம் கையொப்பமிட்டு எழுத்துவழிப் பதவி விலகுவதாகத் தெரிவித்து இருப்பாராயின்,

அதன்மேல் அவருடைய பதவியிடம் காலியானதாகி விடும்.

(3) நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றின் உறுப்பினர் அந்த அவையின் அனுமதியின்றி அறுபது நாள் கால அளவிற்கு அதன் அனைத்துக் கூட்டங்களுக்கும் வாராதிருப்பாராயின், அவருடைய பதவியிடம் காலியாகிவிட்டதென அந்த அவை அறிவிக்கலாம்.

வரம்புரையாக: அந்த அறுபதுநாள் கால அளவைக் கணக்கிடுகையில், அந்த அவையின் கூட்டத்தொடர் இறுதி செய்யப்பட்டிருந்த கால அளவு அல்லது தொடர்ச்சியாக நான்கு நாட்களுக்கு மேல் அந்த அவை ஒத்திவைக்கப்பட்டிருந்த கால அளவு எதனையும் கணக்கில் எடுத்துக் கொள்ளுதல் ஆகாது.

உறுப்பினர் பதவித்தகுதிக் கேடுகள்

83. (1) ஒருவர் -

(அ) எந்த ஊதியப் பதவியை வகிப்பவர் உறுப்பினராயிருப்பதற்குத் தகுதிக்கேடு ஆவதில்லை என்று நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்புகின்றதோ அந்தப் பதவி அல்லாத பிற ஊதியப் பதவி எதனையும் இந்திய அரசாங்கத்தின் கீழோ மாநிலம் ஒன்றன் அரசாங்கத்தின் கீழோ வகிப்பாராயின்,

(ஆ) பித்துப் பிடித்தவராக இருந்து, அத்தகையரெனத் தகுதிறமுள்ள நீதிமன்றம் ஒன்றினால் விளம்பரப் பெற்றிருப்பாராயின்,

(இ) பட்ட கடனைத் தீர்க்க முடியாத நிலையிலிருந்து விடுப்புப் பெறாவதராயிருப்பாராயின்,

[1](ஈ) எவ்வகையிலேனும் ஓர் அயல்நாட்டு அதிகாரத்திடம் பற்றுறவோ சார்புறவோ தமக்கு உள்ளதென ஒப்பியவராக இருப்பவரோ அல்லது அயல்நாட்டு அதிகாரத்தின் ஆட்சிக்குட்பட்டவரோ, குடிமகனோ அல்லது அயல்நாட்டு அதிகாரத்தின் ஆட்சிக்குட்பட்டவர் அல்லது குடிமகனுக்குரிய உரிமைகளும் சிறப்புரிமைகளும் பெறத் தகுதி பெற்றவராயிருப்பாராயின்,

(உ) நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தாலோ அதன் வழியாலோ உறுப்பினராக இருப்பதற்கு தகுதிக் கேடுற்றவராக இருப்பாராயின்,

(ஊ) அவர், நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலும் உறுப்பினராகத் தெரிந்தெடுக்கப் பெறுவதற்கும், உறுப்பினராக இருந்து வருவதற்கும் தகுதிக்கேடுற்றவர் ஆவார்.

---

1. ஆஸ்திரேலிய காமன்வெல்த் அரசமைப்பு சட்டத்தின் விதி 44 (i) வகையங்களைப் பின்பற்றி இக்குழு, இந்த துணைக்கூறினைச் சேர்ந்துள்ளது.

(2) இந்த உறுப்பினைப் பொருத்தவரை, ஒருவர் (அ) பகுதி I‍ன் முதல் இணைப்புப் பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ளவாறு இந்திய அரசிலோ அல்லது எந்தவொரு மாநில அரசிலோ அந்த நேரத்தில் அமைச்சராயிருப்பராயின்; அல்லது

ஆ. பகுதி III‍ன் முதல் இணைப்புப் பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ளவாறு அவர், அந்த நேரத்தில், ஏதாவதொரு மாநிலத்தின் அமைச்சராக இருந்து அந்த மாநிலத்தின் சட்டமன்றத்திற்கு, அல்லது எங்கு சட்ட மன்றம் ஈரவைகள் உள்ளனவோ, அங்கு கீழ்சபைக்கும், சட்டமன்ற உறுப்பினர்களில் நான்கில் மூன்று பகுதிக்குக் குறையாமல் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்டதாயிருப்பின் அத்தகைய சட்ட மன்றத்திற்கும், நிலமைக்கேற்றவாறு, பொறுப்புடையவராயிருப்பாராயின், அந்த ஒரே காரணத்திற்காக அவர், இந்திய அரசிலோ அல்லது எந்தவொரு மாநில அரசிலோ, ஓர் ஊதியப் பதவியை வகிப்பவராக கருதக் கூடாது.

உறுப்பு - 81-ன் படி உறுதி மொழி வெளியிடுவதற்கு முன்போ தகுதியற்றவராக அல்லது தகுதிக் கேடுற்றவராக இருக்கும்போதோ அவையில் அமர்ந்தாலும் வாக்களித்தாலும் அதற் குற்றதண்டனை

84. ஒருவர், இந்த அரசமைப்பின் 81-ஆம் உறுப்பின் வேண்டுறுத்தங்களுக்கேற்ப நடப்பதற்கு முன்பு அல்லது நாடாளுமன்ற அவை ஒன்றில் உறுப்பினர் பதவிக்குத் தாம் தகுதியற்றவராகவோ, தகுதிக் கேடுற்றவராகவோ, நாடாளுமன்றத்தால் இயற்றப் பட்ட சட்டம் ஒன்றன் வகையங்களால் தாம் தடை செய்யப்பட்டிருப்பதை அறிந்திருந்தும், அவர் நாடாளு மன்ற அவை ஒன்றின் உறுப்பினராக அமர்வாராயின் அல்லது வாக்களிப்பாராயின், அவர் அவ்வாறு அமரும் அல்லது வாக்களிக்கும் நாள் ஒவ்வொன்றையும் பொறுத்து, ஐந்நூறு ரூபாய் தண்டனைக்குள்ளவார்; அது இந்திய அரசின் கடன் என வசூல் செய்யப்படும்.

## உறுப்பினர்களின் மதிப்புரிமைகள் மற்றும் காப்புரிமைகள்

உறுப்பினர்களின் மதிப்புரிமைகள் முதலியன

85. (1) நாடாளுமன்றத்தின் நெறிமுறையினை ஒழுங்குறுத்துகின்ற விதிகள், நிலையாணைகள் ஆகிய

வற்றிற்கு உட்பட்டு, நாடாளுமன்றத்தில் பேச்சுச் சுதந்திரம் இருத்தல் வேண்டும்.

(2) நாடாளுமன்ற உறுப்பினர் எவரும் நாடாளு மன்றத்தில் அல்லது அதன் குழு எதிலும் அவர் கூறிய எதனைப் பொறுத்தும் அல்லது அளித்தவாக்கு எதனைப் பொறுத்தும் நீதிமன்ற நடவடிக்கை எதற்கும் உள்ளாகமாட்டார்; அவ்வாறே எவரும் நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றால் அல்லது அதன் அதிகாரத்தின் கீழ் அறிக்கை, வரையேடு, வாக்களிப்புகள் அல்லது நடவடிக்கைகள் பற்றிச் செய்யப்படும் வெளியீடு பொறுத்தும் அத்தகைய நடவடிக்கைக்கு உள்ளாக மாட்டார்.

(3) பிற வகைகளில், ஈரவை உறுப்பினர்களின் மதிப்புரிமைகளும் காப்புரிமைகளும், நாடாளுமன்றம் சட்டத்தினால் அவ்வப்போது வரையறை செய்கின்ற வாறு இருக்கும்; அத்துடன், அவ்வாறு வரையறை செய்யப்படும் வரையில், இந்த அரசமைப்பு தொடங் கும்போது பிரிட்டிஷ் கூட்டரசின் நாடாளுமன்றப் பொது அவையின் உறுப்பினர்கள் அனுபவிக்கும் உரிமைகளை ஒத்ததாக இருக்கும்.

(4) இந்த உறுப்பின் (1), (2), (3) ஆகிய கூறு களின் வகையங்கள், நாடாளுமன்ற அவை ஒன்றில் பேசுவதற்கு மற்றும் பிறவாறு அதன் நடவடிக்கை களில் இந்த அரசமைப்பின்படி பங்குகொள்வதற்கு உரிமையுடையவர்களுக்கும் பொறுந்துவன ஆகும்.

உறுப்பினர்களின் வரையூதியங்களும் படித் தொகைகளும்

86. நாடாளுமன்ற ஈரவைகளின் உறுப்பினர்களும், நாடாளுமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் தீர் மானிக்கும் வரையூதியங்களையும் படித்தொகைகளை யும் பெறுவதற்கு உரிமை கொண்டவர்கள் ஆவர்; அதன் பொருட்டு அவ்வாறு வகைசெய்யப்படும் வரை யில், இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு, இந்தியத் தன்னாட்சிய சட்டப்பேரவை உறுப்பினர்களுக்குப் பொருந்துவனவாக இருந்த அதே

வரைக்கட்டுகளின்படியும் படித்தொகைகள் பெறுவதற்கு அவர்கள் உரிமை கொண்டவர்கள் ஆவர்.

## சட்டமியற்றுவதற்கான நெறிமுறை

சட்ட முன்வடிவுகளை அறிமுகம் செய்தலும் நிறைவேற்றுதலும் பற்றிய வகையங்கள்.

87. (1) இந்த அரசமைப்பின் 89, 97 ஆகிய உறுப்புகளின் வகையங்களுக்கு உட்பட்டு, பணச் சட்ட முன் வடிவுகள், பிற நிதிச் சட்ட முன்வடிவுகள் இவற்றைப் பொறுத்த சட்ட முன்வடிவு எதுவும், நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலும் முதலில் கொண்டு வரப்படலாம்.

(2) இந்த அரசமைப்பின் 88,89 ஆகிய உறுப்புகளின் வகையங்களுக்கு உட்பட்டு, திருத்தங்கள் ஏதும் இல்லாமல் அல்லது நாடாளுமன்ற ஈரவைகளும் ஏற்றுக்கொண்ட திருத்தங்களை மட்டும் கொண்டு, ஒரு சட்டமுன்வடிவை ஈரவைகளும் ஏற்றுக் கொண்டிருந்தாலன்றி, அது ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

(3) நாடாளுமன்றத்தில் முடிவு செய்யப்படாத நிலையிலுள்ள ஒரு சட்ட முன்வடிவு, அதன் அவைகளின் கூட்டத்தொடர் இறுதி செய்யப்படுவதன் காரணத்தால் அற்றுப்போவதில்லை.

(4) மக்களவையால் நிறைவேற்றப்படாத நிலையில் மாநிலங்களவையில் முடிவுசெய்யப்படாத ஒரு சட்ட முன்வடிவு, மக்களவை கலைக்கப்படுமாயின் அற்றுப் போவதில்லை.

(5) மக்களவையில் முடிவு செய்யப்பெறாத நிலையிலோ அல்லது மக்களவையால் நிறைவேற்றப்பட்டிருந்து, மாநிலங்களவையில் முடிவுசெய்யப்பெறாத நிலையிலுள்ள ஓர் சட்ட முன்வடிவு, மக்களவை கலைக்கப்படுவதன்மேல், இந்த அரசமைப்பின் 88-ஆம் உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, அற்றுப்போகும்.

குறித்த சில நேர்வுகளில் ஈரவைகளின் கூட்டமர்வு.

*88. (1) ஒரு சட்டமுன்வடிவு ஓர் அவையில் நிறைவேற்றப்பட்டிருந்து, மறு அவைக்கு அனுப்பப் பட்ட பின்பு*

*(அ) அச்சட்ட முன்வடிவு மறு அவையில் மறுக்கப்படுமாயின், அல்லது*

*(ஆ) அச்சட்ட முன்வடிவிற்கான திருத்தங்கள் குறித்து அந்த அவைகள் இறுதியாக வேறுபடுமாயின், அல்லது*

*(இ) அந்த மறுஅவை அச்சட்டமுன்வடிவைப் பெற்ற தேதியிலிருந்து, அச்சட்ட முன்வடிவு நிறை வேற்றப்படாமலேயே ஆறு மாதங்களக்கு மேல் கழிந் திருக்குமாயின்*

*மக்களவை கலைக்கப்பட்டதன் காரணமாக அச் சட்ட முன்வடிவு அற்றுப் போனாலன்றி, குடியரசுத் தலைவர், அச்சட்ட முன்வடிவைப் பற்றி கலந்து ஆராய்ந்து வாக்களிக்கும் பொருட்டு அந்த அவைகளை ஒரு கூட்டமர்வாகக் கூடுமாறு தாம் அழைக்கக் கருதி யுள்ளதை, அந்த அவைகள் அமர்விலிருப்பின், செய்தி யுரை வாயிலாகவோ அமர்வில் இல்லாதிருப்பின் பொது அறிவிக்கை வாயிலாகவோ அந்த அவை களுக்கு அறிவிக்கலாம்;*

*வரம்புரையாக: இந்தக் கூறிலுள்ள எதுவும், பணச் சட்ட முன்வடிவுக்குப் பொருந்துறுவதில்லை.*

*(2) இந்த உறுப்பின் (1) ஆம் கூறில் குறிப்பிடப் பட்டுள்ள ஆறு மாதக் கால அளவைக் கணக்கிடுகை யில், அந்த அவையின் கூட்டத்தொடர் நான்கு நாட் களுக்கு மேல் இறுதி செய்யப்பட்ட அல்லது ஒத்தி வைக்கப்பட்டிருந்த நேரம் எதனையும் கணக்கில் எடுத்துக்கொள்ளுதல் ஆகாது.*

(3) குடியரசுத் தலைவர், ஈரவைகளையும் கூட்டமர்வாகக்கூடுமாறு தாம் அழைக்கக் கருதியுள்ளதை இந்த உறுப்பின் (1) ஆம் கூறின்படி அறிவித்திருக்குமிடத்து, ஈரவைகளில் எதுவும், அச்சட்ட முன்வடிவின் மீதான நடவடிக்கையை மேற்கொண்டு தொடர்தல் ஆகாது; மேலும், குடியரசுத் தலைவர், தம் அறிவிக்கை தேதிக்குப் பின்பு, எச்சமயத்திலும் அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கப்பட்ட காரணத்திற்காகக் கூட்டமர்வாகக் கூடுமாறு அந்த அவைகளுக்கு அழைப்பாணை விடுக்கலாம்; அவ்வாறு செய்வாராயின் அந்த அவைகள் அதற்கிணங்க கூடுதல் வேண்டும்.

(4) ஈரவைகளின் கூட்டமர்வில் ஏற்றுக்கொள்ளப்பட்ட திருத்தங்கள் எவையேனுமிருப்பின் அவற்றுடன் சேர்த்து அச்சட்ட முன்வடிவு ஈரவைகளின் மொத்த உறுப்பினர்களில் வந்திருந்து வாக்களிப்பவர்களின் எண்ணிக்கையின் பெரும்பான்மையினரால், அக்கூட்டமர்வில் நிறைவேற்றப்படுமாயின், அது, இந்த அரசமைப்பைப் பொறுத்தவரை, ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்;

வரம்புரையாக: கூட்டமர்வு ஒன்றில்

(அ) அச்சட்ட முன்வடிவு ஓர் அவையினால் நிறைவேற்றப்பட்டிருந்து, மறு அவையினால் திருத்தங்களுடன் நிறைவேற்றப்படாமலும் அது முதலில் கொண்டுவரப்பட்ட அவைக்குத் திருப்பியனுப்பப்படாமலும் இருக்குமாயின், அச்சட்ட முன்வடிவை நிறைவேற்றுவதில் ஏற்பட்ட காலத்தாழ்வு காரணமாகத் தேவைப்படும் திருத்தங்கள் (எவையேனுமிருப்பின் அவை) அல்லாத பிறதிருத்தம் எதுவும், அச்சட்ட முன்வடிவுக்குக் கொண்டு வரப்படுதல் ஆகாது;

(ஆ) அச்சட்ட முன்வடிவு அவ்வாறு நிறைவேற்றப்பட்டுத் திருப்பி யனுப்பப்பட்டிருக்குமாயின், மேற்சொன்ன அத்திருத்தங்களும் ஏற்றுக் கொள்ளாத பொருட்பாடுகள் பொறுத்த பிற திருத்தங்களும் மட்டுமே அச்சட்ட முன்வடிவுக்

குக் கொண்டு வரப்படுதல் வேண்டும்; மேலும், இந்தக் கூறின்படி அனுமதிக்கத்தக்க திருத்தங்கள் எவை என்பதைப் பொறுத்து, தலைமை வகிப்பவரின் முடிவே அறுதியானது ஆகும்.

(5) கூட்டமர்வாகக் கூடுமாறு தாம் அழைக்கக் கருதியுள்ளதைக் குறித்துக் குடியரசுத் தலைவர் அறிவிக்கை விடுத்த பின்னர், மக்களவையைக் கலைக்க நேர்ந்தாலும் இந்த உறுப்பின்படி கூட்டமர்வாகக்கூடி அதில் அச்சட்ட முன்வடிவை நிறைவேற்றலாம்.

பணச் சட்ட முன் வடிவுகள் பொறுத்த தனியுறு நெறிமுறை

89.(1) பணச்சட்ட முன்வடிவு எதனையும் மாநிலங்களவையில் அறிமுகப்படுத்துதல் ஆகாது.

(2) பணச்சட்ட முன்வடிவு எதுவும், மக்களவையினால் நிறைவேற்றப்பட்ட பின்பு, மாநிலங்கள் அவைக்கு அதன் பரிந்துரைகளுக்காக அனுப்பப்படுதல் வேண்டும்; மாநிலங்களவை, அச்சட்ட முன்வடிவைப் பெற்ற தேதியலிருந்து, முப்பது நாள் கால அளவிற்குள் அச்சட்டமுன்வடிவை மக்களவைக்குத் தன் பரிந்துரைகளுடன் திருப்பியனுப்புதல் வேண்டும்; அதன்மேல், மக்களவை, மாநிலங்களவையினால் செய்யப்பட்ட பரிந்துரைகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் ஏற்றுக்கொள்ளலாம் அல்லது ஏற்க மறுக்கலாம்.

(3) மாநிலங்களவையின் பரிந்துரைகளில் எதனையும் மக்களவை ஏற்றுக்கொள்ளுமாயின், மாநிலங்களவையினால் பரிந்துரைசெய்யப்பட்டு மக்களவையினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட திருத்தங்களுடன் அந்தப் பணச்சட்டமுன்வடிவு ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

(4) மாநிலங்களவையின் பரிந்துரைகளில் எதனையும் மக்களவை ஏற்றுக்கொள்ளாவிடின், அந்தப் பணச்சட்டமுன்வடிவு, மாநிலங்களவை பரிந்துரை செய்த திருத்தங்கள் எதுவுமன்றி, மக்களவையால்

நிறைவேற்றப்பட்ட வடிவத்திலேயே ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

(5) மக்களவையால் நிறைவேற்றப்பட்டு, மாநிலங்களவைக்கு அதன் பரிந்துரைகளுக்காக அனுப்பப்பட்ட ஒரு பணச் சட்ட முன்வடிவு, மேற்சொன்ன முப்பது நாள் கால அளவிற்குள் மக்களவைக்குத் திருப்பி அனுப்பப்படாவிடின், அந்தக் காலஅளவு கழிவுற்றதும், அச்சட்ட முன்வடிவு, மக்களவையால் நிறைவேற்றப்பட்ட வடிவத்திலேயே ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

'பணச்சட்ட முன்வடிவுகள்'' என்பதன் பொருள் வரையறை.

90.(1) இந்த அத்தியாயத்தைப் பொறுத்தவரை, ஒரு சட்டமுன்வடிவு பின்வரும் பொருட்பாடுகள் அனைத்தையும் அல்லது அவற்றின் எதனையும் பற்றிய வகையங்களை மட்டுமே கொண்டிருப்பதாயின், அது ஒரு பணச்சட்ட முன்வடிவு எனக் கொள்ளப்படும்.

(அ) வரி எதனையும் விதித்தல், நீக்குதல், குறைத்தல், மாற்றுதல் அல்லது ஒழுங்குறுத்துதல்;

(ஆ) இந்திய அரசாங்கத்தால் பணம் கடன் வாங்கப்படுவதை அல்லது பொறுப்புறுதி எதுவும் அளிக்கப்படுவதை ஒழுங்குறுத்துதல் அல்லது இந்திய அரசாங்கம் பொறுப்பேற்றுள்ள அல்லது பொறுப்பேற்கவுள்ள நிதி பற்றிய கடமைப்பாடுகள் எவற்றையும் பொறுத்த சட்டத்தைத் திருத்தம் செய்தல்;

(இ) கையுறுபொருள்;

(ஈ) இந்திய நிதி வருவாய் இனங்களிலிருந்து பணம் ஒதுக்கீடு செய்தல்;

(உ) செலவினம் எதனையும் இந்திய நிதி வருவாய் இனங்களின் மீது சார்த்தப்பட்ட செலவினம் என விளம்புதல் அல்லது அத்தகைய செலவினத் தொகை எதனையும் கூடுதலாக்குதல்;

(ஊ) இந்திய நிதி வருவாய் இனங்களின் பொருட்டு பணம் பெறுதல் அல்லது அத்தகைய பணத்தைக் கையடைவு கொள்ளல் அல்லது வழங்குதல் அல்லது இந்திய அரசின் கணக்குகளைத் தணிக்கை செய்தல்; அல்லது

(எ) இந்தக் கூறின் (அ) முதல் (ஊ) வரையிலான உட்கூறுகளில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளில் எதனையும் சார்ந்த ஒரு பொருட்பாடு.

(2) ஒரு சட்டமுன்வடிவு அபராதங்களை அல்லது பிற பணத் தண்டனைகளை விதிப்பதற்கு அல்லது உரிமங்களுக்கான கட்டணங்களையோ செய்யப்பட்ட பணிகளுக்கான கட்டணங்களையோ கோருவதற்கும் செலுத்துவதற்கும் அது வகை செய்கிறது என்ற காரணத்தால் மட்டுமோ, உள்ளாட்சி அதிகார அமைப்பு அல்லது குழுமம் ஒன்று உள்ளாட்சி நோக்கங்களுக்காக வரி எதனையும் விதிப்பதற்கு, நீக்குவதற்கு, குறைப்பதற்கு, மாற்றுவதற்கு அல்லது ஒழுங்குறுத்துவதற்கு அது வகை செய்கிறது என்ற காரணத்தாலோ அதை ஒரு பணச்சட்டமுன்வடிவு எனக் கொள்ளுதல் ஆகாது.

(3) ஒரு சட்ட முன்வடிவு, பணச் சட்ட முன்வடிவா இல்லையா என்னும் பிரச்சினை ஒன்று எழுமாயின், அதன்மேல் மக்களவைத்தலைவர் அளிக்கும் முடிவே அறுதியானது ஆகும்.

(4) ஒவ்வொரு பணச்சட்ட முன்வடிவும் இதற்கு முந்திய உறுப்பின்படி மாநிலங்களவைக்கு அனுப்பப்படும்போதும், அடுத்துத் தொடரும் உறுப் பின்படி ஏற்பிசைவுக்காகக் குடியரசுத் தலைவரிடம் முன்னிடப்படும்போதும், அது ஒரு பணச்சட்டமுன் வடிவு என மக்களவைத் தலைவர் கையொப்பமிட்ட ஓர் உறுதிச் சான்று மேற்குறிப்பாக அதன்மீது எழுதப் படுதல் வேண்டும்.

சட்ட முன் வடிவுகளுக்கு ஏற்பிசைவு.

91. ஒரு சட்ட முன்வடிவு நாடாளுமன்ற அவைகளால் நிறைவேற்றப்பட்டதன் மேல், அது குடியரசுத் தலைவரிடம் முன்னிடப்படுதல் வேண் டும்; குடியரசுத் தலைவர், தாம் அச்சட்ட முன்வடி வுக்கு ஏற்பிசைவு அளிப்பதாகவோ அதற்கு ஏற்பிசைவு அளிக்க மறுப்பதாகவோ விளம்புவார்.

வரைம்புரையாக: குடியரசுத்தலைவர், தம் மிடம் ஏற்பிசைவுக்காக ஒரு சட்ட முன்வடிவு முன் னிடப்பட்டபின்பு, ஆறு வாரங்களுக்குள், அது ஒரு பணச் சட்ட முன்வடிவாக இல்லாதிருப்பின், அச் சட்ட முன்வடிவையோ அதில் குறித்துரைக்கப்பட்ட வகையங்கள் எவற்றையுமோ அந்த அவைகள் மறு ஆய்வு செய்யுமாறும், குறிப்பாக, தாம் பரிந்துரைக் கும் திருத்தங்கள் எவற்றையும் அறிமுகப்படுத்துவது விரும்பத்தக்கதா என்பதைப் பற்றிக் கருதுமாறும் கேட்டுக் கொள்கின்ற செய்தியுரையுடன் அச்சட்ட முன்வடிவை அவற்றுக்குத் திருப்பி அனுப்பலாம்; அவ்வாறு ஒரு சட்ட முன்வடிவு திருப்பியனுப்பப் பட்டிருக்கும்போது, அந்த அவைகள் அதன்படியே அச்சட்ட முன்வடிவை மறு ஆய்வு செய்தல் வேண்டும்.

## நிதி பற்றிய பொருட்பாடுகளுக்குற்ற நெறிமுறை

ஆண்டு நிதி நிலை அறிக்கை

92. (1) குடியரசுத் தலைவர், ஒவ்வொரு நிதி யாண்டைப் பொறுத்தும், அந்த ஆண்டிற்கான இந்திய அரசாங்க வரவு-செலவினங்கள் மதிப்பீட்டு விவர அறிக்கை ஒன்றை நாடாளுமன்றத்தின் ஈரவைகளின் முன்பும் வைக்குமாறு செய்தல் வேண்டும்; அது இந்தப் பகுதியில் 'ஆண்டு நிதிநிலை அறிக்கை'' எனக் குறிப் பிடப்படும்.

(2) ஆண்டு நிதிநிலை அறிக்கையில் அடங்கி யுள்ள செலவின மதிப்பீடுகளில் -

(அ) இந்த அரசமைப்பில், இந்திய வருவாய் இனத்தின் மீது சார்த்தப்பட்ட செலவினம் என விவரிக்கப்பட்டுள்ள செலவினத் திற்குத் தேவைப்படும் பணத்தொகை களைத் தனியாகவும்,

(ஆ) இந்திய நிதி வருவாய் இனத்திலிருந்து செலவு செய்யக் கருதியுள்ள பிற செல வினத்திற்குத் தேவைப்படும் பணத் தொகைகளைத் தனியாகவும் காட்டுதல் வேண்டும்; அத்துடன் வருவாய்க் கணக்கு வகைச் செலவினத்தைப் பிறவகை செல வினத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டு தலும் வேண்டும்.

(3) பின்வரும் செலவினங்கள் இந்திய நிதி வருவாய் இனத்தின் மீது சார்த்தப்பட்ட செலவினங் களாக இருத்தல் வேண்டும்:

(அ) குடியரசுத் தலைவரின் பதவியூதியங் கள், படித்தொகைகள் மற்றும் அவ ருடைய பதவி தொடர்பான பிற செல வினங்கள்;

(ஆ) மாநிலங்களவைத் தலைவர், துணைத் தலைவர் மற்றும் மக்களவைத் தலைவர், துணைத்தலைவர் ஆகியோரின் வரையூதியங்களும் படித் தொகைகளும்;

(இ) வட்டி, கடனடைப்பு நிதியச் செலவீடுகள், மீட்புச் செலவீடுகள் உள்ளடங்கலாக இந்திய அரசாங்கத்தின் மீது பொறுப்படைவுள்ள உறுகடன் செலவீடுகள் மற்றும் பெறுகடன் எழுப்புதல், உறுகடன் அடைத்தல், மீட்டல் ஆகியவை தொடர்பான செலவினங்கள்;

(ஈ.) i. உச்சநீதிமன்ற நீதிபதிகளுக்கும் அவர்கள் தொடர்பாகவும் வழங்கத்தக்க வரையூதியங்கள், படித்தொகைகள் மற்றும் ஓய்வூதியங்கள்;

ii. கூட்டாட்சிய நீதிமன்ற நீதிபதிகளுக்கும் அவர்கள் தொடர்பாகவும் வழங்கத்தக்க ஓய்வூதியங்கள்;

iii. முதலாவது இணைப்புப் பட்டியல் - பகுதி-I மற்றும் பகுதி -IIல் அக்கால கட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களில் உள்ளடங்கிய ஒரு வரையிடத்தைப் பொறுத்து அதிகாரத்தை செலுத்துகிற அல்லது இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்கு முன்புவரை அதிகாரத்தை செலுத்திவந்த ஓர் உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகளுக்கும் அவர்கள் தொடர்பாகவும் வழங்கத்தக்க ஓய்வூதியங்கள்.

(உ) நீதிமன்றம் அல்லது பொதுவர் தீர்ப்பாயம் ஒன்றன் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது தீர்வம் எதன்படியும் செலுத்தித் தீர்ப்பதற்குத் தேவைப்படும் பணத் தொகைகள்;

(ஊ) இவ்வாறு சார்த்தப்பட வேண்டுமென இந்த அரசமைப்போ சட்டத்தினால் நாடாளுமன்றமோ விளம்புகிற பிற செலவினங்கள்.

மதிப்பீடுகள் பற்றிய நாடாளுமன்ற நெறிமுறை.

93. (1) இந்திய நிதிவருவாய் இனத்தின் மீது சார்த்தப்பட்ட செலவினங்கள் தொடர்பான மதிப்பீடுகளை நாடாளுமன்றத்தின் வாக்களிப்பதற்கு வைத்திடுதல் ஆகாது; ஆனால் நாடாளுமன்ற ஈரவைகளில் எதிலும், அந்த மதிப்பீடுகளில் எதனையும் பற்றி விவாதிப்பதை இந்தக் கூறிலுள்ள எதுவும் தடையூறு செய்வதாகப் பொருள் கொள்ளப்படுதல் ஆகாது.

(2) மேற்சொன்னவற்றில் பிற செலவினங்கள் தொடர்பான மதிப்பீடுகள், மானியக் கோரிக்கைகளாக மக்களவையின் முன் வைத்தல் வேண்டும்; மற்றும் கோரிக்கை எதற்கும் ஏற்பிசைவு அளிக்கவோ ஏற்பிசைவு அளிக்க மறுக்கவோ அக்கோரிக்கையில் குறித்துரைக்கப்பட்டுள்ள தொகையைக் குறைத்து ஏற்பிசைவு அளிக்கவோ மக்களவை அதிகாரம் உடையது ஆகும்.

(3) மானியம் எதுவும், குடியரசுத் தலைவரின் பரிந்துரையின் மீதல்லாமல், கோரப்படுதல் ஆகாது.

அனுமதிக்கப்பட்ட செலவினங்களின் அட்டவணையை உறுதிப்படுத்துதல்.

94. (1) குடியரசுத் தலைவர் -

(அ) முந்திய உறுப்பின்கீழ் மக்களவையினால் அனுமதிக்கப்பட்ட மானியங்களுக்கும்;

(ஆ) நாடாளுமன்றத்தில் முன்னரே வைக்கப்பட்ட விவர அறிக்கையில் கண்ட தொகைக்கு எவ்வகையிலும் மேற்படாமல், இந்திய நிதியினங்களுக்கு சார்த்தப்படும் செலவினங்களுக்குத் தேவைப்படும் பல தொகைகளுக்கும் அவருடைய கையொப்பமிட்டு அட்டவணையில் குறிப்பிட்டு உறுதி அளிப்பார்.

(2) அவ்வாறு உறுதி அளிக்கப்பட்ட அட்டவணை மக்களவையில் வைக்கப்பட வேண்டும்; ஆனால் அது விவாதத்திற்கோ, நாடளுமன்ற வாக்கெடுப்பிற்கோ உட்பட்டதல்ல.

(3) பின்வரும் இரண்டு உறுப்புகளுக்குட்பட்டு, அவ்வாறு உறுதி அளிக்கப்பட்ட அட்டவணையில் குறிப்பிடப்பட்டிருந்தாலன்றி எந்த செலவினமும் இந்திய நிதியினங்களில் முறையாக அனுமதிக்கப் பட்டதாக ஏற்றுக் கொள்ளுதல் ஆகாது.

செலவினங்களின் துணை விவர அறிக்கை

95. எந்த ஒரு நிதி ஆண்டிலும், அந்த ஆண்டிற் கான செலவினங்களுக்கு அனுமதிக்கப்பட்டதை விட அதிகமாக இந்திய நிதியினங்களிலிருந்து மேற்கொண்டு செலவுகளுக்குத் தேவைப்படுமாயின்; அந்த செல விற்கு மதிப்பீடு செய்யப்பட்ட தொகையைக் காட்டி ஒரு துணை அறிக்கையைக் குடியரசுத் தலைவர் மக்க ளவையில் வைப்பதற்கு வகை செய்ய வேண்டும்; அந்த அறிக்கை முந்தைய உறுப்புகளின் வகையங் களுக்குத் தொடர்புடையதாகவும், அந்த ஆண்டின் நிதிநிலை அறிக்கைக்கும் அதில் குறிப்பிடப்பட்டுள்ள, செலவினங்களோடு தொடர்புபடுத்தியும் இருக்க வேண்டும்.

மிகை மானியங்கள்.

[1]96. எந்தவொரு நிதி ஆண்டிலாவது இந்திய நிதியினங்களிலிருந்து எந்த ஒரு பணிக்கும் செலவிடப் பட்ட தொகைக்கு மக்களவையின் வாக்கெடுப்பு தேவைப்படுமாயின், அந்த ஆண்டிற்கு அந்தப் பணிக் கான மானியத்திற்கு அதிகப்படுமாயின், மிகை மானியக் கோரிக்கையை மக்களவையின் முன்வைக்க வேண்டும். இந்த அரசமைப்பின் உறுப்புக்கள் 93 மற்றும் 94ன் வகையங்கள் மானியக் கோரிக்கை களுக்குத் தொடர்புடையது போன்று இந்த மிகை கோரிக்கைகளுக்கும் தொடர்புடையவையாகும்.

97. இந்த அரசமைப்பின் 90 ஆம் உறுப்பின் (1) ஆம் கூறின் (அ) முதல் (ஊ) வரையுள்ள உட்கூறு களில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளில் எதற் கும் வகைசெய்யும் சட்டமுன்வடிவு அல்லது திருத்தம் எதனையும், குடியரசுத் தலைவரின் பரிந்துரையின் மீதல்லாமல், அறிமுகப்படுத்துதலோ கொண்டு

1. இந்த உறுப்பு அரசமைப்பின் நிதித் தொடர்பான வகையங் களுக்கான வல்லுநர்குழுவின் பரிந்துரைகளைப் பின்பற்றியது.

நிதிச்சட்ட முன் வடிவுகள் பற்றிய தனியுறு வகையங்கள்.

வருதலோ ஆகாது; அவ்வாறு வகை செய்யும் சட்ட முன்வடிவு எதனையும் மாநிலங்களவையில் அறிமுகப் படுத்துதலும் ஆகாது.

வரம்புரையாக: வரி எதனையும் குறைப்பதற்காக அல்லது நீக்குவதற்காக வகை செய்யும் ஒரு திருத் தத்தைக் கொண்டு வருவதற்கு இந்தக் கூற்றின்படி யான பரிந்துரை எதுவும் வேண்டுவதில்லை.

(2) சட்ட முன்வடிவு அல்லது திருத்தம் எதுவும், அபராதங்கள் அல்லது பிற பணத் தண்டங் கள் விதிப்பதற்கு அல்லது உரிமங்களுக்கான கட்ட ணங்களையோ செய்யப்பட்ட பணிகளுக்கான கட்ட ணங்களையோ கோருவதற்கும் செலுத்துவதற்கும் அது வகைசெய்கிறது என்ற காரணத்தால் மட்டுமோ உள் ளாட்சி அதிகார அமைப்பு அல்லது குழுமம் ஒன்று உள்ளாட்சி நோக்கங்களுக்காக வரிஎதனையும் விதிப் பதற்கு, நீக்குவதற்கு, குறைப்பதற்கு, மாற்றுவதற்கு அல்லது ஒழுங்குறுத்துவதற்கு அது வகைசெய்கிறது என்ற காரணத்தாலோ, மேலே கூறப்பட்ட பொருட் பாடுகளில் எதற்கும் வகை செய்வதாகக் கொள்ளப் படுதல் ஆகாது.

(3) ஒரு சட்ட முன்வடிவு, சட்டமாக இயற்றப் பட்டுச் செயற்பாட்டுக்குக் கொண்டு வரப்பட்டால் இந்திய நிதியினங்களிலிருந்து செலவு செய்ய வேண்டிய நிலையை அது ஏற்படுத்துமாயின், அதனை ஓர்வு செய்யுமாறு நாடாளுமன்ற ஈரவைகளில் ஒவ் வொன்றுக்கும் குடியரசுத் தலைவர் பரிந்துரை செய் திருந்தாலன்றி, அந்த அவை அதனை நிறைவேற்றுதல் ஆகாது.

## பொதுவியலான நெறிமுறை

98. (1) நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றும், இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, அதற்குரிய நெறிமுறையையும் அலுவல் நடத்து முறை யையும் ஒழுங்குறுத்துவதற்கான விதிகளை வகுத்துக் கொள்ளலாம்.

நெறிமுறை விதிகள்.

(2) இந்த உறுப்பின் (1) ஆம் கூறின்படி விதிகளை வகுத்துக் கொள்ளும் வரையில் இந்தியத் தன்னாட்சியத்தின் சட்டமன்றத்தைப் பொறுத்து, இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு செல்லாற்றலிலிருந்த நெறிமுறை விதிகளும், நிலையாணைகளும், நாடாளுமன்றத்தைப் பொறுத்து மாநிலங்களவைத் தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, மக்களவைத் தலைவர் அவற்றில் செய்யும் மாற்றமைவுகளுக்கும் தழுவமைவுகளுக்கும் உட்பட்டு, செல்திறம் உடையன ஆகும்.

(3) குடியரசுத் தலைவர், மாநிலங்களவைத் தலைவருடனும் மக்களவைத் தலைவருடனும் கலந்தாய்வு செய்த பின்பு, ஈரவைகளின் கூட்டு அமர்வுகளையும், அவற்றுக்கிடையேயான செய்தித் தொடர்புகளையும் பற்றிய நெறிமுறை விதிகளை வகுக்கலாம்.

(4) ஈரவைகளின் கூட்டமர்வில், மக்களவைத் தலைவர் [1]அல்லது அவர் இல்லாதபோது, (3) ஆம் கூறின்படி வகுக்கப்பட்ட நெறிமுறை விதிகளால் தீர்மானிக்கப் பெறும் ஒருவர் தலைமை வகிப்பார்.

நாடாளுமன்றத்தில் பயன்படுத்தப்பட வேண்டிய மொழி.

99. (1) நாடாளுமன்ற அலுவல்கள் இந்தியில் அல்லது ஆங்கிலத்தில் நடத்தப்படுதல் வேண்டும்.

வரம்புரையாக: இந்த இரு மொழிகளிலும் தம் கருத்தை தக்கவாறு எடுத்தியம்ப இயலாத உறுப்பினர் எவரையும், அவருடைய தாய்மொழியிலேயே அவையில் உரையாற்றுவதற்கு, மாநிலங்களவைத் தலைவர் அல்லது மக்களவைத் தலைவர், நேர்வுக்கேற்ப, அனுமதிக்கலாம்.

(2) மாநிலங்களவைத் தலைவர் அல்லது மக்களவைத் தலைவர், எப்பொழுது அவர் பொருத்தமெனநினைக்கின்றாரோ அப்பொழுது, ஓர் உறுப்பினர் பிறமொழியில் ஆற்றிய உரையின் சுருக்கத்தை இந்தியிலோ அல்லது ஆங்கிலத்திலோ, நேர்வுக்கேற்ப,

1. மக்களவை அதிகமான உறுப்பினர்களைக் கொண்டுள்ளதால் ஈரவைகளின் கூட்டமர்வில் மக்களவைத் தலைவர் தலைமை வகிக்க வேண்டுமென்பது குழுவின் கருத்தாகும்.

மாநிலங்களவை அல்லது மக்களவையில் கிடைப்பதற்கு வகை செய்ய வேண்டும்; அத்தகைய சுருக்கம், எந்த அவையில் உரையாற்றப்பட்டதோ அந்த அவையின் செயல்முறை குறிப்பேட்டில் சேர்க்கப்படுதல் வேண்டும்.

நாடாளுமன்றத்தில் விவாதத்தின் மீது வரையறை.

100. (1) உச்சநீதிமன்றத்தின் அல்லது உயர்நீதிமன்றத்தின் நீதிபதி ஒருவர் தம் கடமைகளை ஆற்றுகையில் அவர் நடந்து கொண்ட விதம் குறித்து விவாதம் எதுவும், அந்த நீதிபதியைப் பதவிநீக்கம் செய்வதற்காக, இதன் பின்பு வகை செய்துள்ளவாறு குடியரசுத் தலைவரிடம் வேண்டுதலுரை முன்னிடுவதற்கான தீர்மானத்தின் மீதல்லாமல், நாடாளுமன்றத்தில் நடைபெறுதல் ஆகாது.

(2) இந்தப் பகுதியின் அத்தியாயம் IVல் உள்ள எந்த ஒரு உபயோகத்திற்காகவும், முதல் அட்டவணை பகுதி - IIIல் நிகழ்காலத்தில் குறிப்பிடப்பட்டுள்ளவாறு ஒரு மாநிலத்தில் உள்ள எந்தவொரு நீதிமன்றமும் இந்த உறுப்பினை பொருத்தமட்டில் உயர்நீதிமன்றம் எனக் கருதப்படும்.

101. நாடாளுமன்ற நடவடிக்கைகள் குறித்து நீதிமன்றங்கள் விசாரித்தல் ஆகாது.

(1) நெறிமுறையைப் பின்பற்றுவதில் முறைகேடு இருப்பதாகக் காரணம் காட்டி நாடாளுமன்ற நடவடிக்கைகள் எவற்றின் செல்லுந்தன்மையையும் எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

(2) நாடாளுமன்றப் பதவியாளர் அல்லது உறுப்பினர் ஒருவர், நாடாளுமன்ற நெறிமுறையையோ அலுவல் நடத்துமுறையையோ ஒழுங்குறுத்துவதற்காக அல்லது ஒழுங்கமைதியை நிலைநாட்டுவதற்காக, இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ அவருக்கு உற்றமைந்துள்ள அதிகாரங்களைச் செலுத்துவது பொறுத்து நீதிமன்றம் எதனின் அதிகார வரம்பிற்கும் உட்பட்டவர் ஆகார்.

## அத்தியாயம் - III
## குடியரசுத் தலைவருக்குள்ள சட்டமியற்றும் அதிகாரங்கள்

*நாடாளுமன்றத்தின் கூட்டத் தொடர் இறுதி செய்யப்பட்டுள்ள காலத்தின்போது அவசர சட்டங்களைப் பிரகடனம் செய்வதற்கு குடியரசுத் தலைவருக்குள்ள அதிகாரம்:*

102. (1) நாடாளுமன்ற ஈரவைகளும் கூட்டத் தொடர் நிலையிலுள்ள காலம் தவிர, வேறு எந்த நேரத்திலும், குடியரசுத் தலைவர், தாம் அவசரமாக நடவடிக்கை எடுக்க வேண்டியதை அவசியமாக்கும் சூழ்நிலைகள் உள்ளன என்று மனநிறைவு அடைவாராயின், அச்சூழ்நிலைகளுக்கேற்பத் தேவையென்று தாம் கருதும் அவசரச் சட்டங்களைப் பிரகடனம் செய்யலாம்.

(2) இந்த உறுப்பின்படி பிரகடனம் செய்யப்பட்ட ஓர் அவசரச் சட்டம், நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்டு குடியரசுத் தலைவரின் இசைவு அளிக்கப்பட்ட ஒரு சட்டத்திற்குள்ள அதே செல்லாற்றலும் செல்திறமும் உடையது ஆகும்; ஆனால் அத்தகைய அவசரச் சட்டம் ஒவ்வொன்றும் -

(அ) நாடாளுமன்ற ஈரவைகளின் முன்பும் வைக்கப்படுதல் வேண்டும்; மற்றும் நாடாளுமன்றம் மீண்டும் கூடியதிலிருந்து ஆறு வாரங்கள் கழிவுற்றவுடன் அல்லது அக்கால அளவு கழிவுறுவதற்கு முன்பே அதற்கு ஒப்பேற்பு அளிக்க மறுக்கும் தீர்மானங்களை ஈரவைகளும் நிறைவேற்றுமாயின், அவற்றில் இரண்டாம் தீர்மானம் நிறைவேற்றப்பட்டவுடன் செயற்பாடு அற்றுப் போகும்; மேலும்,

(ஆ) குடியரசுத் தலைவரால் எந்த நேரத்திலும் விலக்கிக் கொள்ளப்படலாம்.

**விளக்கம் :-** நாடாளுமன்ற அவைகள் வெவ்வேறு தேதிகளில் மீண்டும் கூடுமாறு அழைப்பாணை

விடுக்கப்பட்டிருக்குமிடத்து, இந்தக் கூறினைப் பொறுத்தவரை, அந்த ஆறுவாரக் கால அளவு அத் தேதிகளில் பிந்திய தேதியிலிருந்து கணக்கிடப்படுதல் வேண்டும்.

(3) இந்த உறுப்பின்படியான ஓர் அவசரச் சட்டம், இந்த அரசமைப்பின்படி நாடாளுமன்றம் சட்டமாக இயற்றுவதற்கு தகுதியற்று இருக்குமாயின், அத்தகைய வகையம் எதுவும் இல்லா நிலையது ஆகும்.

## அத்தியாயம் IV - கூட்டரசின் நீதித்துறை

உச்சநீதிமன்றத்தை நிறுவுதலும் அதன் அமைப்பும்.

103. (1) இந்திய உச்சநீதிமன்றம் என ஒன்று இருக்கும்; இந்தியத் தலைமை நீதிபதியையும், நாடாளுமன்றம் சட்டத்தினால் வகுத்துரைக்கும், எழுவருக்குக்[1] குறையாத எண்ணிக்கையுடைய நீதிபதிகளையும் அது கொண்டதாக இருக்கும்.

(2) உச்சநீதிமன்ற நீதிபதி ஒவ்வொருவரையும், உச்சநீதிமன்றத்திலும் மாநிலங்களிலுள்ள உயர் நீதிமன்றங்களிலுமுள்ள நீதிபதிகளில் எவரெவரைக் கலந்தாய்வு செய்வது அவசியமோ அந்நீதிபதிகளுடன் கலந்தாய்வு செய்த பின்பு, தம் கையொப்பமும் முத்திரையும் அதிகார ஆணையினால் குடியரசுத் தலைவர் பதவி நியமனம் செய்வார்; அவர் அறுபத்தைந்து வயது நிறைவெய்தும் வரையில் பதவி வகிப்பார்.

வரம்புரையாக: தலைமை நீதிபதி அல்லாத பிற நீதிபதியை பதவி நியமனம் செய்வதில், இந்தியத் தலைமை நீதிபதியுடன் எப்பொழுதும் கலந்தாய்வு செய்யப்படுதல் வேண்டும்.

மேலும் வரம்புரையாக -

---

1. ஆரம்பத்தில் ஏழு நீதிபதிகள் போதுமென்றும், அதன் பிறகு நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் எண்ணிக்கையை அதிகரித்துக் கொள்ளலாமென்றும் குழு கருதுகின்றது.

(அ) நீதிபதி ஒருவர் குடியரசுத் தலைவருக்குத் தம் கையொப்பமிட்டு எழுத்துவழித் தெரிவித்துத் தம் பதவியை விட்டு விலகிக் கொள்ளலாம்;

(ஆ) நீதிபதி ஒருவர், (4) ஆம் கூறில் வகை செய்யப்பட்டுள்ள வழிமுறையின்படி அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம்.

(3) ஒருவர், உச்சநீதிமன்ற நீதிபதியாக பதவி நியமனம் செய்யப்படுவதற்கு, இந்தியாவின் குடிமகனாக இருப்பதுடன்,

(அ) ஓர் உயர்நீதிமன்றத்திலோ, தொடர்ந்து இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட அத்தகைய நீதிமன்றங்களிலோ குறைந்தது ஐந்தாண்டுகள் நீதிபதியாக இருந்துள்ளவராக, அல்லது

(ஆ) ஓர் உயர்நீதிமன்றத்திலோ, தொடர்ந்து இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட அத்தகைய நீதிமன்றங்களிலோ குறைந்தது பத்தாண்டுகள் வழக்குரைஞராக இருந்துள்ளவராக,

இருந்தாலன்றி தகுதிப்பாடு உடையவர் ஆகார்.

விளக்கம்- I: இந்தக் கூறில், ''உயர்நீதிமன்றம்'' என்பது இந்திய ஆட்சி நிலவரையில் எப்பகுதியிலேனும் அதிகாரம் செலுத்தி வருகிற அல்லது இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்கு முன்பு அதிகாரம் செலுத்திவந்த ஓர் உயர்நீதிமன்றம் எனப் பொருள்படும்.

விளக்கம் - II: இந்தக் கூறினைப் பொறுத்தவரை, ஒருவர் வழக்குரைஞராக இருந்துள்ள கால அளவைக் கணக்கிடுகையில், அவர் வழக்குரைஞரான பின்பு நீதித்துறைப் பதவியை வகித்து வந்திருக்கிற கால அளவையும் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

*(4) உச்சநீதிமன்ற நீதிபதி ஒருவர், அவருடைய நெறி திறம்பிய நடத்தை அல்லது திறமையின்மை மெய்ப்பிக்கப்பட்டுள்ளது என்ற காரணத்தால் பதவியிலிருந்து அகற்றப்பட வேண்டுமென நாடாளுமன்ற ஈரவைகளிலும் வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களின் எண்ணிக்கையில் மூன்றில் இரண்டு பங்கிற்குக் குறையாத உறுப்பினர்களால் ஆதரிக்கப்பட்ட ஒரு வேண்டுதலுரை அதே கூட்டத் தொடரில் குடியரசுத் தலைவரிடம் முன்னிடப்பட்டு அதன்மேல் குடியரசுத் தலைவரால் பிறப்பிக்கப்படும் ஆணையினால் அல்லாமல், அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படுதல் ஆகாது.*

*(5) முந்திய கடைசிக் கூறின்படி வேண்டுதலுரை ஒன்றை முன்னிடுவதற்கும் நீதிபதி ஒருவரின் நெறி திறம்பிய நடத்தை அல்லது திறமையின்மையைக் குறித்துப் புலனாய்வு செய்வதற்கும் அதனை மெய்ப்பிப்பதற்கான நெறிமுறையை நாடாளுமன்றம் சட்டத்தினால் ஒழுங்குறுத்தலாம்.*

*(6) உச்சநீதிமன்ற நீதிபதியாக அமர்த்தப் பெறும் ஒவ்வொருவரும், அவர்தம் பதவியை ஏற்பதற்கு முன்பு, குடியரசுத் தலைவர் அல்லது அவரால் அதன் பொருட்டு நியமிக்கப்படும் ஒருவரின் முன்னிலையில், மூன்றாம் இணைப்புப் பட்டியலில் அதற்கென உள்ள சொல்முறையில் ஓர் உறுதிமொழியை ஏற்றுக் கையொப்பமிடுதல் வேண்டும்.*

*(7) உச்சநீதிமன்ற நீதிபதியாகப் பதவி வகித்த எவரும் இந்திய ஆட்சி நிலவரைக்குள் உள்ள நீதிமன்றம் எதிலும் அல்லது அதிகார அமைப்பு எதன் முன்பும் வழக்குரைஞராக வாதிடுதலோ செயலுறுதலோ ஆகாது.*

*நீதிபதிகளின் வரைவூதியங்கள் முதலியன.*

*104. நாடாளுமன்றத்தில் இயற்றப்பட்ட சட்டத்தின் படியோ, அல்லது அவ்வப்பொழுது தீர்மானிக்கும் படியோ வரைவூதியங்கள், படித்தொகைகள், விடுப்புக்கள் மற்றும் ஓய்வூதியங்கள் தொடர்பான உரிமை*

களைப் பெற உச்சநீதிமன்ற நீதிபதிகள் தகுதியுடைய வராவர்; அவ்வாறு தீர்மானிக்கப்படும் வரையில், இரண்டாம் இணைப்புப் பட்டியலில் குறித்துரைக் கப்பட்டுள்ள வரைவூதியங்கள், படித்தொகைகள், வாராமை விடுப்பும் ஓய்வூதியமும் தொடர்பான உரிமைகளைப் பெறத் தகுதியுடையவராவர்.

வரம்புரையாக: நீதிபதி ஒருவரின் வாராமை விடுப்பும் ஓய்வூதியமும் தொடர்பான அவருடைய உரிமைகள் அவர் நியமனம் செய்யப்பட்ட பிறகு அவருக்குப் பாதகமான வகையில் மாறுதல் செய்யப் படுதல் ஆகாது.

செயலமர் தலைமை நீதிபதியை நியமித்தல்.

105. இந்தியத் தலைமை நீதிபதிப் பதவி காலி யாக இருக்கும்போதும், தலைமை நீதிபதி தம் இருத்த லின்மை அல்லது பிறவாறான காரணத்தால் தமது பதவிக்குரிய கடமைகளைப் புரிய இயலாதிருக்கும் போதும் குடியரசுத் தலைவர் அதன் பொருட்டு நிய மிக்கும் அந்நீதிமன்றத்துப் பிற நீதிபதிகளில் ஒருவர் அப்பதவிக்குரிய கடமைகளைப் புரிந்து வருவார்.

குறித்த பணி நீதிபதிகளை நியமித்தல்.

106. (1) உச்சநீதிமன்றத்தின் அமர்வு ஒன்றை நடத் தவோ தொடர்ந்து நடத்திவரவோ தேவைப்படும் நீதிபதிகளின் குறைவெண் எந்த நேரத்திலேனும் இல் லாமற் போகுமேயானால், இந்தியத் தலைமை நீதிபதி, தொடர்புடைய உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி யுடன் கலந்தாய்வு செய்த பின்னர் அந்த உயர்நீதி மன்ற நீதிபதி ஒருவரை தாம் பெயர் குறித்து அவரைத் தேவைப்படும் கால அளவுக்கு, குறித்தபணி நீதிபதி யாக உச்சநீதிமன்ற அமர்வுகளில் பணியாற்றுமாறு எழுத்துவழிக் கேட்டுக் கொள்ளலாம்.

(2) அவ்வாறு பெயர் குறிக்கப்பட்ட நீதிபதி, தமது பணி தேவைப்படும்போதும் தேவைப்படும் கால அளவிற்கும் உச்சநீதிமன்ற அமர்வுகளில் பணி யாற்றுதல் அவருடைய பதவிக்குரிய பிற கடமைகளில் முந்துறு கடமையாகும்; அவ்வாறு பணியாற்றுகையில்

உச்சநீதிமன்ற நீதிபதி ஒருவருக்குற்ற அதிகார வரம்பு, அதிகாரங்கள், மதிப்புரிமைகள் அனைத்தையும் உடையவராகி உச்சநீதிமன்ற நீதிபதியின் கடமைகளை அவர் ஆற்றி வருவார்.

ஓய்வுபெற்ற நீதிபதிகள் உச்சநீதிமன்றத்தின் அமர்வுகளில் பணியாற்றுதல்.

107. [1]இந்த அத்தியாயத்தில் எது எவ்வாறிருப்பினும், இந்தியத் தலைமை நீதிபதி, எந்த நேரத்திலும், உச்சநீதிமன்றத்தில் அல்லது கூட்டாட்சிய நீதிமன்றத்தில் நீதிபதிப் பதவி வகித்த ஒருவரையோ, ஓர் உயர் நீதிமன்ற நீதிபதிப் பதவி வகித்து, உச்சநீதிமன்ற நீதிபதியாக நியமனம் செய்யப் பெறுவதற்கு உரிய தகுதிப்பாடுள்ள ஒருவரையோ உச்சநீதிமன்ற நீதிபதியாக அமர்ந்து செயலுறும்படி கேட்டுக் கொள்ளலாம். அவ்வாறு கேட்டுக்கொள்ளப்பெற்ற ஒவ்வொருவரும் அதன்படி அமர்ந்து செயலுறுங்கால், குடியரசுத் தலைவர் ஆணையினால் தீர்மானிக்கும் படித்தொகைகளுக்கு உரிமை கொண்டிருப்பதோடு, அந்நீதிமன்ற நீதிபதிக் குற்ற அதிகார வரம்பு, அதிகாரங்கள், மதிப்புரிமைகள் அனைத்தையும் உடையவர் ஆவார்; ஆனால் மற்றப்படி அவர் அந்நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாகக் கொள்ளப் பெறுவதில்லை.

வரம்புரையாக: மேலே கூறப்பட்ட எவரும், அந்நீதிமன்றத்தின் நீதிபதியாக அமர்ந்து செயலுறுவதற்கு இசைவளித்திருந்தாலன்றி, அவரை அவ்வாறு செயலுறும்படி இந்த உறுப்பிலுள்ள எதுவும் வேண்டுறுத்துவதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

உச்சநீதிமன்றத்தின் அமர்கையிடம்.

108. உச்சநீதிமன்றம் ஒரு பதிவு செய்யப்பட்ட நீதிமன்றமாக கொள்ளப் பெறுதல் வேண்டும்; டில்லியிலோ குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன் தலைமை நீதிபதி அவ்வப்போது குறித்திடும் பிற இடத்திலோ, இடங்களிலோ அமரும்.

---

1. ஓய்வுபெற்ற நீதிபதிகளை நியமனம் செய்தல், இங்கிலாந்தின் ஐக்கிய அரசிலும் அமெரிக்காவின் ஐக்கிய மாநிலங்களிலும் செயல்படும் நடைமுறையைப் பின்பற்றியதாகும்.

உச்சநீதிமன்றத்தின் முதலேற்பு அதிகாரவரம்பு.

109. இந்த அரசமைப்பின் வகையங்களுக்குட்பட்டு -

(அ) இந்திய அரசாங்கத்திற்கும், ஒன்று அல்லது பல மாநிலங்களுக்கும் இடையே, அல்லது

(ஆ) ஒருபுறம், இந்திய அரசாங்கமும் ஏதேனும் மாநிலம் அல்லது மாநிலங்களும் மறுபுறம் ஒன்று அல்லது பல மாநிலங்கள் இவற்றிற்கிடையே, அல்லது

(இ) இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கிடையே

எழும் வழக்கு ஒன்றில் சட்டமுறையான ஓர் உரிமை உள்ளதா என்பதையும் அதன் அளவு என்ன என்பதையும் (சட்ட விளக்கம் பற்றியதாகவோ பொருண்மைப் பற்றியதாகவோ உள்ள) பிரச்சினை எதுவும் அடங்கியிருக்குமாயின், அத்தகைய வழக்கு எதிலும், மற்ற நீதிமன்றங்கள் நீங்கலாக உச்சநீதிமன்றமே முதலேற்பு அதிகார வரம்பு உடையது ஆகும்.

வரம்புரையாக: மேற்சொல்லப்பட்ட அதிகார வரம்பில்,

(i) முதலாவது அட்டவணை பாகம் - III-ல் அந்த நேரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு மாநிலம் தொடர்புடைய வழக்கில், இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்கு முன்பு செய்து கொள்ளப்பட்டிருந்து அல்லது முறையாக ஆக்கப்பட்டிருந்து அத்தொடக்க நிலைக்குப் பின்பும் தொடர்ந்து செயற்பாட்டில் இருந்து வருகிற உடன்படிக்கை, உடன்பாடு, உறுதி வாக்கேற்பு, பட்டயம், அதுபோன்ற பிற ஆவணம் ஆகியவற்றிலிருந்து எழும் வழக்கு எதுவும்;

(ii) எந்த ஒரு மாநிலமும் தொடர்புடைய ஒரு வழக்கு, ஒரு உடன்படிக்கை, உடன்பாடு,

உறுதி வாக்கேற்பு, பட்டம் அதுபோன்ற பிற ஆவணங்களின் வகையம் எதிலுமிருந்து எழுமாயின், அத்தகைய வழக்கு எதுவும் உள்ளடங்குவதில்லை.

குறித்த சில வழக்குகளில் உயர்நீதிமன்றங்களிலிருந்து எழும் மேன்முறையீடுகளில் உச்சநீதி மன்றத்திற்குள்ள மேன்முறையீட்டு அதிகார வரம்பு.

110. (1) ஒரு மாநிலத்திலுள்ள ஓர் உயர்நீதிமன்றத்தின் உரிமையியல், குற்றவியல் அல்லது பிற நடவடிக்கையில் எழும் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது இறுதியாணை எதுவும், அவ்வழக்கில் இந்த அரசமைப்பின் பொருள் கோள் குறித்து செறிவான சட்டப் பிரச்சினை உள்ளது என அந்த உயர்நீதிமன்றம் சான்றளிக்குமாயின், உச்சநீதிமன்றத்திற்கு மேன் முறையீடு செய்து கொள்வதற்கு உற்றது ஆகும்.

(2) அத்தகைய சான்றளிப்பதற்கு உயர்நீதிமன்றம் மறுக்குமிடத்து, அவ்வழக்கில் இந்த அரசமைப்பின் பொருள் கோள் குறித்து செறிவான சட்டப் பிரச்சினை உள்ளது என உச்சநீதிமன்றம் திருப்திப்பட்டால், அந்த தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது இறுதியாணை மீது மேன்முறையீடு செய்வதற்கு சிறப்பு அனுமதி அளிக்கலாம்.

(3) அத்தகைய சான்று ஒன்று அளிக்கப்படுமிடத்து, அல்லது அத்தகைய சிறப்பு அனுமதி அளிக்கப்படுமிடத்து, அவ்வழக்கின் தரப்பினர் எவரும், மேற்சொன்ன பிரச்சினை எதுவும் தவறாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது என்ற காரணத்தின் மீதோ அல்லது வேறு எந்தவொரு காரணத்திற்காகவோ, உச்சநீதிமன்றத்திற்கு மேன்முறையீடு செய்து கொள்ளலாம்.

**விளக்கம்:** இந்த உறுப்பினைப் பொறுத்தவரை, ஒரு வழக்கில் எழுவினா ஒன்றன் மீதான ஆணை மேன் முறையீட்டாளருக்குச் சாதகமாக வழங்கப்பட்டிருந்து, அது அவ்வழக்கை இறுதியாகத் தீர்ப்பதற்குப் போதியதாக இருப்பின், அத்தகைய ஆணையும் ''இறுதியாணை'' என்னும் சொல்லில் அடங்கும்.

*முதலாவது அட்டவணை பாகம்-III-ல் அந்த நேரத்தில் வரையறுக்கப்பட்டுள்ள மாநிலங்களின் மற்ற வழக்குகளைத் தவிர, இந்திய நிலவரைக்குள் உள்ள உயர் நீதிமன்றங்களிலிருந்து எழும் மேன்முறையீடுகளில் உச்சநீதிமன்றத்திற்குள்ள மேன்முறையீட்டு அதிகார வரம்பு.*

*111. (1)உரிமையியல் நடவடிக்கை ஒன்றில், முதலாவது அட்டவணை பாகம்-IIIல் அந்த நேரத்தில் வரையறுக்கப்பட்டுள்ள மாநிலங்களைத் தவிர, இந்திய நிலவரையிலுள்ள ஓர் உயர்நீதிமன்றத்தின் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது இறுதியாணை எதுவும் -*

*(அ) முதலாவது விசாரணை நீதிமன்றத்தில் அல்லது மேன்முறையீடு தொடர்ந்து வழக்கிலிருந்து, அந்த வழக்கு தொடர்பான அடிப்படை பொருளின் மதிப்பு அல்லது தொகை ரூபாய் இருபது ஆயிரத்திற்குக் குறையாமல் இருந்து மேலும் தொடர்ந்து இருக்குமாயின்; அல்லது,*

*(ஆ) அந்தத் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது இறுதியாணை அதுபோன்ற மதிப்பு அல்லது தொகைக்கான சொத்து சம்பந்தப்பட்ட கோரிக்கை அல்லது வினாவுடன் நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ தொடர்புடையதாயிருப்பின்; அல்லது*

*(இ) அந்த வழக்கு உச்சநீதிமன்றத்தின் மேன்முறையீட்டிற்கு தகுதியுடையதாயிருப்பின்;*

*மேலும், அந்தத் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது இறுதியாணை நேரடியாக கீழுள்ள நீதிமன்றத்திலிருந்து மேன்முறையீடு செய்யப்பட்டு உறுதியளிக்கப்பட்டிருப்பின்; எவ்வகையிலும் பிரிவு (இ)க்கு மாறுபட்டதாகவும் இருந்து, அந்த உயர்நீதிமன்றம் மேன்முறையீடு சில செறிவான சட்டப் பிரச்சினையை உள்ளடக்கியது எனச் சான்றளிக்கப்பட்டால் உச்சநீதிமன்றத்திற்கு மேன்முறையீடு செய்து கொள்வதற்கு உற்றது ஆகும்.*

*(2) இந்த அரசமைப்பின் 110-ஆம் உறுப்பில் எது எவ்வாறிருப்பினும், (1) ஆம் கூறின்படி உச்சநீதிமன்றத்திற்கு மேன்முறையீடு செய்து கொள்ளும்*

தரப்பினர் எவரும், இந்த அரசமைப்பின் பொருள் கோள் குறித்துச் செறிவான சட்டப் பிரச்சினை ஒன்று தவறாகத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது என்று அந்த மேன்முறையீட்டிற்கான காரணங்களில் ஒன்றாக வலியுறுத்தலாம்.

*ஏனைய சில வழக்குகளில் உச்சநீதிமன்றத்திற்கு மேன்முறையீடு செய்து கொள்வதற்கு அதன் தனியுறு அனுமதி.*

112. இந்த அரசமைப்பின் உறுப்பு 110 அல்லது உறுப்பு 111-ன் வகையங்கள் பொருந்தாத வழக்குகளில், முதல் அட்டவணையின் பாகம்-III-ல் அந்த நேரத்தில் வரையறுக்கப்பட்டுள்ள மாநிலங்களை தவிர்த்து இந்திய நிலவரையிலுள்ள ஒரு நீதிமன்றத்தால் அல்லது தீர்ப்பாயத்தால் வழக்கு அல்லது பொருட்பாடு எதிலும் வழங்கப்பட்ட அல்லது பிறப்பிக்கப்பட்ட தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது அறுதித் தீர்வுக்கு எதிராக மேன்முறையீடு செய்து கொள்வதற்குத் தனியுறு அனுமதி அளிக்கலாம்.

*முதலாவது அட்டவணை பாகம் III-ல் அந்த நேரத்தில் வரையறுக்கப் பட்டுள்ள மாநிலங்களின் நீதிமன்றங்கள் சில வழக்குகளில் உச்சநீதிமன்றத்தின் முடிவுக்காக அனுப்புதல்.*

113. (1) முதலாவது அட்டவணை பாகம்-IIIல் அந்த நேரத்தில் வரையறுக்கப்பட்டுள்ள ஏதாவது ஒரு மாநிலத்தின் உயர்நீதிமன்றத்தில் நடைபெறும் உரிமையியல், குற்றவியல் அல்லது இதர நடவடிக்கை எதிலும், அத்தகைய நடவடிக்கையில் உள்ள பிரச்சினை எதனையும் தீர்மானிப்பதற்கான பொருள்கோளுடைய மாநிலம் தவிர்த்து ஏனைய மாநிலத்தின் சட்டமன்றமோ அல்லது நாடாளுமன்றமோ செய்த சட்டம் எதுவும் பொருத்தமானதா என்பதைப் பற்றியோ அல்லது அதன் விளக்கத்தைப் பற்றியோ எழும் வினாவிற்கு, அந்த உயர்நீதிமன்றம், தாமாகவோ அல்லது எந்த ஒரு நபரின் மனுவின் மீதோ, அத்தகைய வினாவிற்கு அதனுடைய சொந்த கருத்து அடங்கிய தனிக் குறிப்போடு ஒரு அறிக்கையினை தயார் செய்து உச்ச நீதிமன்றத்தின் கருத்தை அறிவதற்கு அனுப்பி வைக்கலாம்.

(2) இந்த உறுப்பின் பகுதி (1)ல் குறிப்பிட்டுள்ளவாறு ஒரு வழக்கினை அனுப்புவதற்கு அத்தகைய உயர்நீதிமன்றம் எதுவும் மறுக்குமானால் உச்சநீதிமன்றம் அவ்வாறு அனுப்பி வைக்கும்படி கேட்கலாம்.

(3) இந்த உறுப்பின் பிரிவு (1) அல்லது பிரிவு (2)ன் கீழ் அவ்வாறு ஒரு வழக்கு அனுப்பி வைக்கப் பட்ட பிறகு, அந்த வழக்கில் உச்சநீதிமன்றத்தின் கருத் தினை பெறுகின்ற வரையில் உயர்நீதி மன்றத்தின் அனைத்து நடவடிக்கைகளும் நிறுத்தி வைக்கப்பட வேண்டும்.

(4) உச்சநீதிமன்றம், தொடர்புடைய நபர்களின் வழக்கை எடுத்துரைக்க வாய்ப்பளித்த பிறகு அனுப்பி வைக்கப்பட்ட வினாவினைப் பற்றி முடிவு செய்யும்; அந்த முடிவின் நகல் உயர்நீதிமன்றத்திற்கு கிடைப் பதற்கு ஏற்பாடு செய்யும்; அந்த உயர்நீதிமன்றம், உச்ச நீதிமன்றத்தின் கருத்துக்கொப்ப அந்த வழக்கின் மீது நடவடிக்கை எடுத்து வழக்கினை முடித்து வைக்க வேண்டும்.

(5) இந்த உறுப்பின் கீழ் குறிப்பிடப்படும் எந்தவொரு வழக்கிலும் மேற்கொண்டு விவரங்கள் அளிப்பதற்கு ஏதுவாக வழக்கினை உச்சநீதிமன்றம் எந்த நேரத்திலும் திருப்பி அனுப்பலாம்.

உச்சநீதிமன்ற அதிகாரவரம்பை விரிவாக்குதல்.

114. (1) உச்சநீதிமன்றம், ஒன்றியத்துப் பட்டிய லிலுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்து நாடாளுமன்றம் வழங்கும் கூடுதல் அதிகார வரம்பை யும் அதிகாரங்களையும் உடையது ஆகும்.

(2) எந்தப் பொருட்பாடு பொறுத்தேனும் இந்திய அரசாங்கமும் ஒரு மாநிலமும் செய்து கொள்ளும் தனியுறு உடன்பாட்டின் வழியாக உச்சநீதிமன்றத் திற்குக் கூடுதல் அதிகார வரம்பையும் அதிகாரங்களை யும் வழங்கி, உச்சநீதிமன்றம் அவற்றைச் செலுத்து வதற்கு நாடாளுமன்றம் சட்டத்தினால் வகை செய்யு மாயின், உச்சநீதிமன்றம், அத்தகைய கூடுதல் அதிகார வரம்பையும் அதிகாரங்களையும் உடையது ஆகும்.

115. இந்த அரசமைப்பின் (அடிப்படை உரிமை களைக் கண்டிப்பாக செயல்படுத்துதல் தொடர்பான)

குறித்த சில நீதிப்பேராணைகளைப் பிறப்பிக்கும் அதிகாரங்களை உச்சநீதிமன்றத்திற்கு வழங்குதல்.

25 ஆம் உறுப்பின் (2) ஆம் கூறில் குறிப்பிடப்பட்டவை அல்லாத பிற எந்த நோக்கங்களுக்காகவும் பணிப்புரைகளை அல்லது ஆணைகளை, ஆட்கொணர்விப்பு, செயலுறுத்து, தடையுறுத்து, தகுதி வினவு, நெறிமுறைக் கேட்பு ஆகியவற்றின் தன்மை கொண்ட நீதிப் பேராணைகளை பிறப்பிக்கும் அதிகாரத்தை நாடாளுமன்றம் சட்டத்தினால் உச்சநீதிமன்றத்திற்கு வழங்கலாம்.

உச்சநீதிமன்றத்தின் சார்பியல்வான அதிகாரங்கள்.

116. இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ வழங்கப்பட்ட அதிகாரத்தை மேலும் திறம்படச் செலுத்த உச்சநீதிமன்றத்தை இயல்விப்பதற்குத் தேவை யாக அல்லது ஏற்புடையதாக உள்ளவையும், இந்த அரசமைப்பின் வகையங்களில் எதற்கும் முரணாக இல்லாதவையுமான துணைவுறு அதிகாரங்களை அந்நீதிமன்றத்திற்கு வழங்குவதற்கு நாடாளுமன்றம் சட்டத்தினால் வகை செய்யலாம்.

உச்சநீதிமன்றத்தால் விளம்பப்படும்சட்டநெறி, நீதிமன்றங்கள் அனைத்தையும் கட்டுப்படுத்தும்.

117. உச்சநீதிமன்றத்தால் விளம்பப்படும் சட்ட நெறி இந்திய ஆட்சி நிலவரைக்குள் உள்ள நீதிமன்றங்கள் அனைத்தையும் கட்டுப்படுத்தும்.

உச்சநீதிமன்றத் தீர்ப்பாணைகள், ஆணைகள் இவற்றைச்செயலுறுத்துதலும், வெளிக்கொணர்தல்முதலியவை குறித்த ஆணைகளும்.

118. (1) உச்சநீதிமன்றம் தனது அதிகாரத்தைச் செலுத்துகையில், தன் முன் முடிவுறா நிலையிலுள்ள வழக்கு அல்லது பொருட்பாடு எதிலும் முழுமையான நீதி நிலையுறச் செய்வதற்குத் தேவையாகும் தீர்ப்பாணையை வழங்கலாம் அல்லது எதனையும் பிறப்பிக்கலாம்; அவ்வாறு வழங்கப்பட்ட தீர்ப்பாணை அல்லது பிறப்பிக்கப்பட்ட ஆணை எதுவும், நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தாலோ அதன் வழியாலோ வகுத்துரைக்கப்படும் முறையில் இந்திய ஆட்சி நிலவரை எங்கணும் செயலுறுத்தத் தகுவது ஆகும்.

(2) நாடாளுமன்றத்தில் இதன் பொருட்டு இயற்றப்படும் சட்டம் ஒன்றின் வகையங்களுக்கு உட்பட்டு, உச்சநீதிமன்றம், இந்திய ஆட்சி நிலவரை

முழுவதிலும், எவரையும் தன் முன் வரவழைப்பதற்காக ஆவணங்கள் எவற்றையும் வெளிக்கொணர்வதற்காக அல்லது முன்னிலைப்படுத்துவதற்காக அல்லது தன்னை அவமதித்த குற்றம் பற்றி விசாரிக்கவோ அது குறித்துத் தண்டனை விதிக்கவோ ஆணை எதனையும் பிறப்பிப்பதற்கான அதிகாரங்கள் அனைத்தையும் உடையது ஆகும்.

உச்சநீதிமன்றத்துடன் கலந்தாய்வு செய்வதற்குக் குடியரசுத் தலைவருக்குள்ள அதிகாரம்.

119.(1) சட்ட விளக்கம் அல்லது பொருண்மை பற்றி எழுந்துள்ள அல்லது எழக்கூடிய ஒரு பிரச்சினையின் தன்மை அல்லது பொது முக்கியத்துவம் காரணமாக அதன்மீது உச்சநீதிமன்றத்தின் கருத்துரையைப் பெறுவது உகந்தது என்று குடியரசுத் தலைவருக்கு எச்சமயத்திலேனும் தோன்றுமாயின், அப்பொழுது அவர் அப்பிரச்சினையை ஆராய்வதற்காக அந்நீதிமன்றத்திற்குக் குறித்தனுப்பலாம்; அதன் மீது அந்நீதிமன்றம் தான் தக்கதெனக் கருதும் விசாரணைக்குப் பிறகு, தன் கருத்துரையைக் குடியரசுத் தலைவருக்குத் தெரிவிக்கும்.

(2) இந்த அரசமைப்பின் உறுப்பு 109 கூறு (1)ல் அடங்கியுள்ள வரம்புரையில் எது எவ்வாறிருப்பினும், குடியரசுத் தலைவர் அந்த கூறில் குறிப்பிடப்பட்ட வகை சார்ந்த ஒரு வழக்கை உச்சநீதிமன்றத்தின் கருத்துரையைப் பெறுவதற்காக குறித்தனுப்பலாம்; அதன் மீது உச்சநீதிமன்றம் வழக்கில் தொடர்புடைய நபர்களுக்கு வழக்கினை எடுத்துக்கூற ஒரு வாய்ப்பினை அளித்த பிறகு, அதன் மீது முடிவு செய்து குடியரசுத் தலைவருக்கு உண்மையைத் தெரிவிக்கும்.

ஆட்சிமுறை மற்றும் நீதித்துறை அதிகார அமைப்புகள் உச்சநீதிமன்றத்திற்கு உதவும் வகையில் செயலுறும்.

120. இந்திய ஆட்சி நிலவரையிலுள்ள ஆட்சிமுறை மற்றும் நீதிமுறை அதிகார அமைப்புகள் அனைத்தும், உச்சநீதிமன்றத்திற்கு உதவும் வகையில் செயலுற வேண்டும்.

நீதிமன்ற விதிகள் முதலியன.

[1]121. (1) நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தின் வகையங்களுக்கு உட்பட்டு, உச்சநீதி மன்றம், குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன், பின் கண்டவை உள்ளடங்கலாக, அந்நீதிமன்றத்தின் நடைமுறையையும் நெறிமுறையையும் பொதுவாறாக ஒழுங்குறுத்துவதற்கான விதிகளை அவ்வப்போது வகுத்திடலாம் -

(அ) நீதிமன்றத்தில் வழக்குரை தொழில் புரிபவர்கள் குறித்த விதிகள்;

(ஆ) மேன்முறையீடுகளை விசாரிப்பதற்கான நெறிமுறைகள், மற்றும் எந்தக்கால அளவிற்குள் மேன்முறையீடுகளை அந்நீதிமன்

1. அமெரிக்க நாட்டு உச்சநீதிமன்றத்தில் ஒவ்வொரு வழக்கு விசாரணையிலும் நீதிமன்றத்தின் அனைத்து நீதிபதிகளும் பங்கேற்க தகுதி படைத்தவராவர்; நீதிமன்றம் தனிப் பிரிவுகளாக ஒருபோதும் அமர்வதில்லை. அந்த நீதிமன்றத்தின் நீதிபதிகள் இந்த செயல்முறைக்கு மிகவும் முக்கியத்துவம் அளிக்கின்றனர். இந்தியாவில் இத்தகைய செயல்முறை, குறைந்தது, அரசமைப்பிற்கு விளக்கமளிக்கும் வினா தொடர்புடையதும், உச்சநீதிமன்றத்தின் கருத்துரைக்காக குடியரசுத் தலைவரால் குறித்தனுப்பப்படுவதுமான, இரண்டு வகை வழக்குகளிலாவது பின்பற்றப்பட வேண்டுமென இக்குழு கருதுகின்றது. அதே செயல்முறை ஏனைய வகை வழக்குகளுக்கு விரிவுபடுத்த வேண்டாமா என்பது நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் ஒழுங்குபடுத்த வேண்டிய பொருளாகும்.

பிரிவு (ஆ): இந்த உறுப்பில், வழக்குரைஞர்கள் நீதிமன்றங்களில் தங்களுடைய முன்னிலைத் தெரிவிப்புரையை அனுமதிப்பதற்கான காலக்கெடு முறைபடுத்தும் விதிகளைச் செய்வதற்கு நீதிமன்றத்திற்கு அதிகாரம் அளிப்பதும் சேர்க்கப்பட்டுள்ளது. இந்த முறை, அமெரிக்க நாட்டில் சாதாரணமாக வழக்குரைஞர்கள் ஒவ்வொரு வழக்கிலும் வாதிடுவதற்கு ஒரு மணி நேரம் மட்டும்தான் அனுமதிக்கப்படுகின்றது; மற்றவை எழுத்து மூலம் முன்வைக்கப்படுகின்றது என்ற பழக்கத்திலுள்ள முறையைப் பின்பற்றியதாகும். (இக்குழுவின் ஒரு உறுப்பினர், திரு. அல்லாடி கிருஷ்ணசுவாமி அய்யர், இந்த உறுப்பில் இந்த அதிகாரத்தை வெளிப்படையாக குறிப்பிட வேண்டிய அவசியமில்லையென கருதுகின்றார்; ஏனென்றால், அவருடைய நோக்கில், பொது மேன்முறையீட்டு செயல்பாடுகளைப் பொறுத்து அமெரிக்க நாட்டு உச்சநீதிமன்றத்திலிருந்து, இந்திய உச்சநீதிமன்றம் வேறுபட்டதாகும்.)

றத்தில் முன்னிட வேண்டும் என்பது உள்ளடங்கலாக, மேன்முறையீடு தொடர்பான பிற பொருட்பாடுகள் மற்றும் நீதிமன்றத்தின் முன் வாதிடும் வழக்குரைஞர்களுக்கு அது தொடர்பான முன்னிலைப்படுத்துவதற்கு அனுமதிக்கப்படும் காலம் ஆகியவை குறித்த விதிகள்;

(இ) அந்நீதிமன்ற நடவடிக்கைகளுக்கும், அவற்றைச் சார்ந்தவற்றிற்குமான செலவினங்கள், அவற்றைப் பொறுத்து விதிக்கப்பட வேண்டிய கட்டணங்கள் ஆகியவை குறித்த விதிகள்;

(ஈ) பிணையத்தில் விடுவிப்பது குறித்த விதிகள்;

(உ) நடவடிக்கைகளை நிறுத்திவைப்பது குறித்த விதிகள்; மற்றும்

(ஊ) அற்பமானது அல்லது அலைக்கழிப்பதாகவுள்ளது அல்லது காலங்கடத்துவதற்கென்றே கொண்டு வரப்பட்டுள்ளது என அந்நீதிமன்றத்திற்குத் தோன்றும் மேன்முறையீடு எதனையும் குறுகு முறையில் அறுதித் தீர்வு செய்வதற்கு வகைசெய்யும் விதிகள்.

(2) இந்த அரசமைப்பின் பொருள்கோள் குறித்த செறிவான சட்டப் பிரச்சினை ஒன்று அடங்கியுள்ள வழக்கு எதனையும் தீர்வு செய்வதற்கோ, இந்த அரசமைப்பின் 119-ஆம் உறுப்பின்படி குறித்தனுப்பப்படும் எதனையும் விசாரிப்பதற்கோ அமர வேண்டிய நீதிபதிகளின் எண்ணிக்கை குறைந்தது ஐந்தாக இருத்தல் வேண்டும்;

வரம்புரையாக: ஒவ்வொரு நீதிபதியும், உடல் நலக் குறைவின் காரணமோ, தன்னலமோ அல்லது போதுமான இதர காரணத்தினால் அவ்வாறு செயல்பட

முடியாத நிலை இருந்தாலன்றி, மேலே கூறப்பட்ட செயல் நோக்கத்திற்காக அமர்வதற்கு தகுதியுடைய வராவர்.

(3) இந்த அரசமைப்பின் 119-ஆம் உறுப்பின் கீழ் எந்தவிதமான குறித்தனுப்புதல் தொடர்பான கருத்தையும், தீர்ப்பையும் உச்சநீதிமன்றம், நீதிமன்றத் திலன்றி, வேறுவகையில் வெளியிடக்கூடாது.

(4) அத்தகைய கருத்துரை எதுவும் மற்றும் தீர்ப் புரை எதுவும் அவ்வழக்கின் விசாரணையின்போது அமர்ந்திருந்த நீதிபதிகளில் பெரும்பான்மையோ ருடைய ஒருங்கிசைவுடன் அல்லாமல், உச்சநீதிமன்றத் தால் வழங்கப்படுதல் ஆகாது; ஆனால் ஒருங்கிசை வளிக்காத நீதிபதி ஒருவர் தமது மாறுபட்ட தீர்ப்புரை யையோ கருத்துரையையோ வழங்குவதை இந்தக் கூறிலுள்ள எதுவும் தடையூறு செய்வதாகக் கொள்ளுதல் ஆகாது.

உச்சநீதிமன்றத்தின் அலுவலர்கள் மற்றும் பணியாளர்களின் வரையூதியங்கள், படித்தொகைகள், ஓய்வூதியங்கள் மற்றும் செலவினங்கள்.

122. (1) உச்சநீதிமன்றத்தின் அலுவலர்கள் மற்றும் பணியாளர்களுக்கோ அவர்கள் பொறுத்தோ வழங்கத்தக்க வரைவூதியங்கள், படித்தொகைகள் மற்றும் ஓய்வூதியங்கள், குடியரசுத் தலைவருடன் கலந் தாலோசித்து இந்தியாவின் தலைமை நீதிபதியால் நிர்ணயிக்கப்படும்.

(2) உச்சநீதிமன்றத்தின் நிர்வாகச் செலவினங் கள், நீதிமன்றத்தின் அலுவலர்கள் மற்றும் பணியாளர் களுக்கோ அவர்கள் பொறுத்தோ வழங்கத்தக்க வரை வூதியங்கள், படித்தொகைகள் மற்றும் ஓய்வூதியங் கள் உள்ளடங்களானவை இந்திய நிதிகளின் மீது சார்த்தப்படும்; எந்த வகையான கட்டணங்களும் மற்றும் நீதிமன்றத்தால் எடுத்துக் கொள்ளப்படும் தொகைகளும் அந்த நிதிகளின் பகுதியாகக் கொள்ளப் படும்.

முதலாவது அட்டவணை பாகம்-III-ல் வரையறுக்கப் பட்டுள்ள மாநிலங்களின் உயர் நீதிமன்றங்களுக்கு அனுப் பப்படும் குறிப் புரைகளைத் தொகுத்தல்.

123. (1) முதலாவது அட்டவணை பாகம் III-ல் அந்த நேரத்தில் வரையறுக்கப்பட்டுள்ள ஒரு மாநிலத்தின் அல்லது அதன் எல்லைக்குட்பட்ட ஒரு உயர்நீதிமன்றத்திற்கு இந்த அத்தியாயத்தின் உறுப்புகள் 103 மற்றும் 106ல் முன்வைக்கப்படும் குறிப்புரைகள்; குடியரசுத் தலைவர், உச்சநீதிமன்றத்துடனும் அந்த மாநிலத்தின் ஆட்சியாளருடனும் கலந்தாலோசித்து திருப்தியடைந்ததன் மேல், அத்தகைய நீதிமன்றம் அந்த அட்டவணையில் பாகம்-Iல் அந்த நேரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களின் உயர்நீதிமன்றங்களோடு ஒப்பிடத்தக்கவை என, அந்த உறுப்புக்களுக்காக உயர்நீதிமன்றமென விளம்பரப்படுத்துவதற்காக கருத்தில் கொள்ளலாம்.

(2) முதலாவது அட்டவணையின் பாகம் -IIIல் அந்த நேரத்தில் குறிப்பிடப்பட்டுள்ள ஒரு மாநிலத்தின் உயர்நீதிமன்றத்திற்கு, இந்த அத்தியாயத்தின் உறுப்புக்கள் 110 மற்றும் 113ல் வைக்கப்படும் குறிப்புரைகள், அந்த உறுப்புக்களுக்காக வகைசெய்யப்பட்டுள்ள மேன்முறையீடு அல்லது குறிப்புரை தொடர்பான நடவடிக்கைக்காக அந்த மாநிலத்தின் இறுதி வரம்புடைய நீதிமன்றத்திற்கு வைக்கப்படும் குறிப்புரை எனக் கருத்தில் கொள்ளலாம்.

## அத்தியாயம் - V

## இந்தியாவின் தலைமைத் தணிக்கையர்

இந்தியாவின் தலைமைத் தணிக்கையர்.

124. (1) இந்தியத் தலைமைத் தணிக்கையர் என்று ஒருவர் இருப்பார்; அவர் குடியரசுத் தலைவரால் அமர்த்தப்படுவார்; மேலும் உச்சநீதிமன்றத்தின் நீதிபதி ஒருவரை அகற்றுவது போல் அதே முறையிலும் அதே காரணங்களின் மீதும் மட்டுமே அவர் பதவியிலிருந்து அகற்றப் பெறுவார்.

(2) தலைமைத் தணிக்கையரின் வரைவூதியம், படித்தொகைகள் மற்றும் பிற பணி வரைக்கட்டுகளும்

நாடாளுமன்றம் சட்டத்தினால் தீர்மானிக்கிறவாறு இருக்கும்; அவ்வாறு தீர்மானிக்கப்படுகிற வரையில் அவை இரண்டாம் இணைப்புப் பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ளவாறு இருந்துவரும்;

வரம்புரையாக: தலைமைத் தணிக்கையின் வரை ஊதியமோ வாராமை விடுப்பு, ஓய்வூதியம் அல்லது ஓய்வு பெறும் வயது பொறுத்த அவரது உரிமைகளோ அவர் அமர்த்தப் பெற்றதன் பின்பு அவருக்குப் பாதகமான வகையில் மாற்றப்படுதல் ஆகாது.

(3) தலைமைத் தணிக்கையர், தாம் பதவி வகிப்பது அற்றுப் போன பின்பு, இந்திய அரசாங்கத்தின் கீழோ மாநிலம் ஒன்றின் அரசாங்கத்தின் கீழோ மேற்கொண்டும் பதவி வகிக்கத் தகுதியுடையவர் ஆகார்.

(4) தலைமைத் தணிக்கையரின் அலுவலர்கள் சார்ந்த அல்லது அவர்களுக்கு வழங்கப்பட வேண்டிய வரைவூதியங்கள், படித்தொகைகள் மற்றும் ஓய்வூதியங்களைப் பொறுத்து, குடியரசுத் தலைவருடன் கலந்தாலோசித்து தலைமைத் தணிக்கையர் நிர்ணயம் செய்வார்.

(5) தலைமைத் தணிக்கையருக்கும் அவருடைய அலுவலர்களுக்கும் வழங்கப்பட வேண்டிய வரைவூதியங்கள், படித்தொகைகள் மற்றும் ஓய்வூதியங்கள், இந்தியாவின் நிதியினங்களின் மீது சார்த்தப்படும்.

தலைமைத் தணிக்கையரின் கடமைகளும் அதிகாரங்களும்

125. நாடாளுமன்றத்தினால் குறிப்பிடப்படுகின்றபடியோ அல்லது இயற்றப்படும் சட்டத்தின் கீழோ, இந்திய அரசின் கணக்குகள் மற்றும் எந்த ஒரு மாநிலத்தின் கணக்குகளைப் பொறுத்தோ, தலைமைத் தணிக்கையர் அத்தகைய கடமைகளையும் அதிகாரங்களையும் செயல்படுத்துவார்.

விளக்கம்:- இந்த உறுப்பில் ''நாடாளுமன்றத்தினால் இயற்றப்படும் சட்டம்'' என்ற சொற்றொடர்

அந்த நேரத்தில் இந்தியாவின் நிலவரைக்குள் செயல் முறையிலுள்ள சட்டத்தையும் உள்ளடக்கியதாகும்.

கணக்குகளில் செயல் திட்டங்கள் கொடுப்பதற்கு தலைமைத் தணிக்கையருக்குற்ற அதிகாரம்.

126. குடியரசுத் தலைவரின் ஒப்புதலுடன் தலைமைத் தணிக்கையரால் வகுக்கப்படும் படிவத்தில் இந்திய அரசின் கணக்குகள் வைக்கப்படும். எந்த ஒரு மாநிலத்தின் எந்த ஒரு கணக்கும் எத்தகைய முறையில் அல்லது அடிப்படை நோக்கத்தில் வைத்திருக்கப்பட வேண்டுமென, அதேபோன்ற ஒப்புதலுடன் தலைமைத் தணிக்கையர் வழிகாட்டு நெறி வழங்கலாம்; அதன்படி கணக்குகளை வைத்திருக்க வேண்டியது அந்த மாநில அரசின் கடமையாகும்.

தணிக்கை அறிக்கைகள்.

127. இந்திய அரசின் கணக்குகளைப் பொறுத்த இந்தியத் தலைமை தணிக்கையரின் அறிக்கைகள், குடியரசுத் தலைவருக்குப் பணிந்தனுப்பப்படுதல் வேண்டும்; அவற்றை அவர் நாடாளுமன்றத்தின் முன்பு வைக்கும்படி செய்வார்.

# பகுதி - VI

## முதல் பட்டியல் பாகம் Iல் உள்ள மாநிலங்கள்

## அத்தியாயம் - I - பொதுவியல்

பொருள் வரையறை

*128.* இந்தப் பகுதியில், தறுவாயின் தேவை வேறானாலன்றி, ''மாநிலம்'' என்றால் தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிட்டுள்ளது எனப் படும்.

## அத்தியாயம் II - ஆட்சித்துறை

### ஆளுநர்

மாநிலங்களின் ஆளுநர்கள்

*129.* ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஆளுநர் என்று ஒருவர் இருப்பார்.

மாநிலத்தின் ஆட்சி அதிகாரம்

*130. (1)* மாநிலத்தின் ஆட்சி அதிகாரம் ஆளுநரிடம் உற்றமைந்திருக்கும். மேலும் அவர் இந்த அரசமைப்பு மற்றும் சட்டத்திற்கு இணங்கச் செயல்படுவார்.

(2) இந்த உறுப்பிலுள்ள எதுவும்,

(அ) நிலவுறும் சட்டம் ஒன்றினால் பிறவகை அதிகார அமைப்பு எதற்கும் வழங்கப்பட்ட பதவிப் பணிகள் எவற்றையும் ஆளுநருக்கு மாற்றுவதாகக் கொள்ளப்படுதல் ஆகாது; அல்லது

(ஆ) நாடாளுமன்றம் அல்லது மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் ஆளுநரின் கீழமைந்துள்ள அதிகார அமைப்பு எதற்கும் பதவிப் பணிகளை வழங்கப்படுவதற்குத் தடையூறு ஆவதில்லை.

ஆளுநரைத் தேர்ந்தெடுத்தல்.

131. மாநிலச் சட்டசபைக்குப் பொதுத் தேர்தலில் ஓட்டு போடத் தகுதியுள்ள அனைவரும் நேரடி வாக்குமூலம், மாநில ஆளுநரைத் தேர்ந்தெடுப்பார்கள்.

*மாற்றாக*

ஆளுநரை நியமித்தல்

[1]131. மாநிலச் சட்டசபையின் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படும் நான்கு நபர்கள் கொண்ட பட்டியலிலிருந்து, குடியரசுத் தலைவர் அவருடைய கையொப்பமும் முத்திரையும் கொண்ட அதிகார ஆணையின் வழி, மாநில ஆளுநர் நியமிக்கப்படுவார். அல்லது, மாநிலத்தில் மேலவை இருக்குமேயானால், விகிதாசாரப் பிரதிநிதித்துவ முறைப்படி ஒற்றை மாற்று வாக்கின் மூலம், ரகசிய வாக்களிக்கும் முறையின் படி சட்டச்பை மற்றும் மேலவை உறுப்பினர்கள் ஒன்றாகச் சேர்ந்து தேர்ந்தெடுத்தல் அவசியம்.

ஆளுநரின் பதவிக்காலம்

132. ஆளுநர் எந்தத் தேதியில் பதவி ஏற்கின்றாரோ அந்தத் தேதியிலிருந்து [2]ஐந்தாண்டுக் காலம் பதவியிலிருப்பார்.

வரம்புரையாக -

(அ) மாநிலத்தில் சட்டசபை இருந்தால் சபாநாயகருக்கு, ஆளுநர் ராஜிநாமாவை அனுப்பலாம்; அல்லது மாநிலத்தில் இரு அவைகள் இருந்தால், சட்டசபையின் சபாநாயகர் மற்றும் மேலவையின் தலைவருக்கு ராஜிநாமாவை அனுப்பலாம்.

---

1. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆளுநரும் சட்டசபைக்கு உத்திரவாதமான பிரதம மந்திரியும் ஒன்றாகச் செயல்படும்பொழுது கருத்து முரண்பாடு ஏற்பட்டு அதனால் நிர்வாகம் பலவீனப்படும் என்று, குழுவிலுள்ள சில உறுப்பினர்கள் மாற்றுத் திட்டத்தை வெகுவாக ஆதரித்தனர்.

2. சட்டசபையின் பதவிக் காலம் நான்கு ஆண்டுகளிலிருந்து ஐந்தாண்டுகளாக மாற்றியதால் ஆளுநரின் பதவிக் காலமும் நான்கு ஆண்டுகளிலிருந்து ஐந்தாண்டுகளாக மாற்ற வேண்டுமெனக் குழு நினைக்கின்றது.

(ஆ) இந்த அரசமைப்பு உறுப்பு 137-ல் உள்ள படி, வகையங்களின் ஆளுநர் அரசமைப் பினை [1]மீறினால், குற்றம் சாட்டுதல் முறைப்படி, அவரை பதவியிலிருந்து நீக்கலாம்.

(இ) ஆளுநருடைய பதவிக் காலம் முடிவடைந் தாலும், அவருக்குப் பதில் வேறொருவர் பதவி ஏற்க வரும் வரை அவர் பதவியில் தொடர்ந்து நீடிப்பார்.

ஆளுநரின் மறு தேர்வு / மறு நிய மனத்திற்கான தகுதிகள்

[2]133. ஆளுநராகப் பதவி வகிப்பவர் அல்லது பதவி வகித்தவர் மறுமுறை ஆளுநராகத் தேர்ந்தெடுக் கப்படவோ அல்லது மறுமுறை நியமனம் செய்யப் படவோ ஒரே ஒரு தடவை மட்டும் தகுதியுடையவ ராகின்றார்.

ஆளுநராகத் தேர்ந்தெடுக்கப் படுவதற்கான தகுதிப்பாடுகள்

134.(1) ஒருவர், இந்தியாவின் குடிமகனாக வும், முப்பத்தைந்து வயது முடிந்தவராகவும் இருந் தாலன்றி, அவர் ஆளுநராகத் தேர்ந்தெடுக்கப்படுவ தற்குத் தகுதியுடையவர் ஆகார்.

(2) பின்வரும் நிகழ்வுகளில் ஒரு நபர், மாநிலத் தின் ஆளுநராகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்குத் தகுதி யற்றவர் ஆவார் -

(அ) மாநிலத்தின் சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கத் தகுதியற்றவராக இருந்தால்,

வரம்புரையாக, அந்த நபர் மாநிலத்தில் வசிப் பவராக இருத்தல் அவசியம் இல்லை. அல்லது -

---

1. அரசமைப்பினை மீறினால் குடியரசுத் தலைவரைப் போல ஆளுநரும் குற்றம் சாட்டுதல்படி நீக்கப்படலாம் எனக் குழு நினைக்கின்றது. ஆனால் அவருடைய தவறான நடத்தைக்காக அன்று.

2. உறுப்பு 131-ல் இரண்டாவது மாற்று ஏற்றுக் கொள்ளப்படு மாயின், ''மறுதேர்வு'' என்பதற்குப் பதில் ''மறுநியமனம்'' என்ற வார்த்தை இந்த உறுப்பில் பயன்படுத்தப்படவேண்டும்.

(ஆ) தற்சமயம் முதல் பட்டியலில் குறிப்பிட்டுள்ளபடி, மாநில அரசாங்கம் அல்லது இந்திய அரசாங்கத்தில் வருமானம் பெறும் பதவி வகித்தவராக இருத்தல் அல்லது உள்ளூர் அல்லது மேற்சொன்ன அரசாங்கங்களின் அதிகாரத்தின் கீழ்ப் பதவி வகிப்பவர்.

**விளக்கம்:** இந்தக் கூறின்படி, ஒரு நபர் பதவி வகிப்பவர் அல்லது வருமானம் பெறுபவர் எனக் கருதப்பட மாட்டார் -

(அ) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிட்டுள்ளபடி, அவர் இந்தியாவின் அமைச்சர் அல்லது மாநிலத்தின் அமைச்சர், அல்லது

(ஆ) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிட்டுள்ளபடி, அவர் எந்த மாநிலத்திலாவது அந்தச் சட்டசபைக்கு உத்திரவாதமுள்ள அமைச்சர் அல்லது அந்த மாநிலத்தில் இரு அவைகள் இருந்தால், நான்கில் மூன்று பேருக்குக் குறையாமல் தேர்ந்தெடுக்கும் கீழ் அவைக்கு உத்திரவாதமுள்ளவர் ஆவார்.

**மாற்றாக**

ஆளுநராக அமர்த்தப் பெறுவதற்கான தகுதிகள்.

[1]134.(1) ஒருவர், இந்தியாவின் குடிமகனாகவும், முப்பத்து ஐந்து வயது நிறைந்தவராகவும் இருந்தாலன்றி, அவர் ஆளுநராக அமர்த்தப் பெறுவதற்கான தகுதி உடையவர் ஆகார்.

(2) ஒருவர், ஒரு மாநிலத்தின் சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கத் தகுதியற்றவராக இருந்தால், அவர் ஆளுநராக நியமிக்கப்படுவதற்குத் தகுதியற்றவர் ஆவார்.

---

1. உறுப்பு 131-ல் இரண்டாவது மாற்று ஏற்றுக் கொள்ளப்பட்டால், இந்த உறுப்பில் இந்த இரண்டாவது மாற்று ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்.

வரம்புரையாக: அவர் அந்த மாநிலத்தில் வசிக்க வேண்டும் என்பது அவசியமில்லை.

ஆளுநரின் பதவிக்கான வரைமுறைகள்.

*135. (1)* தற்சமயம் முதல் பட்டியலில் குறிப்பிட்டுள்ளபடி ஆளுநர் நாடாளுமன்றம் அல்லது சட்டசபையில் உறுப்பினராக இருத்தல் ஆகாது. மேலும் நாடாளுமன்றம் அல்லது சட்டசபையின் உறுப்பினராக உள்ள ஒருவர் ஆளுநராகத் தேர்ந்தெடுக்க/[1]நியமிக்கப்படுவாராயின், அவர் ஆளுநராக பதவி ஏற்கும் தேதியன்று அந்த அவையிலுள்ள தம் பதவியிடத்தை விட்டகன்றவராகக் கொள்ளப் பெறுவார்.

*(2)* ஆளுநர், பிற பதவி அல்லது ஊதியப் பதவி எதனையும் வகித்தல் கூடாது.

*(3)* ஆளுநர், தம் பதவிக்குரிய உறைவிடம், சட்டமன்றச் சட்டத்தினால் தீர்மானிக்கும் பதவியூதியங்கள் மற்றும் படித்தொகைகள் பெற உரிமையுடையவர் ஆவார். அவ்வாறு அதன் பொருட்டு வகை செய்யப்படும் வரையிலும், இரண்டாம் பட்டியலில் குறிப்பிட்டுள்ளபடி, பதவியூதியங்கள் மற்றும் படித்தொகைகள் ஆகியவற்றிற்கு அவர் உரிமை கொண்டவர் ஆவார்.

*(4)* ஆளுநருக்குரிய பதவியூதியங்கள் மற்றும் படித்தொகைகள் அவருடைய பதவிக் காலத்தின்போது குறைத்துவிடுதல் ஆகாது.

ஆளுநர் அல்லது அவர் பணிகளை ஆற்றுபவருக்குற்ற ஆணைமொழி அல்லது உறுதிமொழி:

*136.* ஆளுநர் ஒவ்வொருவரும், ஆளுநரின் பதவிப் பணிகளை ஆற்றிவரும் ஒவ்வொருவரும், தாம் பதவி ஏற்பதற்கு முன்பு, மாநிலச் சட்டசபையின் உறுப்பினர்கள் முன்னிலையில், ஓர் ஆணைமொழியை அல்லது உறுதிமொழியைப் பின்வரும் சொன்முறையில் உள்ளபடி ஏற்றுக் கையொப்பமிடுதல் வேண்டும்: அதாவது -

---

1. உறுப்பு 131-ல் இரண்டாவது மாற்று ஏற்றுக்கொள்ளப்பட்டால், இந்த உறுப்பு கூறு (1)-ல் ''தேர்ந்தெடுக்கப்பட்ட'' என்ற வார்த்தைக்குப் பதில் ''நியமிக்கப்பட்ட'' என்ற வார்த்தை பயன்படுத்தப்படவேண்டும்.

''அ, ஆ ஆகிய நான் ........ (மாநிலத்தின் பெயர்) ஆளுநர் பதவிப் பொறுப்பை உண்மையாக நிறை வேற்றி வருவதோடு (அல்லது ஆளுநருக்குள்ள பதவிப் பணிகளை ஆற்றி வருவதோடு) அர சமைப்பு முறையினையும் சட்ட நெறியினையும் என் முழுத்திறன் கொண்டு புரந்தும் பேணியும் புறங்காத்தும் நிற்பேன் என்றும் .............. (மாநிலத்தின் பெயர்) மக்கள் நற்பணிக்கும் நல் வாழ்வுக்கும் முற்றுமாக என்னை நான் ஆட் படுத்திக் கொள்வேன் என்றும் ஆணைமொழி கின்றேன் அல்லது உறுதிமொழிகின்றேன்.''

ஆளுநர் மீது குற்றம் சாட்டப் படுவதற்கான முறை.

137 (1) ஆளுநர், அரசமைப்பினை மீறுவதற் காகக் குற்றம் சாட்டப்படும்பொழுது, மாநிலத்தின் சட்டசபையில் குற்றச்சாட்டுக் கொண்டு வருதல் வேண்டும்.

(2) எந்தக் குற்றச்சாட்டும் -

(அ) சட்டசபையில் முப்பது உறுப்பினர்களுக் குக் குறையாமல் கையொப்பமிட்ட, முன் அறிவிப்புச் செய்த பின்னர் குற்றச்சாட்டுத் தீர்மானத்தைக் கொண்டு வரலாம். மேலும்

(ஆ) சட்டசபையின் மொத்த உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கு பேருக்குக் குறை யாமல் தீர்மானத்தை ஆதரித்து இருக்க வேண்டும்.

(3) அப்படியொரு குற்றச்சாட்டுக் கொண்டு வரும்பொழுது, சட்டசபையின் சபாநாயகர், மாநிலங் களின் அவைத் தலைவருக்குத் தெரிவிக்க வேண்டும். அதன் பின்னர், மாநிலங்கள் அவையில் உறுப்பினர் அல்லாதவர்களைக் கொண்டு குழு அமைத்துக் குற்றச் சாட்டினைப் பற்றிப் புலன் விசாரணை செய்வார்கள். அந்தப் புலன் விசாரணையின் பொழுது ஆளுநர் நேரில் வந்து முறையிட உரிமையுண்டு.

(4) புலன் விசாரணையில் ஆளுநருக்கு எதிரான குற்றச்சாட்டு நிலைநிறுத்தப்பட்டால், மாநிலங்கள் அவையின் மொத்த உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்குப் பேருக்குக் குறையாமல் தீர்மானம் நிறை வேற்றப்பட வேண்டும். அந்தத் தீர்மானம் சட்டசபை யின் சபாநாயகருக்குத் தெரிவிக்கப்பட்ட தேதியி லிருந்து ஆளுநர் பதவியிலிருந்து நீக்கப்பட்டவர் ஆவார்.

குடியரசுத் தலைவர்/மாநிலத்தின் சட்டசபைக் குறித்த சில எதிர்பாரா நிகழ்வுகளில் ஆளுநரின் பதவிப் பணிகளை ஆற்றி வருதல் குறித்த அதிகாரம்.

[1]138. மாநிலச் சட்டசபை, தேவையெனக் கருதும் வகையகங்களைச் செய்யலாம். **இந்த அத்தியாயத்தில் வகை செய்யப்பட்டிராத** எதிர்பாரா நிகழ்வு எதிலும், மாநில ஆளுநரின் பதவிப் பணிகளை ஆற்றி வருவ

---

1. உறுப்பு 131-ல் இரண்டாவது மாற்று ஏற்பாடு ஏற்றுக் கொள்ளப்படுமாயின், இந்த உறுப்பில் ''மாநிலச் சட்டசபை தேவையெனக் கருதும் வகையகங்களைச் செய்யலாம்'' என்பதற்குப் பதில் ''குடியரசுத் தலைவர்'' தாம் தக்கதெனக் கருதும் ஏற்பாட்டினைச் செய்யலாம்'' என்பதைப் பயன்படுத்தப் பட வேண்டும். மேலும் இந்த உறுப்பில், ''அந்த மாநிலம்'' என்னும் வார்த்தைகளுக்குப் பதில் ''ஒரு மாநிலம்'' என்னும் வார்த்தைகள் பயன்படுத்தப்பட வேண்டும்.

சட்டசபை தேர்ந்தெடுத்த பட்டியலிலிருந்து ஆளுநரைக் குடியரசுத் தலைவர் நியமித்தாலும் அல்லது மக்களால் ஆளுநர் தேர்ந்தெடுக்கப்பட்டாலும், துணை ஆளுநர் தேவையில்லை எனக் குழு நினைக்கிறது. மத்தியில் துணைக் குடியரசுத் தலைவர் இருப்பது போலத் துணை ஆளுநர் தன் பதவியின் காரணமாக மேலவையின் தலைவராக முடியாது. ஏனென்றால் சில மாநி லங்களில் மேலவை கிடையாது. எனவே, ஆளுநர் இருக்கும் வரை, துணை ஆளுநருக்குக் குறிப்பிட்ட எந்தப் பணிகளும் இல்லை. ஆளுநர் பதவி திடீரென்று காலியாகும் பொழுது, துணை ஆளுநர், ஆளுநர் பதவி ஏற்கலாம் என்ற ஒரே காரணத் திற்காக துணை ஆளுநர் பதவி தோற்றுவிக்கலாம். அத்தகைய வகையகம் செய்வதைக் குடியரசுத் தலைவருக்கோ அல்லது மாநிலச் சட்டசபைக்கோ விட்டுவிடலாம். உதாரணமாக, ஆளுநர் பதவி திடீரென்று காலியானால், முதன்மை நீதிபதி, ஆளுநருடைய பணிகளைச் செய்யலாம் என்று முன்கூட்டியே குடியரசுத் தலைவர் அல்லது மாநிலச் சட்டசபை, வகையம் செய்யலாம். (தெற்கு ஆப்பிரிக்கா ஒன்றியத்தில் முதன்மை ஆளுநரின் பணிகளை தெற்கு ஆப்பிரிக்காவின் முதன்மை நீதிபதி, குறித்த சில எதிர்பாரா நிகழ்வுகளில் ஆற்றலாம் என்று பத்தி 6-ல் உள்ளது).

**தற்குக் குடியரசுத் தலைவர் தாம் தக்கதெனக் கருதும் ஏற்பாட்டினைச் செய்யலாம்.**

தேர்தல் நடத்தும் நேரம்/ஆளுநர் பதவி காலியாகும் பொழுது அதனை நிரப்பப் பட்டியல் தயார் செய்ய, தேர்தல் நடத்தும் காலம்.

[1]139 (1). ஆளுநரின் பதவிக் காலம் முடிவதற்கு முன்னால், தேர்தலை/ ஆளுநரைத் தேர்ந்தெடுக்கும் **பட்டியல் நியமனத்திற்கான தேர்தலை** முடித்தல் வேண்டும்.

(2) இந்த அரசமைப்பு உறுப்பு 132-ன்படி, ஆளுநர் இறந்தாலோ, ராஜினாமா செய்தாலோ அல்லது பதவியிலிருந்து நீக்கப்பட்டாலோ அந்தப் பதவி காலியானவுடன் அதை நிரப்புவதற்கான தேர்தலில் / ஆளுநரை தேர்ந்தெடுக்கும் பட்டியல் நியமனத்திற்கான தேர்தலை நடத்தித் தேர்ந்தெடுக்கப்பட்ட / **நியமனம் செய்யப்பட்ட** நபரைக் காலியான இடத்தில் அமர்த்த வேண்டும். அவர் ஐந்தாண்டுகள் முழுப் பதவிக் காலம் வரை இருக்க உரிமையுடையவர் ஆவார்.

ஆளுநரின் தேர்தல்/ஆளுநர் பதவி காலியாகும் பொழுது அதனைநிரப்பப் பட்டியல் தயார் செய்யும் தேர்தல் குறித்த பொருட்பாடுகள் பற்றி

[2]140.(1) ஆளுநரைத் தேர்ந்தெடுத்தல் / ஆளுநர் பதவி காலியாகும்பொழுது அதனை நிரப்பப் பட்டியல் தயார் செய்யும் தேர்தலின்பொழுது ஏற்படும் எல்லாச் சந்தேகங்கள் மற்றும் சச்சரவுகளை உச்சநீதிமன்றம் விசாரிக்கும். அதனுடைய முடிவே இறுதியானது.

---

1. உறுப்பு 131-ல் இரண்டாவது மாற்று ஏற்கப்படுமாயின் ''தேர்தல்'' என்பதற்குப் பதில் ''பட்டியல் நியமனத்திற்கான தேர்தல்'' என்னும் வார்த்தைகளை இந்த உறுப்பில் கூறு (1) மற்றும் (2)ல் பயன்படுத்தப்பட வேண்டும். இந்த உறுப்பில் கூறு 2ல்''தேர்ந்தெடுக்கப்பட்ட'' என்பதற்குப் பதில் ''நியமித்தல்'' என்னும் வார்த்தை பயன்படுத்தப்பட வேண்டும்.
2. உறுப்பு 131-ல் இரண்டாவது மாற்று ஏற்கப்படுமாயின், இந்த உறுப்பு கூறு (1) மற்றும் (2)-ல் ''ஆளுநரின் தேர்தல்'' என்னும் சொற்குப் பதில் ''ஆளுநர் நியமனத்திற்கான பட்டியல் தயார் செய்யும் தேர்தல்'' என்ற வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டும்.

(2) இந்த அரசமைப்பில் உள்ள வகையகங்களுக்கு உட்பட்டு, மாநிலச் சட்டசபை, சட்டத்தின் வாயிலாக ஆளுநரின் தேர்தல் / ஆளுநர் பட்டியல் தயார் செய்யும் தேர்தலின் பொருட்பாடுகளை ஒழுங்கு படுத்தும்.

குறித்த சில நேர்வுகளில் குற்ற மன்னிப்புகள் முதலியன அளிப்பதற்கும் மற்றும் தீர்ப்புத் தண்டனைகளைத் தற்காலிகமாக நிறுத்தி வைப்பதற்கும், இறுத்தல் செய்வதற்கு அல்லது மாற்றிக் குறைப்பதற்கும் ஆளுநருக்குள்ள அதிகாரம்.

141. ஒரு மாநில ஆளுநர், மாநிலத்தின் சட்டசபை உருவாக்கும் சட்டத்திற்கு எதிரான ஒரு குற்றச் செயலுக்காகக் குற்றத் தீர்ப்பளிக்கப் பெற்ற ஒருவரின் தண்டனையைப் பொறுத்துக் குற்ற மன்னிப்புகள் அளிக்கவும் தண்டனையை நிறுத்தி வைக்கவும் அதை நிறைவேற்றுவதைத் தள்ளி வைக்கவும் அல்லது எஞ்சிய தண்டனையை இறுத்தல் செய்யவும் அல்லது தீர்ப்புத் தண்டனையைத் தற்காலிகமாக நிறுத்தி வைக்க, இறுத்தல் செய்ய அல்லது மாற்றிக் குறைக்கவும் அதிகாரம் உடையவர் ஆவார்.

142. இந்த அரசமைப்பின் வகையங்கட்கு உட்பட்டு, ஒவ்வொரு மாநிலத்தின் ஆட்சி அதிகாரம் -

மாநில ஆட்சி அதிகாரத்தின் வரம்பு

(அ) மாநிலச் சட்டசபை, சட்டங்கள் இயற்றுவதற்கான பொருட்பாடு குறித்து

(ஆ) தற்சமயம் இந்த அரசமைப்பு, முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிட்டுள்ளபடி உறுப்பு 236 அல்லது 237-ன் கீழ், எந்த மாநிலம் அல்லது மாநிலங்கள் கூட்டுடன் செய்து கொண்ட ஒப்பந்தப்படி உரிமைகள், அதிகாரம் மற்றும் நியாய ஆதிக்கம் செலுத்துவது ஆகியவற்றை அளாவி நிற்கும்.

## அமைச்சரவை

ஆளுநருக்கு அமைச்சரவை உறுதுணையாக இருத்தலும் தேர்வுரை வழங்குதலும்

143. (1) ஆளுநர், இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ தம் உளத் தேர்வின்படி செயலாற்ற வேண்டிய பதவிப் பணிகளை அல்லது அவற்றுள் எதனையும் தவிர, பிற பதவிப் பணிகளை ஆற்றுகையில், அவருக்கு உறுதுணையாக இருப்பதற்கும் தேர்வுரை வழங்குவதற்கும் முதலமைச்சரைத் தலைவராகக் கொண்ட அமைச்சரவை ஒன்று இருத்தல் வேண்டும்.

(2) ஒரு பொருட்பாடு, இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ ஆளுநர் தம் உளத்தேர்வின்படி செயலாற்ற வேண்டிய ஒரு பொருட்பாடா இல்லையா என்பதைப் பொறுத்துப் பிரச்சினை எதுவும் எழுமாயின், ஆளுநர் தம் உளத்தேர்வின்படி செய்யும் முடிவே இறுதியானது ஆகும்; ஆளுநர் தம் உளத் தேர்வின்படி செயற்பட்டிருக்க வேண்டும் அல்லது கூடாது என்பதைக் காரணமாகக் காட்டி, அவர் செய்த எதனின் செல்லுந்தன்மையையும் எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

(3) ஆளுநருக்கு அமைச்சர்கள் தேர்வுரை எதுவும் வழங்கினார்களா, அவ்வாறாயின், அது யாது என்பது பற்றி நீதிமன்றம் எதிலும் விசாரிக்கப்படுதல் ஆகாது.

அமைச்சர்களைப் பற்றிய பிற வகையங்கள்.

144.(1) ஆளுநருடைய அமைச்சர்கள் ஆளுநரால் அமர்த்தப் பெறுவர். அமைச்சர்கள், ஆளுநர் விழையுமளவும் பதவி வகிப்பர்.

வரம்புரையாக: பீகார், மத்திய மாகாணங்கள், பேரார் மற்றும் ஒரிசா ஆகிய மாநிலங்களில் பழங்குடியினர் நல்வாழ்வைத் தம் பொறுப்பில் கொண்ட அமைச்சர் ஒருவர் இருத்தல் வேண்டும். அத்துடன், பட்டியலில் கண்ட சாதியினர், பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் ஆகியோரின் நல்வாழ்வை அல்லது வேறு பணி எதனையுங்கூட அவர் தம் பொறுப்பில் கொண்டிருக்கலாம்.

(2) அமைச்சர் ஒருவர் தம் பதவியை ஏற்றுக் கொள்வதற்கு முன்பு, ஆளுநர் அவரைப் பதவியும் மறைகாப்பும் பற்றிய ஆணை மொழிகளை மூன்றாம் பட்டியலில் அதற்கென உள்ள சொன்முறைகளுக்கு இணங்க ஏற்கச் செய்தல் வேண்டும்.

(3) அமைச்சர் ஒருவர் மாநிலச் சட்டமன்றத்தில் தொடர்ச்சியாக ஏதேனும் ஓர் ஆறுமாதக் கால அளவிற்கு ஓர் உறுப்பினராக இல்லாவிடில், அந்தக் கால அளவு கழிவுற்றதும் தம் அமைச்சர் பதவியை இழந்தவர் ஆவார்.

(4) நாலாவது பட்டியலில் உள்ள புத்திமதியை ஆளுநர் தம் அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதிலும் அவர்களோடு தொடர்பு கொள்ளும்பொழுதும் பின் பற்ற வேண்டும். ஆளுநருடைய செயல்பாடு நாலாவது பட்டியலில் உள்ள புத்திமதிக்கு உகந்ததா அல்லது செல்லத்தகுந்ததா என்பதை யாரும் கேட்க முடியாது.

(5) அமைச்சர்களின் வரைவூதியங்களும் படித் தொகைகளும், மாநிலச் சட்டமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் தீர்மானிக்கிறவாறு இருக்கும். மாநிலச் சட்டமன்றம் அவ்வாறு தீர்மானிக்கிற வரையில், அவை இரண்டாம் பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ளவாறு இருந்துவரும்.

(6) இந்த உறுப்பின்கீழ், ஆளுநர், அமைச்சர்களை நியமிப்பதிலும் மற்றும் நீக்குவதிலும் தன் உளத் தேர்வின்படி செயல்படுவார்.

## மாநிலத்தின் தலைமை வழக்குரைஞர்

மாநிலத்தின் தலைமை வழக்குரைஞர்.

145. (1) ஒவ்வொரு மாநிலத்தின் ஆளுநரும், உயர்நீதிமன்றம் ஒன்றன் நீதிபதியாக அமர்த்தப் பெறுவதற்குத் தகுதிப்பாடுடைய ஒருவரை அந்த மாநிலத்தின் தலைமை வழக்குரைஞராக அமர்த்துவார்.

(2) ஆளுநரால் அவ்வப்போது குறித்தனுப்பப் படும் சட்டப் பொருட்பாடுகளைப் பொறுத்து, மாநில அரசாங்கத்திற்கு ஆய்வுரை அளிப்பதும் அவரால் தமக்குக் குறித்தளிக்கப்படும் சட்டப்பாங்குடைய பிற கடமைகளைப் புரிவதும் இந்த அரசமைப்பினாலோ அதன் வழியாலோ அல்லது நிகழுறு காலத்தில் செல் லாற்றலிலுள்ள பிற சட்டத்தாலோ அதன் வழியாலோ தமக்கு வழங்கப்படும் பதவிப் பணிகளை ஆற்றுவதும் மாநிலத் தலைமை வழக்குரைஞரின் கடமை ஆகும்.

(3) மாநிலத்தின் முதலமைச்சர் ராஜிநாமா செய்யும்பொழுது மாநிலத்தின் தலைமை வழக்குரை ஞரும் ஓய்வு பெறுவார். ஆனால் தனக்கு வாரிசுதாரை நியமிக்கும் வரை அல்லது அவரையே மறுநியமனம் செய்யும் வரையில் அவர் பதவியில் நீடிப்பார்.

(4) ஆளுநரால் தீர்மானிக்கப்படும் வரைவூதி யத்தை மாநிலத்தின் தலைமை வழக்குரைஞர் பெறுவார்.

## அரசாங்க அலுவல் நடத்துமுறை

மாநில அரசாங் கத்தின் அலுவல் நடத்துமுறை.

146. (1) மாநில அரசாங்கத்தின் ஆட்சித்துறை நடவடிக்கைகள் அனைத்தும், ஆளுநரின் பதவிப் பெயரால் எடுக்கப்படுவதாக இயம்பப் பெறுதல் வேண்டும்.

(2) ஆளுநரின் பதவிப் பெயரால் பிறப்பிக்கப் படும் ஆணைகளும், ஆக்கப்படும் முறையாவணங் களும், ஆளுநர் வகிக்கும் விதிகளில் குறித்துரைக்கப் படும் முறையில் உறுதிச் சான்றிடப்படுதல் வேண்டும்; அவ்வாறு உறுதிச் சான்றிடப்பட்ட ஆணை அல்லது முறையாவணம் ஆளுநரால் பிறப்பிக்கப்பட்ட ஆணை அல்லது ஆக்கப்பட்ட முறையாவணம் அன்று என்றும் காரணம் காட்டி, அதன் செல்லுந்தன்மையை எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

ஆளுநருக்குத் தகவல் தருவது முதலியவை பொறுத்த முதலமைச்சருக்குள்ள கடமைகள்.

147. பின்வருவன ஒவ்வொரு மாநில முதலமைச்சரின் கடமை ஆகும் -

(அ) மாநிலத்து அலுவல் நடவடிக்கைகளை நிருவகித்தல் தொடர்பாக அமைச்சரவையின் முடிவுகள் மற்றும் சட்டம் இயற்றுவதற்கான செயற்குறிப்புகள் அனைத்தையும் மாநில ஆளுநருக்குத் தெரிவித்தல்;

(ஆ) மாநிலத்து அலுவல் நடவடிக்கைகளை நிருவகித்தல் மற்றும் சட்டம் இயற்றுவதற்கான செயற்குறிப்புகள் தொடர்பாக ஆளுநர் கேட்டனுப்பும் தகவலைத் தருதல்; மற்றும்

(இ) ஓர் அமைச்சரால் முடிவு எடுக்கப்பட்டு, ஆனால் அமைச்சரவையால் ஓர்வு செய்யப்பட்டிராத பொருட்பாடு எதனையும் ஓர்வுக்காக அமைச்சரவையின் முன்வைக்குமாறு ஆளுநர் வேண்டுறுத்துவாராயின், அவ்வாறு செய்தல்.

# அத்தியாயம் III -
# மாநிலச் சட்டமன்றம்

## பொதுவியல்

முதல் பட்டியல் பாகம் I-ன்படி மாநிலச் சட்டமன்றங்களை அமைத்தல்.

148. (1) ஒவ்வொரு மாநிலத்திற்குமெனச் சட்டமன்றம் ஒன்று இருக்கும். அஃது ஆளுநர்,

(அ) ....................................,[1] மாநிலங்களில் இரு அவைகள்

(ஆ) மற்ற மாநிலங்களில் ஓர் அவையும் அடங்கும்.

(2) ஒரு மாநிலச் சட்டமன்றத்தில் இரண்டு அவைகள் இருக்குமிடத்து, ஒன்று சட்டமன்ற மேலவை

1. எந்த மாநிலங்களில் இரண்டு அவைகள் இருக்க வேண்டுமென விசாரித்து அறிந்த பின்னர், அந்த மாநிலங்களின் பெயர்கள் நிரப்பப்படும்.

என்றும், மற்றொன்று சட்டமன்றப் பேரவை என்றும் வழங்கப்பெறும். ஓரவை மட்டுமே இருக்குமிடத்து, அது சட்டமன்றப் பேரவை என்று வழங்கப்பெறும்.

சட்டமன்றப் பேரவைகளின் கட்டமைப்பு.

149. (1) இந்த அரசமைப்பு உறுப்பு 294 மற்றும் 295 வகையங்களுக்கு உட்பட்டு, ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள சட்டமன்றப் பேரவை உறுப்பினர்கள் நேரடித் தேர்தல் வாயிலாகத் தெரிந்தெடுக்கப்படுவர்.

(2) தேர்தல், வயது வந்தோர் ஓட்டுரிமை அடிப்படையின்படி ஆகும். அஃதாவது குடிமக்கள் ஒவ்வொருவரும் இருபத்தி ஒன்று வயதிற்குக் குறையாமல், இந்த அரசமைப்பில் தகுதியற்றவர் என்பவராக இல்லாமல் அல்லது மாநிலத்தின் சட்டசபையின் சட்டப்படி அங்கு வசிக்காதவர், மனநிலை சரியில்லாதவர், குற்றம் புரிந்தவர் அல்லது ஊழல் புரிந்தவர் அல்லது சட்டத்திற்குப் புறம்பாகச் செயல்படுபவர் என்றிராமல் தேர்தலில் வாக்குரிமை பெற்றவராகப் பதிவு செய்யப்பட்டிருக்க வேண்டும்.

(3) மாநிலச் சட்டசபையில் ஒவ்வொரு நிலவரைத் தேர்தல் தொகுதிகளின் பிரதிநிதித்துவம் அந்தத் தொகுதியிலுள்ள கடைசிக்கும் அதற்கு முந்தியதுமான மக்கள் தொகைக் கணக்கெடுப்பைப் பொறுத்தது. ஆனால், அசாமில் உள்ள தன்னாட்சி மாவட்டங்களில் ஒரு லட்சம் மக்கள் தொகைக்கு ஒரு பிரதிநிதிக்கு மிகாமல் இருத்தல் வேண்டும்.

வரம்புரையாக: மாநிலத்தில் உள்ள சட்டசபையில் மொத்த உறுப்பினர்கள் முந்நூறுக்கு மிகாமலும் அல்லது அறுபது பேருக்குக் குறையாமலும் இருத்தல் வேண்டும்.

(4) இந்த அரசமைப்பு உறுப்பு 289-ன் வகையங்களுக்கு உட்பட்டு, ஒவ்வொரு முறையும் மக்கள் கணக்கெடுப்பு முடிவடைவதன் மேல், மாநிலம் ஒவ்வொன்றின் சட்டப்பேரவையில் நிலவரைத் தேர்தல்

தொகுதிகளின் பிரதிநிதித்துவம், மாநிலச் சட்டசபை யின் சட்டத்தினால் எந்தவிதத்தில் எந்த தேதியிலிருந்து மறு நேரமைவு செய்யப்பட வேண்டும் என்பது தீர் மானிக்கப்படும்.

வரம்புரையாக: அத்தகைய மறுநேரமைவு, அப்போது நிலவுறும் சட்டமன்றப் பேரவை கலைக் கப்படும் வரையில், அந்தப் பேரவையிலுள்ள பிரதி நிதித்துவத்தைப் பாதிக்காது.

சட்டமன்ற மேலவைகளின் கட்டமைப்பு

150.(1) சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தில் அம்மேலவையிலுள்ள உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை, அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையிலுள்ள உறுப்பினர்களின் மொத்த எண்ணிக் கையில் இருபத்தி ஐந்து சதவீதத்திற்கு மிகாமல் இருத் தல் வேண்டும்.

(2) மாநிலத்திலுள்ள மேலவையில் உள்ள உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில் -

(அ) இந்த உறுப்பு, கூறு (3)ன்படி பாதி உறுப் பினர்கள், பட்டியலிலிருந்து தேர்ந் தெடுக்கப்பட வேண்டும்.

(ஆ) மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்கள், ஒற்றை மாற்று வாக்கு வழியிலான வீதாச்சார முறைக்கிணங்க, மாநிலத்தின் சட்ட சபையின் உறுப்பினர்களால் தேர்ந் தெடுக்கப்பட வேண்டும்.

(இ) மீதமுள்ள நபர்கள் ஆளுநரால் நியமிக்கப் படுவர்.

(3) இந்த அரசமைப்பு, உறுப்பு 151 கூறு (2)-ன் கீழ், முதல் பொதுத் தேர்தலுக்கு முன் மற்றும் அதன் பிறகு, மூவாண்டுக்கொருமுறை நடைபெறும் தேர்த லுக்கு முன்னால், மாநில மேலவைக்கு நபர்களின்

பெயர்களைக் கொண்ட ஐந்து பட்டியல் தயாரிக்கப் படும். ஒரு பட்டியலில், மாநிலத்தில் உள்ள பல்கலைக் கழகங்களின் பிரதிநிதிகள் பெயர்கள் இருக்கும். மீத முள்ள நான்கு பட்டியல்களில் உள்ள பெயர்கள் பின் வருவன போன்ற பொருட்பாடுகளைப் பொறுத்துச் சிறந்த தனியறிவோ, செயலுறு பட்டறிவோ உடை யவர்களாக இருத்தல் வேண்டும் -

(அ) இலக்கியம், கலை மற்றும் அறிவியல்,

(ஆ) விவசாயம், மீன்துறை மற்றும் தொடர் பான பாடங்கள்,

(இ) பொறியியல் மற்றும் கட்டடக்கலை,

(ஈ) பொது நிர்வாகம் மற்றும் சமுதாயப் பணி.

(4) இந்த உறுப்பு, கூறு (3)ன்படி, எத்தனை உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்க வேண்டுமோ அதைப் போல் இரண்டு மடங்கு உறுப்பினர்கள் பெயர்கள் ஒவ்வொரு பட்டியலிலும் இருத்தல் வேண்டும்.

(5) இடைத்தேர்தல் இந்த உறுப்பு, கூறு (3) மற்றும் (4)ன்படி மாநிலச் சட்டசபையின் சட்டங் களுக்கு ஏற்ப ஏற்கப்படுதல் மற்றும் மாற்றி அமைத் தலும் இருக்கும்.

*மாநிலச் சட்ட மன்றங்களின் காலவரை.*

151. (1) ஒவ்வொரு மாநிலத்தின் சட்டமன்றப் பேரவையும், அது முன்னதாகவே கலைக்கப்பட்டா லன்றி, அதன் முதல் கூட்டத்திற்காகக் குறிக்கப்பட்ட தேதியிலிருந்து [1]ஐந்தாண்டுகள் தொடர்ந்து இருக்கும்.

1. சட்டசபையின் கால அளவு ''நான்கு ஆண்டுகள்'' என்பதற்குப் பதில் ''ஐந்து ஆண்டுகள்'' எனக் குழு சேர்த்துள்ளது. ஜனநாயக அரசாங்க முறையில், ஒரு அமைச்சரின் முதல் ஆண்டு நிர்வாக வேலைகள் பற்றி அறிவு பெறவும், கடைசி ஓர் ஆண்டு அடுத்த பொதுத் தேர்தலுக்குத் தயார் செய்யவும் உதவும்; திட்டமிட்ட நிர்வாகப் பணிகளைக் கவனிக்க இரண்டு ஆண்டுகள்தான் எஞ்சி இருக்கும். இது மிகவும் குறைந்த காலமெனக் குழு நினைக் கின்றது.

மேற்சொன்ன [1]ஐந்தாண்டுக் கால அளவு கழிவுறுங் கால் அந்த அவை கலைக்கப்பட்டதாக ஆகிவிடும்.

(2) ஒரு மாநிலத்தின் சட்டமன்ற மேலவை கலைப்புக்கு உள்ளாவதில்லை. ஆனால், மாநிலச் சட்டசபையின் சட்ட வகையங்களுக்கு இணங்க, ஒவ்வொரு மூன்று ஆண்டுகள் கழிவுறுவதன் மேல், கூடிய விரைவில், அந்த அவையின் உறுப்பினர்களில் ஏறத்தாழ மூன்றில் ஒரு பகுதியினர் ஓய்வு பெறுதல் வேண்டும்.

*மாநிலச் சட்டசபையின் உறுப்பினராவதற்கு வயது வரம்பு.*

152. சட்டசபைக்கு உறுப்பினராக இருபத்தி ஐந்து வயதிற்குக் குறையாமலும், மேலவைக்கு முப்பத்தி ஐந்து வயதிற்குக் குறையாமலும் இருத்தல் வேண்டும். அப்படி இல்லையென்றால் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படத் தகுதியற்றவராவர்.

*மாநிலச் சட்டமன்றக் கூட்டத் தொடர்கள், அக் கூட்டத் தொடர்களை இறுதி செய்தல் மற்றும் கலைத்தல்.*

153. (1) ஒவ்வொரு ஆண்டும் மாநிலத்தின் சட்டசபை அல்லது அவைகள் இருமுறையாவது கூட வேண்டும். ஆனால், ஒரு கூட்டத் தொடரின் கடைசி அமர்வுக்கும், அடுத்த கூட்டத் தொடரின் முதல் அமர்வுக்கெனக் குறிப்பிடப்படும் தேதிக்கும் இடையேயுள்ள கால அளவு ஆறு மாதங்களுக்குக் குறைவாகவே இருத்தல் வேண்டும்.

(2) இந்த உறுப்பில் உள்ள வகையங்களுக்கு உட்பட்டு, ஆளுநர் அவ்வப்போது -

(அ) தாம் விரும்பும் இடம் மற்றும் நேரத்தில் அவைகளை அல்லது ஏதாவது ஒரு அவையைக் கூடும்படி செய்யலாம்.

(ஆ) அவை அல்லது அவைகளின் கூட்டத் தொடரினை இறுதி செய்யலாம்.

(இ) சட்டசபையினைக் கலைக்கலாம்.

(3) இந்த உறுப்பில், கூறு (2)ன் கீழ் உள்ள உட்கூறு (அ) மற்றும் (இ)ன் படி, ஆளுநரின் பணிகளை அவர் விருப்பப்படி செய்யலாம்.

*சட்டமன்ற அவைகளில் உரையாற்றவும், அவற்றிற்குச் செய்தியுரை அனுப்பவும் ஆளுநருக்குள்ள உரிமை*

*154. (1)* ஆளுநர், சட்டமன்றப் பேரவையில் அல்லது சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தில், அந்த மாநிலச் சட்டமன்ற ஈரவைகளில் ஒன்றில் அல்லது ஈரவைகளின் ஒருங்கமர் கூட்டத்தில் உரையாற்றலாம்; மேலும், அதற்காக உறுப்பினர்களின் வருகையை வேண்டுறுத்தலாம்.

*(2)* ஆளுநர், சட்டமன்றத்தில் அப்போது ஓர்வி லுள்ள, ஒரு சட்ட முன்வடிவைப் பொறுத்தோ பிற எதனையும் பொறுத்தோ மாநிலச் சட்டமன்றத்தின் அவைக்கு அல்லது அவைகளுக்குச் செய்தியுரை அனுப்பலாம். அவ்வாறான செய்தியுரையினைப் பெற்றுள்ள அவை, அச்செய்தியுரையில் ஓர்வுக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென வேண்டுறுத்தப்பட்ட பொருட்பாட்டை, ஒல்லும் விரைவுடன், ஓர்வு செய்தல் வேண்டும்.

*ஒவ்வொரு அவையும் கூடும்பொழுது ஆளுநரின் சிறப்புரை மற்றும் சட்டசபையின் உரையில்குறித்த பொருட்பாடுகள் பற்றிய விவாதம்*

[1]*155. (1)* ஒவ்வொரு கூட்டதொடரின் தொடக்கத்திலும் சட்டசபையில் ஆளுநர் உரை நிகழ்த்துவார். மேலவை உள்ள ஒரு மாநிலத்தில் ஈரவைகளின் ஒருங்கமர் கூட்டத்தில், ஆளுநர் அதனைக் கூட்டியதற்கான காரணங்களைச் சட்டமன்றத்திற்குத் தெரிவிப்பார்.

*(2)* அவ்வுரையில் சுட்டப்பட்ட பொருட்பாடுகளைப் பற்றி, மேலும் மற்ற அலுவல்களை விட இதனை முன்கூட்டியே விவாதம் செய்வதற்கு, நேரம் ஒதுக்குவதற்காக ஏதாவது ஓர் அவையில் ஒவ்வொன்றின் நெறிமுறையை ஒழுங்குறுத்தும் விதிகளின்வழி, வகை செய்தல் வேண்டும்.

---

1. பிரிட்டனின் நாடாளுமன்ற வழக்கில் உள்ளதுபோல, நமது அரசமைப்பிலும் பயனுள்ளதாகும் என இந்தக் கூறினைக் குழு சேர்த்துள்ளது.

*சட்டமன்ற அவைகள் தொடர்பாக, அமைச்சர்களுக்கும் தலைமை வழக்குரைஞருக்கும் உள்ள உரிமைகள்*

156. மாநிலத்து அமைச்சர் ஒவ்வொருவரும், அந்த மாநிலத் தலைமை வழக்குரைஞரும், அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையில் அல்லது சட்ட மன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தில், ஈரவைகளிலும் மற்றும் இரு அவைகள் ஒன்றாக அமரும் பொழுதும் உரையாற்றவும் பிற வகையில் அதன் நடவடிக்கைகளில் பங்கு கொள்ளவும் தாம் உறுப்பினராகப் பெயர் குறிக்கப்பெறும் சட்டமன்றக் குழு எதிலும் உரையாற்றவும் பிற வகையில் அதன் நடவடிக்கைகளில் பங்கு கொள்ளவும் உரிமை உடையவர் ஆவர். ஆனால், இந்த உறுப்பின் பயன் திறனை வைத்து வாக்களிக்கும் உரிமை கொண்டவர் ஆகார்.

## மாநிலச் சட்டமன்ற பதவியாளர்கள்

*மாநிலச் சட்டமன்றப் பதவியாளர்கள் சட்டமன்றப்பேரவைத் தலைவரும் துணைத் தலைவரும்*

157. மாநிலச் சட்டமன்றப் பேரவை ஒவ்வொன்றும், அந்த அவையின் உறுப்பினர்கள் இருவரை முறையே அதன் தலைவராகவும், துணைத் தலைவராகவும் கூடிய விரைவில் தேர்ந்தெடுத்தல் வேண்டும்; மேலும் பேரவைத் தலைவர் அல்லது துணைத் தலைவர் பதவி காலியாகுந்தொறும் மற்றோர் உறுப்பினரைப் பேரவைத் தலைவராக அல்லது, நேர்வுக்கேற்ப, துணைத் தலைவராக அந்த அவை தெரிந்தெடுத்தல் வேண்டும்.

*பேரவைத்தலைவர், துணைத் தலைவர் ஆகியோர் பதவியை விட்டகலுதலும் பதவி விலகுதலும் பதவியிலிருந்து அகற்றப்படுதலும்*

158. சட்டசபையின் பேரவைத் தலைவராகவோ துணைத் தலைவராகவோ பதவி வகிக்கும் ஓர் உறுப்பினர் -

(அ) பேரவையின் உறுப்பினராக இருப்பது அற்றுப் போய்விடின், அவர் தம் பதவியை விட்டகலுதல் வேண்டும்.

(ஆ) அந்த உறுப்பினர் பேரவைத் தலைவராக இருப்பின், துணைத் தலைவருக்கும், அந்த உறுப்பினர் துணைத் தலைவராக இருப்பின் பேரவைத் தலைவ

ருக்கும், எச்சமயத்திலும், தம் கையொப்பமிட்டு எழுத்து வழித் தெரிவித்து, தம் பதவியை விட்டு விலகிக் கொள்ளலாம். மேலும்,

(இ) சட்டசபையிலுள்ள பெரும்பான்மையான உறுப்பினர்கள், வேலை செய்ய தகுதியற்றவர் அல்லது அவர்மீது நம்பிக்கை இல்லை என்ற தீர்மானத்தை கொண்டு வந்தால் அவர் பதவியிலிருந்து நீக்கப்படுவார்

வரம்புரையாக: இந்த உறுப்பு, உட்கூறு (இ)யைப் பொறுத்த தீர்மானம் எதுவும், அத்தீர்மானத்தை மொழியவிருக்கும் கருத்தினைத் தெரிவித்துப் பதினான்கு நாட்களுக்குக் குறையாமல் முன்னறிவிப்புக் கொடுத்திருந்தாலன்றி, முன்மொழியப் படுதல் ஆகாது.

மேலும் வரம்புரையாக: பேரவை கலைக்கப் படுந்தோறும், அவ்வாறு கலைக்கப்பட்டதன் பின்பு, அடுத்த பேரவையின் முதல் கூட்டம் தொடங்குவதை ஒட்டி முன்பு வரையில், பேரவைத் தலைவர் தம் பதவியை விட்டகல வேண்டியதில்லை.

பேரவைத்தலைவரின் பதவிக் குற்ற கடமைகளைப் புரிந்து வரவோ தலைவராகச் செயலுறவோ துணைத் தலைவருக்கு அல்லது பிற உறுப்பினருக்கு உள்ள அதிகாரம்

159.(1) பேரவைத் தலைவரின் பதவி காலியாக இருக்குங்கால், அப்பதவிக் குற்ற கடமைகளைப் பேரவைத் துணைத்தலைவரும், துணைத் தலைவர் பதவியும் காலியாக இருப்பின், ஆளுநர் அதன் பொருட்டு அமர்த்தும் பேரவையின் உறுப்பினர் எவரும் கடமைகளைப் புரிந்து வருதல் வேண்டும்.

(2) பேரவையின் அமர்வு எதிலும், பேரவைத் தலைவர் அவையில் இல்லாதபோது துணைத் தலைவரும், அவரும் இல்லாதிருப்பின், பேரவையின் நெறிமுறை விதிகளின்படி தீர்மானிக்கப்பெறும் உறுப்பினர் எவரும், அத்தகையவரும் இல்லாதிருப்பின், அந்தப் பேரவையினால் தீர்மானிக்கப்பெறும் பிற உறுப்பினர் எவரும் பேரவைத் தலைவராகச் செயலுறுதல் வேண்டும்.

சட்டமன்ற மேலவைத் தலைவரும் துணைத் தலைவரும்

160. சட்டமன்ற மேலவை உள்ள மாநிலம் ஒவ்வொன்றின் மேலவையும், அந்த அவையின் உறுப்பினர்கள் இருவரை முறையே அதன் தலைவராகவும், துணைத் தலைவராகவும், கூடிய விரைவில் தெரிந்தெடுத்தல் வேண்டும்; மேலும், மேலவைத் தலைவர் அல்லது துணைத்தலைவர் பதவி காலியாகுந்தோறும், மற்றோர் உறுப்பினரை, அதன் தலைவராக அல்லது, நேர்வுக்கேற்பத் துணைத்தலைவராக அந்த மேலவை தெரிந்தெடுத்தல் வேண்டும்.

பேரவைத் தலைவர், துணைத்தலைவர் ஆகியோர் பதவியை விட்டகலுதலும் பதவி விலகுதலும் பதவியிலிருந்து அகற்றப்படுதலும்.

161. மேலவைத் தலைவராகவோ, துணைத் தலைவராகவோ பதவி வகிக்கும் ஓர் உறுப்பினர்-

(அ) மேலவையின் உறுப்பினராக இருப்பது அற்றுப் போய்விடின், அவர் தம் பதவியை விட்டகலுதல் வேண்டும்.

(ஆ) அந்த உறுப்பினர் மேலவைத் தலைவராக இருப்பின், துணைத் தலைவருக்கும், அந்த உறுப்பினர் துணைத் தலைவராக இருப்பின் மேலவைத் தலைவருக்கும், எச்சமயத்திலும், தம் கையொப்பமிட்டு எழுத்து வழித் தெரிவித்துத் தம் பதவியை விட்டு விலகிக் கொள்ளலாம்; மற்றும்

(இ) அவர் திறமை அற்றவர் அல்லது நம்பிக்கைக்குப் பாத்திரமானவர் அல்லர் என்று, மேலவையின் அப்போதைய அனைத்து உறுப்பினர்களில் பெரும்பான்மையினர் அந்த அவையில் நிறைவேற்றும் தீர்மானம் ஒன்றினால் அவருடைய பதவியிலிருந்து அகற்றப்படலாம்.

வரம்புரையாக: இந்த உறுப்பு கூறு (இ)யைப் பொறுத்த தீர்மானம் எதுவும், அத்தீர்மானத்தை முன்மொழியவிருக்கும் கருத்தினைத் தெரிவித்துப் பதினான்கு நாட்களுக்குக் குறையாமல் முன்னறிவிப்புக் கொடுத்திருந்தாலன்றி, முன்மொழியப்படுதல் ஆகாது.

மேலவைத் தலைவரின் பதவிக்குற்ற கடமைகளைப் புரிந்து வரவோ தலைவராகச் செயலுறவோ துணைத் தலைவருக்குஅல்லது பிற உறுப்பினருக்கு உள்ள அதிகாரம்

*162. (1)* மேலவைத் தலைவரின் பதவி காலியாக இருக்குங்கால், அப்பதவிக்குற்ற கடமைகளைப் பேரவைத் துணைத்தலைவரும், துணைத் தலைவர் பதவியும் காலியாக இருப்பின், ஆளுநர் அதன் பொருட்டு அமர்த்தும் பேரவையின் உறுப்பினர் எவரும் கடமைகளைப் புரிந்து வருதல் வேண்டும்.

(2) மேலவையின் அமர்வு எதிலும், மேலவைத் தலைவர் அவையில் இல்லாதபொழுது துணைத் தலைவரும், அவரும் இல்லாதிருப்பின், மேலவையின் நெறிமுறை விதிகளின்படி தீர்மானிக்கப்பெறும் உறுப்பினர் எவரும், அத்தகையவரும் இல்லாதிருப்பின், அந்த மேலவையினால் தீர்மானிக்கப்பெறும் பிற உறுப்பினர் எவரும் மேலவைத் தலைவராகச் செயலுறுதல் வேண்டும்.

பேரவைத்தலைவர், துணைத் தலைவர், மேலவைத் தலைவர், துணைத் தலைவர்ஆகியோரின் வரையூதியங்களும் படித் தொகைகளும்.

*163.* சட்டமன்றப் பேரவைத் தலைவர், துணைத் தலைவர் சட்டமன்ற மேலவைத் தலைவர், துணைத் தலைவர் ஆகியோருக்கு முறையே மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் நிருணயிக்கும் வரையூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்படும்; அவ்வாறு அதன் பொருட்டு வகை செய்யப்படும் வரையில், இரண்டாம் பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரையூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்பட்டு வரும்.

## அலுவல் நடத்துமுறை

சட்டமன்ற அவைகளில் வாக்களித்தல், காலியிடங்கள் இருந்தபோதிலும் செயலுறுவதற்கு அவைகளுக்குள்ள அதிகாரம் மற்றும் குறைவெண்.

*164. (1)* இந்த அரசமைப்பில் பிறவாறு வகை செய்யப்பட்டிருப்பது நீங்கலாக, ஒரு மாநிலச் சட்டமன்றம் அல்லது இரு அவைகளும் சேர்ந்து அமரும் அவையில் எழும் வினாக்கள் அனைத்தும், பேரவைத் தலைவர் அல்லது மேலவைத் தலைவர் அல்லது அத்தகையவராகச் செயலுறுகின்றவர் ஆகியோரைத் தவிர்த்து, வந்திருந்து வாக்களிக்கும் ஏனைய உறுப்பினர்களின் பெரும்பான்மை வாக்குகளால் தீர்மானிக்கப்படுதல் வேண்டும்.

பேரவைத் தலைவரோ மேலவைத் தலைவரோ அல்லது அத்தகையவராகச் செயலுறுகின்றவரோ முதற்கண் வாக்களித்தல் ஆகாது. ஆனால், வாக்குகள் சமமாக இருக்கும் நேர்வில், அவருக்கு உள்ள ஓர் அறுதி செய் வாக்கினை அவர் அளித்தல் வேண்டும்.

(2) ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் ஓர் அவையின் உறுப்பினர் பதவியில் காலியிடம் எதுவும் இருந்த போதிலும், அந்த அவை செயலுறுவதற்கு அதிகாரம் உடையது ஆகும்; மேலும், சட்டமன்ற நடவடிக்கைகளின்போது அவையில் அமர்ந்திருக்கவோ வாக்களிக்கவோ பிறவாறாகப் பங்கு கொள்ளவோ உரிமை கொண்டிராத எவரும் அவ்வாறு செய்தார் எனப் பின்பு தெரியவந்த போதிலும், அந்நடவடிக்கைகள் செல்லுந் தன்மையுடையன ஆகும்.

(3) ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் அல்லது சட்டமன்ற மேலவையின் கூட்டம் நடைபெறும்போது, எச்சமயத்திலேனும், குறைவெண் இல்லாதிருப்பின், அந்த அவையை ஒத்திவைப்பதோ, குறைவெண் அமைவுறுகிற வரையில் அந்தக் கூட்டத்தைத் தற்காலிகமாக நிறுத்திவைப்பதோ பேரவைத் தலைவரின் அல்லது மேலவைத் தலைவரின் அல்லது அத்தகையவராகச் செயலுறுகின்றவரின் கடமை ஆகும்.

குறைவெண் என்பது பத்து உறுப்பினர்கள் அல்லது அவையின் மொத்த உறுப்பினர்களில் ஆறில் ஒரு பங்கு ஆகும். இதில் எஃது அதிகமோ அதுவே குறைவெண் ஆகும்.

## உறுப்பினர்களின் தகுதியற்றத் தன்மை

*உறுப்பினர்கள் அறிவிப்பு செய்தல்*

165. மூன்றாவது பட்டியலில் கூறியுள்ளபடி, மாநிலச் சட்டசபை அல்லது மாநில மேலவை உறுப்பினராக அமருவதற்கு முன்னால், ஆளுநர் அல்லது அவரால் நியமிக்கப்பட்டவர் முன், சொன்முறையில் உள்ளபடி அறிவிப்புச் செய்தல் வேண்டும்.

பதவியிடங்களை விட்டகலுதல்.

166. (1) எவர் ஒருவரும் ஒரு மாநிலச் சட்ட மன்றத்தின் ஈரவைகளிலும் உறுப்பினராக இருத்தல் ஆகாது. ஒருவர் ஈரவைகளுக்கும் உறுப்பினராகத் தெரிந் தெடுக்கப் பெற்றிருப்பாராயின், அவர் அவ்விரு அவை களில் ஏதாவது ஒன்றில் தம் பதவியிடத்தை விட்டக லுவதற்கு மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் வகை செய்ய வேண்டும்.

(2) எவர் ஒருவரும் நாடாளுமன்றம் அல்லது மாநிலச் சட்டசபை இரண்டிலும் உறுப்பினராக இருத் தல் கூடாது. அப்படி ஒருவர் நாடாளுமன்றம் அல்லது மாநிலச் சட்டசபையில் உறுப்பினராகத் தேர்வு செய்யப் பட்டிருந்தால், மாநில ஆளுநர் விதிகளின்படி குறித்த கால அளவு முடிந்தவுடன் அவருடைய இடம் காலி யாகும். குறித்த காலஅளவு முடிவதற்கு முன் நாடாளு மன்ற உறுப்பினர் பதவியை ராஜிநாமா செய்தால் சட்ட சபையின் உறுப்பினராக இருப்பார்.

(3) ஒரு மாநிலச் சட்டமன்ற அவை ஒன்றன் உறுப்பினர் ஒருவர் -

(அ) தொடர்ந்து வரும் உறுப்பு, கூறு (1)ன்படி குறிப்பிடப்பட்டுள்ள தகுதிக்கேடுகளில் எதற்கேனும் உள்ளாகிவிடுவாராயின், அல்லது

(ஆ) நேர்வுக்கேற்ப, பேரவைத் தலைவருக்கோ அல்லது மேலவைத் தலைவருக்கோ தம் கையொப்பமிட்டு எழுத்துவழிப் பதவி விலகினால்

அதன்மேல் அவருடைய பதவியிடம் காலியாகிவிடும்.

(4) மாநிலச் சட்டசபையின் உறுப்பினர், அத னுடைய அனுமதி பெறாமல் அறுபது நாட்களுக்கு எல்லாக் கூட்டங்களுக்கும் வராமல் இருப்பாரானால், அவை அவருடைய இடம் காலியானதாக அறிவிக்கும்.

வரம்புரையாக: அறுபது நாட்களைக் கணக்கிடும் பொழுது, அந்தக் கால அளவில் தொடர்ந்து நான்கு நாட்களுக்கு மேல் அவை ஒத்திப் போடப்பட்டு அல்லது தள்ளிப் போடப்பட்டிருந்தாலோ அதை கணக்கில் எடுத்துக் கொள்ளக் கூடாது.

உறுப்பினர் பதவித் தகுதிக் கேடுகள்

167. ஒருவர் -

(அ) முதல் பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ளபடி, எந்த ஊதியப் பதவியை வகிப்பவர் உறுப்பினராயிருப்பதற்குத் தகுதிக் கேடு உறுவதில்லை என்று மாநிலச் சட்ட மன்றம் சட்டத்தினால் விளம்புகிறதோ அந்தப் பதவி அல்லாத பிற ஊதியப் பதவி எதனையும் இந்திய அரசாங்கத்தின் கீழோ அல்லது எந்த மாநிலம் ஒன்றன் அரசாங்கத்தின் கீழோ வகிப்பவராயின்;

(ஆ) மனநலம் குன்றியவராக இருந்து, அத்தகையவரெனத் தகுதிறமுள்ள நீதிமன்றம் ஒன்றினால் விளம்பப்பட்டிருப்பாராயின்;

(இ) விடுதலை பெறாத நொடிப்பு நிலையராக இருப்பாராயின்;

[1](ஈ) ஓர் அயல்நாட்டின் குடியுரிமையினைத் தம் விருப்பமாகப் பெற்றிருப்பாராயின் அல்லது அயல் நாட்டுக் குடியுரிமை அல்லது அயல்நாட்டு குடியுரிமைக்கான உரிமைகள் அல்லது சிறப்புரிமைகளைப் பெற்றிருப்பவராயின்;

(உ) மாநிலச் சட்டசபையினால் இயற்றப்பட்ட சட்டத்தின் வாயிலாக உறுப்பினராக இருப்பதற்குத் தகுதிக் கேடுற்றவராக இருப்பாராயின்;

1. ஆஸ்திரேலியா அரசமைப்புச் சட்டம் பிரிவு 44 (1)ன் வகையங்களுக்கு உட்பட்டு இந்த உட்கூறினைக் குழு சேர்த்துள்ளது.

அவர் ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் அல்லது சட்டமன்ற மேலவையின் உறுப்பினராகத் தெரிந்தெடுக்கப் பெறுவதற்கும் உறுப்பினராக இருந்து வருவதற்கும் தகுதிக் கேடுற்றவர் ஆவார்.

(2) தற்சமயம் முதலாம் பட்டியலில் குறிப்பிட்டுள்ளபடி, இந்த உறுப்பினைப் பொறுத்தவரை, ஒருவர் இந்திய அரசாங்கம் அல்லது மாநிலம் ஒன்றின் அமைச்சராயிருக்கும் காரணத்தினால் மட்டுமே, அவர் இந்திய அரசாங்கம் அல்லது மாநில அரசாங்கத்தின் கீழ் ஊதியப் பதவி ஒன்றை வகிப்பவராகக் கொள்ளப் பெறுதல் ஆகாது.

(அ) தற்சமயம், முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிட்டுள்ளது போல இந்தியாவின் அமைச்சர் அல்லது எந்த மாநில அமைச்சர்; அல்லது

(ஆ) தற்சமயம், முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிட்டுள்ளது போல, எந்த மாநில அமைச்சராகவும், அந்த மாநிலச் சட்டசபைக்கு உத்திரவாதமுள்ளவராக இருப்பது அல்லது நேர்வுக்கேற்ப, எந்த மாநிலத்தில் இரண்டு அவைகள் இருக்கின்றதோ அங்கு மாநிலச் சட்டசபைக்கும், அந்தச் சட்டசபையில் நான்கிற்கு மூன்று பங்குப் பேர் குறையாமல் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாயிருத்தல் வேண்டும்.

உறுப்பு 165-ன்படி, உறுதிமொழி ஏற்பதற்கு முன்போ, தகுதியற்றவராக அல்லது தகுதிக் கேடுற்றவராக இருக்கும்போதோ அவையில் அமர்ந்தாலும் வாக்களித்தாலும் அதற்குற்ற தண்டம்.

168. ஒருவர் 165-ம் உறுப்பின் வேண்டுறுத்தங்களுக்கேற்ப நடப்பதற்கு முன்பு அல்லது ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் அல்லது சட்டமன்ற மேலவையின் உறுப்பினர் பதவிக்குத் தாம் தகுதியற்றவராகவோ, தகுதிக் கேடுற்றவராகவோ அந்த மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் ஒன்றின் வகையங்களால் தாம் தடை செய்யப்பட்டிருப்பதாகவோ இருப்பதை அறிந்திருந்தும் அவர் அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவையில் அல்லது சட்டமன்ற மேலவையில் உறுப்பினராக அமர்வாராயின் அல்லது வாக்களிப்பாராயின், அவர் அவ்வாறு அமரும் அல்லது

வாக்களிக்கும் நாள் ஒவ்வொன்றுக்கும் ஐந்நூறு ரூபாய் வீதம் தண்டத்திற்கு உள்ளாவார்; அது மாநிலத்திற் குரிய கடன் எனக் கருதி வசூல் செய்யப்படும்.

## உறுப்பினர்களின் மதிப்புரிமைகள் மற்றும் காப்புரிமைகள்

உறுப்பினரின் மதிப்புரிமைகள் முதலியன.

169.(1) சட்டசபையின் ஒழுங்குறுத்துகின்ற விதிகள் மற்றும் நிலையாணைகள் ஆகியவற்றிற்கு உட்பட்டு, ஒவ்வொரு மாநிலச் சட்டமன்றத்திலும் பேச்சுச் சுதந்திரம் இருத்தல் வேண்டும்.

(2) ஒரு மாநிலச் சட்டமன்ற உறுப்பினர் எவரும், சட்டமன்றத்தில் அல்லது அதன் குழு எதிலும் அவர் கூறிய எதனைப் பொறுத்தும் அல்லது அளித்த வாக்கு எதனைப் பொறுத்தும் நீதிமன்ற நடவடிக்கை எதற்கும் உள்ளாக மாட்டார்; அவ்வாறே, எவரும் அத்தகைய சட்டமன்ற அவை ஒன்றால் அல்லது அதன் அதிகாரத்தின் கீழ் அறிக்கை, வரையேடு, வாக்களிப்புகள் அல்லது நடவடிக்கைகள் பற்றிச் செய்யப்படும் வெளியீடு பொறுத்தும் அத்தகைய நடவடிக்கைக்கு உள்ளாக மாட்டார்.

(3) பிற வகைகளில், மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களின் மதிப்புரிமைகள் மற்றும் காப்புரிமைகள் சட்டசபையின் சட்டத்தினால் அவ்வப்போது வரையறை செய்யப்படும். அவ்வாறு வரையறை செய்யப்படும் வரையில், இந்த அரசமைப்பு தொடக்கத்தில் பிரிட்டன் பாராளுமன்றத்தின் காமன்ஸ் அவை உறுப்பினர்கள் அனுபவித்தபடியே இருக்கும்.

(4) இந்த உறுப்பின், கூறு (1), (2) மற்றும் (3) ஆகியவற்றின் வகையங்களின்படி, மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களுக்குப் பொருந்துறுவன போன்றே, அச் சட்டமன்றத்தின் அவை ஒன்றில் அல்லது அதன் குழு ஒன்றில் பேசுவதற்கு மற்றும் பிறவாறு அதன் நடவடிக்கைகளில் பங்கு கொள்வதற்கு இந்த அரசமைப்

பின்படி உரிமை உடையவர்களுக்கும் பொருந்துறு வன ஆகும்.

உறுப்பினர்களின் வரைவூதியங்களும் படித் தொகைகளும்.

170. ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவை, சட்ட மன்ற மேலவை ஆகியவற்றின் உறுப்பினர்கள், அந்த மாநிலச் சட்டமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் தீர்மானிக்கும் வரைவூதியங்களையும் படித்தொகை களையும் பெறுவதற்கு உரிமை கொண்டவர்கள் ஆவர்; அதன் பொருட்டு அவ்வாறு வகை செய்யப்படும் வரை யில், இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு, மாநிலத்தின் பிராந்திய சட்டமன்றப் பேரவை உறுப்பினர்களுக்குப் பொருந்துறுவனவாக இருந்த அதே வீதங்களிலும் அதே வரைக்கட்டுகளின்படியும், வரைவூதியங்களும் படித்தொகைகளும் பெறுவதற்கு அவர்கள் உரிமை கொண்டவர்கள் ஆவர்.

## சட்டமியற்றுவதற்கான நெறிமுறை

சட்ட முன்வடிவுகளை அறிமுகம் செய்தலும் நிறைவேற்றுதலும் பற்றிய வகையங்கள்.

171. (1) இந்த அரசமைப்பு உறுப்பு 173 மற்றும் 182ன் வகையங்களுக்கு உட்பட்டு, பணச் சட்ட முன் வடிவுகள் மற்றும் பிராந்திய சட்ட முன் வடிவுகள் எதுவும், சட்ட மேலவை உள்ள ஒரு மாநிலத்தின் சட்ட மன்ற ஈரவைகளில் எதிலும் முதலில் கொண்டு வரப் படலாம்.

(2) இந்த அரசமைப்பு உறுப்பு 172 மற்றும் 173ன் வகையங்களுக்கு உட்பட்டு, சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தின் சட்டமன்ற ஈரவைகளிலும் திருத்தம் ஏதும் இல்லாமல் அல்லது அந்த ஈரவை களும் ஏற்றுக்கொண்ட திருத்தங்களை மட்டும் கொண்டு, ஒரு சட்ட முன்வடிவை ஈரவைகளும் ஏற்றுக் கொண்டிருந்தாலன்றி, அஃது அந்த ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாக கொள்ளப்படுதல் ஆகாது.

(3) ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் ஓர்விலுள்ள ஒரு சட்ட முன்வடிவு, அச்சட்டமன்ற அவையின் அல்லது அவைகளின் கூட்டத்தொடர் இறுதி செய்யப் படுவதன் காரணத்தால் அற்றுப் போவதில்லை.

(4) சட்டமன்றப் பேரவையால் நிறைவேற்றப் படாத நிலையில், சட்டமன்ற மேலவையின் ஓர்வி லுள்ள ஒரு சட்ட முன்வடிவு, பேரவை கலைக்கப்படு மாயின் அற்றுப் போவதில்லை.

(5) ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையில் ஓர்விலுள்ள அல்லது சட்டமன்றப் பேரவையால் நிறை வேற்றப்பட்டிருந்து சட்டமன்ற மேலவையில் ஓர்வி லுள்ள ஒரு சட்ட முன்வடிவு, அப்பேரவை கலைக்கப் படுவதன் மேல் அற்றுப்போகும்.

மாநிலங்களில் எங்கு மேலவை இருக்கின்றதோ, அங்குச் சில விவகாரங்களில் இரு அவை களும் ஒருங்கு அமர்தல்.

172. (1) ஒரு சட்ட முன்வடிவு மாநிலச் சட்ட மன்றத்தால் நிறைவேற்றப்பட்டு, மேலவை இருந்தால் அங்கு அனுப்பப்பட்டு ஆறு மாதங்களுக்கு மேல் இரு அவைகளாலும் நிறைவேற்றப்படாமல் இருந்தால் அது காலக்கதியடைவதாகும். சட்டமன்றம் கலைக்கப்படா மல் இருந்தால் ஆளுநர் இரு அவைகளையும் ஒன்றாக அமர்ந்து சட்ட முன்வடிவின் மீது வாதிட்டு வாக் களிக்கக் கூறலாம்.

வரம்புரையாக: பணச் சட்ட முன்வடிவிற்கு இந்த கூறு பொருந்தாது.

(2) இந்த உறுப்பு, கூறு (1)ன்படி, ஆறுமாத கால அளவை கணக்கிடும்பொழுது, அந்த நேரத்தில் இரு அவைகளும் நான்கு நாளைக்கு மேல் தள்ளிவைத்து அல்லது ஒத்திப் போட்டிருந்தாலோ அதைக் கணக்கி லெடுத்துக் கொள்ளக்கூடாது.

(3) சட்ட முன்வடிவு உறுப்பின் வகையங் களுக்கு உட்பட்டு, இரு அவைகளும் கூட்டமர்விற் காக அழைக்கப்பட்டு, மாற்றங்கள் ஏதேனும் இருந் தால், அந்த கூட்டமர்வில் ஏற்றுக்கொள்ளப்பட்டு, இரு அவைகளிலும் உள்ள மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மையோர் வாக்களித்தால், இந்த அர சமைப்பின்படி இரு அவைகளாலும் நிறைவேற்றப் பட்டதாகக் கருதப்படும்.

வரம்புரையாக கூட்டமர்வில் -

(அ) சட்ட முன்வடிவு மாற்றங்களுடன் மேலவையில் நிறைவேற்றப்படாமல் சட்டச் சபைக்குத் திருப்பப்பட்டால், சட்ட முன்வடிவு ஏற்றுக்கொள்ளச் செல்லுதற்குக் காலதாமதமான மாற்றங்கள் தவிர, வேறு எந்த மாற்றங்களும் முன்மொழியக் கூடாது.

(ஆ) சட்ட முன்வடிவு நிறைவேற்றப்பட்டு மேலவைக்குத் திருப்பி அனுப்பப்பட்டால், மேலே சொன்ன மாற்றங்கள் மற்றும் இதற்குத் தொடர்பான மற்ற மாற்றங்களை அவைகள் ஏற்றுக்கொள்ளாவிடினும் அவற்றை முன்மொழியலாம்.

இந்தக் கூறின்படி, தலைமை அதிகாரி எந்த மாற்றங்கள் ஏற்றுக்கொள்ளப்படலாம் என்று கூறுகின்றாரோ அந்தத் தீர்ப்பு இறுதியானதாகும்.

பணச் சட்ட முன் வடிவுகள் பொறுத்த தனியுறு நெறி முறைகள்

[1]173. (1) பணச் சட்ட முன்வடிவு எதனையும் சட்டமன்ற மேலவையில் அறிமுகப்படுத்துதல் ஆகாது.

(2) பணச் சட்ட முன்வடிவு எதுவும் சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையினால் நிறைவேற்றப்பட்ட பின்பு, சட்டமன்ற மேலவைக்கு அதன் பரிந்துரைகளுக்காக அனுப்பப்படுதல் வேண்டும். சட்டமன்ற மேலவை, அந்தச் சட்ட முன்வடிவைப் பெற்ற தேதியிலிருந்து முப்பது நாள் கால அளவிற்குள் அந்தச் சட்ட முன்வடிவைச் சட்டமன்றப் பேரவைக்குத் தன் பரிந்துரைகளுடன் திருப்பியனுப்புதல் வேண்டும்; அதன் மேல், சட்டமன்றப்

1. இந்த அத்தியாயத்தில் ''பணச் சட்ட முன்வடிவு'' உறுப்பும் அதன் தொடர்பான மற்ற வகையங்களும், அரசமைப்பின் நிதி ஏற்பாட்டின் வல்லுநர் குழு, பரிந்துரைகளைச் செயல்படுத்துவதற்காகச் சேர்க்கப்பட்டது.

பேரவை, சட்டமன்ற மேலவையினால் செய்யப்பட்ட பரிந்துரைகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் ஏற்றுக் கொள்ளலாம் அல்லது ஏற்க மறுக்கலாம்.

(3) சட்டமன்ற மேலவையின் பரிந்துரைகளில் எதனையும் சட்டமன்றப் பேரவை ஏற்றுக்கொள்ளுமாயின், சட்டமன்ற மேலவையினால் பரிந்துரை செய்யப்பட்டுச் சட்டமன்றப் பேரவையினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட திருத்தங்களுடன் அந்தப் பணச் சட்ட முன்வடிவு ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

(4) சட்டமன்ற மேலவையின் பரிந்துரைகளில் எதனையும் சட்டமன்றப் பேரவை ஏற்றுக்கொள்ளாவிடின், அந்தப் பணச் சட்ட முன்வடிவு, சட்டமன்ற மேலவை பரிந்துரை செய்த திருத்தங்கள் எதுவுமின்றிச் சட்டமன்றப் பேரவை நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

(5) சட்டமன்றப் பேரவையினால் நிறைவேற்றப் பட்டுச் சட்டமன்ற மேலவைக்கு அதன் பரிந்துரைகளுக்காக அனுப்பப்பட்ட ஒரு பணச் சட்ட முன்வடிவு, மேற்சொன்ன முப்பது நாள் கால அளவிற்குள் சட்டமன்றப் பேரவைக்குத் திருப்பியனுப்பப்படாவிடின், அந்தக் கால அளவு கழிவுற்றதும் அச்சட்ட முன்வடிவு, சட்டமன்றப் பேரவையினால் நிறைவேற்றப்பட்ட வடிவத்திலேயே ஈரவைகளாலும் நிறைவேற்றப்பட்டதாகக் கொள்ளப்படும்.

"பணச் சட்ட முன்வடிவுகள்" என்பதன் பொருள் வரையறை

174. (1) இந்த அத்தியாயத்தைப் பொறுத்த வரை, ஒரு சட்ட முன்வடிவு பின்வரும் பொருட்பாடுகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் பற்றிய வகையங்களை மட்டுமே கொண்டிருப்பதாயின், அஃது ஒரு பணச் சட்ட முன்வடிவு எனக் கொள்ளப்படும்.

(அ) வரி எதனையும் விதித்தல், நீக்குதல், குறைத்தல், மாற்றுதல் அல்லது ஒழுங்குறுத்துதல்;

(ஆ) மாநில அரசால் பணம் கடன் வாங்கப்படுவதை அல்லது பொறுப்புறுதி எதுவும் அளிக்கப்படுவதை ஒழுங்குறுத்துதல் அல்லது மாநில அரசு பொறுப்பேற்றுள்ள அல்லது பொறுப்பேற்கவுள்ள நிதி பற்றிய கடமைப் பாடுகள் எவற்றையும் பொறுத்த சட்டத்தைத் திருத்தம் செய்தல்;

(இ) அளிப்பு;

(ஈ) மாநில வருவாயினைச் சொந்தமாக்கிக் கொள்ளுதல்;

(உ) செலவினம் எதனையும் மாநில வருவாயின் மீது சார்த்தப்பட்ட செலவினம் என விளம்புதல் அல்லது அத்தகைய செலவினத் தொகை எதனையும் கூடுதலாக்குதல்;

(ஊ) மாநில வருவாய்க் கணக்கின் பொருட்டுப் பணம் பெறுதல் அல்லது அத்தகைய பணத்தைக் கையடைவு செய்தல் அல்லது அந்தப் பணத்தினை அளித்தல் அல்லது மாநிலக் கணக்கினைத் தணிக்கை செய்தல்; அல்லது

(எ) மேற்கண்ட (அ) முதல் (ஊ) வரையுள்ள கூறுகளில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளில் எதனையும் சார்ந்த பொருட்பாடு,

(2) ஒரு சட்ட முன் வடிவு, அபராதங்களை அல்லது பிற தண்டங்களை விதிப்பதற்கு அல்லது உரிமங்களுக்கான கட்டணங்களையோ செய்யப்பட்ட பணிகளுக்கான கட்டணங்களையோ கோருவதற்கும் செலுத்துவதற்கும் வகை செய்கிறது என்ற காரணத்தால்

மட்டுமோ, உள்ளாட்சி அதிகார அமைப்பு அல்லது குழுமம் ஒன்று உள்ளாட்சி நோக்கங்களுக்காக வரி எதனையும் விதிப்பதற்கு, நீக்குவதற்கு, குறைப்பதற்கு, மாற்றுவதற்கு அல்லது ஒழுங்குறுத்துவதற்கு வகை செய்கிறது என்ற காரணத்தாலோ அதை ஒரு பணச் சட்ட முன்வடிவு எனக் கொள்ளுதல் ஆகாது.

(3) சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலச் சட்டமன்றத்தில் அறிமுகப்படுத்தப்படும் ஒரு சட்ட முன்வடிவு, பணச்சட்ட முன்வடிவா இல்லையா என்னும் பிரச்சினை ஒன்று எழுமாயின், அதன்மேல் சட்டமன்றப் பேரவைத் தலைவர் அளிக்கும் முடிவே இறுதியானது ஆகும்.

(4) ஒவ்வொரு பணச் சட்ட முன்வடிவும் முந்தைய உறுப்பின்படி சட்டமன்ற மேலவைக்கு அனுப்பும்போது, அதற்குப் பின் தொடரும் உறுப்பின் படி ஏற்பிசைவுக்காக, ஆளுநரிடம் முன்னிடப்படும் போதும், அஃது ஒரு பணச் சட்ட முன்வடிவு எனச் சட்டமன்றப் பேரவைத் தலைவர் கையொப்பமிட்ட உறுதியுரை ஒன்று மேற்குறிப்பாக அதன் மீது எழுதப் படுதல் வேண்டும்.

சட்டமுன்வடிவுகளுக்கு ஏற்பிசைவு.

175. ஒரு சட்ட முன்வடிவு, ஒரு மாநிலச் சட்ட மன்றப் பேரவையினால் நிறைவேற்றப்பட்டதன் மேல் அல்லது சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தில் அந்த மாநிலச் சட்டமன்ற ஈரவைகளினாலும் நிறை வேற்றப்பட்டதன் மேல், அஃது ஆளுநரிடம் முன் னிடப்படுதல் வேண்டும்; ஆளுநர், தாம் அச்சட்ட முன்வடிவுக்கு ஏற்பிசைவு அளிப்பதாகவோ அதற்கு ஏற்பிசைவு அளிக்க மறுப்பதாகவோ அச்சட்ட முன் வடிவைக் குடியரசுத் தலைவரின் ஓர்வுக்காக நிறுத்தி வைப்பதாகவோ விளம்புவார்.

வரம்புரையாக: ஓர் அவை மட்டும் இருக்கும் சட்டமன்றத்தில், சட்ட முன்வடிவு அந்த அவையில் நிறைவேற்றப்பட்டு, ஆளுநர் ஏற்பிசைவுக்காக முன் னிடப்படும்பொழுது, தன் விருப்பப்படி அதில் குறித்

துரைக்கப்பட்ட வகையகங்கள் எவற்றையுமோ அந்த அவை அல்லது அவைகள் மறு ஆய்வு செய்யுமாறும், குறிப்பாகத் தாம் பரிந்துரைக்கும் திருத்தங்கள் எவற்றையும் அறிமுகப்படுத்துவது விரும்பத்தகுந்ததா என்பதைப் பற்றிக் கருதுமாறும் கேட்டுக் கொள்கின்ற செய்தியுரையுடன் அச்சட்ட முன்வடிவை அந்த அவைக்குத் திருப்பி அனுப்பலாம்; அவ்வாறு ஒரு சட்ட முன்வடிவு திருப்பி அனுப்பப்பட்டிருக்கும்போது அந்த அவை அதன்படியே அச்சட்ட முன்வடிவை மறுஆய்வு செய்தல் வேண்டும்; மேலும் அந்த அவை அச்சட்ட முன்வடிவு திருத்தத்துடனோ அல்லது திருத்தமின்றியோ மீண்டும் நிறைவேற்றப்பட்டு ஆளுநரிடம் ஏற்பிசைவுக்காக முன்னிடப்படுமாயின், ஆளுநர் அதற்கு ஏற்பிசைவு அளிக்க மறுத்தல் ஆகாது.

ஓர்வுக்கென நிறுத்தி வைக்கப்படும்சட்ட முன்வடிவுகள்

*176.* ஒரு சட்ட முன்வடிவு குடியரசுத் தலைவர் ஓர்வுக்கென ஆளுநர் ஒருவரால் நிறுத்தி வைக்கப்படும்பொழுது, குடியரசுத் தலைவர், தாம் அச்சட்ட முன்வடிவுக்கு ஏற்பிசைவு அளிப்பதாகவோ அதற்கு ஏற்பிசைவு அளிக்க மறுப்பதாகவோ விளம்புதல் வேண்டும்.

வரம்புரையாக: அச்சட்ட முன்வடிவு ஒரு பணச் சட்ட முன்வடிவாக இல்லாதிருப்பின், குடியரசுத் தலைவர் முந்தைய உறுப்பில் குறிப்பிட்டுள்ளபடி செய்தியுரையுடன் அச்சட்ட முன்வடிவை மாநிலச் சட்டமன்றத்தின் அவைக்கு அல்லது நேர்வுக்கேற்ப, அவைகளுக்குத் திருப்பியனுப்பும்படி ஆளுநருக்கு பணிப்புரை பிறப்பிக்கலாம்; அவ்வாறு ஒரு சட்ட முன்வடிவு திருப்பி அனுப்பப்பட்டிருக்கும்போது, அந்த அவை அல்லது அவைகள், அத்தகைய செய்தியுரையைப் பெற்ற தேதியிலிருந்து ஆறுமாத கால அளவிற்குள், அதற்கிணங்க அச்சட்ட முன்வடிவை மறுஆய்வு செய்தல் வேண்டும்; மேலும், அந்த அவையினால் அல்லது அவைகளினால் அச்சட்ட முன்வடிவு திருத்தத்துடனோ திருத்தமின்றியோ மீண்டும் நிறைவேற்றப்பட்டுக் குடியரசுத் தலைவரின் ஓர்வுக்கென மறுபடியும் முன்னிடப்படுதல் வேண்டும்.

ஆண்டு நிதி நிலை அறிக்கை

## நிதி பற்றிய பொருட்பாடுகளுக்குற்ற நெறிமுறை

177. (1) ஆளுநர் ஒவ்வொரு நிதியாண்டைப் பொறுத்தும், அந்த ஆண்டிற்கான மாநில வரவு செலவினங்கள் மதிப்பீட்டு விவர அறிக்கை ஒன்றை மாநிலச் சட்டமன்ற அவையின் அல்லது அவைகளின் முன்பு வைக்குமாறு செய்தல் வேண்டும். அரசமைப்பு இந்தப் பகுதியில் ''ஆண்டு நிதிநிலை அறிக்கை'' எனக் குறிப்பிடப்படும்.

(2) ஆண்டு நிதிநிலை அறிக்கையில் அடங்கியுள்ள செலவின மதிப்பீடுகளில் -

(அ) இந்த அரசமைப்பில் மாநில வருவாயின் மீது சார்த்தப்பட்ட செலவினம் என விவரிக்கப்பட்டுள்ள செலவினத்திற்குத் தேவைப்படும் பணத்தொகைகளைத் தனியாகவும்,

(ஆ) மாநில வருவாயிலிருந்து செலவு செய்யக் கருதியுள்ள பிற செலவினத்திற்குத் தேவைப்படும் பணத்தொகைகளைத் தனியாகவும் காட்டுதல் வேண்டும். அத்துடன், வருவாய்க் கணக்கு வகைச் செலவினத்தைப் பிறவகைச் செலவினத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டுதலும் வேண்டும்.

(3) பின்வரும் செலவினங்கள் மாநில வருவாயின் மீது சார்த்தப்பட்ட செலவினங்களாக இருத்தல் வேண்டும் -

(அ) ஆளுநரின் பதவி ஊதியங்கள், படித்தொகைகள் மற்றும் அவருடைய பதவித் தொடர்பான பிற செலவினங்கள்

(ஆ) சட்டமன்றப் பேரவைத் தலைவர் துணைத் தலைவர் மற்றும் சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலத்தைப் பொறுத்தவரை சட்டமன்ற மேலவைத் தலைவர், துணைத்

தலைவர் ஆகியோரின் பதவியூதியங்களும் படித்தொகைகளும்;

(இ) வட்டி, கடனடைப்பு நிதியச் செலவீடுகள், மீட்புச் செலவீடுகள் உள்ளடங்கலாக மாநிலத்தின் மீது பொறுப்படைவுள்ள உறுகடன் செலவீடுகள் மற்றும் பெறுகடன் எழுப்புதல், உறுகடன் அடைத்தல், மீட்டல் ஆகியவை தொடர்பான செலவினங்கள்;

(ஈ) உயர்நீதிமன்ற நீதிபதிகளின் வரைவூதியங்கள், படித்தொகைகள் பொறுத்த செலவினங்கள்;

(உ) நீதிமன்றம் அல்லது பொதுவர் தீர்ப்பாயம் ஒன்றன் தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது தீர்வம் எதன்படியும் செலுத்தித் தீர்ப்பதற்குத் தேவைப்படும் பணத்தொகைகள்;

(ஊ) இவ்வாறு சார்த்தப்பட வேண்டுமென இந்த அரசமைப்போ, சட்டத்தினால் மாநிலச் சட்டமன்றமோ விளம்புகிற பிற செலவினங்கள்.

மதிப்பீடுகள் பற்றிய சட்டமன்ற நெறிமுறை

178. (1) மாநில வருவாயின்மீது சார்த்தப்பட்ட செலவினங்கள் தொடர்பான மதிப்பீடுகளைச் சட்டமன்றப் பேரவையின் வாக்களிப்பிற்கு வைத்திடுதல் ஆகாது. ஆனால், சட்டமன்றத்தில் அந்த மதிப்பீடுகளில் எதனையும் பற்றி விவாதிப்பதை இந்தக் கூறிலுள்ள எதுவும் தடையூறு செய்வதாக பொருள் கொள்ளப்படுதல் ஆகாது.

(2) மேற்சொன்னவற்றில், பிற செலவினங்கள் தொடர்பான மதிப்பீடுகளை மானியக் கோரிக்கைகளாகச் சட்டமன்றத்தில் முன்வைத்தல் வேண்டும். மற்றும் கோரிக்கை எதற்கும் ஏற்பிசைவு அளிக்கவோ ஏற்பிசைவு அளிக்க மறுக்கவோ அக்கோரிக்கையில் குறித்துரைக்கப்பட்டுள்ள தொகையைக் குறைத்து

ஏற்பிசைவு அளிக்கவோ சட்டமன்றம் அதிகாரம் உடையது ஆகும்.

(3) மானியம் எதுவும், ஆளுநரின் பரிந்துரையின் மீதல்லாமல், கோரப்படுதல் ஆகாது.

பட்டியலில் அதிகாரம் அளிக்கப்பட்ட செலவினங்களை செல்லத் தக்கதாக்கல்.

179 (1) ஆளுநர் பட்டியலில் உள்ளவற்றைச் செல்லத் தக்கதாக்கல் -

(அ) கடைசி உறுப்புக்கு முந்தைய உறுப்பின் படி சட்டசபையினால் அளிக்கப்பட்ட மானியங்கள்;

(ஆ) முந்தைய அவை அல்லது அவைகளுக்கு முன்னால் வைக்கப்பட்ட தொகைக்கு மிகாமல், மாநில வருவாய் மீது சார்த்தப் படும் பல்வகையான செலவுகள்.

(2) செல்லத்தக்கதெனப்பட்ட பட்டியலைச் சட்டமன்றத்தில் தாக்கல் செய்யலாம். ஆனால் சட்ட சபையில் அதன்மீது விவாதமோ அல்லது வாக்களித் தலோ கூடாது.

(3) தொடர்ந்து வரும் இரண்டு உறுப்புகளின் வகையங்களுக்கு உட்பட்டு, செல்லத்தக்கதெனக் குறிப் பிடப்பட்ட பட்டியல் அல்லாமல், மாநில வருவா யிலிருந்து எந்தச் செலவினங்களுக்கும் அதிகாரமளிக் கப்பட்டதாகாது.

செலவினங்களின் கணக்கு விவரத்தின் பிற் சேர்க்கை.

180. ஒரு மாநிலத்தில் ஒரு நிதி ஆண்டில் செலவு செய்ய அதிகாரமளித்தது போக, வருவாயிலிருந்து மேலும் செலவு செய்ய வேண்டியிருப்பின், ஆளுநர், அவை அல்லது இரு அவைகளிலும் உத்தேசமான செலவுத் தொகையினைத் தாக்கல் செய்யச் சொல்ல வேண்டும். இதற்கு முந்தைய உறுப்பின் வகையங் களுக்கு என்ன விளைவு உண்டோ அதேபோலத் தாக்கல் செய்யப்பட்ட கணக்கு விவரம், செலவிற்கு உள்ள

தொடர்பு, வருடாந்திர நிதிக் கணக்கு மற்றும் செலவு ஒத்தத் தொடர்பு உடையதாக அமைந்திருக்கும்.

*மிகை மானியங்கள்.*

[1]181. ஒரு குறிப்பிட்ட நிதி ஆண்டில் மாநில வருவாயிலிருந்து செய்யப்படும் செலவு, ஏதாவது சேவைக்காக, அந்த ஆண்டில் சட்டசபை அனுமதித்ததை விட அதிகமாக இருந்தால் அதனைச் சட்டசபையில் தாக்கல் செய்ய வேண்டும். இந்த அரசமைப்பு உறுப்பு 178 மற்றும் 179 வகையங்களின் படி என்ன விளைவுகள் உண்டோ அதே விளைவு இந்த மானியத்திற்கும் உண்டு.

*நிதிச் சட்ட முன்வடிவுகள் பற்றியதனியுறு வகையகங்கள்.*

182. (1) இந்த அரசமைப்பு 174-ம் உறுப்பின் (1) ஆம் கூறின் (அ) முதல் (ஊ) வரையுள்ள இனங்களில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளில் எதற்கும் வகை செய்யும் சட்ட முன்வடிவு அல்லது திருத்தம் எதனையும், ஆளுநரின் பரிந்துரையின் மீதல்லாமல், அறிமுகப்படுத்தலோ கொண்டு வருதலோ ஆகாது; அவ்வாறு வகைசெய்யும் சட்ட முன்வடிவு எதனையும் ஒரு சட்ட மேலவையில் அறிமுகப்படுத்தலும் ஆகாது.

வரம்புரையாக: வரி எதனையும் குறைப்பதற்காக அல்லது நீக்குவதற்காக வகைசெய்யும் ஒரு திருத்தத்தைக் கொண்டு வருவதற்கு இந்தக் கூறின்படியான பரிந்துரை எதுவும் வேண்டுவதில்லை.

(2) சட்ட முன்வடிவு அல்லது திருத்தம் எதுவும், அபராதங்களை அல்லது பிற பணத் தண்டங்களை விதிப்பதற்கும் அல்லது உரிமங்களுக்கான கட்டணங்களையோ செய்யப்பட்ட பணிகளுக்கான கட்டணங்களையோ கோருவதற்கும் செலுத்துவதற்கும் அது வகை செய்கிறது என்ற காரணத்தால் மட்டுமோ உள்ளாட்சி அதிகார அமைப்பு அல்லது குழுமம் ஒன்று

1. அரசமைப்பு, நிதி வகையகங்களின் வல்லுநர் குழுப் பரிந்துரைகளைப் பின்பற்ற இந்த உறுப்புச் சேர்க்கப்பட்டது.

உள்ளாட்சி நோக்கங்களுக்காக வரி எதனையும் விதிப்பதற்கு, நீக்குவதற்கு, குறைப்பதற்கு, மாற்றுவதற்கு வகை செய்வதாகக் கருதுதல் ஆகாது.

(3) ஒரு சட்ட முன்வடிவு, சட்டமாக இயற்றப்பட்டுச் செயற்பாட்டுக்குக் கொண்டு வரப்பட்டால், ஒரு மாநில வருவாயிலிருந்து செலவு செய்ய வேண்டிய நிலையை அஃது ஏற்படுத்துமாயின், அதனை ஓர்வு செய்யுமாறு மாநிலச் சட்டமன்றத்தின் அவை எதற்கும் ஆளுநர் பரிந்துரை செய்திருந்தாலன்றி அந்த அவை அதனை நிறைவேற்றுதல் ஆகாது.

## பொதுவியலான நெறிமுறை

நெறிமுறை விதிகள்.

183. (1) மாநிலச் சட்டமன்றத்தின் அவை எதுவும், இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, அதற்குரிய நெறிமுறையையும் அலுவல் நடத்து முறையையும் ஒழுங்குறுத்துவதற்கான விதிகளை வகுத்துக் கொள்ளலாம்.

(2) இந்த உறுப்பு (1)-ம் கூறின்படி விதிகளை வகுத்துக் கொள்ளும் வரையில், மாகாண சட்டமன்றத்தைப் பொறுத்து; இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு செல்லாற்றலிலிருந்த நெறிமுறை விதிகளும் நிலையாணைகளும், ஒரு மாநிலச் சட்டமன்றத்தைப் பொறுத்து சட்டமன்றப் பேரவைத் தலைவர் அல்லது, நேர்வுக்கேற்பச் சட்டமன்ற மேலவைத் தலைவர் அவற்றில் செய்யும் மாற்றமைவுகளுக்கும் தழுவமைவுகளுக்கும் உட்பட்டுச் செல்திறம் உடையன ஆகும்.

(3) சட்டமன்ற மேலவை உள்ள மாநிலத்தில், ஆளுநர், சட்டமன்றப் பேரவைத் தலைவருடனும் சட்டமன்ற மேலவைத் தலைவருடனும் கலந்தாய்வு செய்த பின்பு, ஈரவைகளுக்குமிடையேயான செய்தித் தொடர்புகள் மற்றும் கூட்டமர்வு பற்றிய நெறிமுறை விதிகளை வகுக்கலாம்.

(4) இரு அவைகளின் கூட்டமர்வின்போது, சட்டமன்றப் பேரவைத் தலைவர் [1]அல்லது அவர் இல்லாதபோது, இந்த உறுப்பு கூறு (3)-ன் கீழ் உள்ள விதிமுறைகளின்படி வேறு யாராவது தலைமை வகிக்கலாம்.

மாநிலத்தின் சட்டமன்றங்களில் பயன்படுத்தப்பட வேண்டிய மொழி.

184 (1) மாநிலச் சட்டமன்றத்தில் அலுவல்கள், அந்த மாநிலத்தில் பொதுவாகப் பயன்படுத்தப்படும் மொழி அல்லது மொழிகள் அல்லது இந்தி அல்லது ஆங்கிலத்தில் நடத்தப்படுதல் வேண்டும்.

(2) சட்டமன்றப் பேரவைத் தலைவர் அல்லது மேலவைத் தலைவர் தேவையெனக் கருதும்பொழுது, நேர்வுக்கேற்ப, சட்டமன்றம் அல்லது மேலவையில், மாநிலத்தில் பயன்படும் மொழி அல்லது ஆங்கிலத்தில் தக்கவாறு எடுத்தியம்ப இயலாத உறுப்பினர் எவரும், அவருடைய மொழியிலேயே உரையாற்றலாம். அந்த உரையின் சுருக்கத்தை அவைக் குறிப்புகளில் சேர்த்தல் வேண்டும்.

சட்டமன்றத்தில் விவாதத்தின் மீது கட்டுப்பாடு

185. (1) உச்சநீதிமன்றத்தின் அல்லது உயர்நீதிமன்றத்தின் நீதிபதி ஒருவர், தம் கடமைகளை ஆற்றுகையில் அவர் நடந்து கொண்ட விதம் குறித்து விவாதம் எதுவும் மாநிலச் சட்டமன்றத்தில் நடைபெறுதல் ஆகாது.

(2) இந்த உறுப்பில் தற்சமயம் முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிட்டுள்ளபடி, அரசமைப்பு அத்தியாயம் IV பாகம் V-ல் உயர்நீதிமன்றம் என்பது மாநிலத்திலுள்ள எந்த நீதிமன்றமும் உள்ளடங்கிய உயர்நீதிமன்றம் ஆகும்.

---

1. சட்டசபையில் அதிகமான நபர்கள் இருப்பதால், இரு அவைகளின் கூட்டமர்வின்போது, சட்டமன்றப் பேரவைத் தலைவர் தலைமை தாங்க வேண்டுமெனக் குழு நினைக்கின்றது.

சட்டமன்ற நடவடிக்கைகள் குறித்து நீதிமன்றங்கள் விசாரித்தல் ஆகாது.

*186. (1)* நெறிமுறையைப் பின்பற்றுவதில் முறைகேடு இருப்பதாகக் காரணம் காட்டி, மாநிலச் சட்டமன்றம் ஒன்றன் நடவடிக்கைகள் எவற்றின் செல்லுந்தன்மையையும் எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

*(2)* ஒரு மாநிலச் சட்டமன்றப் பதவியாளர் அல்லது உறுப்பினர் ஒருவர், அச்சட்டமன்ற நெறிமுறையையோ அலுவல் நடத்து முறையையோ ஒழுங்குறுத்துவதற்காக அல்லது ஒழுங்கமைதியை நிலைநாட்டுவதற்காக, இந்த அரசியல் சட்டத்தினாலோ அதன் வழியாலோ அவருக்கு உற்றமைந்துள்ள அதிகாரங்களைச் செலுத்துவது பொறுத்து நீதிமன்றம் எதனின் அதிகார வரம்பிற்கும் உட்பட்டவர் ஆகார்.

## அத்தியாயம் - IV

## ஆளுநருக்குள்ள சட்டமியற்றும் அதிகாரம்

சட்டமன்றத்தின் கூட்டத்தொடர் இறுதி செய்யப்பட்டுள்ளகாலத்தின் போது அவசரச்சட்டங்களைச் சாற்றம் செய்வதற்கு ஆளுநருக்குள்ள அதிகாரம்.

*187. (1)* ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவையின் கூட்டத்தொடர், தொடர் நிலையிலுள்ள காலம் தவிர, அல்லது ஒரு மாநிலத்தின் மேலவை உள்ளவிடத்துச் சட்டமன்ற ஈரவைகளின் கூட்டத்தொடர்களும் தொடர் நிலையிலுள்ள காலம் தவிர, வேறு எச்சமயத்திலேனும் ஆளுநர், தாம் அவசரமாக நடவடிக்கை எடுக்க வேண்டியதை அவசியமாக்கும் சூழ்நிலைகள் உள்ளன என்று தெளிவுறக் காண்பாராயின், அச்சூழ்நிலைகளுக்கு ஏற்பத் தேவையென்று தாம் கருதும் அவசரச் சட்டங்களைச் சாற்றம் செய்யலாம்.

வரம்புரையாக: அத்தகைய அவசரச் சட்டம் எதனையும் - மாநிலச் சட்டமன்றம் இயற்றிய சட்டம் ஒன்று அதே வகையங்களைக் கொண்டிருந்தால் குடியரசுத் தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கிவைத்து, அது குடியரசுத் தலைவரின் ஏற்பிசைவையும் பெற்றிருந்தாலன்றி, இந்த அரசமைப்பின்படி செல்லுந்தன்மையற்றதாகிவிடும். எனில், குடியரசுத் தலைவரின் நெறிவுறுத்தங்கள் இன்றி, ஆளுநர் சாற்றம் செய்தல் ஆகாது.

(2) இந்த உறுப்பின்படி சாற்றம் செய்யப்பட்ட ஓர் அவசரச் சட்டம், மாநிலச் சட்டமன்றம் இயற்றி ஆளுநரால் ஏற்பிசைவளிக்கப்பட்ட சட்டம் ஒன்றிற்குள்ள அதே செல்லாற்றலும் செல்திறமும் உடையது ஆகும். ஆனால் அத்தகைய அவசரச் சட்டம் ஒவ்வொன்றும் -

(அ) மாநிலச் சட்டமன்றப் பேரவையின் முன்பு அல்லது சட்டமன்ற மேல்வை உள்ள மாநிலத்தில், ஈரவைகளின் முன்பும் வைக்கப்படுதல் வேண்டும்; மற்றும் சட்டமன்றம் மீண்டும் கூடியதிலிருந்து ஆறு வாரங்கள் கழிவுற்றவுடன் அல்லது அக்கால அளவு கழிவுறுவதற்கு முன்பே அதற்கு ஒப்பேற்பு அளிக்க மறுக்கும் ஒரு தீர்மானத்தைச் சட்டமன்றப் பேரவை நிறைவேற்றி, அதனைச் சட்டமன்ற மேலவை, ஏதேனுமிருப்பின், அதுவும் ஏற்றுக் கொண்டிருக்குமாயின், அத்தீர்மானம், அவ்வாறு நிறைவேற்றப்பட்டதன் மேல் அல்லது அத்தீர்மானத்தை மேலவை ஏற்றுக் கொண்டதன் மேல், செயற்பாடு அற்றுப்போகும்; மேலும்,

(ஆ) ஆளுநரால், எச்சமயத்திலும், விலக்கிக் கொள்ளப்படலாம்.

விளக்கம்: சட்டமன்ற மேலவை உள்ள ஒரு மாநிலச் சட்டமன்றத்தின் அவைகள் வெவ்வேறு தேதிகளில் மீண்டும் கூடுமாறு அழைப்பாணை விடுக்கப்பட்டிருக்குமிடத்து, இந்தக் கூறினைப் பொறுத்தவரை, அந்த ஆறு மாத கால அளவு அத்தேதிகளில் பிந்திய தேதியிலிருந்து கணக்கிடப்படுதல் வேண்டும்.

(3) மாநிலச் சட்டமன்றம் இயற்றி ஆளுநரால் ஏற்பிசைவளிக்கப்பட்ட சட்டம் ஒன்றில் இடம் பெற்றிருந்தாலும் எத்தகைய வகையம் செல்லுந் தன்மையற்றுப் போகுமோ அத்தகைய வகையம் எதனையும், இந்த உறுப்பின்படியான ஓர் அவசரச் சட்டம் கொண்டிருப்பின், அந்த அளவிற்கு அஃது இல்லா நிலையது ஆகும்.

வரம்புரையாக: ஒருங்கியல் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள ஒரு பொருட்பாடு குறித்த நாடாளுமன்றச் சட்டத்திற்கோ நிலவுறும் சட்டம் ஒன்றிற்கோ முரண்படும் மாநிலச் சட்டமன்றச் சட்டத்தின் செல்திறம் பற்றிய இந்த அரசமைப்பின் வகையங்களைப் பொறுத்தவரை, குடியரசுத் தலைவரின் நெறிவுறுத்தங்களை ஒட்டி இந்த உறுப்பின்படி சாற்றம் செய்யப்பட்ட அவசரச் சட்டம் எதுவும், குடியரசுத் தலைவரின் ஓர்வுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டு அவரால் ஏற்பிசைவு அளிக்கப்பட்ட மாநிலச் சட்டமன்றத்தின் ஒரு சட்டமாகக் கொள்ளப்படுதல் வேண்டும்.

# அத்தியாயம் - V

## கடுமையான அவசர நிலையின் போது உள்ள வகையங்கள்

*கடுமையான அவசர நிலையின் போது ஆளுநரின் அதிகாரம்.*

188.(1) மாநிலத்தின் ஆளுநர் எப்பொழுதாவது, அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு மாநில அரசைக் கொண்டு செல்ல இயலாது, மேலும் மாநிலத்தின் சமாதானம் அமைதி சீர்குலைந்து விட்டது என்று நினைப்பாராயின், அதிகாரபூர்வமான அறிக்கையின் மூலம், அந்த அறிக்கையில் குறிப்பிட்டுத் தன் விவேகப்படி செயல்படுவார். அந்த அறிக்கை ஆளுநரின் தேவை அல்லது விருப்பத்தின்படி விளைவுறு மற்றும் சார்வுறு வகையங்களைக் கொண்டிருக்கும். மாநிலத்தில் அரசமைப்பிலுள்ள வகையங்களின்படி எந்த ஒரு நபர் அல்லது அதிகாரத்தினை முழுவதுமாகவோ அல்லது பகுதியாகவோ தற்காலிகமாக நிறுத்தி வைக்கக்கூடும்.

வரம்புரையாக: இந்த அரசமைப்பில் உயர்நீதி மன்றங்கள் தொடர்பாக, ஆளுநர் அதன் வகையங்கள் செயல்படுவதை முழுவதுமாகவோ அல்லது பகுதியாகவோ நிறுத்தி வைப்பதற்கு இந்தக் கூறில் அதிகாரம் அளிக்கப்படவில்லை.

(2) ஆளுநர் அவசர நிலை பற்றிய அதிகார பூர்வமான அறிக்கையினைக் குடியரசுத் தலைவருக்குத் தெரிவிப்பார். இந்த அரசமைப்பு உறுப்பு 278-ன் கீழ்க் குடியரசுத் தலைவருக்குள்ள அவசர நிலை அதிகாரத் தின்படி, அவசர நிலை அறிக்கையினை நீக்கவோ அல்லது தேவையெனக் கருதும் நடவடிக்கைகளை எடுக்கவோ அதிகாரம் உண்டு.

(3) இந்த உறுப்பின்படி, இரண்டு வாரங்களுக் குப் பிறகு அவசர நிலை அறிவிப்புச் செயல்படாது. அந்தக் கால முடிவிற்குள் ஆளுநர் அவசரநிலையை நீக்கலாம் அல்லது பொது அறிவிப்பின்படி குடியரசுத் தலைவர் நீக்கலாம்.

(4) இந்த உறுப்பின்படி, ஆளுநருடைய பணி களை அவர் தன் விவேகப்படி செயல்படுத்தலாம்.

# அத்தியாயம் - VI

## பட்டியல் வரையிடங்களும் பழங்குடியினர் வரையிடங்களும்

பொருள் வரையறை

189. இந்த அரசமைப்பில் -

(அ) ''பட்டியல் வரையிடங்கள்'' என்றால் பாகம் I முதல் VII வரை உள்ள வரையிடங் களைக் குறிக்கும். அவை ஐந்தாவது பட்டி யல் பத்தி 18 உடன் சேர்க்கப்பட்டுள்ளது. அவை மாநிலத்தின் எந்தப் பாகத்துடன் தொடர்புடையதோ அந்த மாநிலத்தைச் சார்ந்ததாகும்.

(ஆ) ''பழங்குடியினர் வரையிடங்கள்'' என்பது பாகம் I மற்றும் பாகம் II-ல் குறிப்பிட்டுள்ள வரையிடங்களாகும். அவை, ஆறாவது பட்டியல் பத்தி 19 உடன் சேர்க்கப்பட் டுள்ளது.

பட்டியல் வரையிடங்கள் மற்றும் பழங்குடியினர்வரையிடங்களின் நிர்வாகம்.

190. (1) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிட்டுள்ளது போல, ஐந்தாம் பட்டியலின் வகையங்கள் எந்த மாநிலத்திலும் உள்ள பட்டியல் வரையிடங்களுக்கும், பட்டியல் பழங்குடியினருக்குமான நிருவாகத்திற்கும் கட்டாள்கைக்கும் பொருந்துறும்.

(2) ஆறாம் பட்டியலிலுள்ள வகையங்கள், அசாம் மாநிலத்திலுள்ள பழங்குடியினர் வரையிடங்களுக்கான நிருவாகத்திற்குப் பொருந்துறும்.

## அத்தியாயம் VII

## மாநிலத்திலுள்ள உயர்நீதிமன்றங்கள்

'உயர்நீதிமன்றத்தின்' அர்த்தம்

191. (1) அரசமைப்பின்படி, முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்கள் தவிர, இந்திய எல்லையில் உள்ள நீதிமன்றங்கள் உயர்நீதிமன்றங்களாகும். அஃதாவது,

(அ) கல்கத்தா, சென்னை, பம்பாய், அலகாபாத், பாட்னா மற்றும் நாக்பூரில் உள்ள உயர்நீதிமன்றங்கள், கிழக்குப் பஞ்சாபிலுள்ள உயர்நீதிமன்றம் மற்றும் அயோத்தியில் உள்ள முதன்மை நீதிமன்றம்.

(ஆ) இந்த அத்தியாயத்தில், இந்த மாநிலங்களில் ஏதாவது ஒன்றில் அமைக்கப்பட்ட அல்லது திரும்ப அமைக்கப்பட்ட வேறு எந்த நீதிமன்றங்களும் உயர்நீதிமன்றங்களாகும். மேலும்

(இ) இந்த அரசமைப்பின்படி, எந்த மாநிலத்திலும் வேறு எந்த நீதிமன்றத்தினையும் தக்க சட்டமன்ற சட்டத்தின் வாயிலாக உயர் நீதிமன்றம் என்று அறிவிக்கலாம்.

வரம்புரையாக: இந்தக் கூறில் குறிப்பிடப்பட்டுள்ளது போல, நீதிமன்றம் அல்லது நீதிமன்றங்களைத் தக்க சட்டசபையின் வாயிலாக உயர்நீதிமன்றங்கள்

அமைக்க வகையம் உண்டு. நீதிமன்றம் அல்லது நீதி மன்றங்கள் என்று குறிப்பிடப்பட்டிருப்பது, இந்த உறுப்பின்படி புதிதாக அமைக்கப்பட்ட நீதிமன்றம் மாற்றி அமைக்கப்பட்டவைகளுக்கும் பொருந்தும்.

(2) மற்றபடி வரம்புரையாக: இந்த உறுப்பு கூறு (1)ல் குறிப்பிடப்பட்டுள்ளது போல, இந்த அத்தியாயத்தின் வகையங்கள் ஒவ்வொரு உயர்நீதிமன்றத்திற்கும் பொருந்தும்.

*உயர்நீதிமன்றங்களை அமைத்தல்.*

192. ஒவ்வொரு உயர்நீதிமன்றமும் பதிவேடுகளின் நீதிமன்றமாகும். அவற்றிற்குக் குடியரசுத் தலைவர் அவ்வப்போது தேவையெனக் கருதும் முதன்மை நீதிபதியையும் மற்ற நீதிபதிகளையும் நியமிப்பார்.

வரம்புரையாக: இந்த அத்தியாயத்தின் பின்வரும் வகையங்களுக்கு உட்பட்டுக் குடியரசுத் தலைவர் நீதிபதிகள், கூடுதல் நீதிபதிகளை நியமிப்பார். எக்காலத்திலும் அந்த நீதிமன்றங்களுக்குக் குடியரசுத் தலைவரால் நிர்ணயிக்கப்பட்ட அதிகப்பட்ச எண்ணிக்கையை மிகாமல் இருத்தல் வேண்டும்.

*உயர்நீதிமன்ற நீதிபதி ஒருவரின் அமர்த்துகை மற்றும் அப்பதவிக்கான வரைமுறைகள்.*

193. (1) உயர்நீதிமன்ற நீதிபதி ஒவ்வொருவரையும், குடியரசுத் தலைவர், இந்தியத் தலைமை நீதிபதியையும் மாநில ஆளுநரையும் கலந்தாய்வு செய்த பின்பும், தலைமை நீதிபதி அல்லாத பிற நீதிபதி ஒருவரின் அமர்த்துகையைப் பொறுத்தவரை, கூடுதலாக அந்த மாநிலத்தின் உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியையும் கலந்தாய்வு செய்த பின்பும் தம் கையொப்பமும் முத்திரையும் கொண்ட அதிகார ஆணையின் வழி அமர்த்துவார். அவர் அறுபது வயது வரை பதவியில் நீடிப்பார். [1]**அல்லது மாநிலச் சட்டசபையின்**

1. இந்திய அரசாங்கச் சட்டம் 1935ன் படி அறுபது வயதிற்கு அதிகமாக வகையம் செய்யப்படவில்லை. இதனால் வழக்குரைஞர் அனுபவம் வாய்ந்தவர்கள் நீதியுரைநர் நியமனத்தை மறுக்கின்றனர். ஏனென்றால் தற்சமயம் இருக்கும் அறுபது வயது வரம்பிற்குள்

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

**சட்டத்தின் வாயிலாக அதிகப்பட்சம் அறுபத்திஐந்து வயதிற்கு மிகாமல் பதவியில் நீடிப்பார்.**

வரம்புரையாக:

(அ) நீதிபதி ஒருவர், குடியரசுத் தலைவருக்குத் தம் கையொப்பமிட்டு எழுத்துவழித் தெரிவித்துத் தம் பதவியை விட்டு விலகிக் கொள்ளலாம்.

(ஆ) நீதிபதி ஒருவர், உச்சநீதிமன்றத்தின் நீதிபதி ஒருவரைப் பதவியிலிருந்து அகற்றுவதற்கு, இந்த அரசமைப்பு உறுப்பு 103 கூறு (4)ல் வகை செய்யப்பட்டுள்ள வழிமுறையின் படி, பதவியிலிருந்து குடியரசுத் தலைவரால் அகற்றப்படலாம்.

(இ) நீதிபதி ஒருவர் உச்சநீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாக அல்லது வேறு எந்த உயர்நீதிமன்றத்திற்கும் குடியரசுத் தலைவரால் அமர்த்தப் பெறுவதன் மேல் அவருடைய பதவி காலியாகிவிடும்.

(2) ஒருவர் இந்தியாவின் குடிமகனாக இருப்பதுடன் -

(அ) எந்த மாநிலத்திலும் குறைந்தது பத்து ஆண்டுகள் நீதித்துறைப் பதவியை வகித்துள்ளவராக அல்லது உயர்நீதிமன்றம் உள்ள இடங்களில், அல்லது

---

(முன்பக்கத் தொடர்ச்சி)

முழு ஓய்வூதியத்தினைப் பெறுவதற்கு கால அவகாசம் கிடையாது. உச்சநீதிமன்றத்தில் நீதிபதிகளின் வயது வரம்பு அறுபத்தி ஐந்தாக இருக்கும்பொழுது உயர்நீதிமன்றத்தில் ஒரு நீதிபதிக்கு அறுபது வயதாகிவிட்டால் அவர் வயதானவர் என்று கருத முடியாது. பல மாநிலங்களில் வேறுபட்ட நிபந்தனைகள் இருப்பதால், இந்த உறுப்பில் கோடிட்ட வார்த்தைகளைக் குழு சேர்த்துள்ளது. இதன் வாயிலாக ஒவ்வொரு மாநிலத்திலுள்ள சட்டசபைகள் அறுபத்தி ஐந்து வயதிற்கு மிகாமல் நிர்ணயிக்கும்.

(ஆ) ஓர் உயர்நீதிமன்றத்திலோ, தொடர்ந்து இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட அத்தகைய நீதிமன்றங்களிலோ குறைந்தது பத்தாண்டுகள் வழக்குரைஞராக இருந்துள்ளவராக இருந்தாலன்றி, உயர் நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாக அமர்த்தப் பெறுவதற்கு தகுதிப்பாடு உடையவர் ஆகார்.

விளக்கம் I - இந்தக் கூறினைப் பொறுத்தவரை -

(அ) ஒருவர், உயர்நீதிமன்ற வழக்குரைஞராக இருந்த காலஅளவைக் கணக்கிடுகையில், அவர் வழக்குரைஞரான பின்பு, ஒரு நீதித்துறைப் பதவியை வகித்து வந்திருக்கிற கால அளவையும் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

(ஆ) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I அல்லது பாகம் II-ல் குறிப்பிட்டுள்ளபடி, ஒருவர், நீதித்துறைப் பதவியை வகித்துள்ள அல்லது உயர்நீதிமன்ற வழக்குரைஞராக இருந்துள்ள கால அளவைக் கணக்கிடுகையில், இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்கு முன்பு 1935-ம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தினால் வரையறை செய்யப்பட்டிருந்த இந்தியாவிற்குள் 1947-ம் ஆண்டு ஆகஸ்டு 15ம் நாளுக்கு முன்பு அடங்கியிருந்த பிரிட்டிஷ் இந்தியா பரப்பிடம் எதிலும், அவர் நீதித்துறைப் பதவி வகித்துள்ள அல்லது, நேர்வுக்கேற்ப, அத்தகைய பரப்பிடம் எதிலும் உள்ள உயர்நீதிமன்றம் எதிலும் ஒரு வழக்குரைஞராக இருந்துள்ள கால அளவையும் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

விளக்கம் II - இக்கூறு உட்கூறு (அ) மற்றும் (ஆ)-ன்படி, உயர்நீதிமன்றம் என்பது முதல் பட்டியல்

பாகம் III-ல் குறிப்பிட்டுள்ளபடி மாநிலத்தில் உள்ள எந்த நீதிமன்றத்தையும் உள்ளடக்கும். அரசமைப்பு, உறுப்பு 103 மற்றும் 106ன்படி அதுவே உயர்நீதிமன்ற மாகும். உச்சநீதிமன்றம் தொடர்பான, குறிப்பிட்ட சில வகையங்கள் உயர்நீதிமன்றங்களுக்கும் பொருந்தும்.

*உச்சநீதிமன்றம் குறித்த சிலவகை யங்கள் உயர்நீதி மன்றங்களுக்கும் பொருந்துதல்.*

*194.* இந்த அரசமைப்பு உறுப்பு 103 கூறு (4) மற்றும் (5) வகையங்களின்படி, உச்சநீதிமன்றம் தொடர்பாகப் பொருந்துறுவன போன்றே ..;வற்றி லுள்ள உச்சநீதிமன்றம் என்னும் சுட்டுகைகளுக்கு மாற்றாக உயர்நீதிமன்றம் என்னும் சுட்டுகைகளைக் கொண்டு உயர்நீதிமன்றம் தொடர்பாகவும் பொருந் துறுவன ஆகும்.

*உயர்நீதிமன்ற நீதிபதிகள்பதவி ஏற்கு முன் எடுத்துக்கொள் ளும் உறுதி மொழி.*

*195.* மாநிலத்தில் உயர்நீதிமன்ற நீதிபதியாக அமர்த்தப்பெறும் ஒவ்வொருவரும், அவர்தம் பதவியை ஏற்பதற்கு முன்பு, மாநில ஆளுநரின் அல்லது அதன் பொருட்டு அவரால் அமர்த்தப்பெறும் ஒருவரின் முன் னிலையில், மூன்றாம் பட்டியலில் அதற்கென உள்ள சொன்முறையில் ஓர் உறுதிமொழியை ஏற்றுக் கைபொப்பமிடுதல் வேண்டும்.

*உயர்நீதிமன்ற நீதிபதியாக இருந்த ஒருவர் மற்ற நீதிமன் றங்கள் அல்லது அதிகார அமைப்பு முன்பு வழக்குரைஞ ராகத் தொழி லாற்றத்தடை.*

[1]*196. (அ)* உயர்நீதிமன்ற நீதிபதி ஒருவர் அல்லது

(ஆ) வழக்குரைஞரிலிருந்து சேர்க்கப்பட்ட உயர் நீதிமன்றத்தின் கூடுதல் நீதிபதி அல்லது தற்காலிக நீதிபதியாக ஒருவர் இந்திய வரை யரையிலுள்ள நீதிமன்றம் அல்லது அதிகார அமைப்பு முன்பு வழக்குரைஞராக வாதிடு தல் ஆகாது.

1. உயர்நீதிமன்ற நீதிபதியாக இருந்த ஒருவர் வழக்குரைஞரிலிருந்து சேர்க்கப்பட்ட கூடுதல் நீதிபதி அல்லது தற்காலிக நீதிபதி எந்த நீதிமன்றம் முன்பும் அல்லது அதிகார அமைப்பின் முன்பும் வழக்குரைஞராகப் பணியாற்றுதல் கூடாது எனக் குழு நினைக் கின்றது.

நீதிபதிகளின் வரைவூதியங்கள் முதலியன.

197. உயர்நீதிமன்றத்தின் நீதிபதி ஒவ்வொருவரும், நீதிமன்றம் இருக்கும் மாநிலச் சட்டசபையினால் இயற்றப்படும் சட்டத்தாலோ அதன் வழியாலோ நிர்ணயிக்கப்படும் வரைவூதியங்கள் மற்றும் படித்தொகைகள் வாராமை விடுப்பும், ஓய்வூதியமும் பொறுத்த உரிமைகள் உரிமை கொண்டவர் ஆவார். அவ்வாறு நிர்ணயிக்கப்படும் வரையிலும் இரண்டாம் பட்டியலில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரைவூதியங்கள், படித்தொகைகள், வாராமை விடுப்பும் ஓய்வூதியமும் பொறுத்த உரிமைகள் ஆகியவற்றிற்கு அவர் உரிமை கொண்டவர் ஆவார்.

வரம்புரையாக: மாநில முதன்மை நீதிபதியின் வரைவூதியம் ஒரு மாதத்திற்கு ரூபாய் நாலாயிரத்திற்குக் குறைவாக இருத்தல் கூடாது; உயர்நீதிமன்றத்தின் மற்ற நீதிபதிகளுக்கு ஒரு மாதத்திற்கு ரூபாய் மூவாயிரத்து ஐநூறுக்குக் குறையாமல் இருத்தல் வேண்டும்.

வரம்புரையாக: மேலும், நீதிபதி ஒருவரின் வரைவூதியம் அல்லது வாராமை விடுப்பு, ஓய்வூதியம் பொறுத்த அவருடைய உரிமைகள் அவர் அமர்த்தப் பெற்ற பின்பு அவருக்குப் பாதகமான வகையில் மாறுதல் செய்யப்படுதல் ஆகாது.

தற்காலிக நீதிபதிகள்

198. (1) ஓர் உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதிப் பதவி காலியாக இருக்கும்போது, அல்லது அத்தகைய தலைமை நீதிபதி எவரும் தம் இருத்தலின்மையாலோ அல்லது பிறவாறான காரணத்தாலோ தமது பதவிக்குரிய கடமைகளைப் புரிய இயலாதிருக்கும்போது, குடியரசுத் தலைவர் அதன் பொருட்டு அமர்த்தும் அந்நீதிமன்றத்துப் பிற நீதிபதிகளில் ஒருவர் அப்பதவிக்குரிய கடமைகளைப் புரிந்து வருவார்.

(2) (அ) உயர்நீதிமன்றத்தின் வேறு எந்த நீதிபதியின் பதவி காலியாக இருக்கும்பொழுது அல்லது வேறு எந்த நீதிபதி ஒருவர் தற்காலிகமாகத் தலைமை

*நீதிபதியாக நியமிக்கப்படும்பொழுது அல்லது அவர் இருத்தலின்மை காரணமாக அல்லது பிற காரணம் எதனாலும் தமது பதவிக்குரிய கடமைகளைப் புரிய இயலாதிருக்கும் போது, குடியரசுத் தலைவர், உரிய தகுதிப்பாடுள்ள ஒருவரை, அந்நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாகச் செயலுறுவதற்கு அமர்த்தலாம்.*

*(ஆ) அப்படி நியமனம் செய்யப்பட்டவர் நீதிபதியாக அப்பதவியில் செயல்படும்போது அந்த நீதிமன்றத்தின் நீதிபதியாகவே கருதப்படுவார்.*

*(இ) இந்தக் கூறின்படி நியமனம் செய்யப்பட்ட ஒருவரைக் குடியரசுத் தலைவர் நீக்குவதற்கு எந்தத் தடையுமில்லை.*

*கூடுதல் நீதிபதிகள்*

*199. ஓர் உயர்நீதிமன்றத்தின் அலுவல், அப்போதைக்கு அதிகரித்துள்ளதன் காரணமாக அல்லது அங்குள்ள நீதிமன்றத்தில் வேலை நிலுவைகள் காரணமாக, அந்த நீதிமன்றத்தின் நீதிபதிகளின் எண்ணிக்கையை அதுபோது உயர்த்த வேண்டுமெனக் குடியரசுத் தலைவருக்குத் தோன்றுமாயின், இந்த அத்தியாயத்தில் உள்ள அதிகபட்ச நீதிபதிகளின் எண்ணிக்கையின் வகையங்களுக்கு உட்பட்டுக் குடியரசுத் தலைவர் உரிய தகுதிப்பாடுள்ளவர்களை ஈராண்டுக்கு மேற்படாமல், தாம் குறித்துரைக்கும் கால அளவுக்கு அந்த நீதிமன்றத்தின் நீதிபதிகளாக அமர்த்தலாம்.*

*உயர்நீதிமன்றங்களின் அமர்வுகளில், ஓய்வு பெற்ற நீதிபதிகள் வருகை தருதல்.*

*[1]200. இந்த அத்தியாயத்தில் எது எவ்வாறாயிருப்பினும், ஒரு மாநில உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி, எச்சமயத்திலும், இந்த உறுப்பிலுள்ள வகையங்களுக்கு உட்பட்டு, அந்த நீதிமன்றத்தில் அல்லது பிற உயர்நீதிமன்றம் எதிலும் நீதிபதிப் பதவி வகித்த ஒருவரை அந்த மாநிலத்து உயர்நீதிமன்றத்தின் ஒரு*

---

*1. அமெரிக்க ஐக்கிய மாநிலங்கள் மற்றும் பிரிட்டனில் ஓய்வு பெற்ற நீதிபதிகளை அமர்த்தும் பழக்கத்தினைத் தொடர்ந்து பின்பற்றப்படும் முறையாகும்.*

நீதிபதியாக அமர்ந்து செயலுறும்படி கேட்டுக் கொள் ளலாம். அவ்வாறு கேட்டுக்கொள்ளப்பட்ட ஒவ்வொரு வரும், அந்த உயர்நீதிமன்றத்தின் நீதிபதி ஒருவருக் குற்ற அதிகார வரம்பு, அதிகாரங்கள், மதிப்புரிமைகள் ஆகிய அனைத்தையும் உடையவர் ஆவார். ஆனால் மற்றபடி அவர் அந்நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாகக் கொள்ளப் பெறுவதில்லை.

வரம்புரையாக: மேலே கூறப்பட்ட எவரும், அந்நீதிமன்றத்தின் ஒரு நீதிபதியாக அமர்ந்து செய லுறுவதற்கு இசைவளித்தாலன்றி, அவரை அவ்வாறு செயலுறும்படி இந்த உறுப்பிலுள்ள எதுவும் வேண் டுறுத்துவதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

நிலவுறும் உயர்நீதிமன் றங்களின் அதி கார வரம்பு.

201. இந்த அரசமைப்பின் வகையங்களுக்கும் இந்த அரசமைப்பினால் வழங்கப்பட்ட அதிகாரங் களின் பயன்திறன்வழி உரிய சட்டமன்றம் இயற்றிய சட்டம் ஒன்றன் வகையங்களுக்கும் உட்பட்டு, நில வுறும் உயர்நீதிமன்றம் ஒன்றனுக்குற்ற அதிகார வரம் பும், அதில் முறையாக்கப்படும் சட்டநெறியும், அந்நீதி மன்றத்தின் விதிகளை வகுப்பதற்கும், அந்நீதிமன்றத் தின் அமர்வுகள், அதன் உறுப்பினர்கள் தனியாக அல்லது ஆயமாக அமர்தல் ஆகியவற்றை ஒழுங்குறுத் துவதற்கான அதிகாரம் எதுவும் உள்ளடங்கலாக, அந் நீதிமன்றத்தில் நீதி நிர்வாகம் தொடர்பாக அதன் நீதிபதிகளுக்கு உள்ளதான அதிகாரங்களும், இந்த அர சமைப்பின் தொடக்க நிலைக்கு ஒட்டி முன்பு இருந்த வாறே இருந்துவரும்.

வரம்புரையாக: வருவாய் பற்றிய அல்லது அதனை ஈட்டுவதற்கென இடப்பட்ட ஆணை அல்லது செய்யப்பட்ட செயல் பற்றிய பொருட்பாடு எதனையும் பொறுத்து, உயர்நீதிமன்றங்களில் எதுவும் முதலேற்பு அதிகாரம் செலுத்துவதற்கு இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு இருந்துவந்த வரை யறை எதுவும், அத்தகைய அதிகாரத்தைச் செலுத்து வதற்கு இனி மேற்கொண்டு பொருத்துறுவதில்லை.

குறித்த சில நீதிப்பேராணைகளைப் பிறப்பிக்க உயர்நீதிமன்றங்களுக்குள்ள அதிகாரம்.

202. (1) இந்த அரசமைப்பு உறுப்பு 25-ல் எது எவ்வாறாயிருப்பினும், III-ம் பகுதியினால் வழங்கப் பெறும் உரிமைகளில் எதனையும் செயலுறுத்துவதற்காகவும், உயர்நீதிமன்றம் ஒவ்வொன்றும், தான் அதிகாரம் செலுத்துகிற ஆட்சி நிலவரைகள் எங்கணும் உள்ள எவருக்கும், பணிப்புரைகளை, ஆணைகளை அல்லது ஆட்கொணர்விப்பு, செயலுறுத்து, தடையுறுத்து, தகுதிவினைவு, நெறிமுறை கேட்பு ஆகியவற்றின் தன்மை கொண்ட நீதிப் பேராணைகளை அல்லது அவற்றின் எதனையும் பிறப்பிப்பதற்கு அதிகாரம் உடையது ஆகும்.

(2) இந்த உறுப்பு கூறு (1)ன்படி உயர்நீதிமன்றங்களுக்கு அளிக்கப்பட்ட அதிகாரம், அரசமைப்பு உறுப்பு 25 கூறு (2)ன்படி உச்சநீதிமன்றத்திற்கு அளிக்கப்பட்ட அதிகாரத்தைக் குறைவுறச் செய்தல் கூடாது.

உயர்நீதிமன்றங்களின் நிர்வாகப் பணிகள்.

203. (1) உயர்நீதிமன்றம் ஒவ்வொன்றும், தான் அதிகாரம் செலுத்தி வருகிற ஆட்சி நிலவரைகள் எங்கணும் உள்ள நீதிமன்றங்களின் மீது, கண்காணிக்கும் அதிகாரம் உடையது ஆகும்.

(2) உயர்நீதிமன்றம் -

(அ) அத்தகைய நீதிமன்றங்களிலிருந்து விவர அறிக்கைகளைக் கேட்டுப் பெறலாம்;

(ஆ) அத்தகைய நீதிமன்றங்களிலுள்ள வழக்கு அல்லது மேல்முறையீடுகளை, அதற்குச் சமமான அல்லது உயர் அதிகார வரம்பு படைத்த நீதிமன்றங்களுக்கு மாற்றலாம் அல்லது அத்தகைய நீதிமன்றங்களிலிருந்து வழக்கு அல்லது மேல்முறையீடுகளைத் திரும்பப் பெறலாம்;

(இ) அத்தகைய நீதிமன்றங்களின் நடைமுறையினையும் நடவடிக்கைகளையும் ஒழுங்குறுத்துவதற்காகப் பொதுவியலான விதிகளை வகுத்தளிப்பதுடன், முறையமை படிவங்களையும் வகுத்தடைக்கலாம்; மற்றும்,

(ஈ) அத்தகைய நீதிமன்றங்களின் அலுவலர்கள் வைத்து வரவேண்டிய புத்தகங்கள், பதிவுக் குறிப்புகள், கணக்குகள் ஆகியவற்றுக்கான முறையமை படிவங்களை வகுத்தமைக் கலாம்.

(3) உயர்நீதிமன்றம், அத்தகைய நீதிமன்றங் களின் கட்டளைக் காப்புநருக்கும், எழுத்தர்கள், அலு வலர்கள் ஆகிய அனைவருக்கும், அங்குத் தொழி லாற்றுகின்ற சட்டத்துறைத் தலைவர்கள், வழக்குரை ஞர்கள், வாதுரைஞர்கள் ஆகியோருக்கும் வழங்கப் பட வேண்டிய கட்டண வீத அட்டவணைகளையும் திட்டப்படுத்தலாம்.

வரம்புரையாக: இந்த உறுப்பின் (2)ம் கூறின் படி அல்லது (3)ம் கூறின்படி வகுக்கப்பட்ட விதிகள், வகுத்தமைக்கப்பட்ட முறையமை படிவங்கள், அல்லது திட்டப்படுத்தப்பட்ட அட்டவணைகள் எவையும், நிகழுறு காலத்தில் செல்லாற்றலிலுள்ள சட்டத்தின் வகையங்களுக்கு முரணாக இருத்தல் ஆகாது. அவற்றுக்கு ஆளுநரின் முன் ஒப்பேற்பும் வேண்டுறுவதாகும்.

குறித்த சில வழக்குகளை விசாரணைக் காக உயர்நீதி மன்றத்திற்கு மாற்றுதல்.

204. உயர்நீதிமன்றம், தனக்குக் கீழமைந்துள்ள ஒரு நீதிமன்றத்தில் முடிவுறா நிலையிலுள்ள ஒரு வழக் கில், இந்த அரசமைப்பின் பொருள்கோள் குறித்துச் செறிவான சட்டப்பிரச்சினை ஒன்று உள்ளது என்று தெளிவுறக் காணுமாயின், அந்த வழக்கினைத் திரும்பப் பெற்று முடிவு செய்யலாம்.

விளக்கம்: தற்சமயம் முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிட்டுள்ளது போல, முடிவுறா வழக்குகளைப் பொறுத்தவரை, இந்த உறுப்பில் ''உயர்நீதிமன்றம்'' என்பது மாநிலத்தில் உள்ள இறுதி அதிகாரம் பெற்ற எந்த நீதிமன்றத்தையும் உள்ளடக்கும்.

உயர்நீதிமன்றங்களின் செலவுகள் மற்றும் உயர்நீதிமன்றங்களின்அலுவலர்கள், பணியாளர்களுடையவரைவூதியங்கள், படித்தொகைகள் மற்றும் ஓய்வூதியங்கள்.

205. (1) உயர்நீதிமன்றத்தின் அலுவலர்கள் மற்றும் பணியாளர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டிய வரைவூதியம், படித்தொகைகள் மற்றும் ஓய்வூதியங்களை, அந்த நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி, எந்த மாநிலத்தில் நீதிமன்றம் அமைந்துள்ளதோ அந்த மாநில ஆளுநரோடு கலந்தாலோசித்து நிர்ணயிப்பார்.

(2) நீதிபதிகளுடைய வரைவூதியம், படித்தொகைகள், அலுவலர்கள், பணியாளர்களுக்கு அளிக்கப்பட வேண்டிய வரைவூதியங்கள், படித்தொகைகள் மற்றும் ஓய்வூதியங்கள் உள்ளடங்கிய உயர்நீதிமன்றத்தின் நிர்வாகச் செலவுகள், அந்த மாநிலத்தின் வருவாயின் மீது சார்த்தப்படும். நீதிமன்றம் வசூலிக்கும் கட்டணங்கள் அல்லது வேறு பணம் நீதிமன்றத்தின் வருவாயாகும்.

உயர்நீதிமன்றத்தினை அமைப்பதற்கான அல்லது மாற்றியமைப்பதற்கான அதிகாரம்.

206. (1) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிட்டுள்ளது போல, மாநிலச் சட்டசபை சட்டத்தின் வாயிலாக மாநிலத்திற்கு அதன் எந்தப் பாகத்திற்கும் ஓர் உயர்நீதிமன்றத்தை அமைக்கலாம். அதே போல, மாநிலத்தில் இருக்கும் உயர்நீதிமன்றத்தை மாற்றி அமைக்கலாம் அல்லது அந்த மாநிலத்தில் இரண்டு உயர்நீதிமன்றங்கள் இருந்தால் அவற்றை ஒன்றாய் இணைக்கலாம்.

(2) மாநிலச் சட்டசபை சட்டத்தின் வாயிலாக எங்கு ஓர் உயர்நீதிமன்றம் மாற்றியமைக்கப்பட்டிருக்கிறதோ அல்லது இரண்டு நீதிமன்றங்கள் ஒன்றாய் இணக்கப்பட்டிருக்கிறதோ அங்கு -

(அ) நீதிமன்றம் அல்லது நீதிமன்றங்களில் தேவையெனக் கருதப்படும் நிலவும் அலுவலர் மற்றும் பணியாளர்கள் அல்லது அந்த நீதிமன்றத்தில் இருக்கும் நீதிபதி, தொடர்ந்து அவரவர் பதவிகளில் பணியாற்றவும்,

(ஆ) புதிய நீதிமன்றம் அல்லது மாற்றி அமைக் கப்பட்ட நீதிமன்றத்திற்கு முடிவுறாத பணி களைக் கொண்டு செல்லவும்

திரும்ப அமைக்கப்பட்ட அல்லது ஒன்றாய் இணைக்கப்பட்ட காரணத்தினால் தேவையெனக் கருதப்படும் வகையங்கள் உள்ளடங்கும்.

*உயர்நீதிமன்றங்களின் அதிகார வரம்பை நீடித்தல் அல்லது நீக்கி விடுதல்.*

207. நாடாளுமன்றம் சட்டத்தின் வாயிலாக -

(அ) உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்பை நீட்டிக்கலாம் அல்லது

(ஆ) உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்பை நீதிமன்றம் அமைந்திருக்கும் மாநிலம் அல்லது மாநிலம் அல்லாத எந்த இடத்திலிருந்தும் நீக்கலாம்.

வரம்புரையாக:

(i) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I அல்லது பாகம் IIIல் பிரிவு அ-வில் குறிப்பிட்டுள்ளது போல, மாநிலத்தின் அதிகார வரம்பை நீட்டித்தல் அல்லது நீக்குதல் சமயம் மற்ற மாநிலத்தின் ஒப்புதல் பெற வேண்டும்; மேலும்,

(ii) அதிகார வரம்பை நீட்டிக்கும் பொழுது, நீதிமன்றம் எந்த மாநிலத்தில் உள்ளதோ அந்த மாநிலத்தின் ஒப்புதலையும் பெற வேண்டும்.

இல்லையென்றால் நாடாளுமன்றத்தின் எந்த அவை யிலும் சட்ட முன்வடிவு கொண்டு வருதல் கூடாது.

*மாநிலத்தில் உள்ள நீதிமன்றம் அதற்கு வெளியேயுள்ள அதிகார வரம்பினைக்கட்டுப்*

208. எந்த மாநிலத்தில் உயர்நீதிமன்றம் இருக் கின்றதோ, அதற்கு வெளியே தன் அதிகார வரம்பைச் செயலுறுத்தும்பொழுது, இந்த அரசமைப்பிலுள்ள எதுவும் அதிகாரமளிப்பதாகக் கொள்ளப்படுதல் ஆகாது.

படுத்த மாநிலச் சட்டசபைக்குச் சட்டம் இயற்றும் அதிகாரம்

(அ) எந்த மாநிலத்தில் நீதிமன்றம் அமைந்துள்ளதோ, அந்தச் சட்டசபைக்கு அதிகார வரம்பைக் கூட்ட, கட்டுப்படுத்த அல்லது நீக்க அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது.

(ஆ) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் - I அல்லது பாகம் III-ல் குறிப்பிட்டுள்ளது போல, ஏதாவது நிலப்பரப்பு அமைந்திருந்தால், மாநிலச் சட்டசபைக்கு அந்த அதிகார வரம்பை நீக்குவதற்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது. அல்லது,

(இ) இந்த உறுப்பு கூறு (ஆ)ல் உள்ள வகையங்களுக்கு உட்பட்டு, அந்த இடத்தில் சட்டசபைக்குச் சட்டம் இயற்ற உள்ள அதிகாரத்தைத் தடுத்தல்; நீதிமன்றம் அந்த நிலப்பரப்பில் அமைந்திருந்தால், அந்த இடத்திற்குரிய சட்டங்களைச் செயல்படுத்த அது தகுதியுடையதாகும்.

பொருள் விளக்கம்.

209. ஒன்றுக்கு மேற்பட்ட மாநிலம் அல்லது மாநிலத்தில் உயர்நீதிமன்றம் தன் அதிகாரத்தைச் செலுத்தும்பொழுது, மேலும் அந்த மாநிலத்தின் வரம்பில் இல்லாத இடத்தில்,

(அ) இந்த அத்தியாயத்தில், உயர்நீதிமன்றத்தின் நீதிபதிகளோடு ஆளுநர் என்று கூறும்பொழுது, எந்த மாநிலத்தில் நீதிமன்றம் அமைந்துள்ளதோ அந்த மாநிலத்தின் ஆளுநர் என்று கொள்ளப்படுதல் வேண்டும்.

(ஆ) கீழ் நீதிமன்றத்தில் விதிகள், முறைப் படிவங்கள் மற்றும் அட்டவணைகளுக்கு ஆளுநர் ஒப்புதல் தருகின்றார் என்றால், கீழ் நீதிமன்றம் எங்கு அமைந்துள்ளதோ அந்த மாநிலத்தின் ஆளுநர் அல்லது அரசாள்பவர் என்று கொள்ளுதல் வேண்டும் அல்லது முதல் பட்டியல் பாகம் I அல்லது பாகம் IIIல் குறிப்பிட்டுள்ளது போல, அந்த நிலப்பரப்பு அந்த மாநிலத்தின் பாகமாக இல்லாமல் இருந்தால் குடியரசுத் தலைவர் என்று கொள்ளுதல் வேண்டும்.

(இ) மாநிலத்தின் வருவாய் என்று சொன்னால் நீதிமன்றம் எங்கு அமைந்துள்ளதோ அந்த மாநிலத்தின் வருவாய் என்று கொள்ளுதல் வேண்டும்.

# அத்தியாயம் - IX

## மாநிலங்களுக்கான முதன்மைத் தணிக்கையாளர்[1]

மாநிலத்தின் முதன்மை தணிக்கையாளர்

210. (1) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிடப்பட்டுள்ளது போல, மாநிலச் சட்டமன்றம் சட்டத்தின் வாயிலாக அந்த மாநிலத்திற்கு முதன்மைத் தணிக்கையாளரை நியமிக்கலாம். அப்படி ஒரு வகையம் இருக்கும்பொழுது, ஆளுநர் தன் விவேகத்தின்படி அந்த மாநிலத்தின் முதன்மைத் தணிக்கையாளரை நியமிக்கலாம். மாநில உயர்நீதிமன்றத்தின் நீதிபதி எக்காரணங்களுக்காகப் பதவி நீக்கம் செய்யப்படுகிறாரோ அதேபோல முதன்மைத் தணிக்கையாளரையும் பதவி நீக்கம் செய்யலாம்.

(2) இந்த உறுப்பு, கூறு (1)ன் கீழ் மாநிலச் சட்டசபையினால் இயற்றப்பட்ட சட்டத்தின் வாயிலாகச் சட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டு விளம்பரப்படுத்தப்பட்ட தேதியிலிருந்து, குறைந்தது மூன்று ஆண்டுகள் முடிவதற்கு முன்னால் மாநிலத்திற்கு முதன்மைத் தணிக்கையாளரை நியமித்தல் கூடாது.

(3) ஒவ்வொரு சட்டமும் முதன்மைத் தணிக்கையாளர் பதவிக்கான நிபந்தனைகள், அவர் ஆற்ற

1. மாநிலம் மற்றும் மத்தியிலும் தலைமைத் தணிக்கையாளர் என்பதை வேறுபடுத்திக் காட்ட, மத்தியில் தலைமைத் தணிக்கையாளர் என்றும் மாநிலத்தில் முதன்மைத் தணிக்கையாளர் என்றும் கொள்ளலாம் என்று குழு நினைக்கின்றது.

வேண்டிய பணி, மேலும் மாநிலக் கணக்குத் தொடர் பாகச் செயலுறுத்தும் அதிகாரத்தினைக் குறிக்கும். மேலும் முதன்மைத் தணிக்கையாளருக்கு அளிக்கப் படும் வரைவூதியம், படித்தொகை மற்றும் ஓய்வூதியம் மாநில வருவாயின் மீது சார்த்தப்படும்.

(4) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிடப்பட்டுள்ளது போல, ஒரு மாநிலத்தின் முதன்மைத் தணிக்கையாளர் இந்தியாவின் தலைமைத் தணிக்கையாளராகவோ வேறு எந்த மாநிலத்தின் முதன்மைத் தணிக்கையாளராகவோ நியமிக்கப்பட லாம். ஆனால் அப்படி நியமனம் செய்யப்பட்ட ஒருவர் தன் பதவிக் காலம் முடிந்த பிறகு இந்திய அரசாங்கத் தின் கீழ் அல்லது வேறு எந்த மாநில அரசாங்கத்தின் கீழும் வேறு எந்தப் பதவியிலும் நியமனம் செய்யப்பட முடியாது.

(5) மாநில முதன்மைத் தணிக்கையாளர் அலு வலகத்தில் பணிபுரிபவர்களின் வரைவூதியம், படித் தொகைகள் மற்றும் ஓய்வூதியம் ஆகியவற்றை முதன்மைத் தணிக்கையாளர் ஆளுநரோடு கலந்தாலோ சித்து நிர்ணயிப்பார். இச்செலவுகள் மாநில வருவாயின் மீது சார்த்தப்படும்.

(6) தற்சமயம் இந்த அரசமைப்பு உறுப்பு 126 மற்றும் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிட்டுள்ளது போல, மாநிலக் கணக்குகள் சம்பந்தமாக இந்தியாவின் தலைமைத் தணிக்கையாளர் சுட்டுகை அளிக்கும் அதிகாரத்தினை இந்த உறுப்பில் உள்ளவை எதுவும் அதனைக் குறைக்காது.

கணக்குத் தணிக்கை அறிக்கை:

211. தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிடப்பட்டுள்ளது போல, நேர்வுக்கேற்ப, இந்தியா வின் தலைமைத் தணிக்கையாளர் அல்லது மாநிலத் தின் முதன்மைத் தணிக்கையாளர் மாநில ஆளுநருக்கு அறிக்கையைச் சமர்பிப்பார். ஆளுநர் மாநிலச் சட்ட சபையில் அதனை வைக்கச் செய்வார்.

# பகுதி - VII

## முதல் பட்டியல் பாகம் II-ல் உள்ள மாநிலங்கள்

*முதல் பட்டியல் பாகம் II-ல்உள்ள மாநிலங்களின் நிர்வாகம்*

*212. (1) இந்தப் பகுதியிலுள்ள மற்ற வகையங்களுக்கு உட்பட்டுத் தற்சமயம் முதல் பட்டியல் பாகம் II-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலம், குடியரசுத் தலைவரால் நிர்வகிக்கப்படும். அவர் தக்கதெனநினைத்தால் முதன்மை ஆணையாளர் அல்லது அவரால் நியமிக்கப்பட்ட துணைநிலை ஆளுநர் அல்லது ஆளுநர் அல்லது அடுத்த மாநிலத்தின் அரசாள்பவர் மூலமாக நிர்வகிக்கலாம்.*

*வரம்புரையாக: குடியரசுத் தலைவர், ஆளுநர் அடுத்த மாநிலத்தின் அரசாள்பவர் மூலமாகச் செயல் பட மாட்டார். தவிர,*

*(அ) ஆளுநர் அல்லது அந்த அரசாள்பவரைக் கலந்தாலோசிக்காமல்; மேலும்,*

*(ஆ) மாநில மக்களுடைய விருப்பத்தை அறிந்து, ஆராய்ந்து தக்கதெனக் கருதுவதை நிருவகிக்கக் குடியரசுத் தலைவர் முயலுவார்.*

---

*1. முதல் பட்டியல் பாகம் II-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களின் மற்றும் மாகாணங்களின் முதன்மை ஆணையர், தனி பணிக் குழுவின் பரிந்துரையின்படி, முதன்மை ஆணையரின் மாகாணங்களாக இருப்பதால், மாநிலங்களின் அரசமைப்பை பற்றி விரிவான வகையங்கள் தேவையில்லை எனக் குழு நினைக்கின்றது.*

*இந்தப் பகுதியில் திருத்தி அமைக்கப்பட்ட வகையங்கள், தனிப் பணிக் குழுவின் பரிந்துரைகள், அரசியல் நிர்ணயசபை ஏற்றுக்கொண்டு குடியரசுத் தலைவரின் உத்தரவினால் செயலுறுத்தப்படும்.*

[1](2) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிடப்பட்டுள்ள எந்த மாநிலத்தை அரசாள்பவரும் அந்த மாநிலத்தைக் காப்பது தொடர்பான அதிகார வரம்பு மற்றும் அதிகாரத்தினை, முற்றிலும் மற்றும் பிரத்தியேகமான அதிகாரத்தினை இந்திய அரசாங்கத்திடம் கொடுத்துவிட்டால், தற்சமயம் முதல் பட்டியல் பாகம் II-ல் குறிப்பிட்டுள்ளது போலவும் மற்றும் இந்த அரசமைப்புப் பாகம் II-ல் குறிப்பிடப்பட்டுள்ள எந்த மாநிலமும் எப்படி நிர்வகிக்கப்பட உள்ள வகையங்களின்படியும் அந்த மாநிலமும் நிர்வகிக்கப்படும்.

உள்ளூர் சட்டசபை அல்லது ஆலோசனைக் குழுவினை உருவாக்குதல் அல்லது நீடித்தல்.

213. முதல் பட்டியல் பாகம் II-ல் குறிப்பிடப்பட்டுள்ளது போலக் குடியரசுத் தலைவர் தன் உத்தரவு வாயிலாக முதன்மை ஆணையாளர் அல்லது துணைநிலை ஆளுநர் மூலமாக நிர்வகிக்கும் மாநிலத்தில்,

(அ) உள்ளூர் சட்டசபை அல்லது

(ஆ) ஆலோசனை குழுவினை

உருவாக்கலாம் அல்லது நீடிக்கலாம். அல்லது அந்த உத்தரவில் குறிப்பிட்டுள்ளது போல ஒவ்வொரு நிலைக்கேற்ப இரண்டினையும் அமைத்து அதன் அதிகாரத்தின்படி செயல்படலாம்.

கூர்க்

214. குடியரசுத் தலைவரால் வேறு வகையம் செய்யும் வரையில், கூர்க் சட்டசபை, மேலவையின் அமைப்பு, அதிகாரம் மற்றும் செயலுறுதல், மேலும் கூர்கில் வருவாயினைச் சேகரிப்பது அதன் செலவினங்கள் முதலியன மாறாமல் இருக்கும்.

1. முதல் பட்டியல் பாகம் III-ல் உள்ள மாநிலங்கள் (உதாரணமாக ஒரிசா மாநிலம்) இந்திய அரசாங்கத்திற்குத் தன் முழு மற்றும் பிரத்தியேக அதிகாரத்தினை விட்டுக் கொடுத்தது போல மாநிலங்களை நிர்வகிக்கக் குழு இந்தக் கூறினைச் சேர்த்துள்ளது.

# பகுதி - VIII

## முதல் பட்டியல் பாகம் IV-ல் உள்ள ஆட்சி நிலவரைகள் மற்றும் அந்தப் பட்டியலில் குறிப்பிடப்படாத மற்ற ஆட்சி நிலவரைகள்

முதல் பட்டியல் பாகம் IV-ல் உள்ள ஆட்சி நிலவரைகள் மற்றும் அந்தப் பட்டியலில் குறிப்பிடப்படாத மற்ற ஆட்சி நிலவரைகளின் நிர்வாகம்

215. (1) முதல் பட்டியல் பாகம் IV-ல் குறிப்பிடப் பட்டுள்ள ஆட்சி நிலவரைகள் மற்றும் இந்திய ஆட்சி நிலவரையிலுள்ள வேறு எந்த ஆட்சி நிலவரைகளும், ஆனால் பட்டியலில் குறிப்பிடாதவைகள் தவிரக் குடியரசுத் தலைவர் தாம் குறித்துரைக்கும் பதவிப் பெயருடன் முதன்மை ஆணையாளர் மூலமாக அல்லது வேறு ஒருவர் மூலமாகத் தாம் தக்கதெனக் கருதுகிறவாறு நிர்வாகம் செய்வார்.

(2) அந்த ஆட்சி நிலவரைகளில் சமாதானம் மற்றும் நல்ல அரசாங்கம் அமையக் குடியரசுத் தலைவர் ஒழுங்குபடுத்தலாம். அப்படி ஒழுங்குறுத்தல் செய்யும் பொழுது நாடாளுமன்றம் உருவாக்கிய சட்டத்தினை நீக்கலாம் அல்லது திருத்தி அமைக்கலாம் அல்லது தற்சமயம் அந்த ஆட்சி நிலவரையில் செல்லுபடியாகும் எந்த நிலவுறும் சட்டமும் குடியரசுத் தலைவரால் அறிவிக்கப்பட்டால், நாடாளுமன்றத்தால் உருவாக்கப்பட்ட சட்டத்திற்கு என்ன அதிகாரம் உண்டோ அதே அதிகாரம் அந்த ஆட்சி நிலவரைக்கும் செல்லுபடியாகும்.

# பகுதி - IX

## ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் உள்ள தொடர்பு நிலைகள்

## அத்தியாயம் I - சட்டமியற்றுத் தொடர்பு நிலைகள்

### சட்டமியற்று அதிகாரப் பகிர்வு

நாடாளுமன்றத்தாலும், மாநிலங்களின்சட்ட மன்றங்களாலும் இயற்றப்படும் சட்டங்களின் அளாவுகை.

*216. (1)* இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, நாடாளுமன்றம், இந்திய ஆட்சி நிலவரை முழுவதற்கும் அல்லது அதன் பகுதி எதற்கும் சட்டங்கள் இயற்றலாம்; ஒரு மாநிலச் சட்டமன்றம், அந்த மாநிலம் முழுவதற்கும் அல்லது அதன் பகுதி எதற்கும் சட்டங்கள் இயற்றலாம்.

*(2)* நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டம் எதனையும், அது ஆட்சி நிலவரைக்குப் புறத்தேயும் செயற்பாடு உடையது என்னும் காரணத்தால் செல்லா நிலையது எனக் கொள்ளுதல் ஆகாது.

நாடாளுமன்றத்தாலும், மாநிலங்களின்சட்ட மன்றங்களாலும் இயற்றப்படும் சட்டங்களின் உறுபொருள்.

[1]*217. (1)* அடுத்துவரும் இரண்டு கூறுகளில் எது எவ்வாறாயிருப்பினும், ஏழாம் பட்டியலிலுள்ள (இந்த அரசமைப்பில் ''ஒன்றியத்துப் பட்டியல்'' எனக் குறிப்பிடப்படும்) 1-ஆம் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும் சட்டங்கள் இயற்றுவதற்கு, நாடாளுமன்றமே தனி நிலை அதிகாரம் உடையது ஆகும்.

---

1. திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் நினைத்தது என்னவென்றால், பழைய சட்டசபை பகிர்ந்தளிப்புத் திட்டத்திற்குப் பதில், மாநிலச் சட்டசபையின் அதிகாரம், ஒருங்கியல் அதிகாரம், நாடாளுமன்றத்தின் சட்டசபை அதிகாரம் ஆகியவை நாடாளுமன்றத்தின் எஞ்சிய அதிகாரமாக இந்தக் கூறில் உள்ளது. இது ஓர் உருவ வடிவமாக இருப்பதால், பெரும்பான்மையான உறுப்பினர்கள் தற்பொழுது நிலவும் ஏற்பாட்டினை மாற்ற வேண்டாம் என்றனர்.

(2) அடுத்துவரும் கூறில் எது எவ்வாறாக இருப்பினும், இதற்கு முந்தைய கூறினுக்கு உட்பட்டு, ஏழாம் பட்டியலிலுள்ள (இந்த அரசமைப்பில் ''ஒருங்கியல் பட்டியல்'' எனக் குறிப்பிடப்படும்.) III-ம் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும், தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிடப்பட்டுள்ளது போல நாடாளுமன்றமும் மாநிலச் சட்டமன்றமும் சட்டங்கள் இயற்றுவதற்கு அதிகாரம் உடையன ஆகும்.

(3) முந்தைய இரு கூறுகளுக்கு உட்பட்டு, முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிடப்பட்டுள்ளது போல, ஏழாம் பட்டியலில் உள்ள (இந்த அரசமைப்பில் ''மாநிலத்துப் பட்டியல்'' எனக் குறிப்பிடப்படும்) II-ம் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும் மாநிலம் ஒன்றன் சட்டமன்றமே, அந்த மாநிலத்திற்கு அல்லது அதன் பகுதி எதற்கும் சட்டங்கள் இயற்றுவதற்குத் தனிநிலை அதிகாரம் உடையது ஆகும்.

(4) முதல் பட்டியல் பாகம் -I அல்லது III-ல் உள்ளடங்கியிராத, எந்தவொரு பொருட்பாட்டினைப் பொறுத்தும், அந்தப் பொருட்பாடு மாநிலத்துப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ளதாக இருப்பதாயினும் கூட, சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுமன்றம் அதிகாரம் உடையது ஆகும்.

உச்சநீதிமன்றம் தொடர்பான சட்டம் இயற்றுதல்.

[1]218. உச்சநீதிமன்றத்தின் அமைப்பு, அதிகார வரம்பு மற்றும் அதிகாரம் தொடர்பான சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்கு தனிநிலை அதிகாரம் உண்டு.

குறித்த சில கூடுதல் நீதிமன்றங்களை நிறுவ வகை செய்வதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம்.

219. இந்த அத்தியாயத்தில் எது எவ்வாறாயிருப்பினும், ஒன்றியத்துப் பட்டியலில் எண்ணிடப்

1. உறுப்பு 217 இருப்பதால், உறுப்பு 218, 220, 221 மற்றும் 222 தேவையில்லை எனக் குழுவில் சில உறுப்பினர்கள் கருதுகின்றனர்.

பட்டுள்ள ஒரு பொருட்பாடு குறித்து, நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டங்களை அல்லது நிலவுறும் சட்டங்களை மேலும் திறம்படச் செயற்படுத்துவதற்காகக் கூடுதல் நீதிமன்றங்களை நிறுவுவதற்கு நாடாளுமன்றம், சட்டத்தினால் வகை செய்யலாம்.

உயர்நீதிமன்றங்கள் அமைத்தல் மற்றும் அதனை ஒழுங்குபடுத்துதல் தொடர்பான சட்டம் இயற்றுதல்.

[1]220. (1) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிடப்பட்டுள்ளது போல, மாநிலத்தில் அமைந்துள்ள உயர்நீதிமன்றத்தின் அமைப்பு மற்றும் அதனை ஒழுங்குறுத்துதல் தொடர்பான சட்டங்கள் இயற்ற மாநிலச் சட்டசபைக்கு தனிநிலை அதிகாரம் உண்டு.

(2) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் II-ல் குறிப்பிட்டுள்ளது போல, மாநிலத்தில் அமைந்துள்ள உயர்நீதிமன்றத்தின் அமைப்பு மற்றும் அதன் ஒழுங்குறுத்துதல் சம்பந்தமான சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு.

சட்டம் இயற்றுதல் தொடர்பான உயர்நீதிமன்றத்தின் அதிகாரம் மற்றும் அதிகார வரம்புகள்.

[1]221. (1) ஒன்றியத்துப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகள் குறித்து உயர்நீதிமன்றத்தின் அதிகாரம் மற்றும் அதிகார வரம்பு தொடர்பாக நாடாளுமன்றம் தன் தனிநிலை அதிகாரத்தின் மூலம் சட்டம் இயற்றலாம்.

(2) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிட்டுள்ளது போல, அதன் தொடர்பான அதன் நிலவரையில் உள்ள உயர்நீதிமன்றம் செயலுறுத்தும் அதிகார வரம்பினைப் பற்றி மாநிலச் சட்டசபைக்குச் சட்டம் இயற்ற தனிநிலை அதிகாரம் உண்டு. அப்பொழுது அந்த மாநிலம் அல்லது நிலவரையில் மாநிலப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகள் எதனைப் பொறுத்தும் சட்டம் இயற்ற அதிகாரம் உடையது ஆகும்.

1. உறுப்பு 217 இருப்பதால், உறுப்பு 218, 220, 221 மற்றும் 222 தேவையில்லை எனக் குழுவில் சில உறுப்பினர்கள் கருதுகின்றனர்.

(3) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிட்டுள்ளது போல, அதன் தொடர்பான அதன் நிலவரையில் உள்ள, உயர்நீதிமன்றம் செயலுறுத்தும் அதிகார வரம்பினைப் பற்றிச் சட்டம் இயற்ற மாநில சட்டசபைக்கும் மற்றும் நாடாளுமன்றத்திற்கும் அதிகாரம் உண்டு. அப்பொழுது அந்த மாநிலம் அல்லது நிலவரையில் ஒருங்கியல் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகள் எதனைப் பொறுத்தும் சட்டம் இயற்ற தகுதியுடையது ஆகும்.

(4) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் II-ல் குறிப்பிட்டுள்ளது போல, அதன் நிலவரையில் உள்ள உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்பினைப் பற்றிச் சட்டம் இயற்ற நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. அப்பொழுது அந்த மாநிலம் அல்லது நிலவரையில் மாநிலப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகள் எதனைப் பொறுத்தும் சட்டம் இயற்ற அதிகாரம் உடையது ஆகும்.

உயர்நீதிமன்றங்கள் உரிமையியல் மற்றும் குற்றவியல் பொருட்பாடுகள் சம்பந்தமாக சட்டம் இயற்றும்போது பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள்.

[1]222. தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிட்டுள்ளது போல, உயர்நீதிமன்றம் எங்கு அமைந்துள்ளதோ அங்கு உயர்நீதிமன்றங்கள் உரிமையியல் மற்றும் குற்றவியல் பொருட்பாடுகள் குறித்துப் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள் பற்றி சட்டம் இயற்ற நாடாளுமன்றம் மற்றும் மாநிலச் சட்டசபைக்கு அதிகாரம் உண்டு.

சட்டம் இயற்றுதலில் எஞ்சிய அதிகாரங்கள்.

223. (1) ஒருங்கியல் பட்டியல் அல்லது மாநிலப் பட்டியலில் எண்ணிடப்படாத பொருட்பாடுகள் குறித்துச் சட்டம் இயற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்குத் தனிநிலை அதிகாரம் உண்டு.

---

1. உறுப்பு 217 இருப்பதால், உறுப்பு 218, 220, 221 மற்றும் 222 தேவையில்லை எனக் குழுவில் சில உறுப்பினர்கள் கருதுகின்றனர்.

(2) அந்த அதிகாரம், இரண்டில் ஏதாவது ஒரு பட்டியலில் குறிப்பிடப்படாத, வரி விதிக்கும் அதிகாரத்தினை உள்ளடக்கும்.

முதல் பட்டியல் பாகம் III-ல் உள்ள மாநிலங்களின் சில பொருட்பாடுகள் குறித்து நாடாளுமன்றம் சட்டம் இயற்றும் அதிகாரத்தின் மீதான கட்டுப்பாடு.

[1]224. இந்த அரசமைப்பில் உறுப்பு 217 கூறு (1) எது எவ்வாறாயிருப்பினும் -

(அ) எந்த மாநிலத்திலும் தபால் மற்றும் தந்தி சம்பந்தமான பொருட்பாடுகள் குறித்துச் சட்டம் இயற்ற நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் கிடையாது. இந்த அரசமைப்பு ஆரம்ப காலத்தில், முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களின் தொகுப்பு அல்லது எந்த மாநிலத்திலும் தபால் மற்றும் தந்தி சம்பந்தமான பொருட்பாடுகள் குறித்துச் சட்டம் இயற்ற நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் கிடையாது. இந்திய அரசாங்கம் மற்றும் மாநிலம் அல்லது மாநிலங்களின் தொகுப்பு இவைகளுக்கிடையேயான[1] இந்திய அரசாங்கம் அவ்வதிகாரம் பெற்றதாகும்.

வரம்புரையாக: மாநிலம் அல்லது மாநிலங்கள் தொகுப்பில், தபால் மற்றும் தந்தியினைக் கட்டுப்படுத்தி ஒழுங்குறுத்துவதில் நாடாளுமன்றம் சட்டம் இயற்றுவதை இந்தக் கூறில் உள்ளது எதுவும் தடுக்காது.

(ஆ) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிட்டுள்ளது போல எந்த மாநிலத்திலும் உள்ள தொலைபேசி, கம்பியில்லாத் தந்தி, ஒலிபரப்பு மற்றும் செய்தித் தொடர்பினைப் பொறுத்து, நாடாளுமன்றத்திற்குச் சட்டம் இயற்றும் அதிகாரம் உண்டு. அந்த

---

1. அரசமைப்பு இறுதியாக அரசியல் நிர்ணயசபையினால் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு முன், இந்த அத்தியாயத்தின் சில உறுப்புகள் மாற்றி அமைக்கப்படுமெனக் குழு நினைக்கின்றது.

அதிகாரம் கட்டுப்படுத்துவதற்கும் ஒழுங் குறுத்துவதற்கும் மட்டுமே.

(இ) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிட்டுள்ளது போலக் கம்பெனிகள் சம்பந்தமாக நாடாளுமன்றத்திற்கு உள்ள சட்டம் இயற்றும் அதிகாரம், கம்பெனி களை ஒன்று சேர்த்தல், ஒழுங்குறுத்துதல், மாநிலத்தின் எல்லைக்குள் வியாபாரம் செய்யும் மாநிலத்தின் சொந்தமான அல்லது கட்டுப்பாட்டில் உள்ள கம்பெனிகளை மூடு வதற்கான சட்டத்தினை இயற்றும் அதிகாரத் தினை உள்ளடக்காது.

முதல் பட்டியல் பாகம் III-ல் உள்ள மாநிலங்களுக்குச் சட்டம் இயற்றும் அதிகாரத்தின் அளாவுகை

225. இந்த அத்தியாயத்தில் எது எவ்வாறிருப் பினும், தற்சமயம் முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிட்டுள்ளது போல, இந்திய அரசாங்கத்திற்கும் மாநிலத்திற்கும் அல்லது மாநிலங்களின் தொகுப்பி னுக்கும் இடையே ஏற்பட்ட ஒப்பந்தம், அந்த ஒப்பந் தத்தின் வரையறைகளுக்கு உட்பட்டு, மாநிலம் அல்லது மாநிலங்கள் தொகுப்பிற்கு நாடாளுமன்றம் சட்டம் இயற்றும் அதிகாரம் உடையது ஆகும்.

நாட்டின் நலன் கருதி மாநிலத்துப் பட்டியலிலுள்ள பொருட்பாடு எதனைப் பொறுத்தும் சட்டமியற்ற நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம்.

[1]226. இந்த அத்தியாயத்தின் மேலே கண்ட வகையங்களில் எது எவ்வாறிருப்பினும், மாநிலங் களவைக்கு வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பகுதியினருக்குக் குறையாதவர் களால் ஆதரிக்கப்படும் ஒரு தீர்மானத்தின் வாயிலாக, மாநிலத்துப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட் பாடுகளில் எதனையும் குறித்துரைத்து, அதனைப் பொறுத்து நாடாளுமன்றம் சட்டம் இயற்ற வேண்டியது

---

1. மாநிலப் பட்டியலில் உள்ள எந்தப் பொருட்பாடும் தேசிய முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தால், நாடாளுமன்றத்திற்குச் சட்டம் இயற்றும் அதிகாரத்திற்கு வகை செய்ய வேண்டுமெனக் குழு நினைத்ததால் இந்த உறுப்பு சேர்க்கப்பட்டுள்ளது.

நாட்டின் நலனுக்கு அவசியமானது அல்லது உகந்தது என்று விளம்புமாயின், அந்தப் பொருட்பாடு பொறுத்து இந்திய ஆட்சி நிலவரை முழுமைக்கும் அல்லது அதன் பகுதி எதற்கும் நாடாளுமன்றம் சட்டங்கள் இயற்றுவது சட்ட முறைமையானது ஆகும்.

நெருக்கடி நிலைச் சாற்றாணை செயற்பாட்டில் இருக்குங்கால், மாநிலத்துப் பட்டியலிலுள்ள எந்தப் பொருட்பாட்டினைப் பொறுத்தும் சட்டமியற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரம்

227. (1) இந்த அத்தியாயத்தில் எது எவ்வாறாயிருப்பினும், நெருக்கடி நிலைச் சாற்றாணை ஒன்று செயற்பாட்டில் இருக்குங்கால், மாநிலத்துப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும் இந்திய ஆட்சி நிலவரை முழுவதற்கும் அல்லது அதன் பகுதி எதற்கும் சட்டமியற்றுவதற்கு நாடாளுமன்றம் அதிகாரம் உடையது ஆகும்.

(2) நெருக்கடி நிலைச் சாற்றாணை ஒன்று பிறப்பிக்கப்பட்டதன் வாயிலாக மட்டுமே தகுதிறம் பெற்று அதன்படி நாடாளுமன்றம் இயற்றும் எந்தச் சட்டமும், அந்தச் சாற்றாணை செயல்பாடு அற்றுப் போய் ஆறு மாத கால அளவு கழிவுறுவதன் மேல், நாடாளுமன்றம் தகுதிறம் பெற்றிராத அளவிற்கு செல்திறம் அற்றதாகி விடும்; ஆனால், அக்கால அளவு கழிவுறுவதற்கு முன்பு செய்யப்பட்டவை அல்லது செய்யாது விடப்பட்டவை பாதிக்கப்படுவதில்லை.

[1]228. 226 மற்றும் 227 ஆகிய உறுப்புகளில் உள்ள எதுவும், சட்டம் எதுவும் இயற்றுவதற்கு இந்த அரசமைப்பின்படி ஒரு மாநிலச் சட்டமன்றத்திற்

---

1. மாநிலத்துப் பட்டியலில் உள்ள பொருட்பாடு தேசிய முக்கியத்துவம் பெற்றதாக நாடாளுமன்றம் சட்டம் இயற்றுமானால் அது ஒருங்கியல் பட்டியலில் உள்ள பொருட்பாடாகக் கருத வேண்டுமெனக் குழுவின் பெரும்பான்மையான அங்கத்தினர்கள் முடிவெடுத்தனர். ஆனால் அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் மாநிலத்திற்குச் சட்டம் இயற்றும் அதிகாரம் இருப்பதை எதிர்த்தார். அப்படி இருந்தால் ஒன்றியம் மாநிலத்து அதிகாரத்தினைப் படிப்படியாக ஆக்கிரமிப்பதாகும். அப்பொழுது அரசமைப்பின்கூட்டரசமைப்பு இல்லாமல் போகும்.

நாடாளுமன்றத்தால் 226 மற்றும் 227 ஆகிய உறுப்புகளின் படி இயற்றப்பட்ட சட்டங்களுக்கும், மாநிலச் சட்டமன்றங்களால் இயற்றப்பட்ட சட்டங்களுக்கும் இடையேயுள்ள முரண்பாடு.

குள்ள அதிகாரத்தைக் கட்டுப்படுத்துவதில்லை; ஆனால் ஒரு மாநிலச் சட்டமன்றம் இயற்றிய சட்டம் ஒன்றின் வகையம் எதுவும், மேற்சொன்ன உறுப்புகளில் ஒன்றின் படியுள்ள அதிகாரத்தின் கீழ், நாடாளுமன்றம் இயற்றிய ஒரு சட்டத்தின் வகையம் எதற்கும் முரணாக இருக்குமாயின், நாடாளுமன்றம் இயற்றிய சட்டமே, அது மாநிலச் சட்டமன்றம் இயற்றிய சட்டத்திற்கு முன்போ பின்போ நிறைவேற்றப்பட்டிருந்தாலும், மேலோங்கி நிற்கும்; மாநிலச் சட்டமன்றம் நிறைவேற்றிய சட்டம், எந்த அளவிற்கு முரணாகவுள்ளதோ அந்த அளவிற்கு, நாடாளுமன்றம் இயற்றிய சட்டம் தொடர்ந்து செல்திறம் பெற்றிருக்கின்ற காலம் வரையில் செயற்பாடு அற்றதாகிவிடும்.

ஒன்று அல்லது இரண்டுக்கு மேற்பட்ட மாநிலங்களுக்காக, அவற்றின் இசைவுடன் சட்டமியற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரமும், அத்தகைய சட்டத்தைப் பிற மாநிலம் எதுவும் ஏற்று மேற்கொள்ளுதலும்.

229. (1) 226 மற்றும் 227 ஆகிய உறுப்புகளில் வகைசெய்யப்பட்டுள்ள முறை தவிர, மாநிலங்களுக்காகச் சட்டமியற்றுவதற்கு, நாடாளுமன்றம் அதிகாரம் பெற்றிராத பொருட்பாடுகளில் எதனையும் தத்தம் மாநிலங்களில் நாடாளுமன்றம் சட்டத்தினால் ஒழுங்குறுத்துவது விரும்பத் தக்கதென மாநிலம் அல்லது மாநிலங்களின் சட்டமன்றங்கள் கருதி, அதன்படி அந்த மாநிலங்களின் சட்டமன்ற அவைகள் அனைத்தும் தீர்மானங்களை நிறைவேற்றுமாயின், அதற்கிணங்க, அந்தப் பொருட்பாட்டை அவ்வாறு ஒழுங்குறுத்துவதற்கான சட்டம் ஒன்றை, நாடாளுமன்றம் இயற்றுவது சட்டமுறையானது ஆகும். அவ்வாறு இயற்றப்படும் சட்டம் எதுவும், அத்தகைய மாநிலங்களுக்குப் பொருந்துறுவதாகும்; மேலும், பின்னர் பிற மாநிலம் எதுவும், அந்த மாநிலச் சட்டமன்ற அவையினால் அல்லது இரண்டு அவைகள் இருக்குமிடத்து, அவ்விரண்டு அவைகளினாலும் நிறைவேற்றப்படும் தீர்மானத்தின் வழி அச்சட்டத்தை ஏற்று மேற்கொள்ளுமாயின், அச்சட்டம் அந்த மாநிலம் அல்லது மாநிலங்களுக்குப் பொருந்துறுவதாகும்.

[1](2) நாடாளுமன்றத்தால் அவ்வாறு நிறைவேற்றப்படும் சட்டம் எதுவும், அதேபோன்ற முறையில் நிறைவேற்றப்படும் அல்லது ஏற்று மேற்கொள்ளப்படும் நாடாளுமன்றச் சட்டம் ஒன்றினால் திருத்தப்படலாம் அல்லது நீக்கறவு செய்யப்படலாம்; ஆனால், அச்சட்டம் பொருந்துறும் மாநிலம் எதனையும் பொறுத்தவரை, அந்த மாநிலத்தின் சட்டமன்றச் சட்டம் ஒன்றினால் அது திருத்தப்படுதலோ நீக்கறவு செய்யப்படுதலோ ஆகாது.

பன்னாட்டு உடன்பாடுகளைச் செல்திறப்படுத்துவதற்காகச் சட்டமியற்றுதல்

[2]230. இந்த அத்தியாயத்தின் மேலே கண்ட வகையகங்கள் எஃது எவ்வாறிருப்பினும், பிற நாட்டுடன் அல்லது நாடுகளுடன் செய்து கொள்ளப்பட்ட உடன் படிக்கை, ஒப்பந்தம் அல்லது இணங்காறு எதனையும் செயல்படுத்துவதற்காக எந்த மாநிலம் அல்லது பகுதி எதற்கும் சட்டம் எதனையும் இயற்றுவதற்கு நாடாளுமன்றம் அதிகாரம் உடையது ஆகும்.

நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டங்களுக்கும் மாநிலங்களின் சட்டமன்றங்களால் இயற்றப்பட்ட சட்டங்களுக்கும் இடையேயுள்ள முரண்பாடு.

231. (1) மாநிலம் ஒன்றின் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின் வகையம் எதுவும் நாடாளுமன்றம் தனக்குள்ள தகுதித் திறனைக் கொண்டு

1. மாநிலங்கள் ஒப்புதலோடு நாடாளுமன்றத்தால் நிறைவேற்றப்பட்ட ஒரு சட்டம், எந்த மாநிலத்திற்கு அந்தச் சட்டம் பொருந்துகிறதோ அந்தச் சட்டசபை, சட்டத்தின் வாயிலாகத் திருத்தவோ அல்லது நீக்குதலோ கூடாது. ஆனால் அப்படித் திருத்தம் அல்லது நீக்குதல் செய்ய வேண்டுமென்றால் முதலில் அந்தச் சட்டம் எப்படி நிறைவேற்றப்பட்டு அல்லது ஏற்றுக்கொள்ளப்பட்டதோ அதேபோல நாடாளுமன்றச் சட்டத்தின் வாயிலாகத் தான் செய்ய முடியும் எனக் குழு நினைக்கின்றது. ஆஸ்திரேலிய காமன்வெல்த் அரசமைப்புச் சட்டம் பிரிவு 51 (XXXVII) பிரிவு 100 இரண்டையும் இணைத்துப் படிக்கும்பொழுது இருக்கும் வகையங்களுக்கு ஏற்றாற் போல இஃது அமைந்துள்ளது.

2. எந்த மாநிலம் அல்லது பகுதி எதற்கும், பிற நாட்டுடன் அல்லது நாடுகளுடன் செய்து கொண்ட உடன்படிக்கை ஒப்பந்தம் அல்லது இணங்காது எதனையும் செயல்படுத்த நாடாளுமன்றத்திற்குச் சட்டம் இயற்றக் கட்டுப்படுத்தப்படாத அதிகாரம் இருத்தல் வேண்டுமெனக் குழு கருதுகின்றது.

இயற்றும் சட்டம் ஒன்றின் வகையம் எதற்கும் அல்லது நிலவுறு சட்டம் ஒன்றின் தொடர்பாக நாடாளுமன் றத்திற்குச் சட்டம் இயற்றும் அதிகாரம் எதற்கும் முரணாக இருக்குமாயின், நாடாளுமன்றம் இயற்றிய சட்டம், அந்த மாநிலச் சட்டமன்றம் இயற்றிய சட் டத்திற்கு முன்போ பின்போ நிறைவேற்றப்பட்டிருந் தாலும், அச்சட்டமே அல்லது, நேர்வுக்கேற்ப, நில வுறும் சட்டமே இந்த உறுப்பு (2) ஆம் கூறின் வகை யங்களுக்கு உட்பட்டு, மேலோங்கி நிற்கும்; அந்த மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் அவ்வாறு முரணாக உள்ள அளவிற்கு, இல்லா நிலை யது ஆகும்.

(2) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் Iல் குறிப் பிடப்பட்டுள்ளது போல, ஒருங்கியல் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனைப் பொறுத்தும், ஒரு மாநிலச் சட்டமன்றத்தால் இயற்றப் பட்ட ஒரு சட்டம், அதே பொருட்பாட்டினைப் பொறுத்து, நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட ஒரு முந்தைய சட்டத்தின் அல்லது ஒரு நிலவுறும் சட்டத் தின் வகையங்களுக்கு முரணான வகையம் எதனை யும் கொண்டிருக்குமிடத்து, மாநிலச் சட்டமன்றத் தால் இயற்றப்பட்ட அத்தகைய சட்டம், ஏற்கனவே குடியரசுத் தலைவரின் ஓர்வுக்காக வைக்கப்பட்டிருந்து அவருடைய ஏற்பிசைவையும் பெற்றிருக்குமாயின், அதுவே அந்த மாநிலத்தில் மேலோங்கி நிற்கும்.

*வரம்புரையாக:* இந்தக் கூறிலுள்ள எதுவும், மாநிலச் சட்டமன்றத்தால் அவ்வாறு இயற்றப்பட்ட சட்டத்துடன் சேர்க்கின்ற, அதனைத் திருத்துகின்ற, மாற்றுகின்ற அல்லது நீக்கறவு செய்கின்ற சட்டம் ஒன்று உள்ளடங்கலாக, அதே பொருட்பாடு பொறுத்த சட்டம் எதனையும், எச்சமயத்திலும் நாடாளுமன்றம் இயற்றுவதற்குத் தடையூறு ஆவதில்லை.

## சட்டமியற்றும் அதிகாரத்திற்குள்ள கட்டுப்பாடுகள்

பரிந்துரைகள், வேண்டுறுத்தங்கள் செய்முறை சார்ந்த, பொருட்பாடுகளாக மட்டுமே கொள்ளுதல்வேண்டும்.

232. தற்சமயம் முதல் பட்டியல் பாகம் Iல் குறிப்பிடப்பட்டுள்ளது போல, நாடாளுமன்றம் அல்லது மாநிலச் சட்டமன்றம் இயற்றிய சட்டம் மற்றும் அதன் வகையம் எதற்கும், இந்த அரசமைப்பில் -

(அ) ஆளுநரின் பரிந்துரை வேண்டுறுத்தப்பட்டவிடத்து, ஆளுநர் அல்லது குடியரசுத் தலைவர்,

(ஆ) குடியரசுத் தலைவரின் பரிந்துரை வேண்டுறுத்தப்பட்டவிடத்துக் குடியரசுத் தலைவர், ஏற்பிசைவு அளித்துவிட்ட நிலையில், இந்த அரசமைப்பின்படி வேண்டுறுத்தப்படும் பரிந்துரை அளிக்கப்படவில்லை என்ற காரணத்தால் மட்டுமே, அவை செல்லா நிலையன ஆவதில்லை.

# அத்தியாயம் - II

## நிருவாகத் தொடர்பு நிலைகள்

### பொதுவியல்

மாநிலங்களின் மற்றும் ஒன்றியத்தின் கடமைப்பாடு

233. மாநிலம் ஒவ்வொன்றின் ஆட்சி அதிகாரமும், நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டங்களுக்கும் அந்த மாநிலத்திற்குப் பொருந்துகிற நிலவுறு சட்டங்களுக்கும் இணங்கி, இயங்குவதை உறுதி செய்யும் வகையில் செலுத்தப்படுதல் வேண்டும். மேலும், மேற்சொன்ன நோக்கம் நிறைவேறுவதற்குத் தேவையென இந்திய அரசாங்கம் கருதும் பணிப்புரைகளை மாநிலம் எதற்கும் இடுவதும் ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்.

234. (1) மாநிலம் ஒவ்வொன்றின் ஆட்சி அதிகாரமும், ஒன்றியத்து ஆட்சி அதிகாரம் செலுத்தப்

ஒன்றிய அதிகாரத்திற்கு மாநிலங்கள் தடை அல்லது குந்தகம் விளைவிக்காத கடமைகள்.

படுவதற்குத் தடங்கலோ குந்தகமோ இல்லாதவாறு செலுத்தப்படுதல் வேண்டும்; மேலும் மேற்சொன்ன நோக்கம் நிறைவேறுவதற்குத் தேவையென இந்திய அரசாங்கம் கருதும் பணிப்புரைகளை மாநிலம் எதற்கும் இடுவதும், ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்.

(2) தேசிய அல்லது இராணுவத் துறை முக்கியத்துவம் வாய்ந்தவை எனப் பணிப்புரையில் விளம்பப்படும் செய்தித் தொடர்பு சாதனங்களை அமைத்தல், அவற்றைப் பேணி வருதல் ஆகியவை குறித்த பணிப்புரைகளை மாநிலம் எதற்கும் இடுவது ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்.

வரம்புரையாக: இந்தக் கூறிலுள்ள எதுவும், நெடுஞ்சாலைகள் அல்லது நீர்வழிகள் எவற்றையும், தேசிய நெடுஞ்சாலைகள் அல்லது தேசிய நீர்வழிகள் என விளம்புவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரத்தையோ, அவ்வாறு விளம்பப்பட்ட நெடுஞ்சாலைகள் அல்லது நீர்வழிகளைப் பொறுத்து ஒன்றியத்திற்குள்ள அதிகாரத்தையோ, கடற்படை, தரைப்படை, வான்படை ஆகியவற்றைப் பொறுத்த தனது செயற்பணிகளில் அடங்கும், செய்தித் தொடர்புச் சாதனங்களை அமைப்பதற்கும், அவற்றைப் பேணி வருவதற்கும் ஒன்றியத்திற்குள்ள அதிகாரத்தையோ, கட்டுப்படுத்துவதாகக் கருதப்படுதல் ஆகாது.

குறித்த சில நேர்வுகளில் மாநிலங்களுக்கு அதிகாரங்கள் முதலியவற்றை வழங்குவதற்கு ஒன்றியத்திற்குள்ள அதிகாரம்

*235.* (1) இந்த அரசமைப்பில் எது எவ்வாறாயிருப்பினும், மாநிலம் ஒன்றின் ஆளுநர் அந்த மாநிலத்தின் ஆட்சி அதிகாரத்தில் அடங்கிய பொருட்பாடு ஒன்றன் தொடர்பான செயற்பணிகளை, இந்திய அரசாங்கத்தின் இசைவுடன் வரைக்கட்டுடனோ வரைக்கட்டின்றியோ, அந்த அரசாங்கத்திடம் அல்லது அதன் அலுவலர்களிடம் ஒப்படைக்கலாம்.

(2) மாநிலச் சட்டமன்றம் அதன் தொடர்புள்ள பொருட்பாடு எதனைப் பற்றியும் சட்டம் இயற்ற

அதிகாரம் இல்லாதிருந்தாலும், நாடாளுமன்றத்தின் சட்டம் எந்த மாநிலத்திற்கும் வரிவிதிக்க அதிகார மளிக்கும், அல்லது மாநிலம் அல்லது அதன் அலு வலர்களுக்கு வரி விதிப்பதற்கு அதிகாரமளிக்கும்.

(3) இந்த உறுப்பின் பயன்திறன்வழி, ஒரு மாநிலத்திற்கு அல்லது அதன் அலுவலர்களுக்கு அல்லது அதிகார அமைப்புகளுக்கு அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்குமிடத்து அல்லது கடமைகள் விதிக்கப்பட்டிருக்குமிடத்து, அந்த அதிகாரங்களைச் செலுத்துவதையும் கடமைகளை ஆற்றுவதையும் பொறுத்து, அந்த மாநிலம் செய்ய நேர்ந்த கூடுதல் நிருவாகச் செலவுகள் குறித்து, ஒப்பியவாறான தொகையோ, அல்லது ஒப்புதல் ஏற்படாதவிடத்து, இந்தியாவின் தலைமை நீதிபதியால் அமர்த்தப்பெறும் ஒரு பொதுவர் தீர்மானிக்கும் தொகையோ அம்மாநி லத்திற்கு இந்திய அரசாங்கம் வழங்குதல் வேண்டும்.

சில மாநிலங்களில் சட்டமியற்றுதல், ஆட்சித்துறை அல்லது நீதித்துறைப் பணிகளைஒன்றியம் மேற்கொள்ளுவதற்கான அதிகாரம்.

236. (1) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிட்டுள்ளவாறு, இந்திய அரசாங்கம் எந்த மாநிலத்தோடும் ஒப்பந்தம் வாயிலாக, ஆனால் இந்த அரசமைப்பில் உள்ள ஒன்றியம் மற்றும் அந்த மாநிலத் தொடர்பின் வகையங்களுக்கு உட்பட்டு, அந்த மாநிலத் தில் ஆட்சித்துறை, சட்டமியற்றுத்துறை அல்லது நீதித் துறைப் பணிகளை மேற்கொள்ளலாம்.

(2) தற்சமயம் முதல் பட்டியலில் குறிப்பிடப் படாத, இந்திய அரசாங்கம் மற்ற இந்திய மாநில அரசாங்கத்துடன் உடன்பாடு செய்து கொள்ளலாம். ஆனால் அத்தகைய உடன்பாடு ஒவ்வொன்றும், அயல் நாட்டில் அதிகாரம் செலுத்துவது தொடர்பாக நிகழுறு காலத்தில் செல்லாற்றலிலுள்ள சட்டத்திற்கு உட்பட்ட தாகவும் அதன்வழி அமைவதாகவும் இருத்தல் வேண்டும்.

விளக்கம்: இந்தக் கூறில் ''இந்திய மாநிலம்'' என்பது, எந்த ஆட்சி நிலவரை இந்தியாவின் ஆட்சி

நிலவரையாக இல்லையோ, அதனைக் ''குடியரசுத் தலைவர் மாநிலம்'' என அங்கீகரித்தல்.

(3) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிட்டுள்ளது போல, இந்த உறுப்புக் கூறு (1)-ன் கீழ், அரசமைப்பு உறுப்பு 237-ன் கீழ் ஏற்கனவே அந்த மாநிலத்தோடு செய்து கொண்ட உடன்படிக்கையின் வகையங்களுக்கு உட்பட்டு, எந்த மாநிலமும் உடன் படிக்கை செய்யலாம். அந்தப் பொருட்பாடுகளுக்கு வகையம் செய்யப்பட்டிருப்பது, பின்னால் செய்து கொண்ட உடன்பாடு நீக்கப்பட்டதாகவும் முதலில் செய்து கொண்ட உடன்பாடு முடிந்த தேதியிலிருந்து செயலற்றதாகவும் போகும்.

(4) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிட்டவாறு, இந்த உறுப்புக்கூறு (1)ன் கீழ் ஒன்றியத்திற்கும் மாநிலத்திற்குமிடையே முடிவடைந்த உடன்படிக்கை,

(அ) அந்த உடன்படிக்கையில் குறிப்பிட்டுள்ள வாறு, ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரம் எந்தப் பொருட்பாடு குறித்தும் அமையும்;

(ஆ) அந்த உடன்படிக்கையில் குறிப்பிட்டுள் ளது போல நாடாளுமன்றத்திற்கு எந்தப் பொருட்பாடு குறித்தும் சட்டம் இயற்ற அதிகாரம் உண்டு; மற்றும்

(இ) இந்த அரசமைப்பு உறுப்பு 114 கூறு (2)ல் உள்ள வகையங்களுக்கு உட்பட்டு, அந்த உடன்பாட்டில் குறிப்பிட்டுள்ளது போல, எந்தப் பொருட்பாடு குறித்தும் உச்சநீதி மன்றத்தின் அதிகார வரம்பு அமையும்.

*முதல் பட்டியல் பாகம் III-ல் உள்ள மாநிலங்களின் சட்டத் துறை, ஆட்சித் துறை அல்லது*

237. (1) குடியரசுத் தலைவரின் முன்ஒப்புதலோடு முதல் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநில அரசாங்கம் முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிடப்பட்டுள்ள எந்த மாநிலத்தோடும் செய்து கொண்ட உடன்படிக்கையின்படி, அந்த உடன்பாடு

*நீதித்துறைப் பணிகளைச் செய்ய, முதல் பட்டியல் பாகம் I-ல் உள்ள மாநிலங்களின் அதிகாரம்.*

மாநில பட்டியல் அல்லது ஒருங்கியல் பட்டியலில் உள்ள பொருட்பாடுகள் குறித்ததாக இருந்தால், பின்னால் கூறப்பட்ட மாநிலங்களின் சட்டமியற்றுத் துறை, ஆட்சித்துறை அல்லது நீதித்துறைப் பணிகளைச் செய்யலாம்.

(2) தற்சமயம் முதல் பட்டியல் பாகம் Iல் குறிப்பிடப்பட்டுள்ள, மாநிலம் பாகம் IIIல் உள்ள மாநிலத்தோடு, இந்த உறுப்புக் கூறு (1)ன் கீழ்ச் செய்து கொண்ட உடன்படிக்கை முடிவுற்றால் -

(அ) அந்தப் பட்டியல் பாகம் Iல் குறிப்பிட்டுள்ள மாநிலத்தின் ஆட்சி அதிகாரம், அந்த உடன் படிக்கையில் குறிப்பிட்டுள்ளவாறு எந்தப் பொருட்பாடு குறித்தும் நீளும்;

(ஆ) அந்தப் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிடப் பட்டுள்ள மாநிலத்தின் சட்டசபைக்கு உடன்பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ள எந்தப் பொருட்பாடு குறித்தும் சட்டம் இயற்ற அதிகாரம் உண்டு; மேலும்

(இ) அந்தப் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிடப் பட்டுள்ள உயர்நீதிமன்றம் மற்றும் தகுமான நீதிமன்றங்களுக்கு, உடன்படிக்கையின்படி குறிப்பிடப்பட்டுள்ள எந்தப் பொருட்பாடு குறித்தும் அதிகார வரம்பு அமையும்.

*அரசின் சட்டங்கள், பதிவணங்கள் மற்றும் நீதித்துறை நடவடிக்கைகள்.*

[1]238. (1) ஒன்றியத்து மற்றும் ஒவ்வொரு மாநிலத்து அரசின் சட்டங்கள், நீதித்துறை நடவடிக்

1. இந்த உறுப்பு, பாகம் III-ன் அடிப்படை உரிமைகளுடன் இருப்பதைவிட, இந்த அத்தியாயத்தில் சேர்க்கப்பட்டிருப்பதே சாலச் சிறந்ததாக குழு நினைக்கின்றது.

முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப்பிடப்பட்டுள்ள ஒவ்வொரு மாநிலத்திற்கும் இந்த வகையம் அளித்தல் கூடாதெனக் குழு நினைக்கின்றது. ஏனென்றால் உரிமையியல் செயல்முறை குற்றவியல் செயல் முறை மற்றும் சான்று ஆகியவை

(தொடர்ச்சி அடுத்தப் பக்கம்)

கைகள், ஆகியவற்றின் மீது இந்திய ஆட்சி நிலவரை எங்கணும் முழுநிறை நம்பிக்கையும், நன்மதிப்பும் வைக்கப்படுதல் வேண்டும்.

(2) இந்த உறுப்பு (1) ஆம் கூறில் சுட்டப்பட்ட சட்டங்கள், பதிவணங்கள், நடவடிக்கைகள் ஆகிய வற்றை மெய்ப்பிக்க வேண்டியதும், அவற்றின் செயல் திறனைத் தீர்மானிக்க வேண்டியதும், எந்த முறையில், எந்த நிலையில் இருத்தல் வேண்டும் என்பது நாடாளு மன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தில் வகை செய்யப் பட்டவாறு இருத்தல் வேண்டும்.

(3) இந்திய ஆட்சி நிலவரையின் பகுதி எதிலு முள்ள உரிமையியல் நீதிமன்றங்களால் வழங்கப்பட்ட இறுதித் தீர்ப்புரைகள் அல்லது பிறப்பிக்கப்பட்ட ஆணைகள், அந்த ஆட்சி நிலவரை எங்கணும் சட்டத் திற்கிணங்க நிறைவேற்றப்படத் தகுவன ஆகும்.

வரம்புரையாக: இந்த உறுப்புக்கூறு (1) மற்றும் (3)ல் உள்ள வகையங்கள் அரசின் சட்டங்கள், பதிவணங்கள் மற்றும் நீதித்துறை நடவடிக்கைகளுக்கு அமையா. மேலும் முதல் பட்டியல் பாகம் III-ல் குறிப் பிடப்பட்டுள்ள எந்த மாநிலத்திலும் உரிமையியல் நீதிமன்றங்கள் அளித்த இறுதியான தீர்ப்பு அல்லது உத்தரவிற்கும் அமையாது. ஒன்றியம் மற்றும் அந்த மாநிலத்திற்கிடையே உடன்பாடு ஏற்பட்டிருந்தா லொழிய, ஒருங்கியல் பட்டியல் நுழைவு 2, 4 மற்றும் 5ல் எண்ணிடப்பட்டுள்ள பொருட்கள் குறித்து நாடாளு மன்றத்திற்குச் சட்டம் இயற்ற அதிகாரம் உண்டு.

---

*(முன்பக்கத் தொடர்ச்சி)*

ஒருங்கியல் பட்டியலில் எண்ணிடப்பட்டவை ஒவ்வொரு மாநிலத்திற்கும் மாறுபடுகிறது. அதனால் இந்த வகையம் செயல்படுவதைக் கட்டுப்படுத்துவதற்காக இந்தக் கூறினைத் திருத்தியுள்ளனர். ஒன்றியத்தோடு சேர்ந்த மாநிலங்களுக்கும் ஒருங்கிணைந்த பட்டியலில் உள்ள பொருள்களுக்கும் இது பொருந்தும்.

## நீர் அளிப்பில் தலையீடு

நீர் அளிப்பின் தலையீட்டில் புகார்செய்தல்.

239. தற்சமயம் முதல் பட்டியல் பாகம் III அல்லது பாகம் I-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலத்தின் நன்மை, அல்லது அங்கு வாழ்பவர்களுக்கு இயற்கையாகக் கிடைக்கும் தண்ணீரை அளிப்பதில் அந்த மாநிலம் பாதிக்கப்படும் என்று அந்த மாநில அரசாங்கம் நினைத்தால் -

(அ) எந்த ஆட்சி அதிகாரச் செயல் அல்லது சட்டம் இயற்றுவதற்கு அல்லது நிறைவேற்றுவதற்காக எடுத்த செயல்,

(ஆ) எந்த அதிகாரத்திலுள்ளவர்களும் தம் அதிகாரத்தைச் செயலுறுத்தத் தவறினால்,

தண்ணீரைக் கட்டாள்கை செய்தல் அல்லது பகிர்தல் மற்றும் தண்ணீரைப் பயன்படுத்துதலில் மாநில அரசாங்கம் குடியரசுத் தலைவருக்குப் புகார் செய்யலாம்.

புகார்களின் தீர்ப்புகள்.

240. (1) மேற்கூறியவாறு, குடியரசுத் தலைவர் ஒரு புகாரினைப் பெற்றால், நடவடிக்கை எடுப்பதற்குப் போதிய முக்கியத்துவம் இல்லையென்று நினைத்தால், நீர்ப்பாசனம், பொறியியல், நிர்வாகம், நிதி அல்லது சட்டம் ஆகியவற்றில் பிரத்தியேக அறிவும் அனுபவமும் பெற்றவர்களைக் கொண்ட ஓர் ஆணையத்தினை அமைக்கலாம். புகாரில் கூறப்பட்ட பொருட்பாடுகள் எதனைப் பற்றியும், ஆணையத்திற்கு உத்திரவு இட்டபடி, புலன் விசாரணை செய்து அறிக்கை சமர்ப்பிக்க வேண்டும்.

(2) அப்படி அமைக்கப்பட்ட ஆணையம், அவர்களுக்குச் சொல்லப்பட்ட பொருட்பாடுகள் மீது புலன் விசாரணை செய்து, அவர்கள் அறிந்த உண்மைகள் மற்றும் தகுதியானது என்று கருதும் பரிந்துரைகளைக் குடியரசுத் தலைவருக்கு அறிக்கை அளித்தல் வேண்டும்.

(3) குடியரசுத் தலைவர் ஆணையத்தின் அறிக்கையினை ஓர்வு செய்த பின்பு, அதிலுள்ளது பற்றி விளக்கம் தேவையென்று நினைத்தாலோ அல்லது ஆணையத்திற்கு முதலில் கூறப்பட்ட பொருள் மீது ஏதாவது உதவி தேவை என்று நினைத்தாலோ மறுபடியும் ஆணையத்திற்கு அந்தப் பொருட்பாட்டினைத் தெரிவித்து மேலும் புலன் விசாரணை செய்து அறிக்கை சமர்ப்பிக்கக் கூறலாம்.

(4) இந்த உறுப்பின்கீழ், புலன் விசாரணை செய்ய அமைக்கப்பட்ட ஆணையத்திற்கு உதவி வேண்டுமென, ஆணையம் உச்சநீதிமன்றத்தினை அணுகினால், நீதிமன்றங்கள் அதிகார வரம்பு செயலுறுவதற்கு ஆணைகள் பிறப்பிப்பது போல இந்த ஆணையத்திற்கும் உத்தரவுகள் பிறப்பிக்கலாம்.

(5) அரசாங்கத்திற்கு அளிக்கப்படும் ஆணையத்தின் அறிக்கையில் அதன் பரிந்துரைகள் உள்ளடங்கும். ஆணையத்தின் முன் நேரில் வருகை தரும் நபர்கள் அல்லது ஆணையத்தின் செலவுகளை எந்த மாநிலமும் செய்திருந்தால் அதனைக் கொடுப்பதற்காக இந்த உறுப்பின்கீழ்க் குடியரசுத் தலைவர் ஆணை பிறப்பிக்கலாம். உச்சநீதிமன்றத்தின் செலவுகளுக்காக ஆணை பிறப்பிப்பது போல இந்த ஆணையத்திற்கும் அமையும்.

(6) குடியரசுத் தலைவர் ஆணையத்தின் அறிக்கையினை ஓர்வு செய்த பிறகு, அதிலுள்ள வகையங்களின்படி அறிக்கையின் மீது ஆணை பிறப்பிக்கலாம்.

(7) குடியரசுத் தலைவர் ஆணையத்தின் அறிக்கையினை ஓர்வு செய்த பிறகு, அதில் சட்டத்தின்படி முக்கியமான கேள்விகள் உள்ளன என்று நினைத்தால், அரசமைப்பு உறுப்பு 119ன் கீழ், உச்சநீதிமன்றத்திற்கு அந்த அறிக்கையினை அனுப்பி அவர்களுடைய கருத்தினைக் கேட்டறியலாம். உச்சநீதிமன்றம் அந்த

அறிக்கையினை ஏற்றுக் கொள்ளாவிட்டால், உச்சநீதி மன்றத்தின் கருத்துக்களோடு ஆணையத்திற்குத் திருப்பி அனுப்பி, அந்த அறிக்கையில் உச்சநீதிமன்றத்தின் கருத்துப்படி தேவையான மாற்றங்களைச் செய்து குடியரசுத் தலைவருக்கு அறிக்கை அனுப்ப வேண்டும்.

(8) இந்த உறுப்பின்கீழ் குடியரசுத் தலைவர் கொண்டு வந்த எந்த ஆணையாவது, எந்த மாநிலத்தை யாவது பாதிக்குமானால் மற்றும் மாநிலச் சட்டசபை யின் எந்தச் சட்டத்திற்காவது ஒவ்வாததாக இருந்தால் அந்த அளவிற்கு முரண்பாடு களையப்பட்டு, உத்தரவு செயலுறுத்தப்படும்.

(9) எந்தப் பாதிக்கப்பட்ட மாநில அரசாங்கமும் குடியரசுத் தலைவருக்கு மனு செய்தால், எந்த நேரத் திலும் மேற்கூறியபடி ஆணையம் அமைத்து அதன் பரிந்துரையை, இந்த உறுப்பின்கீழ் உத்தரவு மூலமாக மாற்றி அமைக்கலாம்.

முதல் பட்டியல் பாகம் II-ல் உள்ள மாநிலங்களில் தண்ணீர்அளிப்பில் உள்ள தலையீடு.

241. தற்சமயம் முதல் பட்டியல் பாகம் II-ல் குறிப்பிட்டுள்ளது போல, எந்த மாநிலத்தின் நன்மை, அந்த மாநிலத்தில் வாழும் மக்களுக்குத் தற்சமயம் முதல் பட்டியல் பாகம் I அல்லது பாகம் III-ல் குறிப் பிட்டுள்ளது போல, இயற்கை வளம் மூலம் அளிக்கப் படும் தண்ணீர் பாதிக்கப்படும் எனக் குடியரசுத் தலைவர் நினைத்தால் -

(அ) எந்த ஆட்சி அதிகாரச் செயல் அல்லது சட்டமியற்றும் செயல் அல்லது நிறைவேற்றப்பட்ட அல்லது நிறைவேற்ற வேண்டும் என்று நினைத்த, அல்லது

(ஆ) அதிகாரத்திலுள்ளவர்கள் தங்கள் அதிகாரத் தினைச் செயலுறுத்தத் தவறினால், தண்ணீரைப் பயன் படுத்துதல், அதனைக் கட்டாள்கை செய்வது அல்லது பகிர்ந்தளிப்பில், குடியரசுத் தலைவர் தேவையென நினைத்தால், இதற்கு முந்தைய உறுப்பில் உள்ள

வகையங்களுக்கு உட்பட்டு ஆணையத்திற்கு அந்தப் பொருட்பாடுகளைத் தெரிவித்துத் தற்சமயம் முதல் பட்டியல் பாகம் II-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலம், அந்தப் பட்டியல் பாகம் I-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலமாக இருந்தால், அந்த மாநில அரசாங்கம் குடியரசுத் தலைவருக்குப் புகார் செய்திருந்தால், அந்த வகையங்கள் பொருந்துறும்.

நீதிமன்றங்களின் அதிகார வரம்புநீக்கியது.

242. இந்த அரசமைப்பில் எது எவ்வாறாயிருப்பினும், இதற்கு முந்தைய கடைசி மூன்று உறுப்புகளின் கீழ் மாநில அரசாங்கம் அல்லது குடியரசுத் தலைவரின் எந்தச் செயல் அல்லது பொருட்பாடு குறித்த வழக்கு உச்சநீதிமன்றம் அல்லது எந்த நீதிமன்றத்தின் அதிகார வரம்பிற்கும் உள்ளடங்காது.

## மாநிலங்களுக்கிடையேயான வர்த்தகமும் வாணிபமும்

ஒரு மாநிலம் மற்றொரு மாநிலத்தின் மீது வர்த்தகம் அல்லது வாணிபத்தின் சம்பந்தமான சட்டம் அல்லது ஒழுங்குறுத்தலில் சலுகை அல்லது வித்தியாசம் காட்டுதலைத் தடுத்தல்.

[1]243. நிலம், நீர் அல்லது ஆகாயம் மூலமாக வர்த்தகம் வாணிபம் நடக்கும்பொழுது அது சம்பந்தமான சட்டம் அல்லது ஒழுங்குறுத்தலில் ஒரு மாநிலம் மற்றொரு மாநிலத்தின் மீது சலுகை அல்லது வித்தியாசங் காட்டுதல் அனுமதித்தல் கூடாது.

வர்த்தக வாணிபத்தில் மாநிலங்களுக்கு இடையே தொடர்பு கொள்ளுவதற்கான கட்டுப்பாடுகள்.

[1]244. உறுப்பு 16 அல்லது அரசமைப்பில் இதற்குக் கடைசி முந்தைய உறுப்பில் உள்ளவை, எஃது எவ்வாறாயிருப்பினும், எந்த மாநிலத்திற்கும் -

(அ) மற்ற மாநிலத்திலிருந்து இறக்குமதி செய்யப்படும்பொழுது, அந்த மாநில்த்தில் அம் மாதிரியான பொருள்கள் உற்பத்தி செய்யப்படும்பொழுது, வரி விதிக்கும்போது, இறக்குமதி செய்யப்பட்ட பொருள்களுக்கும்

1. உறுப்பு 243 மற்றும் 244ல் உள்ள வகையங்கள் அடிப்படை உரிமைகள் பாகம் III-ல் இருப்பதைவிட இந்த அத்தியாயத்தில் சேர்க்கப்பட்டிருப்பது சாலச்சிறந்ததெனக் குழு நினைக்கின்றது.

உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களுக்கும் வித்தியாசம் காட்டுதல் கூடாது.

(ஆ) பொது நன்மை கருதி மாநிலங்களுக்கு இடையே வர்த்தக வாணிபம் தொடர்பு இருக்கும்பொழுது சட்டத்தின் மூலமாகத் தேவையான கட்டுப்பாடுகள் விதிக்கலாம்.

வரம்புரையாக: இந்த அரசமைப்புத் தொடக்க நிலையிலிருந்து ஐந்தாண்டுக் காலத்தில் இந்த உறுப் பின் (ஆ) கூறு இந்த அரசியலமைப்பின் உறுப்பு 306ன் கூறு (அ)வில் குறிப்பிடப்பட்டுள்ள பண்டங்கள் எவற்றிலும் வாணிகம் செய்வதற்குப் பயன்படுத்தப் படலாகாது.

[1]245. இந்த அரசமைப்பின் 243 மற்றும் 244 ஆவது உறுப்புகளில் கண்டுள்ள வகையங்களைச் செயல்படுத்துவதற்குத் தகுந்ததெனக் கருதும் அதிகார அமைப்பை நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் நிய மிக்க வேண்டும்; அவ்வாறு நியமிக்கப்படும் அதிகார அமைப்புக்கு அது அவசியம் எனக் கருதும் அதிகாரங் களையும் கடமைப் பொறுப்புகளையும் வழங்குதல் வேண்டும்.

1. கட்டுப்படுத்தப்பட்ட அதிகாரங்களுடன் கூடிய மாநிலங்களுக்கு இடையேயான ஓர் ஆணையத்தை அமைப்பதற்கு பதிலாக, 243 மற்றும் 244 ஆவது உறுப்புகளின் வகையங்களைச் செயல்படுத்துதற்கு சட்டத்தின் மூலம் ஓர் அதிகார அமைப்பை நியமிப்பதற்கு வழிவகை செய்வது உகந்ததாக இருக்கும் என்று குழு கருதுகிறது; ஏனென்றால் வணிகம் அல்லது வாணிகம் சம்பந்தமான தகராறுகளில் தலையிட்டு மத்தியஸ்தம் செய்யும் அதிகாரங்கள் கொண்ட இத்தகைய ஒரு ஆணையத்தை அமைத் தால் அது செயலாற்றுவதற்குப் போதிய பணி இருக்காது.

# பகுதி - X

## நிதி, சொத்து, ஒப்பந்தங்கள் மற்றும் உரிமை வழக்குகள்

## அத்தியாயம் - I - நிதி

### [1]ஒன்றியம் மற்றும் மாநிலங்களுக்கிடையே வருவாய் பகிர்ந்தளித்தல்

பொருள்கோள்

247. இந்தப் பகுதியில் தருவாய் வேறுவகையாய் இருந்தாலன்றி

(அ) இந்தப் பகுதியில் 'நிதி ஆணையம்'' என்பது 260-ம் உறுப்பின்படி அமைக்கப்படும் ஒரு நிதி ஆணையம் என்று பொருள்படும்.

(ஆ) தற்சமயம், முதல் பட்டியல் பகுதி-IIல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலம் இங்குக் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலத்தில் அடங்காது.

(இ) முதல் பட்டியல் பகுதி - IIல் குறிப்பிடப் பட்டுள்ள மாநிலம் என்பது முதல் பட்டி யல் பகுதி -IVல் குறிப்பிடப்பட்டுள்ள நிலப்

1. தற்பொழுது இருக்கும் நிலையற்ற தன்மை நிலவுவதால், வருவாயினை ஒன்றியம் மற்றும் மாநிலங்களுக்குப் பகிர்ந் தளிப்பது சம்பந்தப்பட்ட வல்லுநர்குழு கொடுத்த நிதிஅளித்தல் சிபாரிசினை, குழு, அரசியல் வரைவு நகலில் சேர்க்கவில்லை. 1935 இந்திய அரசாங்கச் சட்டப்படி, மேலும் ஐந்தாண்டு களுக்குத் தற்பொழுது நிலவும் வருவாயினை ஒன்றியம் மற்றும் மாநிலங்களுக்கு பகிர்ந்தளிக்கும் முறை தொடரவேண்டும். அதன்பின் நிதிஆணையம், அதனை மறுஆய்வு செய்யலாம். பத்தி 66-ல் கூறியபடி, நிதி ஆணையம் அமைத்தால், அவர் களுக்குத் தேவையான திரட்டல், ஒன்று சேர்த்தல், புள்ளி விவரங்களைப் பராமரித்தல் ஆகியவற்றைக் கிடைக்குமாறு செய்யவேண்டும் என்ற வல்லுநர் குழுவின் யோசனையைக் குழு ஏற்றுக்கொண்டது.

பரப்பும் மற்றும் இந்தியாவின் நிலப்பரப்பும் அடங்குமெனினும் பட்டியலில் குறிப்பிடாதது இதில் அடங்காது.

"இந்தியாவின் வருவாய்" மற்றும் "மாநிலங்களின் வருவாய்" என்பதன் பொருள்.

*248.* இந்த அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டுள்ள வகையங்களுக்கு உட்பட்டு, குறித்த சில வரிகள், தீர்வைகள் ஆகியவற்றிலிருந்து கிடைக்கும் நிகரத் தொகையை முழுமையாகவோ அதில் ஒரு பகுதியினையோ மாநிலங்களுக்கு ஒதுக்குவது தவிர, "இந்தியாவின் வருவாய்' என்பது இந்திய அரசாங்கத்தால் திரட்டும் அல்லது பெறப்படும் மொத்த வருவாய் மற்றும் பொதுப் பணமாகும். "மாநில வருவாய்' என்பது மாநில அரசாங்கத்தால் திரட்டும் அல்லது பெறப்படும் மொத்த வருவாய் மற்றும் பொதுப் பணமாகும்.

ஒன்றியத்தால் விதிக்கப்பட்டு ஆனால் மாநிலங்கள் ஈட்டிப் பயன்படுத்திக் கொள்ளும் தீர்வைகள்.

*249. (1)* ஒன்றியத்து வரிசைப் பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ள முத்திரைத் தீர்வைகளும், மருந்து மற்றும் ஒப்பனைப் பொருள்களின் மீதான ஆயத் தீர்வைகளும் இந்திய அரசாங்கத்தால் விதிக்கப்படும். ஆனால் -

(அ) முதல் பட்டியல் பகுதி - IIல் குறிப்பிடப்பட்டுள்ள எந்த மாநிலத்திலும் அத்தகைய தீர்வைகள் விதிக்கத்தக்கனவாக இருக்கும் நேர்வில் இந்திய அரசாங்கத்தாலும்,

(ஆ) பிற நேர்வுகளில், எந்த மாநிலங்களுக்குள்ளும் முறையே அத்தீர்வைகள் விதிக்கத்தக்கனவாக உள்ளனவோ அந்த மாநிலங்களாலும், ஈட்டப்படும்.

2. மாநிலம் எதற்குள்ளும் விதிக்கத்தக்க அத்தகைய தீர்வையின் மூலம் ஒரு நிதியாண்டில் கிடைக்கும் தொகை, இந்திய வருவாயின் பகுதியாகாது. மாறாக, அது அந்த மாநிலத்திற்கே ஒதுக்கப்படுதல் வேண்டும்.

ஒன்றியத்தால் விதித்து ஈட்டப் பட்டு, ஆனால் மாநிலங்களுக்கு ஒதுக்கப்படும் வரிகள்.

*250. 1.* பின்வரும் தீர்வைகளும் வரிகளும் இந்திய அரசாங்கத்தால் விதிக்கப்பட்டு ஈட்டப்படும். ஆனால் உறுப்பு 2-ல் கூறியபடி மாநிலங்களுக்கு ஒதுக் கப்படும்.

(அ) வேளாண் நிலம் அல்லாத பிற சொத்தின் மீதான வாரிசுரிமை பொறுத்த தீர்வைகள்;

(ஆ) வேளாண் நிலம் அல்லாத பிற சொத்தினைப் பொறுத்த பண்ணைச் சொத்துத் தீர்வை;

(இ) இரயில்வே அல்லது வான் வழியாக ஏற்றிச் செல்லப்படும் சரக்குகள் அல்லது பயணி கள் மீதான சேர்முனை வரிகள்;

(ஈ) இரயில்வே பயணக் கட்டணங்கள், சரக் கனுப்புக் கட்டணங்கள் ஆகியவற்றின் மீதான வரிகள்;

2. ஒரு நிதியாண்டில் அத்தகைய வரி அல்லது தீர்வை எதிலிருந்தும் கிடைக்கும் நிகரத் தொகை, தற்போதைக்கு முதல் பட்டியல் பகுதி-IIல் குறிப்பிடப் பட்டுள்ள மாநிலங்களுக்குச் சேரவேண்டிய வருமானம் தவிர மற்றவை இந்தியாவின் வருமானமாகாது. ஆனால் நாடாளுமன்றம் சட்டத்தினால் வகுக்கும் பகிர்ந்தளிப்பு நெறிகளுக்கிணங்கிய வகையில் அந்த ஆண்டில் பெறப்படும் வரி மற்றும் தீர்வை அந்த மாநிலங்களுக்கு ஒதுக்கப்படும்.

ஒன்றியத்தால் விதித்து ஈட்டப் பட்டு ஒன்றியத் திற்கும் மாநிலங் களுக்குமிடையே பகிர்ந்தளிக்கப் படும் வரிகள்.

*251. 1.* இந்திய அரசாங்கத்தால் விதித்து ஈட்டப் படும் வேளாண் வருமானம் அல்லாத பிற வருமானத் தின்மீதான வரிகள், உறுப்பு (2) -ல் கூறியபடி ஒன்றியத் திற்கும் மாநிலங்களுக்குமிடையே பகிர்ந்தளிக்கப்படும்.

2. ஒரு நிதியாண்டில் அத்தகைய வரியிலிருந்து கிடைக்கும் நிகரத் தொகையில் வகுத்துரைக்கப்படும் சதவீதத் தொகை, முதல் பட்டியல் பகுதி II-ல் குறிப்

பிடப்பட்டுள்ள மாநிலங்களுக்குச் சேர வேண்டிய தொகை தவிர மற்றவை இந்திய வருவாயாக அமைவ தில்லை. மாறாக, அந்த ஆண்டில் அந்தவரி விதிக்கப் படுவதாகும். மாநிலங்களுக்கே ஒதுக்கப்பட்டு, வகுத் துரைக்கப்படும் முறைப்படியும் வகுத்துரைக்கப்படும் காலத்திலிருந்தும் அந்த மாநிலங்களுக்கிடையே பகிர்ந்தளிக்கப்படும்.

3. தற்சமயம் முதல் பட்டியல் பகுதி IIல் கூறி யுள்ளபடி இந்த உறுப்பின் (2) வது கூறினைப் பொறுத்த வரை, ஒவ்வொரு நிதியாண்டிலும் வருமானத்தின் மீதான வரிகள் மூலம் கிடைக்கும் நிகரத் தொகையி லிருந்து, ஒன்றியத்துப் பதவி யூதியங்களைப் பொறுத்துச் செலுத்தப்படுவதாகும் வரிகளின் நிகரத் தொகையைக் கழித்தபின்பு உள்ள தொகையின் மீது வகுத்துரைக்கப் படும் சதவீதத் தொகை எதுவோ அதுவே மாநிலங் களிலிருந்து கிடைப்பதாகும் தொகை எனக் கொள்ளப் படும்.

4. இந்த உறுப்பில் -

(அ) அரசமைப்பு உறுப்பு 266 கூறு (அ) வின் படி ''வருமானத்தின் மீதான வரிகள்'' என்பது, இந்திய அரசாங்கம் வருமான வரிக்குப் பதிலாக விதிக்கும் தொகை ஒரு கூட்டுரும் வரியை உள்ளடக்காது.

(ஆ) ''வகுத்துரைக்கப்படும் என்பது'':

(i) நிதி ஆணையம் ஒன்று அமைக்கப்படும் வரையில், குடியரசுத் தலைவரின் ஆணை யின்படி வகுத்துரைக்கப்படும் என்றும்,

(ii) நிதி ஆணையம் ஒன்று அமைக்கப்பட்ட பின்பு என்பது அந்த நிதி ஆணையத்தின் பரிந்துரைகளை ஓர்வு செய்ததன் மேல் குடியரசுத் தலைவரின் ஆணையின்படி வகுத்துரைக்கப்படும் என்றும் பொருள் படும்.

(இ) ''ஒன்றியத்துப் பதவியூதியங்கள்'' என்பது, இந்திய வருவாயிலிருந்து வழங்கப்படுவதாகும் பதவியூதியங்கள், ஓய்வூதியங்கள் மற்றும் இவற்றில் வருமானவரி விதிக்கப்படுவதாக உள்ள அனைத்தையும் உள்ளடக்கும்.

ஒன்றியத்தின் நோக்கங்களுக்காக குறித்த சில தீர்வைகள், வரிகள் ஆகியவற்றின் மீதான மேல்வரி.

252. இந்த அரசமைப்பு 250 மற்றும் 251 ஆகிய உறுப்புகளில் எது எவ்வாறிருப்பினும், நாடாளுமன்றம், எச்சமயத்திலும் அந்த உறுப்புகளில் சுட்டப்பட்டுள்ள தீர்வைகளில் அல்லது வரிகளில் எதனையும் ஒன்றியத்தின் நோக்கங்களுக்காக, மேல்வரி விதிப்பதன் வாயிலாக உயர்த்தலாம்; அத்தகைய மேல்வரியிலிருந்து கிடைக்கும் தொகைகள் முழுவதும் இந்திய வருவாயின் பகுதியாக அமையும்.

ஒன்றியத்தால் விதித்து, ஈட்டப்பட்டு, ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்குமிடையே பகிர்ந்தளிக்கப்படலாம் எனும் வரிகள்.

[1]253. (1) ஒன்றியத்தால் உப்பின் மீது எந்த விதமான வரியும் விதிக்கக்கூடாது.

(2) மருந்து மற்றும் ஒப்பனைத் தயாரிப்புகள் மீது ஒன்றியத்துப் பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ள ஒன்றியத்து ஆயத்தீர்வைகள் அல்லாத பிற ஆயத்தீர்வைகள், இந்திய அரசாங்கத்தால் விதித்து ஈட்டப்படும், ஆனால் அந்தத் தீர்வையிலிருந்து கிடைக்கும் நிகரத்தொகை முழுமைக்கும் அல்லது ஒரு பகுதிக்குச் சமமான தொகைகள், அத்தீர்வையை விதிக்கும் சட்டம் அளாவிநிற்கின்ற மாநிலங்களுக்கு, இந்திய வருவாயிலிருந்து வழங்கப்பட வேண்டுமென்று நாடாளுமன்றம் சட்டத்தினால் வகைசெய்யுமாயின், அவ்வாறே வழங்கப்படும். அந்தத் தொகைகள், அந்தச் சட்டத்

1. குழுவில் உள்ள பெரும்பான்மையான அங்கத்தினர்கள், உப்பின் மீதான வரிக்கு அரசமைப்புத்தடைகள் எதுவும் கூடாது என்று நினைத்தனர். உப்பின் மீதான வரியைப் பொறுத்தவரை நாடாளுமன்றத்தின் விவேகத்தின்படி விட்டுவிடவேண்டுமென்றும் கூறு (1) தேவையில்லை என்றும் கூறினர். ஆனால் திரு. அல்லாடி கிருஷ்ணசாமிஐயர் இந்தக்கூறு அப்படியே இருக்க வேண்டுமென்று விரும்பினார்.

தின் வழி, வகுக்கப்படும் பகிர்ந்தளிப்பு நெறிகளுக்கு இணங்கிய வகையில் அந்தந்த மாநிலங்களுக்கிடையே பகிர்ந்தளிக்கப்படும்.

சணல் மற்றும் சணல் பொருள் களின் மீதான வரி பகிர்ந்தளித் தல்.

254. எது எவ்வாறு இருப்பினும், அரசமைப்பு உறுப்பு 253ன்படி, நாடாளுமன்றம் சட்டத்தின்படி நிர்ணயித்த, ஒரு வருடத்தில் சணல் மற்றும் சணல் பொருள்களின் மீதான ஏற்றுமதித் தீர்வையிலிருந்து கிடைக்கும் நிகர வருமானம் இந்திய வருவாயின் பாக மாகாது. ஆனால் சட்டத்தின்படி எந்த எந்த மாநிலங் களில் சணல் உற்பத்தி செய்யப்படுகிறதோ அந்தந்த மாநிலங்களுக்குச் சட்டம் உருவாக்கும் பகிர்ந்தளிப்பு விதிமுறைகளின்படி ஒதுக்கப்படலாம்.

வரம்புரையாக: நாடாளுமன்றம் நிர்ணயிக்கும் வரை, அரசமைப்பு ஆரம்பிப்பதற்கு முன்பு இருந்த இந்திய அரசாங்க 1935-ம் ஆண்டுச் சட்டப்படி, ஒவ் வொரு வருடமும் தீர்வையிலிருந்து கிடைக்கும் நிகர வருவாயில் குறிப்பிட்ட பாகத்தினைக் குறிப்பிட்ட வீதாச்சாரத்தின்படி மாநிலங்களுக்கு ஒதுக்கலாம்.

குறித்த சில மாநிலங்களுக்கு ஒன்றியத்தி லிருந்து வரும் மானியங்கள்.

255. உதவி தேவையுள்ளவை என்று நாடாளு மன்றம் தீர்மானிக்கும் மாநிலங்களின் வருவாய்களுக்கு உதவி மானியங்களாக ஒவ்வோர் ஆண்டிலும் நாடாளு மன்றம் சட்டத்தினால் வகைசெய்யும் தொகைகள், இந்திய வருவாயின் மீது சார்த்தப்பட்டு, வெவ்வேறு மாநிலங்களுக்கு வெவ்வேறான தொகைகள் நிர்ண யிக்கப்படலாம்.

வரம்புரையாக: முதல் பட்டியல் பகுதி - I ல் குறிப்பிட்டுள்ளபடி ஒரு மாநிலத்திலுள்ள வரிசைப் பட்டியலில் கண்ட பழங்குடியினரின் நலப்பாட்டினை வளர்ப்பதற்காக, அல்லது அதிலுள்ள வரிசைப் பட்டி யல் பகுதிகளின் நிருவாகத் தர நிலையை அந்த மாநிலத் தின் நிருவாகத் தர நிலைக்கு உயர்த்துவதற்காக, இந்திய அரசாங்கத்தின் ஒப்பேற்புடன் அந்த மாநிலத்தால் கொள்ளப்படும் வளர்ச்சித் திட்டங்களுக்கான வரவு-

செலவுகளைச் செய்ய அந்த மாநிலத்தைச் செயல்படச் செய்யத் தேவைப்படும் மூலதனத் தொகைகளும், தொடர் செலவடைத் தொகைகளும் அந்த மாநிலத் தின் வருவாய்களுக்கு உதவி மானியங்களாக இந்திய வருவாயிலிருந்து வழங்கப்படும்.

மேலும் வரம்புரையாக: அசாம் மாநிலத்தின் உதவி மான்யங்களாக -

(அ) ஆறாவது பட்டியல் 19-ம் பத்தியில் இணைக் கப்பட்டுள்ள அட்டவணையின் 1-ம் பகுதி யில் குறித்து வைக்கப்பட்டுள்ள பழங்குடி யினர் பகுதிகளின் நிருவாகத்தைப் பொறுத்த வரை, இந்த அரசமைப்புத் தொடக்கத் திற்கு ஒட்டிமுன்பு மூன்று ஆண்டுகளின் போது வருவாய்களுக்குமேல் ஏற்பட்ட சராசரி செலவுக்கும்,

(ஆ) மேற்சொன்ன பகுதிகளின் நிருவாகத் தர நிலையை, அந்த மாநிலத்தின் பிற பகுதி களின் நிருவாகத் தரநிலைக்கு உயர்த்து வதற்காக, இந்திய அரசாங்கத்தின் ஒப்பேற் புடன் அந்த மாநிலத்தால் மேற்கொள்ளப் படும் வளர்ச்சித் திட்டங்களுக்கான செல வடைகளுக்கும்,

சமமாக மூலதனத் தொகையும், தொடர் செல வடைத் தொகையும் இந்திய வருவாயிலிருந்து வழங்கப்படும்.

*தொழில்கள், வணிகங்கள், கொள்பணிகள், மற்றும் வேலையமர்த்தங்கள் மீதான வரிகள்.*

256. (1) அரசமைப்பு உறுப்பு 217ல் எது எவ்வாறு இருப்பினும் இந்த உறுப்பின் கூறு (2) மற்றும் கூறு (3) ன் வகையங்களுக்கு உட்பட்டுத் தொழில்கள், வணிகங்கள், கொள்பணிகள் அல்லது வேலையமர்த் தங்கள் பொறுத்து, ஒரு மாநிலத்தின் அல்லது அதில் உள்ள ஒரு நகராட்சி, மாவட்டவாரியம், உள்ளாட்சி வாரியம் அல்லது பிற உள்ளாட்சி அதிகார அமைப்பின் நலனுக்கான வரிகள் தொடர்பாக, அந்த மாநிலத்தின்

சட்டமன்றத்திற்குச் சட்டம் இயற்றும் அதிகாரம் உண்டு.

(2) அந்த மாநிலத்திற்கோ அந்த மாநிலத்தி லுள்ள நகராட்சி, மாவட்ட வாரியம், உள்ளாட்சி வாரியம் அல்லது பிற உள்ளாட்சி அதிகார அமைப்பு எதற்குமோ, தொழில்கள், வணிகங்கள், கொள்பணி கள், வேலையமர்த்தங்கள் ஆகியவற்றின் மீதான வரிகளாக ஒருவரைப் பொறுத்துத் செலுத்தும். மொத்த தொகை ஓர் ஆண்டுக்கு இருநூற்று ஐம்பது ரூபாய்க்கு மேற்படுதல் ஆகாது.

வரம்புரையாக: அரசமைப்பு ஆரம்பித்த முந்தைய நிதி ஆண்டில், ஏதாவது ஒரு மாநிலத்தில் அங்குள்ள நகராட்சி அல்லது வாரியத்தில் தொழில்கள், கொள் பணிகள் அல்லது வேலையமர்த்தங்களில் இருக்கும் வரிவீதம் ஆண்டிற்கு இருநூற்று ஐம்பதிற்கு மேலாக இருந்தால் அதே வரியைத் தொடர்ந்து வசூலிக்கலாம். நாடாளுமன்றம் பொதுவாகவோ அல்லது குறிப் பிட்ட மாநிலங்கள், நகராட்சிகள் வாரியங்களுக்காகச் சட்டம் இயற்றும்பொழுதோ நடைமுறைக்கு மாறான சட்டம் இயற்றாதவரை மேற்கூறிய வரிமுறையைப் பின்பற்றலாம்.

3. தொழில்கள், வணிகங்கள், கொள்பணிகள், வேலையமர்த்தங்கள் ஆகியவற்றின் மீதான வரிகள் பொறுத்து, மேற்சொன்னவாறு சட்டங்களை இயற்று வதற்கு ஒரு மாநிலச் சட்டமன்றத்திற்குள்ள அதிகார மானது தொழில்கள், வணிகங்கள், கொள் பணிகள், வேலையமர்த்தங்கள் ஆகியவற்றிலிருந்து வந்தடை கின்ற அல்லது கிடைக்கின்ற வருமானத்தின் மீதான வரிகள் பொறுத்துச் சட்டங்களை இயற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள அதிகாரத்தினை எவ்வகை யிலும் கட்டுப்படுத்துவதாகப் பொருள் கொள்ளுதல் ஆகாது.

சேமிப்புகள்

257. காப்புரைகள்: இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டிமுன்பு, மாநிலம் ஒன்றன் அரசாங்கத்

தினால் அல்லது நகராட்சி அல்லது பிறஉள்ளாட்சி அதிகார அமைப்பு அல்லது குழுமம் எதனாலும் அந்த மாநிலம், நகராட்சி, மாவட்டம் அல்லது பிற வட்டாரப்பகுதி இவற்றின் பொருட்டுச் சட்டப்படி விதிக்கப்பட்டு வந்த வரிகள், தீர்வைகள், மேல் வரிகள், கட்டணங்கள் எவையும், ஒன்றியத்துப் பட்டியலில் குறிப்பிடப்பட்டிருப்பினும், நாடாளுமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகை செய்யும் வரையில் தொடர்ந்து விதிக்கப்பட்டு, அதே நோக்கங்களுக்காக பயன்படுத்தலாம்.

முதல் பட்டியல் பகுதி III-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்களில் வரிகள் மற்றும் தீர்வைகள் விதிப்பது, ஈட்டுவது, பகிர்ந்தளிப்பது சம்பந்தமான உடன்பாடு.

258. (1) இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டது எது எவ்வாறாயிருப்பினும், இந்த உறுப்புக் கூறு (2)-ன் வகையங்களுக்கு உட்பட்டுத் தற்சமயம் முதல் பட்டியல் பகுதி-IIIல் குறிப்பிட்டபடி, ஒன்றியம் மாநிலங்களில் இந்திய அரசாங்கம் விதிக்கும் வரி அல்லது தீர்வைகளை விதிப்பதற்கும் ஈட்டுவதற்கும் அதனைப் பகிர்ந்தளிப்பதற்கும் உடன்பாடு செய்து கொள்ளலாம். எந்த மாநிலத்தோடு உடன்படிக்கை ஏற்படுகிறதோ அந்த மாநிலம் இந்த அத்தியாயத்தில் உள்ள நிபந்தனைகளுக்கு உட்பட வேண்டும்.

(2) இந்த உறுப்புக் கூறு (1) ன்படி, அரசமைப்பு ஆரம்பித்துப் பத்து வருடங்களுக்கு மிகாமல் உடன்பாடு செய்து கொண்டது அமுலில் இருக்கும்.

வரம்புரையாக: நிதி ஆணையத்தின் அறிக்கையின்படி, குடியரசுத்தலைவர் தேவையென விரும்பினால் எந்த நேரத்திலும் உடன்பாடு ஏற்பட்ட ஐந்தாண்டுகளுக்குப் பிறகு உடன்படிக்கையினை முடிவுக்குக் கொண்டு வரவோ அல்லது மாற்றி அமைக்கவோ செய்யலாம்.

'நிகரத் தொகை' முதலியவற்றைக் கணக்கிடுதல்.

259. (1) இந்த அத்தியாயத்தின் மேலே கண்ட வகையங்களில் வரி அல்லது தீர்வை ஒன்றன் தொடர்பாக ''நிகரத் தொகை'' என்பது அவ்வரி அல்லது தீர்வையிலிருந்து கிடைக்கும் தொகையிலிருந்து ஈட்டுவதற்

காகும் செலவை கழிக்கப்பட்டதன் பின்பு வரும் தொகை என்று பொருள்படும். அந்த வகையங்களைப் பொறுத்தவரை, வரையிடம் ஒன்றன் அல்லது அதைச் சேர்வதான வரி அல்லது தீர்வை ஒன்றிலிருந்து அல்லது வரி அல்லது தீர்வை ஒன்றின் பகுதியிலிருந்து கிடைக்கும் நிகரத் தொகை எவ்வளவு என்பதை இந்தியத் தலைமைத் தணிக்கையர் கண்டறிந்து உறுதிச் சான்றளிப்பார். அவரது அந்த உறுதிச் சான்றே அறுதியானது ஆகும்.

(2) மேலே கண்டவற்றிற்கும், அரசமைப்புப் பகுதியின்படி, இந்த அத்தியாயத்தின் பிற வெளிப்படையான வகையம் எதற்கும் உட்பட்டு, நாடாளு மன்றத்தால் இயற்றப்பட்ட ஒரு சட்டமோ குடியரசுத் தலைவரால் பிறப்பிக்கப்பட்ட ஓர் ஆணையோ இந்தப் பகுதியின்படி தீர்வை அல்லது வரி எதிலிருந்தும் கிடைக்கும் தொகை ஒரு மாநிலத்திற்கு ஒதுக்கப்படும் அல்லது ஒதுக்கப்பட்டதாகும் நேர்வில், எந்த முறையில் அத்தொகை கணக்கிடப்படவேண்டும் என்பதற்கும், எந்தக் காலத்திலிருந்து அல்லது எந்தக் காலத்திலும், முறையிலும் அத்தொகைகள் வழங்கப்பட வேண்டும் என்பதற்கும், ஒரு நிதியாண்டிற்கும் மற்றொன்றுக்கும் இடையே கணக்கில் நேரமைவு செய்வதற்கும் பிற சார்வுறுவான அல்லது துணையுறு பொருட்பாடுகளுக்கும் வகை செய்யலாம்.

நிதி ஆணையம்

260. (1) குடியரசுத் தலைவர், ஆணையின் வழி, இந்த அரசமைப்பின் தொடக்க நிலையிலிருந்து ஐந்தாண்டுகளுக்குள்ளும், அதற்குப் பின்பு ஒவ்வோர் ஐந்தாவது ஆண்டு முடிவிலும் அல்லது குடியரசுத் தலைவர் தேவையெனக் கருதும் அதற்கு முந்தியதொரு காலத்திலும், நிதி ஆணையம் ஒன்றை அமைப்பார். அவ்வாணையம் குடியரசுத் தலைவரால் அமர்த்தப் பெறும் தலைவர் ஒருவரையும், பிற நான்கு உறுப்பினர்களையும் கொண்டிருக்கும்.

(2) நாடாளுமன்றம் சட்டத்தினால், அந்த ஆணையத்தின் உறுப்பினர்களாக அமர்த்தப் பெறுவ தற்குத் தேவைப்படும் தகுதிப்பாடுகளையும் அவர்கள் தெரிந்தெடுக்கப்பட வேண்டிய முறையையும் தீர் மானிக்கலாம்.

(3) பின்வருவன குறித்துக் குடியரசுத் தலைவ ருக்குப் பரிந்துரைகள் செய்வது இந்த ஆணையத்தின் கடமை ஆகும் -

(அ) இந்த அத்தியாயத்தின்படி ஒன்றியத்திற் கும் மாநிலங்களுக்கும் இடையே பிரிக்கப்பட வேண்டிய அல்லது பிரிக்கப்படுவதாகும் வரிகளி லிருந்து கிடைக்கும் நிகரத்தொகைகளை அவற்றுக் கிடையே பகிர்ந்தளித்தல், மற்றும், அத்தகைய தொகை களில் முறையே அவற்றிற்குரிய பங்குகளை அந்த மாநிலங்களுக்கிடையே பகிர்ந்தொதுக்குதல்:

(ஆ) இந்திய வருவாயிலிருந்து மாநிலங்களின் வருவாய்களுக்காக உதவி மான்யங்களை அளிப்பதில் பின்பற்றப்பட வேண்டிய நெறிகள்;

(இ) முதல் பட்டியல் பகுதி III-ல் குறிப்பிடப் பட்டுள்ளபடி, இந்திய அரசாங்கம் தற்சமயம் ஒன்றி யத்திற்கும் மாநிலங்களுக்குமிடையே வரி அல்லது தீர்வை விதித்தல், ஈட்டுதல் மற்றும் பகிர்ந்தளித்தல் சம்பந்தமான உடன்பாட்டினைத் தொடரவோ அல்லது மாற்றவோ,

(ஈ.) சீரான நிதி நலம் கருதிக் குடியரசுத் தலைவர் இந்த ஆணையத்திற்குச் சுட்டியனுப்பும் பிற பொருள் எதுவும் பற்றியோ,

(4) அந்த ஆணையம் தனது நெறிமுறையைத் தானே தீர்மானித்துக் கொள்ளுதல் வேண்டும். மேலும், தனது செயற் பணிகளைப் புரிவதற்கு, நாடாளுமன்றம் சட்டத்தினால் அதற்கு வழங்கும் அதிகாரங்களை யும் அது உடையது ஆகும்.

நிதி ஆணையத்தின் பரிந்துரைகள்

*261.* இந்த அத்தியாயத்தில் சுட்டிக்காட்டியது போலக் குடியரசுத் தலைவர், இந்த அரசமைப்பில் வகையங்களின்படி இந் நிதி ஆணையம் செய்யும் பரிந்துரை ஒவ்வொன்றையும், அதன்மீது எடுக்கப் பட்ட நடவடிக்கைகள் குறித்து விளக்கிக் குறிப்புரையுடன் சேர்த்து நாடாளுமன்றத்தின் ஒவ்வோர் அவை முன்பும் வைக்குமாறு செய்வார்.

## நிதி பற்றிய பல்திற வகையங்கள்

இந்திய வருவாயிலிருந்து செய்வதாகும் செலவுகள்

ஒன்றியம் அல்லது ஒரு மாநிலம், பொது நோக்கம் எதற்காகவும், அந்நோக்கம் நாடாளுமன்றம் அல்லது அந்த மாநிலச் சட்டமன்றச் சட்டங்கள் இயற்றுவதற்கு உரியதொன்றாக இல்லாத போதிலும், மானியங்கள் எவற்றையும் வழங்கலாம்.

பொதுப் பணத்தைக் கைப்பொறுப்பில் வைத்திருத்தல்.

*263. (1)* விதிவிலக்கு அளித்தவை போக, இந்தியாவின் வருவாய் அல்லது மாநிலத்தின் வருவாயைப் பெற்று, இந்தியாவின் பொதுக்கணக்கு அல்லது மாநிலத்தின் பொதுக்கணக்கில் குறிப்பிட்ட விதிகளின்படி வரவு வைக்கவும் அல்லது குறிப்பிட்ட நபர் முறைப்படி அந்தக் கணக்கில் பணத்தைச் செலுத்துவதற்கு அதிகாரம் வழங்கவும், அந்தக் கணக்கிலிருந்து பணத்தைத் திரும்பப் பெறவும், அந்தப் பணத்தைக் கைப்பொறுப்பில் வைத்திருக்கவும் அதோடு சம்பந்தப்பட்ட பிற பொருட்பாடுகள் அனைத்திற்கும் குடியரசுத்தலைவர் அல்லது ஒரு மாநிலத்தின் ஆளுநர் விதிகளை உண்டாக்கலாம்.

*(2)* இந்த உறுப்பில் எது எவ்வாறாயிருப்பினும், இந்திய வருவாயைக் கைப்பொறுப்பில் வைத்திருப்பதும், அந்தக் கணக்கில் பணத் தொகைகளை செலுத்துவதும், அவற்றிலிருந்து பணத்தொகைகளைத் திரும்ப எடுப்பதும் பற்றி நாடாளுமன்றம் சட்டம் இயற்றலாம். ஒரு மாநிலத்தின் வருவாயைக் கைப் பொறுப்பில் வைத்திருப்பதும், அந்தக் கணக்கில் பணத்

தொகைகள் செலுத்துவதும் அவற்றிலிருந்து பணத் தொகைகள் திரும்ப எடுப்பதும் பற்றி மாநிலத்தின் சட்டசபை சட்டங்கள் உருவாக்கலாம். ஒரு சட்டத் திற்கு என்ன சட்ட உடன்பாடு உண்டோ அதேபோல இந்த உறுப்பின் கீழ் உருவாக்கப்படும் சட்டங்களுக் கும் அவ்வுடன்பாடு உண்டு.

*சில பொதுச் சொத்திற்கு வரி விதிப்பிலிருந்து விலக்களித்தல்*

*264.* ஒன்றியத்துச் சொத்து எதுவும், நாடாளு மன்றம் பிறவாறு வகை செய்யும் அளவிற்கு அல்லா மல், ஒரு மாநிலத்தின் அதிகாரத்தின் கீழ் விதிக்கப் படும் வரிகள் அனைத்திலிருந்தும் விலக்களிக்கப் படுவதாகும்.

வரம்புரையாக: நாடாளுமன்றம் பிற வகை யாக வகை செய்யும் வரையில், சட்டப்படி இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு வரி விதிப்பதற்கு உற்றதாக இருந்த அல்லது உற்றதாகக் கருதப்பட்ட ஒன்றியத்துச் சொத்து, மேலும் அந்த வரி விதிப்புத் தொடர்ந்தால் அல்லது தொடரும் வரை வரி செலுத்த வேண்டும்.

*மின் விசை மீதான வரிகளி லிருந்து விலக் களித்தல்.*

265. நாடாளுமன்றம் பிறவாறு வகை செய்யும் அளவிற்கு அல்லாமல், மாநிலம் ஒன்றன் சட்டம் எதுவும் -

(அ) இந்திய அரசாங்கத்தால் பயன்படுத்தப் படுகிற அல்லது இந்திய அரசாங்கத்தின் நுகர்விற்காக விற்கப்படுகிற அல்லது

(ஆ) அரசாங்கத்தின் ஒன்றிய இரயில்வே எதனையும் அமைப்பதில், பேணிவருவதில் அல்லது இயக்குவதில் அந்த இரயில்வேயை இயக்கி வருகிற ஓர் இரயில்வே நிறுமத்தாலோ பயனுறுத்தப் படுகிற அல்லது இரயில்வே எதனையும் அமைப் பதில் அல்லது பேணிவருவதில் அல்லது இயக்கு வதில் பயனுறுத்தப்படுவதற்காக அந்த அரசாங்கத் திற்கு அல்லது அந்த இரயில்வே நிறுமத்திற்கு விற்கப்

படுகிற மின் விசையின் பயனுறுத்தம் அல்லது விற்பனையின்மீது வரி எதனையும் விதித்தலோ விதிப்பதற்கு அதிகாரம் அளித்தலோ ஆகாது; மேலும், மின் விசையின் விற்பனையின் மீதுவரி எதனையும் விதிக்கின்ற அல்லது விதிப்பதற்கு அதிகாரம் அளிக்கின்ற அத்தகைய சட்டம் எதுவும், இந்திய அரசாங்கத்தினால் பயனுறுத்தப்படுவதற்காக அந்த அரசாங்கத்திற்கு அல்லது இரயில்வே எதனையும் அமைப்பதில், பேணுவதில் அல்லது இயக்குவதில் பயனுறுத்தப்படுவதற்காக மேற்சொன்னவாறு அத்தகைய இரயில்வே நிறுமனத்திற்குவிற்பனை செய்யப்படும் மின் விசையின் விலை, மின்விசையைக் கணிசமான அளவிற்குப் பயனறுத்தும் பிறருக்குக் குறிக்கப்படும் விலையை விட அந்த வரித் தொகையின் அளவிற்குக் குறைந்ததாக இருக்கும்படி உறுதி செய்தல் வேண்டும்.

ஒன்றிய வரி விதிப்பிலிருந்து மாநில அரசாங்கங்களுக்கு விலக்களித்தல்.

266. இதன்பின் தரப்பட்ட வகையங்களுக்கு உட்பட்டு, இந்திய எல்லையில் உள்ள நிலங்கள், கட்டடங்கள், அந்த நிலப்பரப்பிலிருந்து பெரும் வருவாய் அல்லது கிடைப்பன எவற்றிற்கும் மாநிலஅரசாங்கம் மீது ஒன்றியம் வரி விதிக்கலாகாது.

வரம்புரையாக -

(அ) மாநில அரசாங்கம் சார்பில் வர்த்தகம் அல்லது வியாபாரம் செய்தால் அது தொடர்பான செயல்பாடுகள் அல்லது அதிலிருந்து பெறக்கூடிய வருமானம் அல்லது அது சம்பந்தமாகச் சொத்து இருந்தால், இந்த உறுப்பின்படி, அரசாங்கம் வரி விதிப்பதிலிருந்தோ அல்லது அதற்கு ஈடான பணம் பெறுவதிலிருந்தோ விலக்கு அளிக்காது.

(ஆ) முதல் பட்டியல் பகுதி III-ல் குறிப்பிட்டுள்ள இந்த உறுப்பின்படி, எந்த மாநிலத்திலுள்ள மன்னர்கள் வைத்திருக்கும் நிலம், கட்ட

டங்கள் அல்லது அவர்களின் சொந்தச் சொத்து அல்லது அதிலிருந்து வரக்கூடிய வருமானம் மீது, ஒன்றியம் வரிவிதிப்பதற்கு விலக்குக் கிடையாது.

விளக்கம்: இந்த உறுப்பின்படி ஒரு மாநில அரசாங்கத்தின் கீழ் இருக்கும் வனம் அல்லது வனத்திலிருந்து உற்பத்தி செய்யப்படும் பொருள்கள் அல்லது சிறைச்சாலையில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் ஒரு மாநிலத்தின் வர்த்தகம் அல்லது வியாபாரமாகக் கொள்ளாமல், அது அந்த மாநிலத்தின் சார்வுறு அன்றாட நிகழ்ச்சி அல்லது பணியாகவே கருதப்படும்.

ஓய்வூதியம் குறித்த சில செலவுகள், ஓய்வூதியங்கள் ஆகியவை பொறுத்த நேரமைவு.

267. முதல் பட்டியல் பகுதி -I ல் குறிப்பிட்டுள்ளபடி, இந்த அரசமைப்பின் வகையங்களின்படி நீதிமன்றம் அல்லது ஆணையம் ஒன்றின் செலவுகள் அல்லது இந்த அரசமைப்பின் தொடக்கநிலைக்கு முன்பு முடியரசின்கீழ் இந்தியாவின் தொடர்பாகப் பணிபுரிந்திருக்கின்ற ஒருவருக்கு அல்லது அவர் பொருட்டு வழங்கப்படுவதான ஓய்வூதியம் இந்திய வருவாயின் மீதோ அல்லது மாநில வருவாயின் மீதோ சார்த்தப்பட்டதாக இருக்குமிடத்து-

(அ) இந்திய வருவாயின் மீது சார்த்தப்பட்ட ஒரு செலவாக இருக்கும் நேர்வில், குறிப்பாக அந்நீதிமன்றமோ ஆணையமோ மாநிலம் ஒன்றன் தனிப்பட்ட தேவைகளில் எதனையும் நிறைவுறுத்துமாயின், அல்லது அந்த நபர் மாநிலம் ஒன்றன் அலுவற்பாடுகள் தொடர்பாக முழுமையாகவோ ஓரளவோ பணிபுரிந்திருப்பாராயின், அல்லது

(ஆ) மாநிலம் ஒன்றன் வருவாயின் மீது சார்த்தப்பட்ட ஒரு செலவாக இருக்கும் நேர்வில், அந்நீதிமன்றமோ ஆணையமோ ஒன்றி

யத்தின் அல்லது பிறிதொரு மாநிலத்தின் தனிப்பட்ட தேவைகளில் எதனையும் நிறைவுறுத்துமாயின் அல்லது அந்த நபர் ஒன்றியத்தின் அல்லது பிறிதொரு மாநிலத்தின் அலுவற்பாடுகள் தொடர்பாக முழுமையாகவோ ஓரளவோ பணிபுரிந்திருப்பாராயின், அச்செலவுகள் அல்லது ஓய்வூதியம் பொறுத்து ஒப்பியவாறான பங்களிப்புத் தொகை அல்லது ஒப்புதல் ஏற்படாதவிடத்து, இந்தியாவின் தலைமை நீதிபதியால் அமர்த்தப்பெறும் பொதுவரால் தீர்மானிக்கப்படும் பங்களிப்புத் தொகை, அந்த மாநிலத்தின் வருவாயின் மீது அல்லது நேர்வுக்கேற்ப, இந்திய வருவாயின் மீது சார்த்தப்பட்டு, அதிலிருந்து வழங்கப்படுதல் வேண்டும்.

## அத்தியாயம் - II - கடன்பெறுதல்

*இந்திய அரசாங்கம் கடன் பெறுதல்*

268. ஒன்றியத்து ஆட்சி அதிகாரமானது, நாடாளுமன்றம் சட்டத்தினால் அவ்வப்போது நிருணயிக்கும் வரம்புகள் எவையேனுமிருப்பின், அவற்றிற்குள்ளடங்களி, இந்திய வருமானத்தின் பிணையத்தின் பேரில் கடன் பெறுவதையும், அவ்வாறு நிருணயிக்கப்பட்ட வரம்புகள், எவையேனுமிருப்பின், அவற்றிற்குள்ளடங்கி உத்திரவாதம் அளிப்பதையும் அளாவி நிற்கும்.

*மாநிலங்கள் கடன்பெறுதல்.*

269. 1. முதல் பட்டியல் பகுதி I-ல் குறிப்பிட்டுள்ளபடி, இந்த உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, மாநிலம் ஒன்றன் ஆட்சி அதிகாரமானது, அந்த மாநிலச் சட்டமன்றம் சட்டத்தினால் அவ்வப்போது நிருணயிக்கும் வரம்புகள், எவையேனுமிருப்பின், அவற்றிற்குள்ளடங்கி, அந்த மாநிலத்தின் வருவாயின் பிணையத்தின் பேரில் இந்திய நிலவரைக்குள் கடன்

வாங்குவதையும், அவ்வாறு நிருணயிக்கப்பட்ட வரம்புகள், எவையேனுமிருப்பின், அவற்றிற்குள்ளடங்கி உத்திரவாதம் அளிப்பதையும் அளாவி நிற்கும்.

2. முதல் பட்டியல் பகுதி -I அல்லது பகுதி III-ல் குறிப்பிட்டுள்ளபடி, இந்திய அரசாங்கம் விதிக்கும் வரையறைகளுக்குட்பட்டு, முன்பு கூறப்பட்ட உறுப்பின் எல்லைக்குட்பட்டு, மாநிலங்களுக்குப் பிணையத்தின்பேரில் கடன்கள் வழங்கலாம். மாநிலங்கள் பெற்ற கடன்களுக்கு உத்திரவாதமும் வழங்கலாம். அத்தகைய கடன்கள் வழங்குவதற்குத் தேவைப்படும் தொகைகள் இந்திய வருவாயின் மீது சார்த்தப்படும்.

3. தற்சமயம், முதல் பட்டியல் பகுதி-I அல்லது பகுதி-III ல் குறிப்பிட்டுள்ளபடி, இந்திய அரசாங்கத்தால் அல்லது அதற்கு முன்பிருந்த அரசாங்கத்தால் மாநிலம் ஒன்றிற்கு வழங்கப்பட்டிருக்கின்ற அல்லது இந்திய அரசாங்கத்தால் அல்லது அதற்கு முன்பிருந்த அரசாங்கத்தால் உத்திரவாதம் அளிக்கப்பட்டிருக்கின்ற கடன் ஒன்றின் பகுதி எதுவும் இன்னும் கொடுபடாமல் இருக்குமாயின், அந்த மாநிலம், இந்திய அரசாங்கத்தின் இசைவு இல்லாமல் கடன் எதனையும் எழுப்புதல் ஆகாது.

இந்தக் கூறின்கீழ், இந்திய அரசாங்கம் தக்கதெனக் கருதி விதிக்கும் நிபந்தனைகள் எவையேனுமிருப்பின், அவற்றிற்குட்பட்டு இசைவு அளிக்கப்படலாம்.

## அத்தியாயம் - III

## சொத்து, ஒப்பந்தங்கள், பொறுப்படைவுகள் மற்றும் உரிமை வழக்குகள்

270. முதல் பட்டியல் பகுதி -Iல் குறிப்பிட்டுள்ளபடி, அரசமைப்புத் தொடக்க நிலையிலிருந்து,

சொத்திருப்புகள், கடன்கள் உரிமைகள் மற்றும் பொறுப்படைவுகள் ஆகியவற்றிற்கு வாரிசுரிமை

தற்சமயம் இந்திய அரசாங்கம் மற்றும் அரசாங்கத்திலுள்ள ஒவ்வொரு மாநிலமும், இந்திய தன்னாட்சியும் மற்றும் அரசாங்கத்தின் தொடர்புடைய வாரிசுகள் ஆவார்கள்.

பாகிஸ்தான் தன்னாட்சி அரசமைப்புத் தொடக்க நிலைக்கு முன்னால் அல்லது மேற்கு வங்காள மாகாணம், கிழக்கு வங்காளம், மேற்குப் பஞ்சாப் மற்றும் கிழக்குப் பஞ்சாப் அரசமைப்புத் தொடக்க நிலைக்குமுன்னால் இருந்த சொத்து, சொத்திருப்புகள் மற்றும் பொறுப்படைவுகள் அந்தந்தந்தத் தொடர்புடைய மாகாண ஆளுநர்களைச் சாரும்.

வாரிசு இல்லாமை அல்லது உரிமைகோருநர் இல்லாமை அல்லது உரிமைக் குற்றவர் இல்லாமை காரணமாகச் சேர்ந்தடையும் சொத்து.

*271.* இதன் பின்பு, வகை செய்யப்பட்டுள்ளதற்கு உட்பட்டு, இந்திய ஆட்சி நிலவரையிலுள்ள சொத்து எதுவும், முதல் பட்டியல் பகுதி - IIIல் குறிப்பிட்டுள்ள மாகாணங்கள் தவிர, இந்த அரசமைப்புச் செயற்பாட்டுக்கு வாராதிருப்பின், வாரிசு இல்லாமை அல்லது உரிமை கோருநர் இல்லாமை அல்லது உரிமைக்குற்றவர் இல்லாமை காரணமாக மாட்சிமை தங்கிய மன்னரிடம் அல்லது முதல் பட்டியல் பகுதி -Iல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலத்தில் அமைந்த சொத்தாகும். அந்தச் சொத்து அந்த மாநிலம் ஒன்றியம் மற்றும் இந்திய அரசாங்கத்திற்கும் உற்றடையும்.

வரம்புரையாக: குறிப்பிட்ட தேதியில் மாட்சிமை தங்கிய மன்னரின் ஆதிக்கத்தின் கீழ் அந்தச் சொத்து இருந்தாலும் அல்லது இந்திய அரசாங்கத்தின் கீழ் இருந்தாலும் அல்லது முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிடப்பட்டுள்ள மாநில அரசாங்கத்தின் வசம் இருந்தாலும், ஒன்றியம் அல்லது மாநில அரசின்கீழ் எந்தக் காரணத் திற்காக இருந்ததோ அதே காரணத்திற்காக இந்திய அரசாங்கம் அல்லது மாநில அரசிடம் அந்தச் சொத்து உற்றடையும்.

சொத்துப் பெறுவதற்கான அதிகாரம்.

272. (1) தற்சமயம், முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிட்டுள்ள தகுந்த சட்டசபையின் சட்டத்திற்கு உட்பட்டு, ஒன்றியம் மற்றும் ஒவ்வொரு மாநில நிர்வாக அதிகாரிக்கு ஒன்றியத்திற்காகவோ அல்லது மாநிலத்திற்காகவோ சொத்தின் மீது மான்யம், சொத்தை விற்பது அல்லது அடகு வைப்பதற்கு அதிகாரம் உண்டு. அதேபோல முறையே சொத்தினை ஈட்டுவதற்கும் மற்றும் ஒப்பந்தங்கள் செய்யவும் அதிகாரம் உண்டு.

(2) முதல் பட்டியல் பகுதி- Iல் குறிப்பிடப்பட்டுள்ளது போல ஒன்றியம் அல்லது மாநிலத்திற்காகப் பெற்ற சொத்துக்கள் ஒன்றியம் அல்லது மாநிலத்திற்கு உற்றடையும்.

ஒப்பந்தங்கள்.

273. (1) முதல் பட்டியல் பகுதிIல் குறிப்பிட்டுள்ளது போல, ஒன்றியம் அல்லது மாநிலம் ஒன்றின் ஆட்சி அதிகாரத்தைச் செலுத்திச் செய்துகொள்ளப்படும் ஒப்பந்தங்கள் அனைத்தும், குடியரசுத் தலைவரால் அல்லது நேர்வுக்கேற்ப, அந்த மாநிலத்தின் ஆளுநரால் செய்து கொள்ளப்பட்டனவாக இயம்பப் பெறும். மேலும், அந்த அதிகாரத்தைச் செலுத்திச் செய்து கொள்ளப்படும் அத்தகைய அனைத்து ஒப்பந்தங்களும் அனைத்துச் சொத்துக் காப்பீடுகளும் குடியரசுத்தலைவர் அல்லது ஆளுநர் சார்பாக, அவர் பணிக்கும் அல்லது அதிகாரமளிக்கும் முறையிலும் அல்லது அவர் பணிக்கும் அல்லது அதிகாரமளிக்கும் நபர்களாலும் எழுதிக் கொடுக்கப்படுதல் வேண்டும்.

2. இந்த அரசமைப்பைப் பொறுத்து அல்லது இந்திய அரசாங்கம் தொடர்பாக இதற்கு முன்பு செயலில் இருந்துவந்த சட்டம் ஒன்றைப் பொறுத்து, செய்து கொள்ளப்பட்ட ஒப்பந்தம் அல்லது எழுதிக் கொடுக்கப்பட்ட காப்பீடு எதற்காகவும், குடியரசுத் தலைவரோ ஆளுநரோ தம் சொந்த முறையில் பொறுப்படைவுற்றவர் ஆகார். மேலும், அவர்களில் எவர் சார்பாகவும் எனக்குறித்து, அத்தகைய ஒப்பந்தம் அல்லது காப்பீடு எதனையும் செய்து கொள்கின்ற

அல்லது எழுதிக் கொடுக்கின்ற எவரும்கூட, அதற்காகத் தம் சொந்த முறையில் பொறுப்படைவுற்றவர் ஆகார்.

உரிமை வழக்குகளும், நடவடிக்கைகளும்.

274. (1) முதல் பட்டியல் பகுதி-I-ல் குறிப்பிட்டுள்ளதுபோல, இந்திய அரசாங்கத்தின் பெயரால் இந்திய அரசாங்கம் வழக்கிடலாம் அல்லது வழக்கிடப்படலாம். ஒரு மாநிலத்தின் பெயரால் அந்த மாநில அரசாங்கம் வழக்கிடலாம் அல்லது வழக்கிடப்படலாம். மேலும், இந்த அரசமைப்பு இயற்றப்படாதிருப்பின், எந்நேர்வுகளில் இந்தியத் தன்னாட்சியமும் நேரிணையான மகாணங்களும் தத்தம் அலுவற்பாடுகள் தொடர்பாக வழக்கிட்டிருக்கலாமோ வழக்கிடப்பட்டிருக்கலாமோ அத்தகைய நேர்வுகளில், இந்த அரசமைப்பினால் வழங்கப்பட்ட அதிகாரங்களின் பயன்திறன்வழி இயற்றப்பட்ட நாடாளுமன்றச் சட்டத்தினால் அல்லது அத்தகைய மாநிலச் சட்டமன்றச் சட்டத்தினால் செய்யப்படும் வகையங்கள் எவற்றிற்கும் உட்பட்டு, இந்திய அரசாங்கமும் மாநில அரசாங்கமும் வழக்கிடலாம் அல்லது வழக்கிடப்படலாம்.

(2) இந்த அரசமைப்பின் தொடக்க நிலையின் போது

(அ) இந்தியத் தன்னாட்சியத்தை ஒரு தரப்பினராகக் கொண்ட சட்ட நடவடிக்கைகள் எவையும் முடிவுறா நிலையில் இருக்குமாயின், அந்த நடவடிக்கைகளில் இந்தியத் தன்னாட்சியத்திற்குப் பதிலாக இந்திய அரசாங்கம் சேர்க்கப்பட்டதாகக் கொள்ளப்படும். மேலும்,

(ஆ) ஓர் இந்தியக் குறுநிலத்தை ஒருதரப்பினராகக் கொண்ட சட்ட நடவடிக்கைகள் எவையும் முடிவுறா நிலையில் இருக்குமாயின், அந்த நடவடிக்கைகளில் இந்தியக் குறுநிலத்திற்குப் பதிலாக நேரிணையான மாநிலம் சேர்க்கப்பட்டதாகக் கொள்ளப்படும்.

# பகுதி XI

## நெருக்கடி நிலை வகையங்கள்

*நெருக்கடி நிலை அறிவிப்பாணை*

275. (1) போர் அல்லது உள்நாட்டு வன்முறை காரணமாக, இந்தியாவின் பாதுகாப்பிற்கு ஆபத்து விளைவிக்கும் கடுமையான நெருக்கடி நிலைமை எழுந்துள்ளது எனக் குடியரசுத்தலைவர் தெளிவுறக் காண்பாராயின், அவர் ஓர் அறிவிப்பாணை மூலமாக, அத்தகைய நிலை எழுந்துள்ளது எனக் கூறலாம்.

(2) இந்த உறுப்பின் கூறு (1) -ன் படி அறிவிப் பாணை வெளியிடப்பட்டிருப்பது (இந்த அரசமைப் பில் நெருக்கடி நிலை பற்றி அறிவிப்பு ஆணை எனப் படுகிறது.)

(அ) பின்வரும் அறிவிப்பு ஆணையின்படி ரத்து செய்யலாம்;

(ஆ) நாடாளுமன்ற இரு அவைகளுக்கும் முன் னால் வைத்தல் வேண்டும்;

(இ) ஆறு மாதங்கள் முடிவதற்குள், நாடாளு மன்றத்தின் இரு அவைகளிலும் ஒப்புதல் தீர்மானம் நிறைவேற்றப்படாவிட்டால் செயலிழக்க நேரிடும்.

(3) இந்தியாவின் பாதுகாப்பிற்கு, போர் அல்லது உள்நாட்டு வன்முறை காரணமாக உடனடி ஆபத்து உள்ளதென குடியரசுத் தலைவர் தெளிவுறக் காண்பாராயின், அத்தகைய போர் அல்லது உள்நாட்டு வன்முறை நிகழ்வதற்கு முன்பேகூட உடனடியாக ஆபத்து உள்ளது என்று நெருக்கடி நிலை அறிவிப் பாணை பிறப்பிக்கலாம்.

*நெருக்கடிநிலை அறிவிப்பாணை யின் விளைவு.*

276. இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப் பினும், நெருக்கடி நிலை அறிவிப்பாணை நிலுவை யிலுள்ள பொழுது -

(அ) மாநிலம் ஒன்றின் ஆட்சி அதிகாரம் எம்முறையில் செலுத்தப்பட வேண்டும் என்று நெறிப்படுத்துவதற்கான அதிகாரமும் ஒன்றியத்து ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்.

(ஆ) எந்தப் பொருட்பாடு பொறுத்தும் சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுன்றத்திற்குள்ள அதிகாரமானது, இந்திய அரசாங்கத்தில் எண்ணிடப்பட்டுள்ள ஒன்றாக இந்திய அரசாங்கத்திற்கு அந்தப் பொருட்பாடு பொறுத்து அதிகாரங்களை வழங்குதல், கடமைகளை விதித்தல் ஆகியவற்றிற்கான சட்டங்களை அல்லது அவ்வாறு அதிகாரங்களை வழங்கவும் கடமைகளை விதிக்கவும் அலுவலர்கள் மற்றும் அரசதிகாரம் பெற்றவர்கள் அதிகாரமளிப்பதற்கான சட்டங்களை இயற்றுவதற்கான அதிகாரத்தையும் உள்ளடக்கும்.

நெருக்கடிநிலை அறிவிப்பு ஆணை செயற்பாட்டில் இருக்குங்கால் வருவாய்களைப் பகிர்ந்தளித்தல் தொடர்பான வகையங்கள் பொருந்துறுதல்.

277. நெருக்கடிநிலை அறிவிப்பாணை ஒன்று செயற்பாட்டில் இருக்குங்கால், குடியரசுத் தலைவர் ஆணையின்வழி, அரசமைப்பு 249 முதல் 259 வரையுள்ள உறுப்புகளின் வகையங்கள் அனைத்தும் அல்லது அவற்றில் எதுவும், தாம் தக்கதெனக் கருதும் விதிவிலக்குகள் அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, எந்நேர்விலும், அந்த அறிவிப்பு ஆணை செயற்பாடு அற்றுப் போகும். நிதியாண்டு முடிவடையும் காலத்திற்கு மேற்படாமல், அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் கால அளவிற்குச் செல்திறம் உடையன ஆகும் எனப் பணிக்கலாம்.

முதல் பட்டியல் பகுதி-I-ல் உள்ள மாநிலங்களில் அரசமைப்பில் இயங்குமுறை செயலற்றுப் போகும் நேர்வில், அதற்கான வகையங்கள்.

278. (1) குடியரசுத் தலைவர், இந்த அரசமைப்பு உறுப்பு 188-ன்படி ஒரு மாநில ஆளுநரிடமிருந்து அறிக்கை ஒன்றைப் பெறுவதன் மேல், இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு இணங்க மாநில அரசாங்கத்தை நடத்திச் செல்ல இயலாத ஒரு நிலைமை எழுந்துள்ளதெனத் தெளிவுறக் காண்பாராயின், குடியரசுத் தலைவர் அறிவிப்பு ஆணை வழி -

(அ) அந்த மாநில அரசாங்கத்தின் செயற்பணிகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும், அந்த மாநில ஆளுநரிடம் அல்லது அந்த மாநிலத்திலுள்ள அந்த மாநிலச் சட்டமன்றம் அல்லாத பிற குழுமம் அல்லது அதிகார அமைப்பு எதனிடமும் உற்றமைந்த அல்லது அவர்களால் செலுத்தப்படுவதாகும் அதிகாரங்கள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் தாமே மேற்கொள்ளலாம்.

(ஆ) அந்த மாநிலச் சட்டமன்றத்தின் அதிகாரங்கள், நாடாளுமன்றத்தின் மூலமாக மட்டும் செலுத்தப்படுவதாகும் என அறிவிக்கலாம்.

மேலும் அந்த மாநிலத்திலுள்ள குழுமம் அல்லது அதிகார அமைப்புத் தொடர்பாக உள்ள இந்த அரசமைப்பின் வகையங்களில் எதன் செயற்பாட்டையும் முழுதுமாகவோ பகுதியாகவோ தற்காலிகமாக நிறுத்திவைப்பதற்கான ஏற்பாடுகள் உள்ளடங்கலாக, இந்த அறிவிப்பு ஆணையின்படி நோக்கங்களைச் செயல்படுத்துவதற்குத் தேவையான அல்லது உகந்தவையெனக் குடியரசுத் தலைவருக்குத் தோன்றும் சார்வுறு மற்றும் விளைவுறு ஏற்பாடுகளைச் செய்யலாம்.

வரம்புரையாக: இந்தக் கூறிலுள்ள எதுவும், ஓர் உயர்நீதிமன்றத்திடம் உற்றமைந்துள்ள அல்லது அதனால் செலுத்தப்படுவதாகும் அதிகாரங்களில் எதனையும் தாமே மேற்கொள்ளவோ, உயர்நீதிமன்றங்கள் தொடர்பான இந்த அரசமைப்பின் வகையம் எதனின் செயற்பாட்டையும் முழுவதுமாக அல்லது பகுதியாகத் தற்காலிகமாக நிறுத்தி வைக்கவோ குடியரசுத் தலைவருக்கு அதிகாரமளிப்பதில்லை.

(2) அத்தகைய அறிவிப்பு ஆணை எதுவும் பிந்தைய அறிவிப்பு ஆணை ஒன்றினால் ரத்து செய்யவோ அல்லது மாற்றி அமைக்கவோப்படலாம்.

(3) இந்த உறுப்பின்கீழ் அறிவிப்பு ஆணை -

(அ) நாடாளுமன்ற அவை ஒவ்வொன்றின் முன்பும் வைத்தல் வேண்டும்.

(ஆ) தவிர ஓர் அறிவிப்பு ஆணை அதற்கு முந்தைய அறிவிப்பு ஆணையை ரத்து செய்யுமேயானால் அது ஆறு மாத காலத்திற்குப் பிறகு செயலற்றுப் போகும்.

வரம்புரையாக: அத்தகைய அறிவிப்பு ஆணை ஒன்று தொடர்ந்து செயலாற்றலில் இருந்து வருவதற்கு ஒப்பேற்பளிக்கும் ஒரு தீர்மானம், நாடாளுமன்றத்தின் ஈரவைகளிலும் நிறைவேற்றப்படுமாயின், அவ்வாறு நிறைவேற்றப்படுந்தோறும் அந்த அறிவிப்பு ஆணை ரத்து செய்யப்பட்டாலன்றி, இந்தக் கூறின்படி பிறவாறு அது செயற்பாடு அற்றுப் போயிருக்கும் தேதியிலிருந்து மேற்கொண்டும், ஓர் பன்னிரண்டு மாதக் கால அளவுக்குத் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவரும்; ஆனால், அத்தகைய அறிவிப்பு ஆணை எதுவும், எந்நேர்விலும் மூன்றாண்டுகளுக்கு மேல் செல்லாற்றலில் இருந்து வருதல் ஆகாது.

4. இந்த உறுப்புக் கூறு (1)ன்படி, அறிவிப்பு ஆணை வெளியிடப்பட்டிருக்குமாயின், அந்த மாநிலச் சட்டசபையின் அதிகாரங்களை நாடாளுமன்றம் செயல்படுத்தும்.

நாடாளுமன்றம் தகுந்த -

(அ) சட்டங்கள் இயற்றுவது பொறுத்து அதிகாரங்கள் மற்றும் கடமைகளை விதித்தல் அல்லது சட்டங்கள் இயற்ற அங்கீகாரம் அளித்தல் மற்றும் கடமைகளை விதிப்பதற்கும், இந்திய அரசாங்கம் அல்லது இந்திய அரசாங்கம் அங்கீகாரம் அளித்த அதிகாரிகளுக்கு நாடாளுமன்றம் வழங்கலாம்.

(ஆ) அரசமைப்பு உறுப்பு 102-ன்படி நாடாளு மன்றத்தின் இரு அவைகளும் கூடாத பொழுது, குடியரசுத் தலைவர் அவசரச் சட்டம் பிரகடனம் செய்யலாம்.

5. நாடாளுமன்றம் சட்டம் இயற்றி இருக்கா தெனினும் நெருக்கடி நிலைமை பிரகடனப்படுத் தினால் இந்த உறுப்பின்கீழ் நாடாளுமன்றம் சட்டம் இயற்ற தகுதியுடையதாகின்றது. நெருக்கடி நிலை பிரகடனம் அறிவித்து ஓர் ஆண்டுக் காலம் முடிந்த பிறகு, சட்டம் இயற்ற தகுதியற்றநிலை நீங்கிவிடும். குறிப்பிட்ட காலம் முடிவதற்குள் செய்த அல்லது செய் யாமல் விடுபட்ட காரியங்கள் தவிர மாநிலச் சட்ட சபையில் உடனடியாகச் சட்டத்தை ரத்து செய்தா லொழிய அல்லது திரும்பவும் சட்டமாக மாறுதல் களுடன் அல்லது மாறுதல்கள் இல்லாமல் இயற்றப் பட்டாலன்றிக் குறிப்பிட்ட காலமுடிவதற்குள் அந்த வகையங்கள் செயலற்றுப் போகும்.

*நெருக்கடி நிலைகளின்போது 13-ம் உறுப்பின் வகையங்களைத் தற்காலிகமாக நிறுத்தி வைத்தல்.*

279. நெருக்கடி நிலைமை அறிவிப்பு ஆணை செயற்பாட்டில் இருக்குங்கால், சட்டங்களை இயற்று வதற்கும் ஆட்சித்துறை நடவடிக்கைகளை மேற்கொள் வதற்கும் மாநில அரசுக்கு அதிகாரம் உண்டு. அர சமைப்புப் பகுதி - III உறுப்பு 13 வகையங்கள் மாநில அரசின் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தாது.

*நெருக்கடி நிலைகளின் போது, அரசமைப்பு உறுப்பு 25ன்படி உத்திரவாதம் அளிக்கப்பட்ட உரிமைகள் தற்காலிகமாக நிறுத்தி வைத்தல்.*

[1]280. நெருக்கடி நிலை அறிவிப்பு ஆணை செயற் பாட்டிலிருக்கும்பொழுது, குடியரசுத் தலைவர் ஆணை யின்வழி அரசமைப்பு உறுப்பு 25-ன்படி உத்திர வாத மிட்ட உரிமைகளைத் தற்காலிகமாக நிறுத்தி வைக்க லாம். அறிவிப்பு ஆணை முடிவுற்று ஆறு மாத காலத் திற்குப் பின்பும் குடியரசுத் தலைவர் ஆணை செயல் பாட்டிலிருக்குமென அந்த ஆணையில் குறிப்பிடலாம்.

1. தற்சமயம், முதல்பட்டியல் பகுதி IIIல் குறிப்பிட்டுள்ளபடி, ஒருமாநிலத்தில் நெருக்கடிநிலை பிரகடனப்படுத்தப்பட்டிருக் கும் பொழுது உறுப்பு 13-ன் கீழ் அடிப்படை உரிமைகளைத் தற்காலிகமாக நிறுத்திவைத்தல் கூடாதெனவும் அல்லது உறுப்பு, 25-ன்கீழ் தற்காலிகமாக நிறுத்திவைத்த உரிமைகளைச் செயல்படுத்தக்கூடாதெனவும் குழு தன்கருத்தைத் தெரிவித்தது. ஏனென்றால் அப்படி ஒரு வகையம் இருந்தால் அது தேவை யற்ற சிக்கல்களை உருவாக்கும்.

# பகுதி - XII

## ஒன்றியம், மாநிலம் ஆகியவற்றின் கீழுள்ள பணியங்கள்

### அத்தியாயம் - I - [1]பணியங்கள்

பொருள்கோள்.

281. இந்தப் பகுதியில், தறுவாயின் தேவை வேறானாலன்றி, "மாநிலம்" என்றால் முதல் பட்டியல் பகுதி -Iல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலம் ஆகும்.

282 (1) ஒன்றியத்திற்கு அல்லது ஒரு மாநிலத்திற்குப் பணிபுரிவதற்காக ஆளெடுத்தலும் பணி வரைக் கட்டுகளும் இந்த உறுப்பின் கூறு 2ன் வகையங்களுக்கு உட்பட்டு, உரிய சட்டமன்றத்தின் சட்டங்கள், ஒன்றியத்தின் அல்லது மாநிலம் ஒன்றின் அலுவற்பாடுகள் தொடர்பான அரசுப் பணியங்களுக்கும் பணியடைகளுக்கும் ஆளெடுப்பதையும் அவற்றிற்கு அமர்த்தப் பெறுபவர்களின் பணிவரைக்கட்டுகளையும் ஒழுங்குபடுத்தலாம்.

2. இந்திய அரசாங்கம் அல்லது மாநில அரசாங்கம் ஒன்றின் குடியியல் பணியம் உறுப்பினராக இருக்கிற எவரையும் பணிநீக்கம், பணியறவு அல்லது பணியிறக்கமோ செய்தல் கூடாது. மேற்கூறப்பட்ட எவரும், அவர் மீதான குற்றச்சாட்டுக்களை அவருக்குத் தெரிவித்து அந்தக் குற்றச்சாட்டுக்களைப் பொறுத்து அவர் கூறுவதைக் கேட்பதற்குத் தகுமான வாய்ப்பு நல்கி விசாரணை செய்த பின்பு தவிர, பணிநீக்கம், பணியறவு அல்லது பணியிறக்கம் செய்யப்படுதல் ஆகாது.

---

1. பாதுகாப்புப் பணிகள் அல்லது ஒன்றியம் அல்லது மாநிலத்தில் குடியியற் பணிபுரிபவர்களைப் பற்றி, அடிப்படை வகையங்களான ஆளெடுத்தலும் பணிவகைக் கட்டுகளும் பாதுகாப்புப் பணிகள் அல்லது ஒன்றியம் அல்லது மாநிலத்தில் குடியியற் பணிபுரிவர்களைப் பற்றி அரசமைப்பில் சேர்க்க வேண்டிய தில்லை என்று குழு நினைக்கின்றது. தகுந்த சட்டமன்றங்களின் சட்டங்கள் வாயிலாக இவற்றை ஒழுங்குபடுத்தலாம்.

வரம்புரையாக: இந்தக் கூறு -

(அ) ஒருவரைக் குற்றச்சார்த்து ஒன்றின் மீது தண்டனைத் தீர்ப்புக்கு உள்ளாக்கிய அவருடைய நடத்தையின் அடிப்படையில் அவர் பணி நீக்கம் அல்லது பணியறவு அல்லது பணியிறக்கம் செய்யப்பட்டிருக்குமிடத்து; அல்லது

(ஆ) ஒருவரைப் பணிநீக்கம் அல்லது பணியறவு அல்லது பணியிறக்கம் செய்வதற்கு அதிகாரம் பெற்றுள்ள அதிகாரி, அத்தகைய விசாரணையை நடத்துவது, அவர் எழுதிப் பதிவு செய்ய வேண்டிய காரணம் எதனாலும் தகுமான அளவு நடைமுறையில் இயலாதது எனத் தெளிவுறக் காணுமிடத்துப் பொருந்துறுதல் ஆகாது.

இடைப்பட்ட காலத்திற்கான வகையங்கள்.

283. இந்த அரசமைப்பில் வேறு வகையம் இல்லாதிருப்பின், இந்த அரசமைப்புத் தொடங்குவதற்கு முன்பிருந்த சட்டங்கள் எந்தப்பொதுப்பணிக்கும் பொருத்தமாக ஒன்றியம் அல்லது மாநிலத்தில் இந்த அரசமைப்பு ஆரம்பத்திற்குப்பிறகு எந்தப்பணியிடமும் தொடர்ந்து இருக்குமேயானால், அதற்கு ஏற்றதான வகையம் இந்த அரசமைப்பில் தொடரும்.

## அத்தியாயம் - II

## அரசுப் பணியாளர் தேர்வாணையங்கள்

ஒன்றியத்திற்கும் மாநிலங்களுக்கும் அரசுப் பணியாளர் தேர்வாணையங்கள்.

284. (1) இந்த உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, ஒன்றியத்திற்கென அரசுப் பணியாளர் தேர்வாணையம் ஒன்றும், ஒவ்வொரு மாநிலத்திற்கும் என அரசுப் பணியாளர் தேர்வாணையம் ஒவ்வொன்றும் இருந்துவரும்.

(2) இரண்டு அல்லது அவற்றிற்கு மேற்பட்ட மாநிலங்கள் -

(அ) அந்த மாநிலங்களின் தொகுப்புக்கென ஒரே அரசுப் பணியாளர் தேர்வாணையம் இருந்து வர உடன்படலாம் அல்லது,

(ஆ) ஒரு மாநிலத்திலுள்ள அரசுப் பணியாளர் தேர்வாணையம் மற்ற மாநிலங்களின் தேவையைப் பூர்த்தி செய்ய உடன்படலாம்.

மேற்கூறப்பட்ட சட்டம் எதுவும், அச்சட்டத்தின் நோக்கங்களைச் செல்திறப்படுத்துவதற்கு அவசியமான அல்லது உகந்ததான சார்வுறு மற்றும் விளைவுறு வகையங்களைக் கொண்டிருக்கலாம். இந்த அரசமைப்புப் பாகத்தின் கீழ்ப் பல மாநிலங்களுக்கு ஒரு தேர்வாணையம் இருக்க ஒப்புக்கொள்வார்களேயானால் எந்த ஆளுநர் அல்லது ஆளுநர்கள் இந்தப் பணியைச் செய்ய வேண்டும் என்பதை நிர்ணயிக்க வேண்டும்.

(3) ஒன்றியத்திற்கான அரசுப் பணியாளர் தேர்வாணையம், ஒரு மாநிலத்தின் ஆளுநரால் அந்த மாநிலத்தின் தேவைகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் நிறைவுறுத்தும் பொருட்டுப் பணியாற்றக் கேட்டுக்கொள்ளப்படுமாயின், குடியரசுத் தலைவரின் ஒப்பேற்புடன் அவ்வாறு பணியாற்ற உடன்படலாம்.

(4) இந்த அரசமைப்பில் ஒன்றியத்திற்கான அரசுப்பணியாளர் தேர்வாணையம் அல்லது மாநிலம் ஒன்றின் அரசுப்பணியாளர் தேர்வாணையம் பற்றிய கட்டுரைகள், தறுவாயின் தேவை வேறானாலன்றிப் பிரச்சினையிலுள்ள குறிப்பிட்ட பொருட்பாடு பொறுத்து, ஒன்றியத்தின் அல்லது, தேர்வுக்கேற்ப, அந்த மாநிலத்தின் தேவைகளை நிறைவுறுத்தும் பொருட்டுப் பணிபுரியும் ஆணையத்தைக் குறிப்பிடும் சுட்டுகைகளாகப் பொருள் கொள்ளப்படும்.

தேர்வாணையத்தின் பணியாளர்களும் அதன் அமைப்பும்.

285. (1) அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைவரும் பிற உறுப்பினர்களும், ஒன்றியத்து ஆணையத்தைப் பொறுத்தவரை குடியரசுத் தலைவ

ராலும், மாநிலம் ஒன்றின் ஆணையத்தைப் பொறுத்த வரை அந்த மாநிலத்தின் ஆளுநராலும் விவேகத்தின் படி அமர்த்தப் பெறுவர்.

*வரம்புரையாக:* அரசுப் பணியாளர் தேர்வாணையம் ஒவ்வொன்றின் உறுப்பினர்களில், கூடுமான வரையில் ஒரு பாதியினர் அவர்கள் முறையே அமர்த்தப் பெற்ற தேதிகளில் இந்திய அரசாங்கத்தின் கீழ் அல்லது மாநிலம் ஒன்றின் அரசாங்கத்தின்கீழ்க் குறைந்தது பத்தாண்டுகள் பதவி வகித்தவர்களாக இருத்தல் வேண்டும்; மேற்சொன்ன பத்தாண்டுக்கால அளவைக் கணக்கிடுவதில், இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்கு முன்பு, ஒருவர் முடியரசின் கீழ்ப் பதவி வகித்த கால அளவையும் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

(2) ஒன்றியத் தேர்வாணையமாக இருந்தால் குடியரசுத்தலைவரும், மாநிலத் தேர்வாணையமாக இருந்தால் ஆளுநரும் விவேகத்தின் அடிப்படையில் விதிமுறைகளின்படி -

(அ) தேர்வாணையத்தின் உறுப்பினர்கள் எண்ணிக்கை, அவர்களின் பதவிக்காலம் மற்றும் அவர்கள் பணிபற்றிய நிபந்தனைகளை நிர்ணயிக்கலாம்.

(3) பதவிக் காலம் முடிந்த பிறகு -

(அ) ஒன்றியத் தேர்வாணையத்தின் தலைவர் இந்திய அரசாங்கத்தின் கீழோ அல்லது மாநில அரசாங்கத்தின் கீழோ மேலும் பணிபுரிய தகுதியற்றவர் ஆவார்;

(ஆ) மாநிலத் தேர்வாணையத்தின் தலைவர், ஒன்றியத் தேர்வாணையத்தின் தலைவராகவோ அல்லது உறுப்பினராகவோ அல்லது மற்றொரு மாநிலத்தின் தேர்வாணையத் தலைவராகவோ இருந்தவர்கள் இந்திய அரசாங்கத்தின் கீழோ அல்லது மாநில அரசாங்கத்தின் கீழோ வேறு எந்த வேலைக்கும் தகுதியுற்றவராவார்;

அரசுப் பணியாளர்தேர்வாணையத்தின் பணிகள்.

286. (1) ஒன்றிய மற்றும் மாநிலப் பணியாளர்களை நியமனம் செய்வதற்கு, ஒன்றிய மற்றும் மாநிலத் தேர்வாணையங்கள் தேர்வுகள் நடத்துவது அவர்கள் பணியாகும்.

(2) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்கள், ஒன்றிய அரசுப் பணியாளர் தேர்வாணையத்தைக் கேட்டுக் கொண்டால், பிரத்தியேகத் தகுதி படைத்த நபர்களைப் பணியில் சேர்ப்பதற்கு அதற்கான செயல்முறைத் திட்டங்களை வழங்குவது ஒன்றிய அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் கடமையாகும்.

(3) ஒன்றியத்தில் உள்ள இந்திய ஆட்சிப் பணிகள், இதர பணிகள் மற்றும் பதவிகளுக்குக் குடியரசுத் தலைவரும், மாநிலம் சம்பந்தப்பட்ட இதர பணிகள் மற்றும் பதவிகள் குறித்து ஆளுநரும் சட்ட திட்டங்களைச் செயல்படுத்தலாம். கொடுக்கப்பட்ட சந்தர்ப்பத்தில் குறிப்பிட்ட அல்லது பொதுவான விஷயங்களில் அரசுப் பணியாளர் தேர்வாணையத்தைக் கலந்து ஆலோசிக்கத் தேவையில்லை. ஆனால் தொடர்ந்து வரும் கூறின் வகையங்களின்படி மாநிலத் தேர்வாணையத்தைக் கலந்தாலோசிக்க வேண்டும்.

(அ) குடியியல் பணியங்கள், குடியியல் பணியடைகள் ஆகியவற்றிற்கு ஆளெடுக்கும் முறைகள் தொடர்பான அனைத்துப் பொருட்பாடுகள் பற்றியும்,

(ஆ) குடியியல் பணியங்கள், பணியடைகள் ஆகியவற்றில் அமர்த்துவதிலும், ஒரு பணியத்திலிருந்து மற்றொன்றுக்குப் பதவி உயர்வுகள், மாற்றங்கள் செய்வதிலும், பின்பற்ற வேண்டிய நெறிகள் பற்றியும், அத்தகைய அமர்த்துகைகள், பதவி உயர்வுகள், மாற்றல்கள் ஆகியவற்றின் வேட்புநர்களுக்கான தகுதியுடைமை பற்றியும்,

(இ) இந்திய அரசாங்கத்தின்கீழ் அல்லது மாநில அரசாங்கம் ஒன்றின்கீழ்க் குடியியல் பணிபுரியும் ஒருவரைப் பாதிக்கும் ஒழுங்குக் கட்டுப்பாட்டுப் பொருட்பாடுகள் தொடர்பான பொது விண்ணப்பங்கள், மனுக்கள் உள்ளடங்கலாக, அத்தகைய பொருட்பாடுகள் அனைத்தைப் பற்றியும்,

(ஈ) இந்திய அரசாங்கத்தின்கீழ் அல்லது மாநில அரசாங்கம் ஒன்றின்கீழ் அல்லது முடியரசின் கீழ்ப் பணிபுரிகின்ற அல்லது பணிபுரிந்திருக்கின்ற ஒருவர், தம் கடமையை நிறைவேற்றுகையில், செய்த அல்லது செய்ததாகக் கருதப்படும் செயல்கள் பொறுத்து, அவர் மீது தொடரப்பட்ட சட்ட நடவடிக்கைகளில் எதிர்வாதம் செய்த வகையில் தாம் செய்ய நேரிட்ட செலவடை எதனையும், இந்திய வருவாயிலிருந்து அல்லது, நேர்வுக்கேற்ப, மாநில வருவாயிலிருந்து வழங்க வேண்டுமென்று அவரால் அல்லது அவரைப்பொறுத்துச் செய்யப்படும் கோரிக்கை எதனைப் பற்றியும்,

(உ) இந்திய அரசாங்கத்தின் கீழ் அல்லது மாநிலம் ஒன்றின் அரசாங்கத்தின்கீழ் அல்லது முடியரசின்கீழ்க் குடியியல் பணிபுரிந்தபோது, தமக்கு விளைந்த கேடுகள் பொறுத்து ஓய்வுதியம் அளிப்பதற்கான கோரிக்கை எதனைப் பற்றியும், அத்தகைய அளிப்பு, எதனின் தொகை குறித்த பிரச்சினை எதனைப் பற்றியும்,

மேலும், அரசுப் பணியாளர் தேர்வாணையத்திற்குக் குறித்தனுப்பப்பட்ட பொருட்பாடு எதன் மீதும்,

குடியரசுத் தலைவர் அல்லது, நேர்வுக்கேற்ப, அந்த மாநிலத்தின் ஆளுநர் தங்களுக்குக் குறித்தனுப்பும் பிற பொருட்பாடு எதன்மீதும் அறிவுரை வழங்குவது அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் கடமை ஆகும்:

*(4)* இந்த உறுப்பின்கீழ், ஒன்றியம் அல்லது மாநிலத்தில் பல்வேறு சாதியினருக்காகக் குடியியல் பணிகள் ஒதுக்கப்படுவது சம்பந்தமாக அரசுப் பணியாளர் தேர்வாணையங்களைக் கலந்து ஆலோசிக்கத் தேவையில்லை.

*அரசுப் பணியாளர் தேர்வாணையங்களின் செயற்பணிகளை விரிவாக்குவதன் அதிகாரம்.*

287. இந்த உறுப்பின் வகையங்கட்கு உட்பட்டு, நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட ஒரு சட்டம் அல்லது மாநிலச் சட்டசபையினால் இயற்றப்பட்ட ஒரு சட்டம், ஒன்றியம் அரசுப் பணியாளர் தேர்வாணையம் அல்லது மாநில அரசுப் பணியாளர் தேர்வாணையம் கூடுதலாகச் செயற்பணிகளை ஆற்றுவதற்கு வகை செய்யலாம்.

வரம்புரையாக: மாநில அரசு இயற்றிய சட்டத்தின்படி, குடியரசுத் தலைவரின் அங்கீகாரம் இல்லாமல், அந்த மாநிலப் பணியில் இல்லாத எவர் ஒருவர் மீதும் அந்தச் சட்டம் செயல்பட முடியாது.

*அரசுப் பணியாளர்தேர்வாணையங்களின் செலவுகள்.*

288. ஒன்றியம் அல்லது மாநிலம் ஒன்றின் அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர்களுக்கு அல்லது பணியாளர் தொகுதிக்கு அல்லது அவர்கள் தொடர்பாக வழங்கப்படும் வரைவூதியங்கள், படித்தொகைகள், ஓய்வூதியங்கள் உள்ளடங்கலான, அவ்வாணையத்தின் செலவுகள், இந்திய வருவாயின் மீது அல்லது நேர்வுக்கேற்ப, அந்த மாநில வருவாயின் மீது சார்த்தப்படும்.

# பகுதி - XIII

## தேர்தல்கள்

தேர்தல்களைக் கண்காணிப்பதும், நெறிப்படுத்துவதும் கட்டாள்கை புரிவதும் தேர்தல்ஆணையத்திடம் உற்றமைந்திருக்கும்.

289. (1) இந்த அரசமைப்பின்கீழ், குடியரசுத் தலைவர், குடியரசுத் துணைத்தலைவர் மற்றும் நாடாளுமன்றத்தின் தேர்தல்களைக் கண்காணிப்பதும், நெறிப்படுத்துவதும், கட்டாள்கைபுரிவதும், மற்றும் நாடாளுமன்றம் தேர்தல் சம்பந்தமாக எழும் சந்தேகங்கள், சச்சரவுகளைத் தீர்த்துவைக்க அமைக்கப் படும் தேர்தல் நீதிமன்றம் ஆகியவை குடியரசுத் தலைவரால் அமைக்கப்படும் ஆணையத்திடம் உற்றமையும்.

(2) இந்த அரசமைப்பின்கீழ், முதல் பட்டியல் பகுதி-I ல் குறிப்பிட்டுள்ளபடி, தற்சமயம் மாநிலச் சட்டசபை மற்றும் **மாநில ஆளுநரை நியமிப்பதற்காக மாநில ஆளுநரைத் தேர்ந்தெடுக்க உருவாக்கும் பட்டியல்**[1] சம்பந்தமான தேர்தல்களைக் கண்காணிப்பதும், நெறிப்படுத்துவதும், கட்டாள்கை புரிவதும், மேலும் மாநிலச் சட்டசபைக்கான தேர்தல் சம்பந்தமாக எழும் சந்தேகம், சர்ச்சைகள் தீர்த்துவைக்கும் தேர்தல் நீதிமன்றம் அமைப்பதும் அந்த **மாநில ஆளுநரால் அமைக்கப்படும் ஆணையத்திடம் உற்றமையும்.**[2]

நாடாளுமன்றத்திற்கான தேர்தல்கள்.

290. இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, நாடாளுமன்ற ஈரவைகளில் எதற்கும் தேர்தல்களைப் பொறுத்து அல்லது அவை தொடர்பாக,

---

1. உறுப்பு 131ல் இரண்டாவதாகப் பயன்படுத்துவது பின்பற்றப் படுமேயானால், இந்தக்கூறில் 'மாநில ஆளுநருக்கான தேர்தல்'' என்பதற்குப் பதில் 'மாநில ஆளுநரை நியமிப்பதற்காக மாநில ஆளுநரைத் தேர்ந்தெடுக்க உருவாக்கும் பட்டியல்'' எனக் கொள்ளல் வேண்டும்.

2. முதல் பட்டியல் பகுதி -Iல், மாநிலஆளுநரால் நியமிக்கப்பட்ட தேர்தல் ஆணையம் சட்டசபையின் தேர்தல்களைக் கண்காணிப்பதும், நெறிப்படுத்துவதும் கட்டாள்கைபுரிவதும் அதன் பணியாகும் எனக் குழு நினைக்கின்றது.

தேர்தல் தொகுதிகளை வரையறுத்தல் அத்தகைய அவையை அல்லது அவைகளை உரியவாறு அமைப்பதற்குத் தேவையான பிற பொருட்பாடுகள் ஆகிய அனைத்தையும் பொறுத்து நாடாளுமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் வகை செய்யலாம்.

மாநிலத்தின் சட்டசபைகளுக்கான தேர்தல்.

291. முதல் பட்டியல் பகுதி-I ல் குறிப்பிட்டுள்ளபடி, இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, ஒரு மாநிலத்தின் சட்டமன்றத்தின் அவைக்கான அல்லது அதன் ஈரவைகளில் எதற்குமான தேர்தல்களைப் பொறுத்து அல்லது அவைகளை அமைப்பதற்குத் தேவையான பிற பொருட்பாடுகள் ஆகிய அனைத்தையும் பொறுத்து அந்த மாநிலச் சட்டமன்றம் அவ்வப்போது சட்டத்தினால் வகை செய்யலாம்.

# பகுதி - XIV

## சிறுபான்மையினர் தொடர்பான தனியுறு வகையங்கள்

*மக்களவையில் சிறுபான்மையருக்கான இட ஒதுக்கீடு.*

292. இந்த அரசமைப்பு, 67-கூறு(5) துணைக் கூறு (ஆ)ல் கொடுக்கப்பட்ட அளவுகளின்படி மக்களவையில் இடங்கள் ஒதுக்கீடு செய்யப்படும்.

(அ) பட்டியல் இனத்தவர் மற்றும் முஸ்லீம் சமுதாயத்தினர்;

(ஆ) தற்சமயம், முதல் பட்டியல் பகுதி - I -ல் குறிப்பிட்டுள்ளபடி ஒவ்வொரு மாநிலத்திலுமுள்ள பட்டியலின் கண்ட பழங்குடியினர்; மற்றும்

(இ) சென்னை மற்றும் பம்பாயில் உள்ள இந்திய கிருஸ்துவச் சமுதாயத்தினர்.

*மக்கள் அவையில் ஆங்கிலோ - இந்தியர் சமூகத்தினருக்கான தனியுறு வகையம்*

293. அரசமைப்பு, உறுப்பு 67-ல் எது எவ்வாறிருப்பினும், மக்களவையில் ஆங்கிலோ-இந்தியர் சமூகத்தினர் போதுமான அளவு பிரதிநிதித்துவம் இல்லையென்று குடியரசுத் தலைவர் நினைப்பாராயின், அந்தச் சமூகத்தைச் சார்ந்தவர்களில் இரண்டு நபருக்கு மிகாமல் மக்களவையில் நியமனம் செய்யலாம்.

*மாநிலச் சட்டசபைகளில் சிறுபான்மையினருக்கான இட ஒதுக்கீடு:*

294. (1) இந்த அரசமைப்பு, உறுப்பு 149 கூறு (3)ல் கொடுக்கப்பட்ட அளவுகளின்படி இடஒதுக்கீடு செய்யப்படும் -

(அ) முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிட்டுள்ளபடி தற்சமயம் ஒவ்வொரு மாநிலச் சட்டசபைகளிலும் முஸ்லீம் சமுதாயத்தினர், பட்டியல் இனத்தவர், அசாமில் தன்னாட்சி மாவட்டத்தில் உள்ள பட்டியலில் கண்ட பழங்குடியினர் தவிர, பட்டியலில் கண்ட பழங்குடியினர்; மற்றும்

(ஆ) சென்னை மற்றும் பம்பாய் மாநிலங்களில் உள்ள சட்டசபைகளில் இந்தியக் கிருஸ்தவச் சமுதாயத்தினர்.

(2) அசாம் மாநிலத்தில் உள்ள சட்டசபையில் தன்னாட்சி மாவட்டங்களில் இட ஒதுக்கீடு செய்யப் படும்.

(3) தற்சமயம், முதல் பட்டியல் பகுதி -Iல் குறிப் பிட்டுள்ளபடி, எந்த மாநிலச் சட்டசபையிலும் எந்தச் சமுதாயத்தினருக்காகவும் செய்யப்படும் இடஒதுக் கீடு, மாநிலத்தின் மொத்த மக்கள் தொகையில் சட்ட சபையில் உள்ள மொத்த இடங்களில் அந்தச் சமுதா யத்தினர் எந்த அளவு விகிதாச்சாரம் உள்ளனரோ அதற்கு ஏறத்தாழ சமமான அளவு இருக்கும்.

விளக்கம்: இந்தக் கூறின்படி ஒரு மாநிலத்தில் உள்ள மொத்தபட்டியல் இனத்தவரும் ஓர் இனத்தைச் சார்ந்தவராகக் கருதப்படுவர். அதேபோலப் பட்டி யலில் கண்ட பழங்குடியினரும் கருதப்படுவர்.

(4) அசாம் மாநிலச் சட்டசபையில் தன்னாட்சி மாவட்டத்திற்காக ஒதுக்கீடு செய்யப்பட்ட இடங் கள், அசாம் மாநிலத்தில் உள்ள மொத்த மக்கள் தொகையின் விகிதாச்சார அடிப்படையில் மாவட்டத் தில் எவ்வளவு மக்கள் தொகை உள்ளதோ அந்தவீத அளவிற்குக் குறையாமல் இருத்தல் வேண்டும்.

(5) அசாம் மாநிலத்தில் சுயாட்சி மாவட்டத் திற்காக ஒதுக்கீடு செய்யப்பட்ட இடங்கள், அந்த மாவட்டத்திற்கு வெளியே உள்ள நிலப்பரப்பை உள் ளடக்காது.

(6) அசாம் மாநிலத்தின் தன்னாட்சி மாவட்டம் (ஷில்லாங் நகராட்சி மற்றும் இராணுவப்படைவீரர் தங்கும் தொகுதி தவிர) பட்டியலில் கண்ட பழங்குடி யைச் சேர்ந்தவராக இல்லாத எவரும், அந்த மாவட் டத்தின்[1] தேர்தல் தொகுதி எதிலிருந்தும் அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப் பெறுவ தற்குத் தகுதியுடைவர் ஆகார்.

1. அரசமைப்பின் ஆறாவது பட்டியல், பகுதிI, வகை 1-ல் 19-வது பத்தியின் சேர்க்கையில் 'ஷில்லாங் நகரம் தவிர' என்ற வார்த்தை இருக்குமேயானால் சதுர அடைப்புக்குறிக்குள் வரும் வார்த்தை கள் நீக்கப்பட வேண்டும்.

மாநிலச் சட்டசபைகளில் ஆங்கிலோ-இந்தியர்சமூகத்தினர்பிரதிநிதித்துவதிற்காகத் தனியுறு வகையம்.

295. இந்த அரசமைப்பு, உறுப்பு 149ல் உள்ளது. எவ்வாறாயிருப்பினும், ஒரு மாநில ஆளுநர் அந்த மாநிலச் சட்டசபையில் ஆங்கிலோ-இந்தியர் சமுதாயத்தினர் போதுமான அளவு இல்லையென்று நினைத்தால், அந்தச் சமூகத்தைச் சார்ந்த தகுதி வாய்ந்தவர்களைத் தேவையென அவர் கருதும் அளவு நியமனம் செய்யலாம்.

பணிகள் மற்றும் பணியிடைகளுக்கான சிறுபான்மையினர் கோரிக்கைகள்.

296. முதல்பட்டியல் பகுதி-Iல் குறிப்பிட்டுள்ளபடி, அடுத்துத் தொடர்ந்துவரும் உறுப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, ஒன்றியம் அல்லது ஒரு மாநிலத்தின் அலுவற்பாடுகள் தொடர்பான பணியங்களுக்கும் பணியிடைகளுக்கும் அமர்த்தங்கள் செய்யுங்கால், நிருவாகத் திறம்பாட்டினைப் பேணுவதற்கு ஒவ்வும் வகையில் சிறுபான்மைச் சமூகத்தினரின் கோருரிமைகளைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

குறித்த சில பணியங்களில், ஆங்கிலோ-இந்தியர்சமூகத்தினருக்கான தனியுறு வகையம்.

297. (1) இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்குப் பின்பு முதல் ஈராண்டுகளின்போது, இரயில்வே, சுங்கம், அஞ்சல், தந்தி ஆகிய ஒன்றியத்துப் பணியங்களிலுள்ள பணியிடைகளுக்கு ஆங்கிலோ-இந்தியர் சமூகத்தினரின் அமர்த்துகை, 1947-ம் ஆண்டு ஆகஸ்டுப் பதினைந்தாம் நாளை ஒட்டிமுன்பு இருந்த அதே அடிப்படையில் செய்யப்படுதல் வேண்டும்.

அதற்கு அடுத்துப் பின்வரும் ஒவ்வோர் ஈராண்டுக் கால அளவின்போதும் மேற்சொன்ன பணியங்களில் அச்சமூகத்தினருக்கு ஒதுக்கீடு செய்யப்படும் பணியிடைகளின் எண்ணிக்கை, அதற்கு ஒட்டி முந்தைய ஈராண்டுக் கால அளவின்போது அவ்வாறு ஒதுக்கீடு செய்யப்பட்ட எண்ணிக்கையை விடப் பத்து விழுக்காடு குறைவாயிருக்கும்.

வரம்புரையாக: இந்த அரசமைப்பின் தொடக்க நிலையிலிருந்து பத்தாண்டுகள் முடிவுற்றதும், அத்தகைய ஒதுக்கீடுகள் அனைத்தும் அற்றுப் போகும்.

2. ஆங்கிலோ- இந்திய சமூகத்தினரைப் பிற சமூகத்தினருடன் ஒப்பிடுகையில், திறமையின் அடிப் படையில் அமர்த்தப் பெறுவதற்கு அவர்கள் தகுதிப் பாடு உடையவர்களாக இருக்குமிடத்து, கூறு (1)ல் உள்ள எதுவும், அந்தக்கூறின்படி அச்சமூகத்தினருக் கென ஒதுக்கீடு செய்யப்படும் பணியடைகள் அல்லாத பிற பணியடைகளுக்கோ அதற்கும் கூடுதலான பணி யடைகளுக்கோ அச்சமூகத்தினரை அமர்த்துவதற்குத் தடையாக இருப்பதில்லை.

ஆங்கிலோ-இந்தியர் சமூகத்தினரின்நலனுக்காகக் கல்வி மானியங்கள் பொறுத்த, தனியுறு வகையம்.

298. தற்சமயம் முதல் பட்டியல் பகுதி - I-ல் குறிப்பிட்டுள்ளபடி, இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்குப் பின்பு முதல் மூன்று நிதி ஆண்டுகளின் போது கல்வி பொறுத்து, ஆங்கிலோ-இந்தியர் சமூகத் தினர் நலனுக்காக, 1948 மார்ச்சு முப்பத்தொன்றாம் நாளுடன் முடிவடைந்த நிதியாண்டில் அளிக்கப்பட்டு வந்த மானியங்கள், எவையேனுமிருப்பின், அவை ஒன்றியத்தினாலும் ஒவ்வொரு மாநிலத்தினாலும் அளிக்கப்பட்டு வருதல் வேண்டும்.

அதற்கு அடுத்துப் பின்வரும் ஒவ்வொரு மூன் றாண்டுக் காலஅளவின்போதும், அந்த மானியங்கள் அதற்கு ஒட்டி முந்தைய மூன்றாண்டுக் கால அள விற்கு வழங்கப்பட்ட மானியங்களை விடப் பத்து விழுக்காடு குறைவாக இருக்கலாம்.

வரம்புரையாக: இந்த அரசமைப்பின் தொடக்க நிலையிலிருந்து, பத்தாண்டுகள் முடிவுற்றதும், அத் தகைய மானியங்கள், அவை ஆங்கிலோ-இந்தியர் சமூகத்தினருக்கான ஒரு தனியுறு சலுகையாக இருக் கின்ற அளவுக்கு அற்றுப்போகும்.

மேலும் வரம்புரையாக: கல்வி நிறுவனம் எதிலும் ஆண்டுதோறும் சேர்க்கப் பெறுபவர்களில் குறைந்தது நூற்றுக்கு நாற்பது பேர் ஆங்கிலோ-இந்தியர் சமூகத்தினர் அல்லாத பிற சமூகத்தினராக இருந்தாலன்றி, அக்கல்வி நிறுவனம் இந்த உறுப்பின்

படி மானியம் எதனையும் பெறுவதற்கு உரிமை கொண்டது ஆகாது.

ஒன்றியம் மற்றும் மாநிலங்களில் சிறுபான்மையினருக்காகப் பிரத்தியேக அதிகாரிகள்.

299. (1) தற்சமயம் முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிட்டுள்ளபடி, ஒன்றியத்தில் சிறுபான்மையினருக்கான பிரத்தியேக அதிகாரி, குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுவார். ஒவ்வொரு மாநிலத்திலும் சிறுபான்மையினருக்கான பிரத்தியேக அதிகாரி அந்த மாநில ஆளுநரால் நியமிக்கப்படுவார்.

(2) ஒன்றியத்திலுள்ள பிரத்தியேக அதிகாரி, அரசமைப்பில் சிறுபான்மையினருக்காக அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்புகள் சம்பந்தப்பட்ட விஷயங்களை புலனாய்வு செய்து, ஒன்றியத்தில் அவை எப்படிச் செயல்படுகின்றன என்பதைக் குறிப்பிட்ட கால இடைவெளிகளில் குடியரசுத் தலைவருக்குச் சமர்ப்பிக்க வேண்டும். அவர் இந்த அறிக்கையினை நாடாளுமன்றம் முன்பு வைக்கச் செய்வார்.

(3) மாநிலத்திலுள்ள பிரத்தியேக அதிகாரி, அரசமைப்பில் சிறுபான்மையினருக்காக அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்புகள் சம்பந்தப்பட்ட விஷயங்களைப் புலனாய்வு செய்து, மாநிலங்களில் அவை எப்படிச் செயல்படுகின்றன என்பதைக் குறிப்பிட்ட கால இடைவெளிகளில் ஆளுநருக்குச் சமர்ப்பிக்க வேண்டும். அவர் இந்த அறிக்கையினை மாநிலச் சட்டசபையின் முன்பு வைக்கச் செய்வார்.

முதல் பட்டியல் பகுதி-Iல் மாநிலங்களில் பட்டியலில் கண்ட பழங்குடியினர் நலன் மற்றும் பட்டியல் நிலப்பரப்புகளை நிர்வகித்தவை ஒன்றியத்தின் கட்டுப்பாட்டிற்குள் கொணர்தல்.

300. (1) தற்சமயம் முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிட்டுள்ளபடி, இந்த அரசமைப்புத் தொடக்க நிலையிலிருந்து பத்தாண்டுகள் முடிவுற்ற பிறகு, எந்நேரத்திலும், குடியரசுத்தலைவர் தம் ஆணையின்வழி ஆணையம் ஒன்றினை நியமித்து மாநிலங்களில் பட்டியலில் உள்ள பழங்குடியினர் நலன் மற்றும் பட்டியல் நிலப்பரப்பு நிர்வாகம் பற்றிய அறிக்கையினை அளிக்கச் செய்வார்.

இந்த உத்தரவு, ஆணையம் அமைக்கும் விளக்கம், அதிகாரம், நடைமுறை மேலும் குடியரசுத் தலைவர் தேவையென அல்லது விரும்பும் சார்வுறு அல்லது துணையுறு வகையங்களைக் கொண்டிருக்கும்.

(2) ஒன்றியத்தின் நிர்வாக அதிகாரம் மாநிலங்களுக்கு உத்தரவு இட முடியும். ஒரு மாநிலத்தில் பட்டியலில் கண்ட பழங்குடியினர் நலனுக்காகத் தேவையான திட்டங்களைச் செயல்படுத்துவதற்காக ஒன்றியம் உத்தரவு பிறப்பிக்கலாம்.

பிற்பட்ட வகுப்பினரின் நிலைமைகளை ஆய்ந்து காண்பதற்குஆணையம் ஒன்றை அமர்த்துதல்.

301. (1) இந்திய ஆட்சி நிலவரையிலுள்ள, சமூக மற்றும் கல்வி நிலையில் பிற்பட்ட வகுப்பினரின் நிலைமைகளையும் அவர்களை உழற்றும் இடர்ப்பாடுகளையும் ஆய்ந்து காண்பதற்கும் அத்தகைய இடர்ப்பாடுகளை அகற்றி, அவர்களின் நிலைமையை மேம்படுத்துவதற்கும் ஒன்றியம் அல்லது ஒரு மாநிலம் எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் குறித்தும் அதன் பொருட்டு ஒன்றியம் அல்லது ஒரு மாநிலம் அளிக்க வேண்டிய மானியங்கள் பொறுத்தும் அம்மானியங்கள் எந்த வரைகட்டுகளுக்குட்பட்டு அளிக்கப்பட வேண்டும் என்பது பற்றியும் பரிந்துரைகள் செய்வதற்கும், குடியரசுத் தலைவர் ஆணையின்வழித் தாம் தக்கவர்கள் எனக் கருதுபவர்களைக் கொண்ட ஆணையம் ஒன்றை அமர்த்தலாம்; அத்தகைய ஆணையத்தை அமர்த்துகிற ஆணையானது, அந்த ஆணையம் பின்பற்ற வேண்டிய நெறிமுறைகளையும் வரையறை செய்யும்.

(2) அவ்வாறு அமர்த்தப்பட்ட ஆணையம், தனக்குக் குறித்தனுப்பப்பட்டுள்ள பொருட்பாடுகளை ஆய்வு செய்து, தான் கண்டறிந்த உண்மைகளை விவரித்துத் தான் ஏற்புடையவை எனக் கருதும் பரிந்துரைகளுடன் ஓர் அறிக்கையைக் குடியரசுத் தலைவரிடம் அளித்தல் வேண்டும்.

(3) அவ்வாறு அளிக்கப்பட்ட அறிக்கையின் ஒரு படியினை, அதன் மீது மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கையை விளக்கும் விவரக் குறிப்புடன் சேர்த்துக் குடியரசுத்தலைவர் நாடாளுமன்றம் முன்பு வைக்கச் செய்வார்.

# பகுதி XV

## பல்வகை

குடியரசுத் தலைவர் மற்றும் ஆளுநர்களுக்குப் பாதுகாப்பு.

1. குடியரசுத் தலைவர் அல்லது ஒரு மாநிலத்தின் ஆளுநர் தமது பதவியின் அதிகாரங்களைச் செலுத்துவதற்காகவும் கடமைகளைப் புரிவதற்காகவும், அல்லது அந்த அதிகாரங்களைச் செலுத்துவதிலும் கடமைகளைப் புரிவதிலும் அவர் செய்த அல்லது செய்ததாகக் கருதப்படும் செயல் எதனையும் குறித்து நீதிமன்றம் எதற்கும், காரணங்கூறும் பொறுப்புடையவர் ஆகார்.

வரம்புரையாக: இந்த அரசமைப்பு உறுப்பு 50-ன்படி, ஒரு குற்றசார்த்தினை விசாரிப்பதற்காக நாடாளுமன்றத்தின் ஈரவைகளில் எதனாலும் அமர்த்தப்பட்ட அல்லது குறித்திடப்பட்ட நீதிமன்றம், தீர்ப்பாயம் அல்லது குழுமம் எதனாலும் குடியரசுத் தலைவரின் நடத்தை ஆய்வு செய்யப்படுவதற்காகக் கொண்டு வரப்படலாம்.

மேலும் வரம்புரையாக: அரசமைப்புப் பகுதி X அத்தியாயம்-IIIல் குறிப்பிட்டுள்ளபடி, இந்தக் கூறிலுள்ள எதுவும், இந்திய அரசாங்கத்திற்கு அல்லது ஒரு மாநிலத்திற்கு எதிராக உரிய நடவடிக்கைகளை எடுப்பதற்கு எவருக்கும் உள்ள உரிமையை வரையறை செய்வதாகப் பொருள் கொள்ளுதல் ஆகாது.

(2) குடியரசுத் தலைவரின் அல்லது ஒரு மாநில ஆளுநரின் பதவிக் காலத்தின்போது, அவருக்கு எதிராக நீதிமன்றம் எதிலும் எவ்வகையான குற்றவியல் நடவடிக்கையும் தொடரப்படுதலோ அல்லது தொடர்ந்து நடத்தப்படுதலோ ஆகாது.

(3) குடியரசுத் தலைவரின் அல்லது ஒரு மாநில ஆளுநரின் பதவிக் காலத்தின்போது அவரைக் கைது

செய்வதற்கோ சிறையிலிடுவதற்கோ நீதிமன்றக் கட்டளை எதுவும், நீதிமன்றம் எதிலிருந்தும் பிறப் பிக்கப்படுதல் ஆகாது.

(4) குடியரசுத் தலைவராக அல்லது ஒரு மாநில ஆளுநராக ஒருவர் பதவி ஏற்பதற்கு முன்போ பின்போ, தமது சொந்த முறையில் செய்த அல்லது செய்ததாகக் கருதப்படுகிற செயல் எதற்காகவும், குடியரசுத் தலைவருக்கு அல்லது அந்த ஆளுநருக்கு எதிராகத் தீருதவி கோரும் உரிமையியல் நடவடிக்கை எதுவும், அவரது பதவிக் காலத்தின்போது அந் நட வடிக்கையின் தன்மை, அதற்கான வாக்குமூலம், அந் நடவடிக்கையினைத் தொடரவிருக்கும் தரப்பினரின் பெயர், விவரம், உறைவிடம், அவர் கோரும் தீருதவி ஆகியவற்றை குறிப்பிட்டு எழுத்து மூலமாக அறிவிப்பு ஒன்று குடியரசுத் தலைவரிடம் அல்லது நேர்வுக் கேற்ப, அந்த ஆளுநரிடம் ஒப்புவிக்கப்பட்டதற்கு அல்லது அவரது அலுவலகத்தில் சேர்ப்பிக்கப்பட்ட தற்குப் பின்பு இரண்டு மாதம் கழிவுற்றதின் மேலன்றி, நீதிமன்றம் எதிலும் தொடரப்படுதல் ஆகாது.

*விளக்கம் முதலியன.*

303. (1) இந்த அரசமைப்பில் தறுவாயின் தேவை வேறானலன்றிப் பின்வரும் சொற்றொடர்கள் அவற்றுக்கு முறையே ஈங்கிதனால் குறித்தளிக்கப்படும் பொருள்களை உடையன ஆகும். அவையாவன:

(அ) 'வேளாண் வருமானம்'' என்பது, இந்திய வருமான வரித் தொடர்பான சட்டங்களின் பொருட்டுப் பொருள் வரையறை செய்யப் பட்ட வேளாண் வருமானம் என்று பொருள் படும்.

(ஆ) 'ஓர் ஆங்கிலோ இந்தியர்'' என்பது, தம் முடைய தந்தையோ பிற ஆண்வழி மூதா தையர் எவருமோ ஐரோப்பியக் குடி வழி யினராய் இருப்பவராகவும் அல்லது இருந் தவராகவும், ஆனால் இந்திய ஆட்சி நில

வரைக்குள் நிலைவாழ்வகம் உடையவராகவும் இருப்பதுடன், தற்காலிக நோக்கங்களுக்காக மட்டுமன்றி அத்தகைய ஆட்சி நிலவரையிலேயே வழக்கமாகக் குடியிருக்கும் பெற்றோருக்கு அந்த ஆட்சி நிலவரைக்குள் பிறக்கின்றவராகவும் அல்லது பிறந்தவராகவும் உள்ள ஒருவர் என்று பொருள்படும்.

(இ) ''ஓர் இந்தியக் கிருஸ்துவர்'' என்றால் கிருஸ்துவ மதத்தினைப் பின்பற்றுகிற நபராக இருத்தல் வேண்டும். அவர் ஐரோப்பியராகவோ அல்லது ஆங்கிலோ - இந்தியராகவோ இருத்தல் கூடாது.

(ஈ) ''கடன்'' என்பது, ஆண்டுத் தொகைகள் வழங்குவதன் வாயிலாகப் பணம் திரட்டுவதை உள்ளடக்கும்; மேலும், ''பெறுகடன்'' என்பதும் அவ்வாறே பொருள் கொள்ளப்படுதல் வேண்டும்;

(உ) ''தலைமை நீதிபதி'' என்பது உயர்நீதிமன்றம் தலைமை நீதிபதியை உள்ளடக்கும்.

(ஊ) ''கூட்டுரும வரி'' என்பது, நிறுமங்களால் செலுத்தப்பட வேண்டிய வரியாகவும், பின்வரும் வரைக்கட்டுகளுக்கு இயைபுடைய வரியாகவும் உள்ள அளவிற்கு வருமானத்தின் மீதான வரி எதுவும் என்று பொருள்படும்.

i. அது வேளாண் வருமானம் மீது சார்த்தத்தக்கதாக இல்லாமை;

ii. நிறுமங்கள் செலுத்தும் வரியின் வகைக்காக, அந்நிறுமங்களால் தனி நபர்களுக்குச் செலுத்த வேண்டிய பங்கு ஆதாயங்களிலிருந்து கழித்துக் கொள்வதற்கு அந்த வரிக்குப் பொருந்துறும் சட்டங்களில் எதுவும் அதிகாரமளிக்காமை;

iii. இந்திய வருமான வரியைப் பொறுத்த வரை, அத்தகைய பங்கு ஆதாயங்களைப் பெறும் தனி நபர்களுடைய மொத்த வருமானத்தைக் கணக்கிடுவதில் அல்லது அத்தகைய தனிநபர்கள் செலுத்த வேண்டிய அல்லது அவர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டிய இந்திய வருமான வரியைக் கணக்கிடுவதில், அவ்வாறு செலுத்தப்பட்ட வரியைக் கணக்கில் எடுத்துக் கொள்வதற்கான வகையம் எதுவும் இல்லாமை;

(எ) ''நேரிணையான மாகாணம்'' அல்லது ''நேரிணையான மாநிலம்'' என்பது, ஐயப்பாடான நேர்வுகளில்,பிரச்சினையிலுள்ள குறிப்பிட்ட நோக்கத்திற்காக, நேர்வுக்கேற்ப, நேரிணையான மாகாணம் அல்லது நேரிணையான மாநிலம் எனக் குடியரசுத் தலைவரால் தீர்மானிக்கப்படும் மாகாணம் அல்லது மாநிலம் என்று பொருள்படும்.

(ஏ) 'உறுகடன்'' என்பது, ஆண்டுத் தொகைகள் வாயிலாக மூலதனத் தொகைகளைத் திருப்பிச் செலுத்தும் கடமைப்பாடு பொறுத்த பொறுப்படைவு எதனையும், பொறுப்புறுதி எதற்கும், உட்பட்ட, பொறுப்படைவு எதனையும் உள்ளடக்கும்; மேலும், ''உறுகடன் செலவீடுகள்'' என்பதற்கும் அதற்கிணங்கப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

(ஐ) ''நிலவுறும் சட்டம்'' என்பது, இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்கு முன்பு சட்டம், அவசரச் சட்டம், ஆணை, துணை விதி, விதி அல்லது ஒழுங்குறுத்தும் விதி எதனையும் இயற்றுவதற்கு அதிகாரம் உடையதாக இருந்த சட்டமன்றம், அதிகார

அமைப்பு எதனாலும் அல்லது நபர் எவராலும் இயற்றப்பட்ட அல்லது பிறப்பிக்கப் பட்ட சட்டம், அவசரச் சட்டம், துணை விதி, விதி அல்லது ஒழுங்குறுத்தும் விதி என்று பொருள்படும். ஆனால், ஐக்கிய அரசாட்சியின் நாடாளுமன்றம் அல்லது கவுன்சில் உத்தரவுப்படியான சட்டம் எதுவும் இதில் அடங்காது.

(ஒ) ''கூட்டாட்சி நீதிமன்றம்'' என்பது, 1935 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி அமைக்கப்பட்ட கூட்டாட்சி நீதிமன்றம் என்று பொருள்படும்.

(ஓ) ''சரக்குகள்'' என்பது, பொருள்கள், பண்டங்கள், உருப்பொருள்கள் அனைத்தையும் அடக்கும்.

(ஔ) ''பொறுப்புறுதி'' என்பது, இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்கு முன்பு பொறுப்பேற்பு நிறுவனத்தின் ஆதாயங்கள், குறித்துரைக்கப்படும் ஒரு தொகைக்குக் குறையுமாயின், அத்தொகையைச் செலுத்துவதாகப் பொறுப்பேற்றுக் கொண்ட கடமைப்பாடு எதனையும் உள்ளடக்கும்.

(ஃ) ''ஓய்வூதியம்'' என்பது, பங்களிப்பு முறையிலாயினும் இல்லாவிடினும், ஒருவருக்கு அல்லது அவர் பொறுத்துச் செலுத்தப்பட வேண்டிய எவ்வகையானதுமான ஓர் ஓய்வூதியம் என்று பொருள்படும். மேலும் அது அவ்வாறு செலுத்தப்பட வேண்டிய ஒரு பணிக்கொடையையும், வருங்கால வைப்பு நிதியம் ஒன்றுக்கான தொகையளிப்புக்களை அவற்றின் மீதான வட்டியுடனோ இன்றியோ அல்லது பிற தொகை எதனையும் சேர்த்தோ அவ்வாறு திருப்பிச்

செலுத்தப்பட வேண்டிய தொகை எதனையும் அல்லது தொகைகளையும் உள்ளடக்கும்.

(க) ''பொது அறிவிக்கை'' என்பது, இந்திய அரசிதழில் அல்லது, நேர்வுக்கேற்ப, ஒரு மாநிலத்தின் அதிகார முறை அரசிதழில் உள்ள ஓர் அறிவிக்கை என்று பொருள் படும்.

(ங) ''காப்புறுதிகள்'' என்பது, பங்கு மூலதனத்தையும் உள்ளடக்கும்

(ச) ''வரி விதிப்பு'' என்பது, பொதுவியலான அல்லது உள்ளாட்சிக் குற்ற அல்லது தனி வகையான வரி அல்லது தீர்வை எதனையும் விதிப்பதை உள்ளடக்கும். மேலும் 'வரி'' என்பதும் அதற்கிணங்கப் பொருள் கொள்ளப்படும்.

(ஞ) ''வருமானம் மீதான வரி'' என்பது, ஒரு மிகை ஆதாய வரி போல்வதான ஒரு வரியையும் உள்ளடக்கும்.

(ட) ''இருப்பூர்தியம்'' என்பது ஒரு நகராட்சிப் பகுதிக்குள் அமைந்த காந்த வண்டிப் பாதையையும் உள்ளடக்கும்.

(ண) 'ஒன்றிய இருப்பூர்தியம்'' என்பது இந்திய மாநில இருப்பூர்தியத்தை உள்ளடக்காது. ஆனால் சிறிய இருப்பூர்தியமாக இல்லாத எந்த இருப்பூர்தியமும் இதில் அடங்கும்.

(த) முதல் பட்டியல் பகுதி III-ல் குறிப்பிட்டுள்ளபடி, ''இந்திய மாநில இருப்பூர்தியம்'' என்றால் மாநிலத்தின் சொந்தமான இருப்பூர்தியம். அதை அந்த மாநிலம் செயற்படுத்தலாம் அல்லது மாநிலத்தின் சார்பாகவும் செயற்படுத்தலாம். மற்ற வகைகளில், மாநிலத்தோடு செய்து கொண்ட ஒப்பந்தத்தின்படி அல்லது இந்திய அரசாங்கத்

தின் சார்பாகவும் அல்லது ஒன்றிய இருப் பூர்தியத்தைச் செயல்படுத்தும் ஒரு நிறுவன மாகவும் இருக்கலாம்.

(ந) ''சிறிய இருப்பூர்தியம்'' என்பது ஒரு மாநி லத்தில் மட்டுமே அமைந்துள்ள இருப் பூர்தியம். அஃது ஒன்றிய இருப்பூர்தியத்தின் தொடர்ச்சியான பாதையாகவோ அல்லது அதே பாதை அகலமுள்ளதாகவோ அமை யாது.

(ப) ''பட்டியல்'' என்பது, இந்த அரசமைப் பின் ஓர் பட்டியல் என்று பொருள்படும்.

(ம) இந்திய அரசாங்கம் (பட்டியலில் கண்ட சாதிகள்) உத்திரவு 1936-ல் குறிப்பிட்டுள்ளது ஒன்றிய மாகாணங்களோடு தொடர் புடைய, இந்திய அரசாங்கச் சட்டம் 1935, ஐந்தாவது மற்றும் ஆறாவது பட்டியலில் கூறப்பட்டுள்ள பட்டியலில் கண்ட சாதி களிடம் முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப் பிட்டுள்ளபடி, தற்சமயம், ''பட்டியலில் கண்ட சாதிகள்'' என்பது ஒரு மாநிலத் தோடு சம்பந்தப்பட்ட சாதிகள், இனங்கள் அல்லது பழங்குடிகள் அல்லது அத்தகைய சாதிகள், இனங்கள், பழங்குடிகள் இவற் றின் பகுதிகள் அல்லது தொகுதிகள் என்று பொருள்படும்.

(ய) முதல் பட்டியல் பகுதி-1ல் குறிப்பிட்டுள்ளது போலும், எட்டாவது பட்டியல் பகுதி - I முதல் IX வரை குறிப்பிட்டுள்ளது போல வும், 'பட்டியலில் கண்ட பழங்குடிகள்'' என்பது பழங்குடிகள் அல்லது பழங்குடிச் சமூகங்கள் எனப் பொருள்படும்.

2. தறுவாயின் தேவை வேறானாலன்றி, 1897-ம் ஆண்டு பொதுவகையங்கள் விளக்கச்சட்டம் (1897ன்

பகுதி X), பொருள் காண்பதற்குப் பொருந்துறுவது இந்த அரசமைப்பினைப் பொருள் காண்பதற்கும் பொருந்துறுவதாகும்.

3. முதல் பட்டியல் பகுதி-I-ல் குறிப்பிட்டுள்ளது போல, நாடாளுமன்றத்தின் அல்லது அதனால் செய்யப்பட்ட இயற்றுச் சட்டங்கள் அல்லது சட்டங்கள் அல்லது ஒரு மாநிலச்சட்டமன்றத்தின் அல்லது அதனால் செய்யப்பட்ட இயற்றுச் சட்டங்கள் அல்லது சட்டங்கள் என இந்த அரசமைப்பில் சுட்டப்பட்டிருப்பது எதுவும், குடியரசுத் தலைவரால் பிறப்பிக்கப்பட்ட அவசரச் சட்டம் அல்லது நேர்வுக்கேற்ப, ஆளுநரால் பிறப்பிக்கப்பட்ட அவசரச் சட்டம் எனச் சுட்டுவதையும் உள்ளடக்குவதாகப் பொருள் கொள்ளுதல் வேண்டும்.

# பகுதி - XVI

## அரசமைப்பின் திருத்தம்

அரசமைப்பினைத் திருத்துவதற்கான நெறிமுறை.

304. (1) இந்த அரசமைப்பின் திருத்தம் எதுவும், அதற்கென ஒரு சட்டமுன்வடிவை நாடாளுமன்ற ஈரவைகளில் ஒன்றில் அறிமுகப்படுத்துவதன் வாயிலாக மட்டுமே தொடங்குறப் பெறும்; அச்சட்ட முன்வடிவு, ஒவ்வோர் அவையிலும் அதன் மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கையில் பெரும்பான்மையும், மேலும் அந்த அவை உறுப்பினர்களில் வந்திருந்து வாக்களிப்பவர்கள் எண்ணிக்கையில் மூன்றில் இரண்டு பங்கிற்கும் குறையா பெரும்பான்மையும் கொண்ட உறுப்பினர்களால் நிறைவேற்றப்பட்டதன் மேல், அது குடியரசுத் தலைவரிடம் முன்னிடப்படுதல் வேண்டும். அவர் அச்சட்ட முன்வடிவிற்கு ஏற்பிசைவு அளிப்பார்; அதன்மேல் அச்சட்ட முன்வடிவில் கண்ட வரைவுகளுக்கு இணங்க அரசமைப்புத் திருத்தம் பெற்றது ஆகும்.

வரம்புரையாக : அத்தகைய திருத்தம் -

[1](அ) ஏழாவது பட்டியலில் உள்ள வரிசைப் பட்டியல்களில் ஒன்று;

(ஆ) நாடாளுமன்றத்தில் மாநிலங்களுக்குள்ள சார்பாற்றம்; அல்லது

(இ) உச்சநீதிமன்றத்தின் அதிகாரங்கள் ஆகியவற்றில் மாற்றம் செய்ய முற்படுமாயின், முதல் பட்டியல் பகுதி I-ல் குறிப்பிட்டுள்ளது போல, அத்திருத்தத்திற்கு வகை செய்யும் சட்ட முன்வடிவு, மாநிலங்களில் ஒரு பாதிக்குக் குறையாதவற்றின் சட்ட

1. இந்த உறுப்புக் கூறு (1)ல் வகை(அ) ஏழாவது பட்டியலில் உள்ள எல்லா வரிசைப் பட்டியல்களையும் சுட்டுவதாக இருக்க வேண்டுமென்று குழு நினைக்கின்றது.

மன்றங்களால் அது குறித்து நிறைவேற்றப் படும் தீர்மானங்கள் வாயிலாக ஏற்புறுதி செய்யப்படுவது வேண்டுறுவதாகும். மேலும் பட்டியல் பகுதி - III-ல் குறிப்பிட்டுள்ளபடி, தற்சமயம், மூன்றில் ஒரு பங்கு மாநிலங்களுக்குக் குறையாமல் சட்டசபைகளில் ஏற்புறுதி செய்யப்படுவது வேண்டுறுவதாகும்.

[1](2) முந்தைய கூறில் எது எவ்வாறாயிருப்பினும், [2]ஓர் ஆளுநரைத் தேர்ந்தெடுப்பது குறித்து அரசமைப்பில் உள்ள வகையங்களில் ஏதேனும் திருத்தம் கொண்டுவரவேண்டுமென்றால் அல்லது தற்சமயம், முதல்பட்டியல் பகுதி-Iல் குறிப்பிட்டுள்ளது போல மாநிலத்தில் உள்ள சட்டசபைகளில் சட்ட முன்வரைவு ஏதாவது ஒருசபையில் தோற்றுவிக்கப்பட்டு, அந்த மாநிலத்தின் சட்டசபையில் தீர்மானிக்கப்பட்டால் அல்லது நேர்வுக்கேற்பச் சட்ட மேலவை இருந்தால் சட்டசபையின் இரு அவைகளிலும் சட்ட முன்வரைவுத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு மாநிலத்தின் இரு சபைகளிலும் மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மையினரால் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுக் குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்காகச் சமர்ப்பிக்கப்படும். நாடாளுமன்றத்தின் இரு சபைகளிலும் மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மையினர்

---

1. முதல் பட்டியல் பகுதி-Iன்படி, ஆளுநரைத் தேர்ந்தெடுப்பதற்குத் திருத்தம் கொண்டுவருவதற்கான முன்வடிவைத் தொடங்குவது குறித்து இந்த உறுப்பில் உள்ளடக்க வேண்டுமெனவும் மேலும் அந்த மாநிலத்திலுள்ள சட்டசபைகளில் அறுதிப் பெரும்பான்மையுடன் பின்பு நாடாளுமன்றத்தில் அறுதிப் பெரும்பான்மையுடன் உறுதிப்படுத்துதல் வேண்டும் என்பதனையும் கூறு (2)ல் சேர்க்க வேண்டுமெனக் குழு நினைக்கிறது.

2. உறுப்பு 131-ல் இரண்டாவது மாற்று ஏற்பாடு ஏற்றுக் கொள்ளப் படாவிட்டால், ''ஆளுநரைத் தேர்ந்தெடுக்கும் முறை அல்லது'' என்ற வார்த்தைகள் இந்தக் கூறில் அப்படியே வைத்தல் அவசியம்.

ஆதரித்துக் குடியரசுத் தலைவரின் ஏற்புதலுக்கு அனுப்பப்படும். சட்ட முன்வரைவில் உள்ள நிபந்தனைகளின்படி, அரசமைப்புத் திருத்தி அமைக்கப்படும்.

விளக்கம்: முதல் பட்டியல் பகுதி-IIIல் குறிப்பிட்டுள்ளது போல, மாநிலங்கள் கூட்டாக இருந்தால் அந்த ஒட்டு மொத்தக் கூட்டு ஒரு தனிமாநிலமாக இந்த உறுப்பின் கூறு(1)ன்படி கருதப்படும்.

சிறுபான்மையினருக்கான இட ஒதுக்கீடு, பத்து ஆண்டுகளுக்கு மேல் அமுலில் இருக்க வேண்டுமென்றால் அரசமைப்புத் திருத்தம் தேவை.

305. அரசமைப்பு உறுப்பு 304-ல் உள்ளது எது எவ்வாறாயிருப்பினும், முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிட்டுள்ளது போல, முஸ்லீம், பட்டியலில் கண்ட சாதியினர், பட்டியலில் கண்ட பழங்குடியினர் அல்லது இந்தியக் கிருஸ்தவர்களுக்கு நாடாளுமன்றம் அல்லது சட்டசபைகளில் உள்ள இடஒதுக்கீடு, அரசமைப்பு ஆரம்பித்த பத்து வருடங்களுக்கு உள்ளாகத் திருத்தல் கூடாது; பத்து வருடங்கள் கழித்து அரசமைப்பின் திருத்தம் வராவிட்டால் இட ஒதுக்கீடு செயலற்றுப் போகும்.

# பகுதி - XVII

## தற்காலிகமான மற்றும் மாறும் இடைக்காலத்திற்கான வகையங்கள்

*மாநில வரிசைப் பட்டியலிலுள்ள குறித்த சில பொருட்பாடுகளைப் பொறுத்து அவை ஒருங்கியல் வரிசைப் பட்டியிலுள்ள பொருட்பாடுகளாக இருந்தாற் போன்றே சட்டங்கள் இயற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்குள்ள தற்காலிக அதிகாரம்.*

[1]306. இந்த அரசமைப்பில், எது எவ்வாறாயிருப்பினும், நாடாளுமன்றம், இந்த அரசமைப்பின் தொடக்க நிலையிலிருந்து ஐந்து ஆண்டுக்கால அளவின்போது, பின்வரும் பொருட்பாடுகளைப் பொறுத்து, அவை ஒருங்கியல் வரிசைப் பட்டியலில் எண்ணிடப்பட்டுள்ள பொருட்பாடுகளாக இருந்தாற் போன்றே, சட்டங்கள் இயற்றுவதற்கு அதிகாரம் உடையது ஆகும்.

(அ) பருத்தி மற்றும் கம்பளி நெசவங்கள், காகிதம் (செய்தியிதழ், அச்சுத்தாள் உள்ளடங்கலான) உணவுப் பொருள்கள் (உண்தகு எண்ணெய் வித்துக்கள் மற்றும் எண்ணெய் உள்ளடங்கலான) பெட்ரோலியம் மற்றும் பெட்ரோலியப் பொருட்கள், இயந்திர இயக்கி மூலம் செலுத்தக் கூடிய வண்டிகள் மற்றும் அதன் பாகங்கள், நிலக்கரி, இரும்பு, உருக்கு, அப்பிரகம் ஆகியவற்றில், ஒரு மாநிலத்திற்குள் நடைபெறும் வணிகமும் வாணிபமும், மேலும் அவற்றின் உற்பத்தி, வழங்கீடு, பகிர்ந்தளிப்பு ஆகியவை;

---

1. அகதிகளின் புனரமைப்பு மற்றும் உதவிகள் செய்வதில் உணவுப் பொருட்கள் மற்றும் இதர பொருட்களைப் பொறுத்தவரை தற்சமயம் உற்பத்தி, அளிப்பு மற்றும் பகிர்வில் இருக்கக்கூடிய பிரச்சினைகளைத் தீர்ப்பதற்காக இந்தப் பொருட்பாடுகள் மாநில வரிசைப் பட்டியலில் வந்தாலும் மேற்கண்டவைகள் குறித்துச்சட்டங்கள் இயற்ற நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளித்தல் வேண்டுமெனக் குழு நினைக்கின்றது. இதுபோன்ற அதிகாரம் 1946 இந்தியச் சட்டம் (மத்திய அரசு மற்றும் சட்டசபை) அளித்துள்ளது.

(ஆ) இடப்பெயர்ச்சி செய்யப்பட்டவர்களுக் கான உதவி மற்றும் புனரமைப்பு;

(இ) இந்த உறுப்பு, கூறு (அ) மற்றும் (ஆ) வில் குறிப்பிடப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த சட்டங்களுக்கு எதிரான குற்றச் செயல்கள், அது சம்பந்த மான விசாரணை மற்றும் புள்ளி விவ ரங்கள் எதனையும் பொறுத்து உச்ச நீதி மன்றம் தவிர்த்து, பிற நீதிமன்றங்கள் அனைத்தின் அதிகாரவரம்பும், அதிகாரங் களும், மற்றும் அப்பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்து, நீதிமன்றம் எதிலும் பெறப்படும் கட்டணங்கள் நீங்கலான பிற கட்டணங்கள்;

ஆனால், இந்த உறுப்பின் வகையங்கள் இல்லாதிருந் தால் எவ்வகைச் சட்டத்தை இயற்றுவதற்கு நாடாளு மன்றம் தகுதிறம் கொண்டிருக்காதோ அவ்வகைச் சட்டம் எதனையும் நாடாளுமன்றம் இயற்றியிருக்கு மாயின், அந்தச் சட்டம், மேற்சொன்ன கால அளவு கழிவுற்றதும், நாடாளுமன்றத்தின் தகுதிறமின்மை யின் அளவுக்குச் செல்திறம் அற்றுப்போகும்; எனினும், அக்கால அளவு கழிவுறுவுதற்கு முன்பு செய்யப் பட்ட அல்லது செய்யாது விடப்பட்ட எதுவும் பாதிக்கப்படுவதில்லை.

நிலவுறும் சட்டங்கள் தொடர்ந்து செல்லாற்றலில் இருத்தல் மற்றும் அவற் றின்தழுவமைவு

307. (1) இந்த அரசமைப்பின் பிற வகையங் களுக்கு உட்பட்டு, இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு இந்திய ஆட்சி நிலவரையில் செல்லாற்றலிலிருந்த சட்டங்கள் அனைத்தும், தகு திறமுள்ள ஒரு சட்டமன்றத்தினால் அல்லது தகு திறமுள்ள பிற அதிகார அமைப்பினால் மாற்றமோ நீக்கவோ திருத்தமோ செய்யப்படும் வரையில் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவரும்.

(2) இந்த ஆட்சி நிலவரையில் செல்லாற்ற லிலுள்ள சட்டம் ஒன்றன் வகையங்களை, இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு இணங்கியிருக்கு மாறு செய்வதற்காக, தகுதியான சட்டமன்றம் அல்லது

தகுதியான அதிகாரம் படைத்தவர்கள் நீக்கறவு அல்லது திருத்தம் செய்யாதவரை, குடியரசுத் தலைவர், ஆணையின்வழி நீக்கறவு அல்லது திருத்தம் என்னும் முறையில் தேவையென அல்லது உகந்தது எனக் கருதும் தழுவமைவுகளையும் மாற்று அமைவுகளை யும் அச்சட்டத்தில் செய்யலாம். மேலும் அந்தந்தச் சட்டம் அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் தேதி யிலிருந்து, அவ்வாறு செய்யப்பட்ட தழுவமைவு களுக்கும் மாற்றமைவுகளுக்கும் உட்பட்டுச் செல் திறம் உடையதாகும் என்று வகை செய்யலாம். அர சமைப்பு வகையங்களுக்கு உகந்தாற்போல் சட்ட வகையங்களை அமைக்கலாம். அத்தகைய தழுவமைவு அல்லது மாற்றமைவு எதனையும் குறித்து நீதிமன்றம் எதிலும் எதிர்த்து வாதிடுதல் ஆகாது.

விளக்கம் I:- இந்த உறுப்பில் ''செல்லாற்றலி லுள்ள சட்டம்'' எனும் சொற்றொடர், இந்திய ஆட்சி நிலவரையிலுள்ள ஒரு சட்டமன்றத்தினால் அல்லது தகுதிறமுள்ள பிறவகை அதிகார அமைப்பினால், இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்கு முன்பு நிறை வேற்றப்பட்டு அல்லது இயற்றப்பட்டு, முன்னரே நீக்கறவு செய்யப்படாத ஒரு சட்டத்தை, அத்தகைய சட்டம் எதுவும் அல்லது அதன் பகுதிகள் எவையும் அப்போது முற்றிலுமோ குறிப்பிட்ட பரப்பிடங் களிலோ செயற்பாட்டில் இல்லாதிருப்பினும், உள் ளடக்கும்.

விளக்கம் II:- இந்திய ஆட்சி நிலவரையில் ஒரு சட்டமன்றத்தினால் அல்லது தகுதிறமுள்ள பிற அதிகார அமைப்பினால் நிறைவேற்றப்பட்டு அல்லது இயற்றப்பட்டு இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு அந்த ஆட்சி நிலவரையைக் கடந்து செல்திறமும், அத்துடன் இந்திய ஆட்சி நில வரையில் செல்திறமும் உடைய சட்டம் எதுவும் மேற்சொன்ன அத்தகைய தழுவமைவுகள் மாற்ற மடைவுகள் எவற்றிற்கும் உட்பட்டு ஆட்சி நிலவரை யைக் கடந்த செயல்திறனைத் தொடர்ந்து உடையது ஆகும்.

விளக்கம் -III: இந்த உறுப்பிலுள்ள எதுவும், செல்லாற்றலிலுள்ள தற்காலிகச் சட்டம் எதனையும் அது கழிவுறுவதெற்கென நிருணயிக்கப்பட்ட தேதிக்குப் பின்பு தொடர்ந்திருக்கச் செய்வதாகப் பொருள் கொள்ளப்படுதல் ஆகாது.

கூட்டாட்சிய நீதிமன்ற நீதிபதிகள் உச்ச நீதிமன்ற நீதிபதிகள் ஆவதற்கும் மற்றும் கூட்டாட்சி நீதிமன்றத்தில் அல்லது மன்றத்தமர் மாட்சிமை தங்கிய மன்னர் முன்பு முடிவுறா நிலையில் உள்ள நடவடிக்கைகள் உச்சநீதி மன்றத்திற்கு மாற்றுதலும்.

*308.* *(1)* இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு, பதவிவகித்த கூட்டாட்சிய நீதிமன்ற நீதிபதிகள், பிறவாறு அவர்கள் தேர்ந்து ஏற்றிருந்தாலன்றி, அத்தகைய தொடக்க நிலையில் உச்ச நீதிமன்ற நீதிபதிகளாக ஆவர். அதன்மேல் உச்சநீதி மன்ற நீதிபதிகளைப் பொறுத்து, இந்த அரசமைப்பு 104-ம் உறுப்பின்படி வகை செய்யப்பட்டுள்ள வரை ஊதியங்களுக்கும் படித்தொகைகளுக்கும், வாராமை விடுப்பு, ஓய்வூதியம் பொறுத்த உரிமைகளுக்கும் அவர்கள் உரிமை கொண்டவர்கள் ஆவர்.

*(2)* இந்த அரசமைப்பின் தொடக்க நிலையில் கூட்டாட்சிய நீதிமன்றத்தில் முடிவுறா நிலையிலுள்ள உரிமையியல் அல்லது குற்றவியல் சார்ந்த வழக்குகள், மேன்முறையீடுகள், நடவடிக்கைகள் அனைத்தும் உச்சநீதிமன்றத்திற்கு மாற்றப்படும். உச்சநீதிமன்றம், கேட்புநல்கி அவற்றை முடிவு செய்யும் அதிகார வரம்பு உடையது ஆகும். மேலும், இந்த அரசமைப்புத் தொடக்க நிலைக்கு முன்பு கூட்டாட்சிய நீதிமன்றத்தால் வழங்கப்பட்ட தீர்ப்புரைகள் அல்லது பிறப்பிக்கப்பட்ட ஆணைகள், அவை உச்சநீதிமன்றத்தால் வழங்கப்பட்டிருந்தாற் போன்று அதே செல்லாற்றலும் செல்திறனும் உடையன ஆகும்.

[1]*(3)* அரசமைப்புத் தொடக்க நிலையிலும் அது முதற்கொண்டும், இந்திய நிலப்பரப்பில் உள்ள

---

1. மன்றத்தமர் மாட்சிமைதங்கிய மன்னரின் முடிவுறா நிலையிலுள்ள மேல்முறையீடுகள், பிற நடவடிக்கைகள் அரசமைப்புச் செயல்படுவதற்கு முன்னால் தீர்வு செய்யப்படும். அரசமைப்புத் தொடக்க நிலையில் ஏதாவது முறையீடுகள் பிற நடவடிக்கைகள் முடிவுறா நிலையில் இருந்தால் அவைகளை உச்சநீதி

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

நீதிமன்றம், ஒன்றின் குற்றவியல் உள்ளடக்கிய தீர்ப்புரை, தீர்ப்பாணை அல்லது ஆணை எதிலிருந்தும் அல்லது அதனைப் பொறுத்து எழுகின்ற மேன்முறையீடுகளையும் மனுக்களையும் ஏற்றுக் கொள்வதற்கும் தீர்வுசெய்வதற்கும் மன்றத்தமர் மாட்சிமை தங்கிய மன்னருக்குள்ள அதிகாரம் செயலற்றுப் போகும். மேலும், அத்தகைய தொடக்க நிலையில் மேற்சொன்ன அதிகார அமைப்பின் முன்பு முடிவுறா நிலையிலுள்ள மேன்முறையீடுகள், பிற நடவடிக்கைகள் அனைத்தும் உச்சநீதிமன்றத்திற்கு மாற்றப்பட்டு அதனால் தீர்வு செய்யப்படும்.

*(4)* இந்த உறுப்பின் வகையங்களைச் செல்திறப் படுத்துவதற்காக, நாடாளுமன்றம் சட்டத்தினால் மேற்கொண்டும் வகை செய்யலாம்.

நீதிமன்றங்களும் அதிகார அமைப்புகளும் அலுவலர்களும், இந்தஅரசமைப்பின் தொடக்க நிலைக்குப் பிறகு அதன் வகையங்களுக்கு உட்பட்டுத் தொடர்ந்து செயற்பணியாற்றுதல்.

*309.* இந்திய ஆட்சி நிலவரையில் எங்கணுமுள்ள உரிமையியல், குற்றவியல் மற்றும் வருவாய்த் துறை அதிகார வரம்புடைய நீதிமன்றங்கள் அனைத்தும், அதிகார அமைப்புகள் அனைத்தும், நீதித்துறை, ஆட்சித்துறை, அலுவலகப் பணித்துறை ஆகியவற்றின் அலுவலர்கள் அனைவரும், இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு உட்பட்டு, அவரவர் தொடர்ந்து தம் பதவிப் பணிகளைப் புரிந்து வருதல் வேண்டும்.

உயர்நீதிமன்றங்களின் நீதிபதிகள் பற்றிய வகையங்கள்.

*310.* இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு, மாகாணம் எதிலும் பதவி வகித்த உயர் நீதிமன்ற நீதிபதிகள், பிறவாறு அவர்கள் தேர்ந்து ஏற்றிருந்தாலன்றி, அத்தகைய தொடக்க நிலையில் அந்த மாகாணத்திற்கு நேரிணையான மாநிலத்தின் உயர்நீதிமன்ற நீதிபதிகளாவர். இந்த அரசமைப்பு உறுப்பு 197-ன்படி அத்தகைய உயர்நீதிமன்ற நீதிபதிகளுக்கு

---

*(முன்பக்கத் தொடர்ச்சி)*

மன்றத்திற்கு மாற்றுவதற்கோ அல்லது தீர்வு செய்வதில் இடையூறு ஏதேனும் இருந்தால், குடியரசுத்தலைவர் ஆணையின் வழிக்கூறு 313-ன் கீழ் 'இடையூறுகள் நீக்குதல்'' என்ற சட்டத்தைப் பிறப்பிக்கலாம் என்று குழு நினைக்கின்றது.

வகை செய்யப்பட்டுள்ள வரைவூதியங்களுக்கும், படித் தொகைகளுக்கும், வாராமை விடுப்பு, ஓய்வூதியம் பொறுத்த உரிமைகளுக்கும் அவர்கள் உரிமை கொண் டவர்கள் ஆவர்.

*ஒன்றியத்தின் சட்டசபை, குடியரசுத் தலைவருக்கான தற்காலிக வகையங்கள்.*

311. (1) இந்த அரசமைப்பின் கீழ், நாடாளுமன் றத்தின் இரு அவைகளும் நியமிக்கப்பட்டு, முதல் கூட்டத்தொடர் கூடும்வரை, இந்திய தன்னாட்சியின் அரசியல் நிர்ணயசபை நாடாளுமன்றத்திற்குரிய அதிகாரம், கடமைகளைச் செயல்படுத்தும். குறிப்பாக நாடாளுமன்றத்தின் இரு அவைகளை நியமித்தல், நாடாளுமன்றத்தின் இரு அவைகள் சம்பந்தப்பட்ட தேர்தல் மற்றும் தொகுதிகள் வரையறை செய்தல் உட்பட்டத் துணையுறு மற்றும் விளையுறு பொருட் பாடுகள் அரசமைப்பினைச் செயல்படுத்துவதற்கான வகையங்களுக்குத் தேவையானவை எனக் கருதப் படும்.

விளக்கம்: இந்தக் கூறின் நோக்கம் என்னவென் றால், சட்டசபையில் இயற்றப்பட்ட சட்டத்தின்படி எப்பொழுதாவது ஏற்படும் காலி இடங்களை நிரப்பு வதற்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் அதிகாரம் இந்தியத் தன்னாட்சி அரசியல் நிர்ணயசபைக்கு உள் ளடங்கியது. ஆனால் முதல்பட்டியலில் உள்ளடங் காத நிலப்பரப்பின் பிரதிநிதி உறுப்பினர்கள் இதில் அடங்கார்.

(2) இந்த உறுப்புக்கூறு (1)ன்படி, 1935 இந்திய அரசியல் சட்டத்தின் கீழ் இந்தியத் தன்னாட்சியில் அரசியல் நிர்ணயசபையின் சபாநாயகராக இருப்பவர் அந்தச் சட்டசபையின் சபாநாயகராகத் தொடர்ந்து நீடிப்பார்.

[1](3) அத்தகைய நபர், அரசியல் நிர்ணயசபை யின் சார்பாகத் தற்காலிகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இந்தியாவின் குடியரசுத் தலைவர் ஆவார். இந்த அர

1. உறுப்பு 311 கூறு (3) க்குப் பதில் கீழ்க்கண்ட கூறு இருக்க வேண்டு மெனக் குழுவின் இரண்டு உறுப்பினர்கள், மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் மற்றும் திரு. அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் கருதுகின்றனர்.

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

சமைப்புப் பகுதி -V அத்தியாயம் -Iல் உள்ள வகையங்களின்படி, குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்பட்டுத் தம் அலுவல்களைத் தொடங்குவதற்கு முன், அரசியல் நிர்ணயசபையின் சார்பாகத் தற்காலிகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அந்த நபர் இந்தியாவின் குடியரசுத் தலைவர் ஆவார்.

(4) இந்த அரசமைப்பு தொடங்குவதற்கு முன் இந்தியத் தன்னாட்சியில் அமைச்சரவைப் பதவி வகித்தவர்கள் இந்த அரசமைப்பு தொடங்கிய பின்பு, அரசமைப்புப்படி தற்காலிக குடியரசுத் தலைவரின் அமைச்சர் குழுவின் உறுப்பினராக இருப்பர்.

முதல் பட்டியல் பகுதி Iன்படி, ஒவ்வொரு மாநிலத்திலும் தற்காலிகச் சட்டசபை, ஆளுநருக்கான வகையங்கள்.

312. (1) முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிட்டுள்ளபடி, ஒவ்வொரு மாநிலத்திலும் தற்சமயம், இந்த அரசமைப்பின் வகையங்களின்படி சட்டசபையின் அவை அல்லது இரு அவைகளும் நியமிக்கப்பட்டு முதல் கூட்டத் தொடருக்கு வரும்படி அழைக்கும் வரை, அரசமைப்பதற்கு முன்னால் செயல்பட்ட ஒன்றிய மாகாணங்களின் சட்டசபையின் அவை அல்லது அவைகள் அந்த மாநிலத்தின் சட்டசபை அல்லது இரு சபைகளுக்கும் அதிகாரம் வழங்குவதற்கும் கடமைகளைச் செய்வதற்கும் இந்த அரசமைப்பின்படி, வகையங்கள் உண்டு.

(2) நேர்வுக்கேற்ப, முதல் பட்டியல் பகுதி I-ல் குறிப்பிட்டுள்ளது போல், இந்த உறுப்புக்கூறு (1)ன் கீழ், இந்த அரசமைப்புத் தொடங்குவதற்கு ஒட்டி முன்பு சட்டசபையின் சபாநாயகராக இருப்பவர் அல்லது மாகாண மேலவையின் தலைவராக இருப்பவர், இந்த அரசமைப்புத் தொடங்கிய பின்பு ஒன்றிய மாகாணங்களில் சட்டசபையின் சபாநாயகர் அல்லது மேலவையின் தலைவராக இருப்பார்.

(3) இந்த அரசமைப்புப் பகுதி VI அத்தியாயம் IIல் உள்ள வகையங்களின்படி, முதல் பட்டிய்ல்

---

(முன் பக்கத் தொடர்ச்சி)

''3. இந்த அரசமைப்புப் பகுதி V அத்தியாயம் Iல் உள்ள வகையங்களின்படி, குடியரசுத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் தம் அலுவல்களைத் தொடங்குவதற்கு முன், இந்திய அரசியல் நிர்ணயசபையின் தலைவர், தற்காலிகக் குடியரசுத் தலைவராக இருப்பார்.''

பகுதில் குறிப்பிட்டுள்ளது போல, இந்த அரசமைப்புத் தொடங்குவதற்கு முன் எந்த மாகாணத்திலும் ஆளுநராக இருந்தவர், அரசமைப்பு ஆரம்பித்த பின்பு ஒன்றிய மாகாணத்தின் தற்காலிக ஆளுநராக, ஒரு புதிய ஆளுநர் தேர்ந்தெடுக்கப்பட்டு / **நியமனம்**[1] செய்யும் வரை, இருப்பார்.

(4) தற்சமயம், முதல் பட்டியல் பகுதி -ல் குறிப்பிட்டுள்ளதுபோல், இந்த அரசமைப்புத் தொடங்குவதற்கு முன்பு அமைச்சர்களாக இருந்தவர்கள், இந்த அரசமைப்பு ஆரம்பித்த பின்பு ஒன்றிய மாநிலத்தின் தற்காலிக ஆளுநர், அமைச்சரவை உறுப்பினராக இருப்பார்.

இடர்ப்பாடுகளை நீக்குவதற்கான குடியரசுத் தலைவரின் அதிகாரம்.

313. (1) இந்த அரசமைப்பு உறுப்பு 311 கூறு (1) ல் உள்ள வகையங்களுக்கிணங்க, 1935-ம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின் வகையங்களிலிருந்து இந்த அரசமைப்பின் வகையங்களுக்கு மாறும் இடைக்காலம் தொடர்பானவற்றை அகற்றுவதற்காகக் குடியரசுத் தலைவர், ஆணையின்வழி, அந்த ஆணையில் குறித்துரைக்கப்படும் கால அளவின்போது மாற்றமைவு, சேர்க்கை அல்லது நீக்கறவு என்னும் முறையில் தாம் தேவையென அல்லது உகந்ததெனக் கருதும் தழுவமைவுகளுக்கு உட்பட்டு இந்த அரசமைப்புச் செல்திறம் உடையது ஆகும் என்று பணிக்கலாம்.

வரம்புரையாக: இந்த அரசமைப்புப் பகுதி-V அத்தியாயம்-IIன்படி, உரியவாறு அமைக்கப்பட்ட நாடாளுமன்றத்தின் முதல் கூட்டத்திற்குப் பிறகு அத்தகைய ஆணை எதுவும் பிறப்பிக்கப்படுதல் ஆகாது.

(2) இந்த உறுப்புக்கூறு (1)ன்படி, பிறப்பிக்கப்பட்ட ஆணை ஒவ்வொன்றும் நாடாளுமன்றத்தின் முன் வைக்கப்படுதல் வேண்டும்.

1. உறுப்பு 131-ன் கீழ், இரண்டாவது மாற்று ஏற்பாடு ஏற்றுக் கொள்ளப்பட்டதாயின், ''தேர்ந்தெடுக்கப்பட்ட'' என்ற வார்த்தைக்குப் பதில் 'நியமனம் செய்யப்பட்ட'' என்ற வார்த்தை பயன்படுத்தப்பட வேண்டும்.

# பகுதி - XVIII

## தொடக்கம் மற்றும் நீக்கறவுகள்

*தொடக்கம்.*

*314.* இந்த அரசமைப்பு ......... ................ ............... செயலாற்றல் பெறும்.

*நீக்கறவுகள்.*

*315. 1935*-ம் ஆண்டு அரசியல் சட்டத்தைத் திருத்திய அல்லது பிற்சேர்க்கைகளான *1947* இந்தியச் சுதந்திரச் சட்டம் மற்றும் *1946* இந்திய (மத்திய அரசாங்கம் மற்றும் சட்டசபை)ச் சட்டத்தினை உள்ளடக்கிய, *1935*-ம் ஆண்டு அரசியல்சட்டம், செயலற்றுப் போகும்.

# முதல் பட்டியல்

*(உறுப்பு 1 மற்றும் 4)*

## இந்தியாவின் மாநிலங்கள் மற்றும் ஆட்சி நிலவரைகள்

## [1]பகுதி - I

இந்த அரசமைப்புத் தொடங்குவதற்கு முன்பு இருந்த பின்வரும் ஆட்சி நிலவரைகள் ஆளுநரின் மாகாணங்கள் எனப்பட்டன.

1. மதராஸ்
2. பம்பாய்
3. மேற்கு வங்காளம்
4. ஐக்கிய மாகாணங்கள்
5. பீஹார்
6. கிழக்குப் பஞ்சாப்
7. பேரார் மற்றும் மத்திய மாகாணங்கள்
8. அசாம்
9. ஒரிசா

## பகுதி - II

இந்த அரசமைப்புத் தொடங்குவதற்கு ஒட்டி முன்னால் இருந்த பின்வரும் ஆட்சி நிலவரைகள், முதன்மை ஆணையர் மாகாணங்கள் எனப்பட்டன:

1. டில்லி
2. பந்த் பிப்லோடா உள்ளடங்கிய ஆஜ்மீர் - மெர்வாரா
3. கூர்க்

---

1. இந்தப் பட்டியலில், ஆந்திரா பிரத்தியேகமான தனி மாநிலமாகக் கருதப்பட வேண்டுமா வேண்டாமா எனக்குழு ஆவலுடன் ஆராய்ந்தது. 1935 இந்திய அரசாங்கச்சட்டப்படி, ஒரிசா மற்றும் சிந்து எப்படிக் கருதப்பட்டதோ அதேபோல ஆந்திராவையும் மாகாணமாக, அரசமைப்பில் சேர்த்துக் கொள்ளலாம் என அரசாங்கம் இதுபற்றி அண்மையில் அறிக்கை வெளியிட்டுள்ளது. பட்டியலில், ஆந்திராவைத் தனிப்பட்ட மாநிலமாகச் சேர்த்துக் கொள்ளலாமெனக் குழு ஒருகட்டத்தில் நினைத்தது. மொத்தமாகக் கருதும்பொழுது குழு நினைப்பது என்னவென்றால், பட்டியலில், மாநிலம் என்று மட்டும் குறிப்பிட்டால், புதிய அரசமைப்புத் தொடக்க நிலையில், மாநிலமாகக் கருதப் போதுமானதாகாது. புதிய அரசமைப்புத் தொடக்க நிலையில் புதிய மாநில அரசுடன் அதன் இலாக்காக்கள் அமைய, உடனடியாக இந்த அரசமைப்பில் முன்னேற்பாடான நடவடிக்கைகள் எடுத்தல் அவசியம். 1935-ம் ஆண்டு சட்டப்படி ஒரிசா மற்றும் சிந்துவில் இதைத் தான் செய்தார்கள். ஏப்ரல் 1, 1936 முதல் தனி மாகாணங்களாக்கிச் சட்டம் ஏப்ரல் 1, 1937 முதல் அமுலுக்கு வந்தது.

## பகுதி - III

### பிரிவு அ

பின்வரும் இந்திய மாநிலங்கள்

1. மைசூர்
2. காஷ்மீர்
3. குவாலியர்
4. பரோடா
5. திருவிதாங்கூர்
6. கொச்சின்
7. உதய்பூர்
8. ஜெய்ப்பூர்
9. ஜோட்பூர்
10. பிகானீர்
11. ஆல்வார்
12. கோட்டா
13. இந்தூர்
14. போபால்
15. ரேவா
16. கோல்ஹாபூர்
17. பாட்டியாலா
18. மயூர்பஞ்ச்
19. கத்தியவார் ஐக்கிய சமஸ்தானம்.

### பகுதி ஆ[1]

இந்த அரசமைப்புத் தொடங்குவதற்கு ஒட்டி முன்னால் இந்தியத் தன்னாட்சியின் இதர எல்லா இந்திய மாநிலங்கள்

## பகுதி - IV

அந்தமான் மற்றும் நிகோபார் தீவுகள்.

1. பலவகையான மாநிலங்கள் ஒன்று சேருவதால், மாநிலங்கள் பெருவாரியாக மறைந்துபோகும். அதனால் ஒவ்வொரு மாநிலத் தையும் ஒவ்வொன்றைக் கணக்கிடு தல் இயலாது. அரசமைப்புக் கடைசியாக ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு முன்னால் எல்லா மாநிலங்களையும் ஒவ்வொன்றாகக் கணக்கிடுதல் அவசியம்.

   எனவே ஓர் ஆணையத்தினை நியமிக்கக் குழு பரிந்துரை செய்கின்றது. அந்த ஆணையம் ஆந்திரா மட்டுமில்லாமல் மற்ற மொழிவாரி மாகாணங்கள் சம்பந்தப் பட்ட எல்லா விஷயங்களையும் விசாரித்து அறிக்கை சமர்ப்பித்தல் வேண்டும். 1935-ம் ஆண்டு சட்டப்படி பிரிவு 290 ன் கீழ்ப்புதிய மாநிலம் உருவாக்குதல் பற்றிய பரிந்துரை, அரசமைப்புக் கடைசியாக ஏற்றுக் கொள்வதற்கு முன்னால் இந்தப் பட்டியலில் குறிப்பிடப்பட வேண்டும்.

# இரண்டாவது பட்டியல்

***(உறுப்புகள் 48(3), 62(6), 79, 104, 124(2), 135(3), 145(5), 163 மற்றும் 197)***

## பகுதி I

## முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிடப்பட்டுள்ளபடி, தற்சமயம் குடியரசுத் தலைவர் மற்றும் மாநிலங்களின் ஆளுநர்கள் குறித்த வகையங்கள்

*1. முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிடப்பட்டுள்ளபடி, தற்சமயம் குடியரசுத் தலைவருக்கும் மாநிலங்களின் ஆளுநர்களுக்கும் மாதம் ஒன்றுக்குப் பின்வரும் பதவியூதியங்கள் வழங்கப்படுதல் வேண்டும் :*

*குடியரசுத் தலைவர் ... 5,500 ரூபாய்*
*ஒரு மாநிலத்தின் ஆளுநர் ... 4,500 ரூபாய்*

*2. குடியரசுத் தலைவர் மற்றும் ஆளுநர்களுக்கு முறையே அவரவர்களுடைய பணிகளைக் கௌரவமாகவும் வசதியாகவும் நிறைவேற்றிட முறையே கீழ்க்கண்ட படித்தொகைகளை ஒவ்வொரு மாதமும் வழங்குதல் வேண்டும்:*

*குடியரசுத் தலைவர் - ரூபாய் .......*
*ஒரு மாநிலத்தின் ஆளுநர் - ரூபாய் .......*

*3. குடியரசுத் தலைவர் மற்றும் ஆளுநர் பதவிப்பொறுப்பை ஏற்க அவர்களுக்கு ஏற்படும் வழிப் பயணச் செலவுகள் மற்றும் குடும்பப் பொருட்களை எடுத்துச் செல்வதற்கான செலவுகளுக்கான படித்தொகைகள் வழங்குதல் வேண்டும்.*

*4. குடியரசுத் தலைவர் மற்றும் ஒவ்வொரு ஆளுநர்களுக்கும் அவர்கள் பணிக்காலத்தின்போது வாடகை இல்லாமல் அலுவலக இருப்பிடம் அளித்தல் வேண்டும். அவர்கள் உபயோகத்திற்காக இருப்பூர்திப் பெட்டிகள், படகு, விமானம் மற்றும் மகிழ்வுந்து பயன்படுத்துவதற்கும் பராமரிப்பதற்கும் எந்தக் கட்டணமும் செலுத்த வேண்டியதில்லை.*

5. குடியரசுத் தலைவருடைய பணிகளைத் துணைக் குடியரசுத் தலைவர் அல்லது வேறு ஒரு நபர் நிறைவேற்றினாலும், அல்லது ஆளுநருடைய பணிகளை வேறு ஒருநபர் நிறைவேற்றினாலும், இந்தப் பட்டியல் பத்தி (1) மற்றும் (2)-ன்படி பதவியூதியங்கள், படித்தொகை களை அந்த நபருக்கு வழங்குதல் வேண்டும். இந்தப் பட்டியலில் பத்தி 4-ல் உள்ளது அவர்களுக்கும் பொருந்தும். ஆனால் பத்தி 3-ல் உள்ளது அவர்களுக்குப் பொருந்தாது.

## பகுதி II

### முதல் பட்டியல் பகுதி-Iல் ஒன்றியம் மற்றும் மாநிலங்களிலுள்ள அமைச்சர்களுக்கான வகையங்கள்

6. இந்த அரசமைப்புத் தொடங்குவதற்கு முன்னால் தன்னாட்சியில் முறையே பிரதம அமைச்சர் மற்றும் அமைச்சர்களுக்கு என்ன பதவியூதியங்கள், படித்தொகைகள் வழங்கப்பட்டதோ அதே தொகை பிரதம அமைச்சருக்கும் மற்ற அமைச்சர்களுக்கும் வழங்குதல் வேண்டும்.

7. இந்த அரசமைப்புத் தொடங்குவதற்கு முன்னால் நேரிணையான மாகாணங்களில் அமைச்சர்களுக்கு வழங்கப்பட்ட பணிவூதியம், படித்தொகைகள், முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிடப்பட்டுள்ள மாநில அமைச்சர்களுக்கு வழங்குதல் வேண்டும்.

## பகுதி - III

### முதல் பட்டியல் பகுதி Iல் மக்களவைத் தலைவர், துணைத்தலைவர், மாநிலங்களவைத் தலைவர், துணைத்தலைவர், ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவைத் தலைவர், துணைத்தலைவர் மற்றும் சட்டமன்ற மேலவைத்தலைவர், துணைத்தலைவர் ஆகியோர் குறித்த வகையங்கள்

8. மக்களவைத் தலைவருக்கும் மாநிலங்களவைத் தலைவருக்கும், இந்த அரசமைப்புத் தொடக்க நிலையை ஒட்டிமுன்பு, இந்திய தன்னாட்சியத்தின் அரசமைப்புப் பேரவைத் தலைவருக்கு வழங்கப்பட்டதான பதவியூதியங்களும், படித்தொகைகளும் வழங்கப்

படுதல் வேண்டும்; மேலும், மக்களவைத் துணைத்தலைவருக்கும் மாநிலங்களவைத் துணைத்தலைவருக்கும் ஆகஸ்டு 15, 1947-க்கு முன்பு சட்டமன்றப் பேரவைத் துணைத்தலைவருக்கும் மாநிலங்கள் அவைத் துணைத்தலைவருக்கும் முறையே வழங்கப்பட்ட பதவி யூதியங்கள், படித்தொகைகள் வழங்கப்படுதல் வேண்டும்.

9. முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிட்டுள்ளது போல, ஒரு மாநிலச் சட்டமன்றப் பேரவைத் தலைவருக்கும் துணைத் தலைவருக்கும், சட்டமன்ற மேலவைத் தலைவருக்கும் துணைத் தலைவருக்கும் இந்த அரசமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு, முறையே நேரிணையான மாகாணத்தின் சட்டமன்றப் பேரவைத் தலைவருக்கும் துணைத்தலைவருக்கும் சட்டமன்ற மேலவைத் தலைவருக்கும் துணைத்தலைவருக்கும் வழங்கப்பட்டதான வரைவூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்படுதல் வேண்டும். மேலும், அத்தகைய தொடக்க நிலையை ஒட்டி முன்பு, நேரிணையான மாகாணம், சட்டமன்ற மேலவை எதனையும் கொண்டிராதவிடத்து, அந்த மாநிலச் சட்டமன்ற மேலவைத் தலைவருக்கும் துணைத் தலைவருக்கும் அந்த மாநில ஆளுநர் தீர்மானிக்கும் வரைவூதியங்களும் படித்தொகைகளும் வழங்கப்படுதல் வேண்டும்.

## பகுதி - IV

## உச்சநீதிமன்றத்தின் மற்றும் உயர்நீதிமன்றங்களின் நீதிபதிகள் குறித்த வகையங்கள்

10. தற்சமயம் முதல் பட்டியல் - IIIல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்கள் தவிர, இந்திய நிலப்பரப்பில் உள்ள உச்சநீதிமன்றங்களில் நீதிபதிகளுக்கும் மற்றும் ஒவ்வொரு உயர்நீதிமன்றங்களில் உள்ள நீதிபதிகளுக்கும் உள்ளபடியே பணியில் இருந்த காலத்தைப் பொறுத்து மாதம் ஒன்றுக்குப் பின்வரும் வீதங்களில் வரைவூதியம் வழங்கப்படுதல் வேண்டும்:-

| | | |
|---|---|---|
| உச்சநீதிமன்றத்தின் தலைமை நீதிபதி | ... | 5000 ரூபாய் |
| உச்சநீதிமன்றத்தின் மற்ற நீதிபதிகள் | ... | 4500 ரூபாய் |
| உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதி | ... | 4000 ரூபாய் |
| உயர்நீதிமன்றத்தின் மற்ற நீதிபதிகள் | ... | 3500 ரூபாய் |

வரம்புரையாக: முதல் பட்டியல் பகுதி-Iல் குறிப்பிட்டுள்ளது போல, உச்சநீதிமன்ற நீதிபதிஒருவர், அவருடைய அமர்த்துகைக் காலத்தில் இந்திய அரசாங்கத்தின் கீழோ அதற்கு முன்பிருந்த அரசாங்

கங்களில் எதன் கீழுமோ ஒரு மாநில அரசாங்கத்தின் கீழோ அதற்கு முன்பிருந்த அரசாங்கங்களில் எதன் கீழுமோ ஆற்றிய முந்தைய பணி எதனையும் பொறுத்து (ஏலாமைக்கான அல்லது உடற் காயத் திற்கான ஓய்வூதியம் அல்லாத பிற ஓய்வூதியம் பெற்று வருவாராயின், உச்சநீதிமன்றப் பணியைப் பொறுத்து அவரது வரைவூதியம் ஓய் வூதியத் தொகையின் அளவுக்குக் குறைக்கப்படுதல் வேண்டும்.

11. முதல் பட்டியல் பகுதி IIIல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்கள் தவிர, இந்திய நிலவரைக்குள் உள்ள உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி அல்லது உச்சநீதிமன்றப் பிற நீதிபதிகள், அல்லது உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி அல்லது உயர்நீதிமன்றப் பிற நீதிபதிகள் அவர்கள் பணி சார்ந்த பயணத்தின்போது செய்ய நேரிட்ட செலவுகளை ஈடுசெய்வதற்காக நேர்வுக்கேற்ப குடியரசுத் தலைவர் அல்லது ஆளுநர் அவ்வப்போது வகுத்துரைக்கும் தகுமான படித் தொகைகளைப் பெறுவர். மேலும் பயணம் செய்தல் தொடர்பாக, குடியரசுத்தலைவர் அல்லது ஆளுநர் அவ்வப்போது வகுத்துரைக் கும் தகுமான வசதிகளும் அவர்களுக்குச் செய்து கொடுக்கப்படுதல் வேண்டும்.

12. (1) உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி அல்லது மற்ற நீதிபதிகளின் வாராமை விடுப்பு அல்லது ஓய்வூதியம், நேர்வுக் கேற்பக் கூட்டாட்சிய நீதிமன்ற நீதிபதிகளுக்குப் பொருந்துருவன வாக இருந்த வகையங்களுக்கு இணங்க தொடர்ந்து இருந்துவரும்.

(2) முதல் பட்டியல் பகுதி-IIIல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்கள் தவிர, இந்திய நிலவரையில் உள்ள உயர்நீதிமன்றத் தின் தலைமை நீதிபதி அல்லது மற்ற நீதிபதிகளின் வாராமை விடுப்பு அல்லது ஓய்வூதியம், நேர்வுக்கேற்ப இந்த அரசமைப்புத் தொடக்க நிலைக்கு ஒட்டியமுன்பு உயர்நீதிமன்ற நீதிபதிகளுக்குப் பொருந் துறுவனவாக இருந்த வகையங்களுக்கு இணங்கத் தொடர்ந்து இருந்து வரும்.

(3) இந்தப் பத்தியின் பொருட்டு, இந்த அரசமைப்பு தொடக்க நிலையில் ஒருவர் குறித்த பணி நீதிபதி, செயலமர் நீதிபதி அல்லது கூடுதல் நீதிபதியாகப் பணிபுரிந்தவர் அந்தக் காலகட்டத்தில் ஆனால் அதேநேரத்தில் குறித்த பணி நீதிபதி, செயலமர் நீதிபதி அல்லது கூடுதல் நீதிபதியாகப் பின் தொடர்கின்ற நிரந்தர நீதிபதி நியமனம் வரை, இடைவெளி இல்லாமல் பணிபுரிந்திருந்தால் அவர் நீதிபதி யாகப் பணிபுரிந்ததாகக் கொள்ளப்படும்.

13. இந்தப் பகுதியில், தறுவாயின் தேவை வேறானாலன்றி

(அ) 'தலைமை நீதிபதி'' என்னும் சொற்றொடர் செயலமர் தலைமை நீதிபதி ஒருவரை உள்ளடக்கும்; மற்றும் ''நீதிபதி'' என்பது குறித்த பணி நீதிபதி, செயலமர் நீதிபதி மற்றும் கூடுதல் நீதிபதியையும் உள்ளடக்கும்.

(ஆ) உள்ளபடியான பணி என்பது -

(i) நீதிபதி ஒருவர், ஒரு நீதிபதிப் பணியை ஆற்றுகிற காலத்தையும் அல்லது நேர்வுக்கேற்பக் குடியரசுத் தலைவர் அல்லது ஆளுநர் அல்லது இந்த அரசமைப்பு உறுப்பு 289-ன்கீழ் நியமிக்கப்பட்ட ஆணையத்தால் பணிக்கப் பட்ட பிற பதவிப் பணிகளைப் புரிகிற காலத்தையும்,

(ii) அந்த நீதிபதியின் வாராமை விடுப்புக் காலம் எதுவும் நீங்கலாக உள்ள பருவ விடுமுறைக் காலங்களையும்,

(iii) ஓர் உயர்நீதிமன்றத்திலிருந்து உச்சநீதிமன்றத்திற்கோ அல்லது ஓர் உயர்நீதிமன்றத்திலிருந்து மற்றொன் றிற்கோ மாற்றுதல் செய்வதால் ஏற்படும் பணிசேர் இடைக்காலத்தையும் உள்ளடக்கும்.

## பகுதி V

## இந்தியத் தலைமைத் தணிக்கையர் குறித்த வகையங்கள்

14. இந்தியத் தலைமைத் தணிக்கையருக்கு மாதம் ஒன்றுக்கு நாலாயிரம் ரூபாய் என்னும் வீதத்தில் வரைவூதியம் வழங்கப்படுதல் வேண்டும்.

15. இந்தியத் தலைமைத் தணிக்கையருக்கு வாராமை விடுப்பு, ஓய்வூதியம் ஆகியவை பொறுத்த உரிமைகளும் பிற பணி வரைக்கட்டுகளும் இந்த அரசமைப்பின் தொடக்கநிலையை ஒட்டி முன்பு இந்தியத் தலைமைத் தணிக்கையருக்குப் பொருத்துறுவன வாக இருந்த வகையங்களுக்கிணங்க இருத்தலோ இருந்து வருதலோ வேண்டும். மேலும், அந்த வகையங்களில், தலைமை ஆளுநர் பற்றிய சுட்டுகைகள் குடியரசுத் தலைவர் பற்றிய சுட்டுகைகளாகப் பொருள் கொள்ளப்படுதல் வேண்டும்.

# மூன்றாவது பட்டியல்

## (உறுப்புகள் 62 (4), 81, 103 (6), 144 (2), 165 மற்றும் 195)

## உறுதிமொழிப் படிவம்

### I

ஒன்றியத்து அமைச்சருக்கான பதவி ஆணை மொழியின் படிவம்:

'அ. ஆ. ஆகிய நான், சட்டமுறையில் அமைவுற்ற இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும், இந்தியாவின் இறையாண்மையும் ஒருமைப்பாடும் நிலைபெறுமாறு செய்வேன் என்றும் ஒன்றியத்து அமைச்சர் என்னும் முறையில் என்னுடைய கடமைகளை அகத்தூய்மையுடனும் மனச்சான்றின்படியும் ஆற்றுவேன் என்றும், அரசமைப்பு முறைக்கும் சட்டநெறிக்கும் இணங்க அச்சம், தயவு தாட்சண்யம் இன்றியும் விருப்பு வெறுப்பு இன்றியும், பல்திற மக்களுக்கும் தகுவன புரிவேன் என்றும் உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்.''

### II

ஒன்றியத்து அமைச்சருக்கான மறைகாப்பு ஆணைமொழியின் படிவம்:

'' அ, ஆ ஆகிய நான், ஒன்றியத்து அமைச்சர் என்னும் முறையில், என் ஓர்வுக்காக வைக்கப்படும் அல்லது எனக்குத் தெரிய வரும் பொருட்பாடு எதனையும், அத்தகு அமைச்சர் என்னும் முறையில் என் கடமைகளை முறைப்படி ஆற்றுவதற்கு வேண்டியவாறன்றிப் பிறவாறு நேர்முகமாகவோ மறைமுகமாகவோ எந்த நபருக்கும் அல்லது நபர்களுக்கும் தெரிவிக்கவோ வெளிப்படுத்தவோ மாட்டேன் என்று உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்.''

### III

நாடாளுமன்ற உறுப்பினர் செய்யப்பட வேண்டிய ஆணை மொழியின் படிவம்:

'' அ, ஆ ஆகிய நான், மாநிலங்களவையின் (அல்லது மக்களவையின்) ஓர் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ள (அல்லது நியமிக்கப் பெற்றுள்ள) நிலையில், சட்டமுறையில்

அமைவுற்ற இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கை யும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும் இந்தியாவின் இறையாண்மை யும் ஒருமைப்பாடும் நிலைபெறுமாறு செய்வேன் என்றும், ஏற்க வுள்ள கடமையினை அகத்தூய்மையுடன் ஆற்றுவேன் என்றும், உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்.''

IV

உச்சநீதிமன்ற நீதிபதிகளால் செய்யப்பட வேண்டிய ஆணை மொழியின் படிவம்:

'அ, ஆ ஆகிய நான், உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதி யாக (அல்லது நீதிபதியாக) அமர்த்தப் பெற்றுள்ள நிலையில், சட்ட முறையில் அமைவுற்ற இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும், அச்சம், தயவு தாட் சண்யம் இன்றியும் விருப்பு வெறுப்பு இன்றியும், முறையாகவும் அகத்தூய்மையுடனும் என் முழு வினைத் திறனும் அறிவுத்திறனும் தேர்வுத்திறனும் கொண்டு என் பதவிக்குற்ற கடமைகளை ஆற்றி வருவேன் என்றும் நான் அரசமைப்பு முறையையும் சட்டநெறி களையும் நிலைபெறச் செய்வேன் என்றும் உள்ளார்ந்து உறுதி மொழிகிறேன்.''.

V

தற்சமயம் முதல் பட்டியல் பகுதி Iல் குறிப்பிடப்பட்டுள்ள மாநில அமைச்சருக்கான பதவி ஆணை மொழியின் படிவம்:

'அ, ஆ, ஆகிய நான் சட்டமுறையில் அமர்வுற்ற இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும் பற்றும் பூண்டிருப் பேன் என்றும், இந்தியாவின் இறையாண்மையும் ஒருமைப்பாடும் நிலைபெறுமாறு செய்வேன் என்றும் ......... மாநில அமைச்சர் என்னும் முறையில் என்னுடைய கடமைகளை அகத்தூய்மையுட னும் மனச்சான்றின்படியும் ஆற்றி வருவேன் என்றும் அரசமைப்பு முறைக்கும் சட்டநெறிக்கும் இணங்க அச்சம், தயவு தாட்சண்யம் இன்றியும், விருப்பு வெறுப்பு இன்றியும், பல்திற மக்களுக்கும் தகுவன புரிவேன் என்றும் உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்.''

## VI

தற்சமயம் முதல்பட்டியல் பகுதிI ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநில அமைச்சருக்கான மறைகாப்பு ஆணைமொழியின் படிவம்:

'அ, ஆ ஆகிய நான் மாநில அமைச்சர் என்னும் முறையில் அல்லது ஆளுநரால் பிரத்தியேகமாகப் பணிக்கப்பட்ட அலுவல் களைச் செய்வதிலும் என் ஓர்வுக்காக வைக்கப்படும் அல்லது எனக்குத் தெரியவரும் பொருட்பாடு எதனையும், அத்தகு அமைச்சர் என்னும் முறையில் என் கடமைகளை முறைப்படி ஆற்றுவதற்கு வேண்டியவாறன்றிப் பிறவாறு நேர்முகமாகவோ மறைமுக மாகவோ எந்த நபருக்கும் அல்லது நபர்களுக்கும் தெரிவிக்கவோ வெளிப்படுத்தவோ மாட்டேன் என்று உள்ளார்ந்து உறுதிமொழி கிறேன்.

## VII

தற்சமயம் முதல் பட்டியல் பகுதிI-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலச் சட்டமன்ற வேட்பாளாரால் செய்யப்பட வேண்டிய ஆணை மொழியின் படிவம்:

'அ, ஆ ஆகிய நான் சட்டமன்றப்பேரவையில் (அல்லது சட்டமன்ற மேலவையில்) உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பெற் றுள்ள (அல்லது நியமிக்கப் பெற்றுள்ள) நிலையில், சட்ட முறையில் அமைவுற்ற இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கை யும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும் இந்தியாவின் இறையாண் மையும் ஒருமைப்பாடும் நிலைபெறுமாறு செய்வேன் என்றும், ஏற்கவுள்ள கடமையினை அகத்தூய்மையுடன் ஆற்றுவேன் என்றும் உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்.''

## VIII

உயர்நீதிமன்ற நீதிபதிகளால் செய்யப்பட வேண்டிய ஆணை மொழியின் படிவம்:

'அ, ஆ ஆகிய நான், .......... இல், உள்ள ....., அல்லது ......... ) இன் உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியாக (அல்லது நீதிபதியாக) அமர்த்தப் பெற்றுள்ள நிலையில், சட்டமுறையில் அமைவுற்ற இந்திய அரசமைப்பின்பால் உண்மையான நம்பிக்கை

யும் பற்றும் பூண்டிருப்பேன் என்றும் இந்தியாவின் இறையாண்மையும் ஒருமைப்பாடும் நிலைபெறுமாறு செய்வேன் என்றும் அச்சம் தயவுதாட்சண்யம் இன்றியும், விருப்பு வெறுப்பு இன்றியும், முறையாகவும் அகத்தூய்மையுடனும் என் முழு வினைத்திறனும் அறிவுத்திறனும் தேர்வுத்திறனும் கொண்டு என் பதவிக்குற்ற கடமைகளை ஆற்றி வருவேன் என்றும் நான் அரசமைப்பு முறைகளையும் சட்டநெறிகளையும் நிலைபெறச்செய்வேன் என்றும் உள்ளார்ந்து உறுதிமொழிகிறேன்.''

## நாலாவது பட்டியல்

### (உறுப்பு 144 (4)

### முதல் பட்டியல் பகுதி -Iல் மாநிலங்களின் ஆளுநர்களுக்கான செயற்குறிப்புரைகள்

1. இந்தச் செயற்குறிப்புரைகளில், தருவாயின் தேவை வேறானாலன்றி, அரசமைப்பின் வகையங்களுக்கு ஏற்பத் தற்சமயம் ''ஆளுநர்'' என்பவர் ஆளுநர் பணிகளை நிறைவேற்றுகிற எந்த ஒரு நபரையும் உள்ளடக்கும்.

2. அமைச்சரவையை நிர்ணயிக்கும்போது கீழ்க்கண்ட முறையில் ஆளுநர் முயற்சிசெய்து அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவருடைய தீர்ப்பின்படி சட்டசபையில் அறுதிப் பெரும்பான்மையுள்ள (சிறுபான்மைச் சமுதாயத்தினரின் முக்கியமான உறுப்பினர்களை உள்ளடக்கிய) கூட்டாகச் சட்டசபையின் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒருவரைக் கலந்தாலோசித்து நியமனம் செய்ய வேண்டும். அப்படிச் செய்யும்பொழுது அமைச்சர்கள் கூட்டு உத்திரவாதத்தினைக் காப்பாற்றுபவர்களாக இருத்தல் வேண்டும் என்பதை மனத்தில் கொள்ள வேண்டும்.

3. இந்த அரசமைப்பில் ஆளுநர் தன் விவேகப்படி செயல்படுகின்ற பணிகள் சம்பந்தப்பட்டவை தவிர, மாநிலத்தின் ஆட்சி அதிகாரத்திற்கு உட்பட்ட எல்லா விஷயங்களிலும் ஆளுநர், அமைச்சர்களின் அறிவுரையின்படி தன் அதிகாரத்தைச் செயல்படுத்துதல் வேண்டும்.

4. எல்லா மக்களும் நல்லொழுக்கச் சமுதாய, பொருளாதார நன்மைகளைப் பெறவும், அந்த மக்கள் மாநில அரசாங்கத்தில் தங்களுக்கு உரிய பங்கினைப் பெறவும், அனைத்து மத நம்பிக்கை உடையவர்களும் ஒருவர் மற்றொருவருக்கு மதிப்புக் கொடுத்து நல்லெண்ணத்துடன் ஒத்துழைக்கவும் மற்றும் நிர்வாகம் திறமையாக செயல்படவும் ஆளுநர் எல்லா நடவடிக்கைகளும் எடுத்தல் வேண்டும்.

# ஐந்தாவது பட்டியல்

**(உறுப்புகள் 189 (அ) மற்றும் 190 (1)**

## பட்டியல் வரையிடங்களுக்கும் பட்டியலில் கண்ட பழங்குடியினருக்குமான நிருவாகம் மற்றும் கட்டாள்கைக் குறித்த வகையங்கள்.

---

## பகுதி I

### பொதுவியல்

**1. பட்டியல் வரையிடங்களில் மாநிலத்தின் ஆட்சி அதிகாரம்:**

இந்தப் பட்டியலின் வகையங்களுக்கு உட்பட்டு, முதல் பட்டியல் பகுதி-I-ல் குறிப்பிட்டுள்ளது போல், ஒரு மாநிலத்தின் ஆட்சி அதிகாரம், அதிலுள்ள பட்டியல் வரையிடங்களை அளாவி நிற்கும்.

**2. பட்டியல் வரையிடங்களின் நிருவாகம்பற்றி இந்திய அரசாங்கத்திற்கு ஆளுநரின் அறிக்கை:**

பட்டியல் வரையிடங்களைக் கொண்ட மாநிலம் ஒவ்வொன்றின் ஆளுநரும் ஆண்டுதோறும் இந்திய அரசாங்கம் வேண்டுறுத்தப்படுகிற போதெல்லாம், அந்த மாநிலத்திலுள்ள பட்டியல் வரையிடங்களின் நிருவாகம் பற்றிக் குடியரசுத் தலைவருக்கு அறிக்கை அளித்தல் வேண்டும். மேலும், மேற்சொன்ன வரையிடங்களின் நிருவாகம் குறித்து அந்த மாநிலத்திற்குப் பணிப்புரைகள் இடுவதும் ஒன்றியத்தின் ஆட்சி அதிகாரத்தில் அடங்கும்.

## பகுதி II

### சென்னை, பம்பாய், மேற்கு வங்காளம், பீஹார் ஆகிய மாநிலங்கள், மத்திய மாகாணங்கள், பேரார் மற்றும் ஒரிசாவிற்கான வகையங்கள்

**3. பகுதி IIக்குப் பொருந்துறுபவை:** இந்தப் பாகத்தின் வகையங்கள் மதராஸ், பம்பாய், மேற்கு வங்காளம், பீஹார்,

மாநிலங்களுக்கும், மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார், ஒரிசா விற்கும் பொருந்துறும்.

**4. பழங்குடியினர் ஆய்வுரை மன்றம்:** (1) அரசமைப்புத் தொடங்கிய பின்பு, உடனடியாகச் சென்னை, பம்பாய், மேற்கு வங்காளம், பீஹார் மாநிலங்களிலும், மத்திய மாகாணங்கள் பேரார் மற்றும் ஒரிசாவிலும் பழங்குடியினர் ஆய்வுரை மன்றம் ஒன்று நிறுவப் பெறுதல் வேண்டும். அவர்களில் கூடுமான வரையில் பத்து நபருக்குக் குறையாமலும், இருப்பத்தைந்து நபருக்கு மிகாமலும், நான்கில் மூன்று பகுதியினர் அந்த மாநிலச் சட்டமன்றப் பேரவை யில் பட்டியலில் கண்ட பழங்குடியினரைச் சார்ந்தவர்களாக இருத் தல் வேண்டும்.

(2) பட்டியல் வரையிடங்களைப் பொறுத்தமட்டில், நிர்வாகம் சம்பந்தமான எல்லாவிஷயங்கள் குறித்தும் மேலும் மாநிலத்தில் பட்டியலில் கண்ட பழங்குடியினர் நலத்தினைப் பற்றியும் ஆய்வுரை கூறுவது பழங்குடியினர் ஆய்வுரை மன்றத்தின் கடமை ஆகும்.

(3) ஆளுநர் பின்வருவனவற்றை வகுத்துரைக்கும் அல்லது நேர்வுக்கேற்ப ஒழுங்குறுத்தும் விதிகளைச் செய்யலாம்:-

(அ) மன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கை, அவர்களை அமர்த்தும் முறை, மேலும், மன்றத்தின் தலைவர், அதன் அலுவலர்கள், பணியாளர்கள் ஆகியோரை அமர்த்துதல்.

(ஆ) அதன் கூட்டங்களை நடத்துதல் மற்றும் அதன் பொது வியலான நெறிமுறை; மற்றும்

(இ) அலுவலர்களுடன் தொடர்பு மற்றும் மாநிலத்திலுள்ள உள்ளாட்சி மன்றங்கள்; மற்றும்

(ஈ) பிற சார்வுறு பொருட்பாடுகள் அனைத்தும்.

**5. பட்டியல் வரையிடங்களுக்குப் பொருந்துறும் சட்டம் :**

(1) மாநிலத்தின் பழங்குடியினரின் ஆய்வுரை மன்றத்தின் ஆலோசனையின்பேரில், ஆளுநர் பொது அறிவிக்கை வாயிலாக, நாடாளுமன்றத்தின் அல்லது மாநிலச் சட்டமன்றத்தின் குறிப்பிட்ட

சட்டம் எதுவும், மாநிலத்தில் ஒரு பட்டியல் வரையிடம் அல்லது அதன் பகுதி எதற்கும் பொருந்துறுதல் ஆகாது என்றோ, அவர் அந்த அறிவிக்கையில் குறித்துரைக்கும் விதிவிலக்குகளுக்கும் மாற்றமைவுகளுக்கும் உட்பட்டு, அந்த மாநிலத்தில் ஒரு பட்டியல் வரையிடம் அல்லது அதன் பகுதி எதற்கும் பொருந்துறுதல் ஆகும் என்றோ மன்றத்தின் அனுமதியுடன் அறிவிக்கலாம்.

வரம்புரையாக: கீழ்க்கண்ட பொருள்களோடு அந்தச் சட்டம் தொடர்பிருக்குமாயின் -

(அ) திருமணம்;

(ஆ) சொத்தின் வாரிசுரிமை;

(இ) பழங்குடியினரின் சமூகப் பழக்க வழக்கங்கள்;

(ஈ) நிலம், 1927 இந்திய வனச் சட்டத்தின்படி வனத்திற்காக ஒதுக்கீடு செய்யப்பட்ட நிலங்கள் தவிர அந்தஇடத்தில் வேறு ஏதாவது சட்டம் அமுலில் இருந்தால், குடியிருப்போர் உரிமைகள் உள்ளடங்கிய வேறு காரியங்ளுக்காக நிலத்தினை ஒதுக்கீடு செய்தல்

(உ) கிராம நிர்வாகம் உள்ளடங்கிய கிராமப் பஞ்சாயத்துக்களை நிறுவுதல் பற்றிப் பழங்குடியினர் ஆய்வுரை மன்றம் ஆளுநருக்கு ஆய்வுரை வழங்கினால் ஆளுநர் அது பொருட்டுச் சுட்டுகை பிறப்பிக்கலாம்.

(2) மாநிலத்தின் பழங்குடி ஆய்வுரை மன்றத்துடன் கலந்து ஆலோசித்த பிறகு, ஆளுநர், தற்சமயம் பட்டியல் வரையிடங்களில் எந்த விதிமுறையும் அமுலில் இல்லாமல் இருந்தால் எந்தப் பொருட்பாட்டினைக் குறித்தும் விதிமுறைகள் கொண்டு வரலாம்.

(3) மாநிலத்தின் பட்டியல் வரையிடங்களில், குற்ற வழக்கு விசாரணையில் மரண தண்டனை பெறும் வழக்குகள் தவிர, ஆயுள் தண்டனை, ஐந்து வருடம் சிறைவாசம் அல்லது அதற்கு மேல் அல்லது அந்தச் சச்சரவுகளுக்கு அப்பாற்பட்ட சச்சரவுகள் பற்றி ஆளுநர் விதிமுறைகள் செய்யலாம். அந்த இடத்திலுள்ள தலையாரி அல்லது பஞ்சாயத்துகள் வழக்குகளை விசாரிக்க அதிகாரம் அளிக்கலாம்.

(4) இந்த அரசமைப்பில் சட்டசபைகளுக்கு அளிக்கப்பட்ட அதிகாரம், அந்த இடங்களில் தகுந்த சட்டசபைகளின் சட்டங் களுக்கு என்ன வலிமை உண்டோ அதே வலிமை ஆளுநர் பிரகடனப் படுத்தும் விதிமுறைகளுக்கும் இந்தப் பத்தியின்படி உண்டு.

**6. பட்டியல் வரையிடங்களில் பழங்குடியினர் அல்லா தாருக்கு நிலத்தை வேறு காரியங்களுக்காக மாற்றுதல் மற்றும் பிரித்துக் கொடுத்தல்:** (1) பட்டியல் வரையிடங்களில், பட்டியலில் கண்ட பழங்குடியினரைச் சார்ந்த உறுப்பினர், பட்டியலில் கண்ட பழங்குடியினர் அல்லாத உறுப்பினருக்கு நிலத்தை மாற்றுவது சட்டப்படி செல்லாது;

(2) மாநிலத்தில், பழங்குடியினர் ஆய்வுரை மன்றத்தின் ஆலோசனையின்பேரில், ஆளுநர் கொண்டுவரும் சட்டங்கள் தவிர, மாநிலத்தில் அமைந்துள்ள பட்டியல் வரையிடங்களில் உள்ள நிலத்தைப் பட்டியலில் கண்ட பழங்குடியினர் அல்லாதாருக்குப் பிரித்துக் கொடுக்கவோ அல்லது குடியேற அனுமதிக்கவோ இயலாது.

**7. பட்டியல் வரையிடங்களில் பணம் கடன்கொடுத்தல் பற்றிய விதிமுறைகள்:** மாநில அரசாங்கத்தின் சார்பில், அதிகாரத்தைச் செயல்படுத்தும் அதிகாரி கொடுத்த அனுமதியின் நிபந்தனைகள் அல்லாமல் மாநிலத்திலுள்ள பட்டியல் இனத்தவருக்கு ஆய்வுரை மன்றம் ஆளுநருக்கு ஆலோசனை வழங்கினால், பொது அறிவிப் பின்படி வேறு எவரும் பட்டியல் வரையிடங்களில் பணம் கடன் கொடுக்கும் வியாபாரம் செய்யக்கூடாது என்று உத்தரவு இடலாம். அப்படி அந்த உத்தரவினை மீறினால் தண்டிக்கத்தக்க குற்றம் என்று அந்த உத்தரவில் வகையம் செய்யலாம்.

**8. ஆண்டு நிதி அறிக்கையில் பட்டியல் வரையிடங்களுக் கான உத்தேச வரவு-செலவுகளைத் தனியாகக் காட்டுதல்:** இந்த அரசமைப்பு உறுப்பு 177-ன்படி, மாநிலத்திலுள்ள பட்டியல் வரை யிடங்களுக்கான உத்தேச வரவு-செலவினை மாநிலச் சட்டசபைக்கு முன்னால் சமர்ப்பிக்கும்பொழுது, மாநில வருவாயில் வரவு வைக்க வேண்டியவை மற்றும் அதிலிருந்து செலவு செய்ய வேண்டியவை தனியாகக் காண்பித்தல் வேண்டும்.

**9. பட்டியல் வரையிடங்கள் தவிர இதர இடங்களுக்கு பொருத்துறுதல்:** (1) மாநிலத்தின் பட்டியல் வரையிடங்களுக்குப் பொருந்துறுவது போல, ஆளுநர் பொது அறிவிப்பின்படி எந்த நேரத்திலும், இந்தப் பாகத்தின் எல்லா அல்லது எந்த வகையத்தின்படி அறிவியலில் குறிப்பிட்டுள்ளபடி அந்தத் தேதியிலிருந்து பட்டியல் வரையிடங்கள் தவிர மாநிலத்தில் உள்ள எந்த இடத்தினும் பட்டியலில் கண்ட பழங்குடியினர் வாசம் செய்தல் பொருந்துறும். அப்பேற்பட்ட பொது அறிவிப்பு மற்ற இடங்களில் அந்த வகையகம் பொருந்துறும் என்பதற்கான முடிவான சான்றாகும்.

(2) இந்தப் பத்தியின் உட்பத்தி (1)ன்படி மாநிலத்தில் எந்த நிலத்தைப் பற்றியும் அறிவிப்பு வெளியாக இருக்குமானால், ஆளுநர் அறிவிப்பின்படி இந்தப் பாகத்தில் உள்ள அனைத்து அல்லது எந்த வகையத்தின்படி, அறிவிப்பு வந்த குறிப்பிட்ட தேதியிலிருந்து மாநிலத்தின் எந்த இடத்தின் தொடர்பாகவும் பொருந்தாது என உத்தரவு பிறப்பிக்கலாம்.

## பகுதி III

### ஐக்கிய மாகாணங்களுக்கான வகையங்கள்

**10. பகுதி III ன் பொருந்துறுதல்:** இந்தப் பகுதி வகையங்கள் ஐக்கிய மாகாணங்களுக்கு மட்டும் பொருந்துறும்.

**11. பட்டியல் வரையிடங்களின் ஆலோசனைக்குழு:** (1) இந்த அரசமைப்புத் தொடக்கத்தின் பின்னர், ஆளுநர் தம் ஆணையின் வழிப்பட்டியல் வரையிடங்களின் ஆலோசனைக்குழு ஒன்றினை நியமிக்கலாம். அதில் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர் பட்டியலில் கண்ட பழங்(5டியினராக இருத்தல் வேண்டும். அந்த ஆணைக் குழுவினை அமைததல், அதிகாரம், மற்றும் செயல்முறைகளை வரையறை செய்யலாம். மேலும் ஆளுநர் விருப்பப்படி, தேவையான சார்வுறு மற்றும் விளைவுறு வகையங்களைக் கொண்டிருக்கலாம்.

(2) மாநிலத்திலுள்ள பட்டியல் வரையிடங்களின் எல்லா விதமான முன்னேற்றத்தினைக் குறித்தும் பட்டியல் வரையிடங்களின் ஆலோசனைக்குழு மாநில அரசாங்கத்திற்கு ஆலோசனை வழங்குவது அந்தக் குழுவின் கடமையாகும்.

**12. குறிப்பிட்ட வழக்குகளில் ஆளுநர், ஒழுங்குமுறைகள் கொண்டு வருவதற்கான அதிகாரம் :** (1) மாநிலத்தின் பட்டியல் வரையிடங்களில் குற்றவழக்கு விசாரணையில் மரண தண்டனை பெறும் வழக்குகள், ஆயுள் தண்டனை, ஐந்து வருடத்திற்கு மேலான சிறைவாசம் பெறும் வழக்குகள் தவிர இதர வழக்குகள் பற்றி அல்லது குறைவான பணசம்பந்தப்பட்ட வழக்குகள் பற்றி ஆளுநர் ஒழுங்குமுறைகளைக் கொண்டுவரலாம். அம்மாதிரியான வழக்குகளில் அந்த இடத்திலுள்ள தலையாரி அல்லது பஞ்சாயத்துகளுக்கு வழக்குகளை விசாரிக்க அதிகாரம் அளிக்கலாம்.

(2) மாநிலத்தில் பட்டியல் வரையிடங்களில் உள்ள எந்த நிலத்தினையும் பட்டியலில் கண்ட பழங்குடி உறுப்பினர், பட்டியலில் கண்ட பழங்குடி உறுப்பினராக இல்லாத ஒருவருக்கு நிலத்தினை மாற்றுவதற்கு ஆளுநர் தடைவிதிக்கலாம்.

(3) இந்த அரசமைப்பில் சட்டசபைகளுக்கு அளிக்கப்பட்ட அதிகாரம், அந்த இடங்களில் தகுந்த சட்டசபைகளின் சட்டங்களுக்கு என்ன வலிமை உண்டோ, அதே வலிமை ஆளுநர் பிரகடனம் செய்யும் எந்த ஒழுங்குமுறைகளுக்கும் இந்தப் பத்தியின்படி உண்டு.

**13. ஆண்டு நிதி அறிக்கையில் பட்டியல் வரையிடங்களுக்கான உத்தேச வரவு செலவுகளைத் தனியாகக் காட்டுதல்:** இந்த அரசமைப்பு உறுப்பு 177-ன்படி, மாநிலத்திலுள்ள பட்டியல் வரையிடங்களுக்கான உத்தேச வரவு-செலவினை மாநிலச் சட்டசபைக்கு முன்னால் சமர்ப்பிக்கும்பொழுது, மாநில வருவாயின் வரவு வைக்க வேண்டியவை மற்றும் அதிலிருந்து செலவு செய்ய வேண்டியவை தனியாகக் காண்பித்தல் வேண்டும்.

## பகுதி IV

## கிழக்குப் பஞ்சாப் மாநிலத்திற்கான வகையங்கள்

**14. பகுதி IV பொருந்துறுதல்:** இந்தப் பாகத்தில் உள்ள வகையங்கள், கிழக்குப் பஞ்சாப் மாநிலத்திற்கு மட்டும் பொருந்துறுவதாகும்.

**15. பட்டியல் வரையிடங்களில் ஆலோசனைக்குழு நியமித்தல்:** இந்த அரசமைப்புத் தொடக்கத்தின் பின்னர், ஆளுநர் தம்

ஆணையின்வழிப் பட்டியல் வரையிடங்களின் ஆலோசனைக்குழு ஒன்றினை நியமிக்கலாம். அந்தக்குழுவில் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள் மாநிலத்தில் பட்டியல் வரையிடங்களில் குடியிருப் பவராக இருத்தல் வேண்டும். அந்த ஆணைக்குழுவினை அமைத் தல், அதிகாரம் மற்றும் செயல்முறைகளை வரையறை செய்ய லாம். மேலும் ஆளுநர் விருப்பப்படி தேவையான சார்வுறு மற்றும் விளைவுறு வகையங்களைக் கொண்டிருக்கலாம்.

(2) மாநிலத்திலுள்ள பட்டியல் வரையிடங்களின் எல்லா விதமான முன்னேற்றத்தினைக் குறித்தும் பட்டியல் வரையிடங் களின் ஆலோசனைக்குழு, மாநில அரசாங்கத்திற்கு ஆலோசனை வழங்குவது அந்தக் குழுவின் கடமையாகும்.

**16. நாடாளுமன்றச் சட்டங்கள் அல்லது மாநிலச் சட்டசபை யின் சட்டங்கள் பட்டியல் வரையிடங்களுக்குப் பொருந்துறுதல்:** அறிவிப்பில் குறிப்பிடப்பட்டுள்ள விதிவிலக்கு மற்றும் மாற்றங் களுக்கு உட்பட்டு, ஆளுநர் பொது அறிவிப்பின்படி நாடாளுமன்றத் தின் குறிப்பிட்ட சட்டம் அல்லது மாநிலத்தின் சட்டம், பட்டியல் வரையிடங்களுக்குப் பொருந்தாது எனவும் அல்லது மாநிலத் தின் எந்தப் பகுதிகளிலும் அல்லது பட்டியல் வரையிடங்களில் பொருந்தாது எனவும் அல்லது மாநிலத்தின் எந்தப் பகுதிகளிலும் பொருந்தாது எனவும் உத்தரவு பிறப்பிக்கலாம்.

**17. ஒழுங்குமுறைகள் செய்ய ஆளுநரின் அதிகாரங்கள்:** (1) மாநிலத்தின் பட்டியல் வரையிடங்களில் குற்ற வழக்கு விசா ரணையில் இறக்கும் தண்டனைபெறும் வழக்குகள் ஆயுள் தண்டனை ஐந்து வருடம் அல்லது அதற்குமேலான சிறைவாசம் அல்லது குறைவான பணம் சம்பந்தப்பட்ட வழக்குகள் பற்றி ஆளுநர் ஒழுங்கு முறைகள் செய்யலாம். அம்மாதிரியான வழக்குகளில் அந்த இடத் திலுள்ள தலையாரி அல்லது பஞ்சாயத்துகளுக்கு வழக்குகளை விசாரிக்க அதிகாரம் அளிக்கலாம்.

(2) மாநிலத்தில் பட்டியல் வரையிடங்களிலுள்ள எந்த நிலத்தினையும் பட்டியலில் கண்ட பழங்குடி உறுப்பினர், பட்டி யலில் கண்ட பழங்குடி உறுப்பினர், பட்டியலில் கண்ட பழங்குடி உறுப்பினராக இல்லாத ஒருவருக்கு நிலத்தினை மாற்றுவதற்கு ஆளுநர் தடை விதிக்கலாம்.

(3) இந்த அரசமைப்பில் சட்டசபைகளுக்கு அளிக்கப் பட்ட அதிகாரம், அந்த இடங்களில் தகுந்த சட்டசபைகளின் சட்டங் களுக்கு என்ன வலிமை உண்டோ அதே வலிமை ஆளுநர் பிரக டனம் செய்யும் எந்த ஒழுங்கு முறைகளுக்கும் இந்தப் பத்தியின்படி உண்டு.

## பகுதி V

## பட்டியல் வரையிடங்கள்

[1]**18. பட்டியல் வரையிடங்கள்:** *(1)* கீழே கொடுக்கப்பட் டுள்ள அட்டவணையில் பகுதி I முதல் VII வரை, குறிப்பிடப்பட்ட இடங்கள் இந்த அரசமைப்பின் பொருள்படி பட்டியல் வரை யிடங்களாகும். அந்த அட்டவணையில் குறிப்பிட்ட எந்தப் பகுதி, மாவட்டம், நிர்வாக வரையிடம், தாலுகா அல்லது பண்ணை என்பது இந்த அரசமைப்புத் தொடக்கத் தேதியிலிருந்து குறிப் பிடப்படும் பகுதி, மாவட்டம், வரையிடம் தாலுக்கா அல்லது பண்ணை என்பதாகும்.

(2) குடியரசுத் தலைவர் எந்த நேரத்திலும் ஆணையின்வழி

(அ) பட்டியல் வரையிடங்கள் முழுவதுமாகவோ அல்லது குறிப்பிட்ட பகுதி, பட்டியல் வரைவிடம் அல்லது அந்த இடத்தின் பகுதி ஆகாது எனவும் ஆணை பிறப்பிக்கலாம்.

(ஆ) பட்டியல் வரையிடங்களின் எல்லைகளைச் சரி செய் வதற்காக மட்டும், மாற்ற,

(இ) முதல் பட்டியல் பகுதி Iல் குறிப்பிடப்பட்டுள்ளது போல, மாநிலத்தின் எல்லைகளில் மாற்றம் செய்வது அல்லது ஒன்றியத்தில் புதிதாகச் சேர்க்கப்பட்ட மாநிலத்தைப் பட்டியல் பகுதி-Iல் சேர்ப்பது அல்லது பட்டியல் வரை யிடங்களில் முதலில் அந்த மாநிலத்தின் பகுதியாக

1. இந்தப் பத்தியில், 1935 இந்திய அரசாங்கச் சட்டம் பிரிவு 91(2)-ன்படி, ஆதி யில் சட்டமாக்கப்பட்டது, பட்டியல் வரையிடங்களில் எந்த வரையிடமும் நீங்கலாக அல்லது உள்ளடங்கியது என இந்தப் பத்தி உட்பத்தி(2) ஐச் சேர்க்க, வகையம் செய்துள்ளது எனக் குழு நினைக்கின்றது.

இல்லாத இடத்தை அதன் பகுதியாக நாடாளுமன்றம் சட்டத்தின் மூலமாக அறிவிக்கலாம். மேலும் குடியரசுத் தலைவர் முறையென்றோ தேவையென்றோ கருதினால், சார்வுறு, விளைவுறு வகையங்களைக் கொண்டதாக, எந்தவொரு ஆணையும் இருக்கும்.

## அட்டவணை

## I-.சென்னை

(மினிக்காய் உள்ளடங்கிய) லட்சத் தீவுகள் மற்றும் அமிந்திவி தீவுகள்

1936 இந்திய அரசாங்கம் ஆணை (ஒரிசா அரசமைப்பு) வகையங்களின்படி கிழக்குக்கோதாவரி முகவர் நிலை மற்றும் விசாகப்பட்டினம் முகவர் நிலை ஒரிசாவிற்கு மாற்றப்படவில்லை.

## II - பம்பாய்

### மேற்குக் காந்தேஷ் மாவட்டத்தில்:

நவாப்பூர் பேத்தா, அக்ராணி மகல் மற்றும் பின்வரும் மெகவாசித் தலைவர்களுக்குச் சொந்தமான கிராமங்கள்: 1. கத்தியின் பர்வி 2. நாளின் பர்வி 3. சிங்பூரின் பர்வி 4. கோகாலியின் வால்வி 5. சிக்கிலியின் வசாவா 6. நவல்பூரின் பர்வி.

கிழக்குக் காந்தேஷ் மாவட்டத்தில் : சத்புரா குன்றின் ஒதுக்கப் பட்ட வன வரையிடங்கள்.

நாசிக் மாவட்டத்தில்: கல்வான் தாலுகா மற்றும் பெயின்ட் பேதா.

தாணா மாவட்டத்தில்: தஹனு மற்றும் சஹாபூர் தாலுகாக்கள் மற்றும் மோகடா, அம்பர்கயான் பேதா.

## III - மாகாணங்கள்

### டேராடூன் மாவட்டத்தின் ஜான்சார் - பாலார் பர்கானா

கைமூர் தொடர்ச்சியின் தெற்கில் மிர்சாபூர் மாவட்டத்தின் பாகங்கள்.

## V - பீஹார்

ராஞ்சி மற்றும் சிங்பூம் மாவட்டங்கள், சோடா நாக்பூர் பிரிவின் பலாமா மாவட்டத்தில் உட்பரிவினா லதேகர்.

கொட்டா மற்றும் தியோகார் உட்பிரிவுகள் நீங்கலான சந்தால் பர்கானா மாவட்டம்.

## VI - மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார்

சந்தா மாவட்டத்தில் சிரோன்சா தாலுகாவில் உள்ள அஹிரி ஜமீன், கர்சிரோலி தாலுகாவில் உள்ள தனோரரா, டட்மலா, கேவர்தா, ஜரபாப்ரா குட்கயான், கோட்கால், முரம்கயான், பலாஸ்கர், ரங்கி, சிர்சுந்தி, சோன்சாரி, சண்டலா, கில்கயான், கார்சிரோலி தாலுகாவிலுள்ள பாய்-முராண்டா மற்றும் போட்டி கயான் ஜமீன்கள்.

ஹராய், கோரக்காட், சோர்பானி, பட்கஹார், பர்தகார், பர்தாப்கார்(பகாரா), சிந்த்வாரா மாவட்டத்தின் அல்மோட் மற்றும் சோன்பூர் ஜாகிர்கர்கள் மற்றும் சிந்த்வாரா மாவட்டத்தில் பச்மர்ஹி ஜாகீரின் பகுதிகள்.

மண்ட்லா மாவட்டம்

பிலாஸ்பூர் மாவட்டத்தின் பேந்த்ரா, கேந்தா, மாரின், லாபா, உப்ரோரா, சூரி மற்றும் கோர்பா ஜமீன்கள்.

டிரக் மாவட்டத்தின் ஆந்தி, கோரசா, பனாபாராஸ் மற்றும் அம்பாகார்சாவுகி ஜமீன்கள்.

பாலகாட் மாவட்டத்தின் பைஹார் தாலுகா.

அம்ரோடி மாவட்டத்தின் மேல்காட் தாலுகா.

பேடுல் மாவட்டத்தின் பைன்ஸ்தேகி தாலுகா.

## VII - ஒரிசா

கொந்மால் உள்ளடக்கிய கஞ்சம் முகவர்நிலை.

கோராபுட் மாவட்டம்.

# ஆறாவது பட்டியல்

*(உறுப்புகள் 189 (ஆ) மற்றும் 190 (2))*

## அசாம் பழங்குடியினர் வரையிடங்களின் நிர்வாகத்திற்கான வகையங்கள்

*1. **தன்னுரிமை மாவட்டங்கள் மற்றும் தன்னுரிமை நிலப் பரப்புகள்:** (1) தற்சமயம் இந்தப் பட்டியலின் பத்தி 19 - ல் சேர்க்கப் பட்டுள்ள அட்டவணைப் பகுதி -I- ல் உள்ள, ஒவ்வொரு பழங்குடி யினர் வரையிடங்களும், அந்தப் பாகத்தில் சேர்க்கப்பட்ட ஓர் தன் னுரிமை மாவட்டமாகும்.*

*2. தன்னுரிமை மாவட்டத்தில் வேறுபட்ட பட்டியலில் கண்ட பழங்குடியினர் இருந்தால், ஆளுநர் பொது அறிவிப்பின்படி, அவர்கள் குடியிருந்த வரையிடம் அல்லது வரையிடங்களைத் தன்னுரிமை நிலப்பரப்பாகப் பிரிக்கலாம்.*

*3. ஆளுநர் பொது அறிவிப்பின்படி*

*(அ) கொடுக்கப்பட்ட அட்டவணையில் பகுதி-Iல் எந்த வரையிடத்தையும் உள்ளடக்கலாம்.*

*(ஆ) புதிதாகத் தன்னுரிமை மாவட்டத்தை உருவாக்கலாம்.*

*(இ) எந்தத் தன்னுரிமை மாவட்டத்தின் வரையிடங்களை யும் அதிகரிக்கலாம்.*

*(ஈ) கொடுக்கப்பட்ட அட்டவணையில் பகுதி -I விருந்து எந்த வரையிடத்தையும் நீக்கலாம்.*

*(உ) எந்தத் தன்னுரிமை மாவட்டத்திலிருந்தும் வரை யிடத்தைக் குறைக்கலாம்.*

*வரம்புரையாக: இந்தப் பட்டியல் பத்தி 14-ல் உட்பத்தி (1) ன்கீழ் நியமிக்கப்பட்ட ஆணையத்தின் அறிக்கையினைக் கவனித் தாலன்றி அவை தவிர, உட்பத்திக்கூறு (ஆ) அல்லது கூறு(இ)ன்கீழ் ஆளுநர் எந்த ஆணையும் இடமுடியாது.*

*மேலும் வரம்புரையாக: தன்னுரிமை மாவட்டத்தைப் பொறுத்தவரை மாவட்ட மன்றங்கள் தீர்மானம் கொண்டுவந்து*

நிறைவேற்றினாலன்றி, இந்த உட்பத்திக் கூறு(ஈ) அல்லது கூறு (உ)ன்கீழ் ஆளுநர் எந்த ஆணையும் இட முடியாது.

**2. மாவட்ட மன்றங்களும் மற்றும் வட்டார மன்றங்களும் அமைத்தல்:** (1) ஒவ்வொரு தன்னுரிமை மாவட்டத்திற்கும் ஒரு மாவட்ட மன்றம் இருத்தல் வேண்டும். அதில் உள்ள உறுப்பினர்கள் இருபதுக்குக் குறையாமலும், நாற்பது பேருக்கு மிகாமலும் நான்கில் மூன்றுபங்கு உறுப்பினர் வயது வந்தோர் வாக்குரிமையினர் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாகவும் இருத்தல் வேண்டும்.

(2) மாவட்ட மன்றங்களின் தேர்தலுக்கான தொகுதிகளின் எல்லைகளை நிர்ணயிக்கும் பொழுது, கூடுமானவரை பட்டியலில் கண்ட பழங்குடியினர் வசிக்கும் இடமாக இருத்தல் வேண்டும். ஏதாவது ஓர் இடத்தில் மற்றவர் வசிப்பாரேயானால் அது தனித் தொகுதியாகக் கருதப்படும்.

வரம்புரையாக: மொத்த மக்கள்தொகை ஐநூறுக்குக் குறைவாக இருக்குமானால் வாக்காளர் தொகுதி அமைத்தல் கூடாது.

(3) இந்தப் பட்டியல் பத்தி(1), உட்பத்தி (2)ன் கீழ் ஒவ்வொரு தன்னுரிமை நிலப்பரப்பிலும், தனி வட்டார மன்றங்கள் இருத்தல் வேண்டும்.

(4) மாவட்ட மன்றம் ஒவ்வொன்றும், வட்டார மன்றம் ஒவ்வொன்றும் முறையே ''(மாவட்டத்தின் பெயர்)'' ''மாவட்ட மன்றம்'', ''(வட்டாரத்தின் பெயர்)'' ''வட்டார மன்றம்'' என்னும் பெயரில் ஒரு கூட்டுருமயாக இருக்கும்; அது, தொடர்ந்த நிலையான வாரிசுரிமையும் ஒரு பொதுவான இலக்கினையும் கொண்டிருக்கும்; மேலும், மேற்சொன்ன பெயரால் அது வழக்கிடுதலும் அதன்மீது வழக்கிடப்படுதலும் ஆகும்.

(5) இந்தப் பட்டியலின் வகையங்களுக்கு உட்பட்டு, ஒரு தன்னாட்சி மாவட்டத்தின் நிருவாகம், அத்தகைய மாவட்டத்திற்குள் உள்ள வட்டாரமன்றம் எதனிடமும் இந்தப் பட்டியலின்படி உற்றமையாதிருக்கிற அளவுக்கு, அத்தகைய மாவட்டத்திற்கான மாவட்ட மன்றத்திடம் உற்றமைந்திருக்கும்; மேலும், ஒரு தன்னாட்சி வட்டாரத்தின் நிருவாகம், அத்தகைய வட்டாரத்திற்கான வட்டார மன்றத்திடம் உற்றமைந்திருக்கும்.

(6) வட்டார மன்றங்களைக் கொண்ட ஒரு தன்னாட்சி மாவட்டத்தில், மாவட்ட மன்றத்திற்கு, அந்த வட்டார மன்றத்தின் அதிகாரத்தின் கீழுள்ள வரையிடங்களைப் பொறுத்தவரை, இந்தப் பட்டியலின் வழி வழங்கப்படும் அதிகாரங்களோடு கூட, அத்தகைய வரையிடங்களுக்காக அந்த வட்டார மன்றத்தினால் அதனிடம் ஒப்படைவு செய்யப்படும் அதிகாரங்களை மட்டுமே, அந்த மாவட்ட மன்றம் உடையது ஆகும்.

(7) ஆளுநர், தன்னாட்சி மாவட்டங்களிலோ வட்டாரங் களிலோ நிலவுறும் பழங்குடியினர் மன்றங்களை அல்லது சார் பாற்றம் வாய்ந்த பிற பழங்குடியினர் அமைப்புகளைக் கலந்தாய்வு செய்து, மாவட்ட மன்றங்களையும் வட்டார மன்றங்களையும் முதல் முறையாக அமைப்பதற்கு விதிகளைச் செய்வார்; அத்தகைய விதி களில் பின்வருவனவற்றிற்கு வகை செய்யப்படும் -

(அ) மாவட்ட மன்றங்கள், வட்டார மன்றங்கள் ஆகிய வற்றின் உருவாக்கம் மற்றும் அவற்றில் பதவியிடங்களைப் பகிர்ந் தொதுக்குதல்;

(ஆ) அந்த மன்றங்களுக்கான தேர்தல்களுக்காக நிலவரைத் தேர்தல் தொகுதிகளை வரையறுத்தல்;

(இ) அத்தகைய தேர்தல்களில் வாக்களிப்பதற்கான தகுதிப் பாடுகள்; அந்தத் தேர்தல்களுக்கான வாக்காளர் பட்டியல்களைத் தயாரித்தல்;

(ஈ) அத்தகைய தேர்தல்களில் அந்த மன்றங்களின் உறுப் பினர்களாகத் தேர்ந்தெடுக்கப் பெறுவதற்கான தகுதிப்பாடுகள்;

(உ) அத்தகைய மன்றங்களுக்கான தேர்தல்கள் அல்லது நியமனங்கள் தொடர்பான அல்லது அவை குறித்த பிற பொருட் பாடுகள்;

(ஊ) மாவட்ட மற்றும் வட்டார மன்றங்களின் நெறிமுறையும் அலுவல் நடத்து முறையும்;

(எ) மாவட்ட மற்றும் வட்டார மன்றங்களின் அலுவலர் களையும் பணியாளர்களையும் அமர்த்துதல்;

8. மாவட்ட அல்லது வட்டார மன்றம், அது முதன் முறையாக அமைக்கப்பட்ட பின்பு, இந்தப் பத்தியின் (7) ஆம் உள் பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகள் குறித்து, விதிகளை வகுக்கலாம். மேலும், ஒழுங்குறுத்துவதற்கான விதிகளை வகுக்கலாம்:

(அ) கீழமை உள்ளாட்சி மன்றங்களையோ வாரியங்களையோ உருவாக்குதல்; அவற்றின் நெறிமுறையும் அவற்றின் அலுவல் நடத்துமுறையும்; மற்றும்

(ஆ) பொதுவாக, மாவட்டத்தின் அல்லது, நேர்வுக்கேற்ப வட்டாரத்தின் நிருவாகம் சார்ந்த அலுவல்களை நடத்துவது பற்றிய பொருட்பாடுகள் அனைத்தும்,

வரம்புரையாக: இந்த உள்பத்தியின்படி, மாவட்ட அல்லது வட்டார மன்றத்தினால் விதிகள் வகுக்கப்படும் வரையில், அத்தகைய மன்றம் ஒவ்வொன்றுக்குமான தேர்தல்கள், அதன் அலுவலர்கள், பணியாளர்கள், நெறிமுறை, அலுவல் நடத்துமுறை ஆகியவற்றைப் பொறுத்து இந்தப் பத்தியின் (7) ஆம் உள்பத்தியின்படி, ஆளுநரால், வகுக்கப்பட்ட் விதிகள் செல்திறம் உடையன ஆகும்.

மேலும் வரம்புரையாக: நேர்வுக்கேற்ப மிகிர் மற்றும் வடக்குக் கச்சார் குன்றுகள் துணை ஆணையர் அல்லது உட்கோட்ட அலுவலர் மாவட்ட மன்றங்களின் பதவி முறைப்பட்ட தலைவராக இந்தப்பட்டியல் பத்தி 19-ல் சேர்க்கப்பட்டுள்ள அட்டவணைப் பகுதி -Iன்படி முறையே விவரம் 5 மற்றும் 6 உள்ளடக்கும். முதல் மாவட்ட மன்றங்கள் அமைத்த பின்பு, ஆளுநரின் மேற்பார்வையின்கீழ் ஆறுவருடங்களுக்கு அதிகாரம் உண்டு. மாவட்ட மன்றங்களின் தீர்மானங்களை மாற்றவோ அல்லது ரத்து செய்யவோ அல்லது மன்றங்களுக்குத் தேவையானதெனக் கருதும் புத்திமதி கூறவோ ஆளுநருக்கு அதிகாரம் உண்டு. மாவட்ட மன்றங்கள் ஆளுநர் புத்திமதிபடி நடத்தல் வேண்டும்.

**3. சட்டங்கள் இயற்றுவதற்கு மாவட்ட மன்றங்களுக்கும் வட்டார மன்றங்களுக்கும் உள்ள அதிகாரங்கள்:** (1) ஒரு தன்னாட்சி வட்டாரத்திற்கான வட்டார மன்றம், அத்தகைய வட்டாரத்திற்குள் உள்ள அனைத்து வரையிடங்களைப் பொறுத்தும், ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கான மாவட்ட மன்றம், அந்த மாவட்டத்திற்குள் வட்டார மன்றங்கள் எவையேனுமிருப்பின், அவற்றின் அதிகாரத்தின்

கீழுள்ள வரையிடங்கள் நீங்கலாக, அந்த மாவட்டத்திற்குள் உள்ள அனைத்து வரையிடங்களைப் பொறுத்தும், பின்வருவன குறித்துச் சட்டங்களியற்ற அதிகாரம் உடையன ஆகும்.

(அ) வேளாண்மை அல்லது மேய்ச்சல் அல்லது குடியிருப்பு நோக்கங்களுக்காகவோ வேளாண்மையல்லாத பிற நோக்கங்களுக்காகவோ, ஊர் அல்லது நகரம் எதிலும் வாழ்வோரின் நலன்களை மேம்படுத்தக்கூடிய பிற நோக்கம் எதற்காகவோ, ஒதுக்குறுத்தப்பட்ட காட்டு நிலமல்லாத பிற நிலம் எதனையும் பகிர்ந்தொதுக்குதல், கையடைவு கொள்ளுதல் அல்லது பயன்படுத்துதல் அல்லது ஒதுக்கி வைத்தல்:

வரம்புரையாக: அத்தகைய சட்டங்களிலுள்ள எதுவும், கையடைவிலுள்ளதாகவோ இல்லாததாகவோ உள்ள நிலம் எதனையும், பொது நோக்கங்களுக்கெனக் கட்டாயமாகக் கையகப்படுத்துவதற்கு அதிகாரமளிக்கும், அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள சட்டத்திற்கு இணங்கத் தொடர்புடைய அசாம் மாநிலம் கையகப் படுத்துவதற்குத் தடையூறு ஆவதில்லை.

(ஆ) ஒதுக்குறுத்தப்பட்ட காடாக இல்லாத காடு எதனினும் மேலாண்மை;

(இ) வேளாண்மைக்காகக் கால்வாய் அல்லது நீரோடை எதனினும் பயன்பாடு;

(ஈ) ஜூம் அல்லது பிறவகை மாற்றுமுறை பயிரிடும் பழக்கத்தை முறைப்படுத்துதல்;

(உ) கிராமம் அல்லது நகரக் குழுக்களையோ மன்றங்களையோ நிறுவுதல்; அவற்றின் அதிகாரங்கள்;

(ஊ) கிராமம் அல்லது நகரக்காவல்துறை, மக்கள் நலவாழ்வு மற்றும் துப்புரவு ஆகியவை உள்ளடங்கலாகக் கிராம அல்லது நகர நிர்வாகம் தொடர்பான பிற பொருட்பாடுகள்;

(ஐ) குடித் தலைவர்களை அல்லது நாட்டாண்மைக்காரர்களை அமர்த்துதல் அல்லது அவர்கள் வாரிசுரிமை;

(எ) சொத்திற்கான மரபுரிமை;

(ஏ) திருமணம்;

(ஒ) சமுதாய வழக்கங்கள்.

2. இந்தப் பத்தியில், ஓர், 'ஒதுக்குறுத்தப்பட்ட காடு'' என்பது, 1899-ஆம் ஆண்டு அசாம் காடு ஒழுங்குறுத்து விதிகளின்படியோ அல்லது தொடர்புள்ள வரையிடத்தில் அப்போதைக்குச் செல்லாற்றலிலுள்ள பிற சட்டம் எதன்படியோ ஓர் ஒதுக்குறுத்தப்பட்ட காடாக இருக்கிற வரையிடம் எனப் பொருள்படும்.

**4. தன்னாட்சி மாவட்டங்களிலும் மற்றும் தன்னாட்சி வட்டாரங்களிலும் நீதி நிர்வாகம்:**

(1) ஒரு தன்னாட்சி வட்டாரத்திற்கான வட்டாரமன்றம், அத்தகைய வட்டாரத்திற்குள் உள்ள வரையிடங்களைப் பொறுத்தும், ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கான மாவட்ட மன்றம், அந்த மாவட்டத்திற்குள் வட்டார மன்றங்கள் எவையேனுமிருப்பின், அவற்றின் கீழுள்ள வரையிடங்கள் நீங்கலாக அந்த மாவட்டத்திற்குள் உள்ள பிற வரையிடங்களைப் பொறுத்தும், அத்தகைய வரையிடங்களிலுள்ள, இந்தப் பட்டியலின் 5-ஆம் பத்தியின் உள்பத்தி (1)ன் வகையங்கள் பொருந்துறும் உரிமை வழக்குகளும், பிற வழக்குகளும் அல்லாத பிறஉரிமை வழக்குகளையும் விசாரணை செய்வதற்காக, இந்தப்பட்டியலின் 3-ஆம் பத்தியிலுள்ள சட்டத்தின் வாயிலாக எழும் வழக்குகளையும், அந்த மாநிலத்திலுள்ள பிற நீதிமன்றங்கள் விலக்கும் வகையில் கிராம மன்றங்களை அல்லது அத்தகைய நீதிமன்றங்களின் தலைவர்களை அமர்த்தலாம்; மற்றும் தக்கவர்களை அத்தகைய ஊராட்சி மன்றங்களின் உறுப்பினர்களாகவோ அத்தகைய நீதிமன்றங்களின் தலைமை வகிக்கும் அலுவலர்களாகவோ அமர்த்தலாம்; மேலும், இந்தப் பட்டியலின் 3-ஆம் பத்தியின்படி இயற்றப்பட்ட சட்டங்களை நிருவகிப்பதற்குத் தேவைப் படும் அலுவலர்களையும் அமர்த்தலாம்.

2. இந்த அரசமைப்பில் அது எவ்வாறிருப்பினும், ஒரு தன்னாட்சி வட்டாரத்திற்கான வட்டார மன்றமோ வட்டார மன்றத்தால் அதற்கென அமைக்கப்பட்ட நீதிமன்றமோ, ஒரு தன்னாட்சி மாவட்டத்திலுள்ள வரையிடம் எதற்கும் ஒரு வட்டார

மன்றம் இல்லாதிருப்பின், அத்தகைய மாவட்டத்திற்கான மாவட்ட மன்றமோ, மாவட்ட மன்றத்தால் அதற்கென அமைக்கப்பட்ட நீதிமன்றமோ அத்தகைய வட்டாரத்திற்குள் அல்லது, நேர்வுக் கேற்ப, வரையிடத்திற்குள் அமைக்கப்பட்ட ஊராட்சிமன்றம் அல்லது உயர்நீதிமன்றம் ஒன்றினால் விசாரணை செய்யத்தகுவதான, அந்தப் பகுதியிலுள்ள பட்டியலில் எல்லாப் பட்டியலில் கண்ட பழங்குடி யினருக்கிடையேயான வழக்குகள், ஆனால் இந்தப் பட்டியலின் 5-ஆம் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின் வகையங்கள் பொருந்துறு வனவாக அல்லாத உரிமை வழக்குகள், வழக்குகள் அனைத்தையும் பொறுத்து, ஒரு மேன்முறையீட்டு நீதிமன்றத்தின் அதிகாரங்களைச் செலுத்திவரும். இந்த வழக்குகள் குறித்து வட்டார அல்லது மாவட்ட மன்றம் அல்லது நீதிமன்றம் எடுக்கும் தீர்ப்பே முடிவானதாகும். மாநிலத்தில் வேறு எந்த நீதிமன்றத்திலும் இந்த வழக்குகள் குறித்து மேல்விசாரணை நடத்த அதிகாரம் கிடையாது.

**5. 1908 ஆம் ஆண்டு உரிமையியல் நெறிமுறைத் தொகுப்புச் சட்டம், 1898 ஆம் ஆண்டுக் குற்றவியல் நெறிமுறைத் தொகுப்புச் சட்டம் ஆகியவற்றின்படி, குறித்த சில உரிமை வழக்குகளையும் பிற வழக்குகளையும் குற்றச் செயல்களையும் விசாரிப்பதற்காக வட்டார மற்றும் மாவட்டமன்றங்களுக்கும் குறித்த சில நீதிமன்றங் களுக்கும் அலுவலர்களுக்கும் அதிகாரம் வழங்குதல் -**

(1) ஒரு தன்னாட்சி மாவட்டம் அல்லது வட்டாரம் எதிலும் செல்லாற்றலிலுள்ளதும், ஆளுநரால் இதற்கெனக் குறித் துரைக்கப்பட்டுள்ளதுமான சட்டம் எதிலிருந்தும் எழுகின்ற உரிமை வழக்குகளை அல்லது பிற வழக்குகளை விசாரிப்பதற்காக அல்லது இந்தியத் தண்டனைத் தொகுப்புச் சட்டத்தின்படி அல்லது அத் தகைய மாவட்டத்திற்கு அல்லது வட்டாரத்திற்கு அப்போதைக்குப் பொருந்துறும் பிறிதொரு சட்டத்தின்படி மரண தண்டனை, ஆயுள் தண்டனை அல்லது ஐந்தாண்டுக் காலத்திற்குக் குறையாத சிறைத் தண்டனை விதித்துத் தண்டிக்கப்படுவதாகும் குற்றச் செயல்களைப் பற்றி விசாரிப்பதற்காக அல்லது அத்தகைய மாவட்டத்தின் அல்லது வட்டாரத்தின் மீது அதிகாரம் உடைய மாவட்ட மன்றத்திற்கோ வட்டார மன்றத்திற்கோ அத்தகைய மாவட்ட மன்றத்தால் அமைக்கப் பட்ட நீதிமன்றங்களுக்கோ ஆளுநரால் அமர்த்தப் பெற்ற அலுவல ருக்கோ, ஆளுநர் 1908 ஆம் ஆண்டு உரிமையியல் நெறிமுறைத் தொகுப்புச் சட்டத்தின் அல்லது, நேர்வுக்கேற்ப, 1898 ஆம் ஆண்டு

குற்றவியல் நெறிமுறைத் தொகுப்புச் சட்டத்தின்படி உள்ள அதிகாரங்களில் பொருத்தமாகுமெனக் கொள்ளுகிறவற்றை வழங்கலாம்; அதன்மேல், அந்த மன்றம், நீதிமன்றம் அல்லது அலுவலர், அவ்வாறு வழங்கப்பட்ட அதிகாரங்களைச் செலுத்தி அந்த உரிமை வழக்குகளை) பிற வழக்குகளை, அல்லது குற்றச் செயல்களை விசாரணை செய்தல் வேண்டும்.

(2) மாவட்ட மன்றத்திற்கோ வட்டார மன்றத்திற்கோ நீதிமன்றத்திற்கோ அலுவலருக்கோ இந்தப் பத்தியின் (1) ஆம் உள் பத்தியின்படி வழங்கப்பட்ட அதிகாரங்களில் எதனையும், ஆளுநர் விலக்கிக் கொள்ளலாம் அல்லது மாற்றமைவு செய்யலாம்.

(3) இந்தப் பத்தியில், தெளிவுற வகை செய்யப்பட்டவாறல்லாமல், தன்னாட்சி மாவட்டம் ஒன்றில் அல்லது தன்னாட்சி வட்டாரம் எதிலுமுள்ள உரிமைவழக்குகள், பிறவழக்குகள் அல்லது குற்றச்செயல்கள் எவற்றையும் விசாரணை செய்வதற்கு, 1908 ஆம் ஆண்டு உரிமையியல் நெறிமுறைத் தொகுப்புச் சட்டமும், 1898 ஆம் ஆண்டுக் குற்றவியல் நெறிமுறைத் தொகுப்புச் சட்டமும் பொருந்துறுவதில்லை.

**6. தொடக்கப் பள்ளிகள் முதலியனவற்றை அமைக்க மாவட்ட மன்றத்திற்குள்ள அதிகாரங்கள் :** ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கான மாவட்டமன்றம், அந்த மாவட்டத்தில் தொடக்கப் பள்ளிகள், மருந்தகங்கள், அங்காடிகள், கால்நடைப் பட்டித் தொழுவங்கள், தோணித் துறைகள், மீன் பண்ணைகள், சாலைகள், சாலைப் போக்குவரத்து, நீர்வழிகள் ஆகியவற்றை அமைக்கலாம், கட்டலாம் அல்லது மேலாண்மை செய்யலாம். குறிப்பாக அந்த மாவட்டத்திலுள்ள தொடக்கப் பள்ளிகளில் தொடக்கக் கல்வி கற்பிக்கப்பட வேண்டிய மொழியையும் முறையையும் வகுத்துரைக்கலாம்.

**7. மாவட்ட மற்றும் வட்டார நிதியங்கள்:** (1) தன்னாட்சி மாவட்டம் ஒவ்வொன்றிற்கும் ஒரு மாவட்ட நிதியமும், தன்னாட்சி வட்டாரம் ஒவ்வொன்றிற்கும் ஒரு வட்டார நிதியமும் ஏற்படுத்தப்படும். இந்த அரசமைப்பின் மீதான வகையங்களுக்கு இணங்க, அத்தகைய மாவட்டத்தின் அல்லது, நேர்வுக்கேற்ப, வட்டாரத்தின் நிருவாகத்தின்போது, முறையே அந்த மாவட்டத்திற்கான மாவட்ட மன்றத்தினாலும் அந்த வட்டாரத்திற்கான வட்டார மன்றத்தி

னாலும் பெறப்படும் பணம் அனைத்தும், அந்தந்த நிதியத்தில் வரவு வைக்கப்படும்.

(2) ஆளுநர் ஒப்புதலுக்குஉட்பட்டு, மாவட்ட நிதியத்தை அல்லது, நேர்வுக்கேற்ப, வட்டார நிதியத்தை மேலாண்மை செய்வதற்காகவும் மேற்சொன்ன நிதியத்தில் பணம் செலுத்துவதையும், அதிலிருந்து பணம் எடுப்பதையும் அதிலுள்ள பணத்தைக் கையடைவில் கொள்ளுவதையும், மேற்கூறப்பட்ட பொருட்பாடுகளுக்குத் தொடர்புடைய அல்லது துணைமையான பிற பொருட்பாடுகளையும் பொறுத்துப் பின்பற்றப்பட வேண்டிய நெறிமுறை குறித்தும், ஆளுநர் மாவட்ட மன்றங்களுக்கும் மற்றும் வட்டார மன்றங்களுக்கும் விதிகள் வகுக்கலாம்.

**8. நிலவருவாயை மதிப்பீடு செய்வதற்கும் ஈட்டுவதற்கும் வரிகளை விதிப்பதற்குமான அதிகாரங்கள்:** (1) ஒரு தன்னாட்சி வட்டாரத்திற்கான வட்டாரமன்றம் அத்தகைய வட்டாரத்திற்குள் உள்ள நிலங்கள் அனைத்தையும் பொறுத்து, ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கான மாவட்ட மன்றம் அந்த மாவட்டத்திற்குள் வட்டார மன்றங்கள், எவையேனுமிருப்பின், அவற்றின் அதிகாரத்தின் கீழுள்ள வரையிடங்களில் உள்ளவை நீங்கலாக, அந்த மாவட்டத்திற்குள் உள்ள நிலங்கள் அனைத்தையும் பொறுத்து, அந்த மாநிலத்தில் பொதுவாக நிலவருவாய் நோக்கத்திற்காக நிலங்களை மதிப்பீடு செய்வதில், பொதுவாக அசாம் மாநிலத்தில், அசாம் அரசாங்கத்தினால் அப்போதைக்குப் பின்பற்றப்பட்டு வரும் நெறிகளுக்கு இணங்கியவாறு, அத்தகைய நிலங்களைப் பொறுத்து வருவாயை மதிப்பீடு செய்வதற்கும் ஈட்டுவதற்கும் அதிகாரங்கள் உடையன ஆகும்.

(2) ஒரு தன்னாட்சி வட்டத்திற்கான வட்டார மன்றம் அத்தகைய வட்டாரத்திற்குள் உள்ள வரையிடங்களைப் பொறுத்தும் ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கான மாவட்டமன்றம் அத்தகைய மாவட்டத்திற்குள் வட்டார மன்றங்கள், எவையேனுமிருப்பின், அவற்றின் அதிகாரத்தின் கீழுள்ள வரையிடங்கள் நீங்கலாக, அந்த மாவட்டத்திற்குள் உள்ள அனைத்து வரையிடங்களைப் பொறுத்தும் நிலங்கள், கட்டிடங்கள் ஆகியவற்றின் மீதான வரிகளையும் அத்தகைய வரையிடங்களுக்குள் குடியிருப்பவர்களின் மீதான சுங்க வரிகளையும் விதிக்கவும் ஈட்டவும் அதிகாரம் உடையது ஆகும்.

(3) ஒரு தன்னாட்சி மாவட்டதிற்கான மாவட்டமன்றம், அந்த மாவட்டத்திற்குள்ளே பின்வரும் வரிகள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் விதிக்கவும் ஈட்டவும் அதிகாரம் உடையது ஆகும்; அவையாவன:

(அ) தொழில்கள், வணிகங்கள், கொள்பணிகள், வேலையமர்த்தங்கள் ஆகியவற்றின் மீதான வரி.

(ஆ) விலங்குகள், ஊர்திகள், படகுகள் ஆகியவற்றின் மீதான வரி.

(இ) ஓர் அங்காடிக்குள் பண்டங்களை விற்பனைக்காகக் கொண்டு செல்வதன் மீதான வரிகள், தோணிகளில் ஏற்றிச் செல்லப்படும் பயணிகள், பண்டங்கள் மீதான சுங்க வரிகள்; மற்றும்

(ஈ) பள்ளிகளை, மருந்தகங்களை அல்லது சாலைகளைப் பேணி வருவதற்கான வரிகள்.

(4) வட்டார மன்றம் அல்லது நேர்வுக்கேற்ப, மாவட்ட மன்றம், இந்தப் பத்தியின் (2), (3) ஆகிய உள்பத்திகளில் குறித்துரைக்கப்பட்டுள்ள வரிகள் எவற்றையும் விதித்து ஈட்டுவதற்கு வகை செய்வதற்கான ஒழுங்குறுத்தும் விதிகளை வகுக்கலாம்.

**9. கனிமங்களைக் கண்டறிவதற்கான அல்லது அவற்றைப் பிரித்தெடுப்பதற்கான உரிமங்கள் அல்லது குத்தகைகள்:** (1) தன்னாட்சி மாவட்டத்தில் உள்ள எந்தஇடத்திலும், அசாம் அரசாங்கம், அந்த மாவட்டத்தில் உள்ள மாவட்ட மன்றங்களைக் கலந்தாலோசிக்காமல் கனிமங்களைக் கண்டறிவதற்கான அல்லது அவற்றைப் பிரித்தெடுப்பதற்கான உரிமங்கள் அல்லது குத்தகைகள் அளித்தல் கூடாது.

2. ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்குள் உள்ளவரையிடம் எதிலும், கனிமங்களைக் கண்டறிவதற்காக அல்லது பிரித்தெடுப்பதற்காக, அசாம் அரசாங்கத்தினால் வழங்கப்படும் உரிமங்களிலிருந்து அல்லது குத்தகைகளிலிருந்து ஒவ்வோர் ஆண்டும் வந்தடைகின்ற உரிமத் தொகைகளில், அசாம் அரசாங்கமும் அத்தகைய மாவட்டத்தின் மாவட்ட மன்றமும் இடையே ஒப்பியவாறான பங்குரிமை அந்த மாவட்ட மன்றத்திற்கு வழங்கப்படுதல் வேண்டும்.

*(3) ஒரு மாவட்ட மன்றத்திற்கு மாற்றி வழங்கப்பட வேண்டிய அத்தகைய பங்குரிமத் தொகை பற்றிப் பூசல் எதுவும் எழுமாயின், அதுபற்றித் தீர்மானம் செய்வதற்காக அஃது ஆளுந ருக்குக் குறித்தனுப்பப்படுதல் வேண்டும். மேலும் ஆளுநரால் அவரது விவேகத்தின்படி தீர்மானிக்கப்படும் தொகை, இந்தப் பத்தியின் (2) ஆம் உள்பத்தியின்படி மாவட்ட மன்றத்திற்கு வழங்கப் பட வேண்டிய தொகையாகக் கொள்ளப்படுதல் வேண்டும்; இதில் ஆளுநரின் முடிவே அறுதியானது ஆகும்.*

***10. பழங்குடியினர் அல்லாதவர் வட்டித் தொழில் செய் வதையும், வணிகம் செய்வதையும் கட்டாள்கை செய்வதற்கான ஒழுங்குறுத்தும் விதிகளை வகுக்க மாவட்டமன்றத்திற்குள்ள அதிகாரம்.*** *(1) ஒரு தன்னாட்சி மாவட்டத்தின் மாவட்டமன்றம், அந்த மாவட்டத்தில் குடியிருக்கிற பட்டியலில் கண்ட பழங்குடி யினர் அல்லாத பிறர், அந்த மாவட்டத்திற்குள் வட்டித்தொழில் அல்லது வணிகம் செய்வதை ஒழுங்குறுத்துவதற்கும் கட்டாள்கை செய்வதற்குமான ஒழுங்குறுத்தும் விதிகளை வகுக்கலாம்.*

*2. அத்தகைய ஒழுங்குறுத்தும் விதிகள்-*

*(அ) வட்டித் தொழிலை, அதற்கென வழங்கப்பட்ட உரிமம் ஒன்றைக் கொண்டிருப்பவரைத் தவிர, பிறர் எவரும் நடத்தலாகாது என வகுத்துரைக்கலாம்;*

*(ஆ) வட்டித் தொழில் நடத்துபவர் ஒருவரால் விதிக்கப்படும் அல்லது பெறப்படும் மேல் வரைவட்டி வீதத்தினை வகுத்துரைக்கலாம்;*

*(இ) வட்டித்தொழில் நடத்துவோரால் கணக்குகளை வைத்து வரப்படுவதற்கும் மாவட்ட மன்றம் இதற்கென அமர்த்தும் அலுவலர்களால் அத்தகைய கணக்குகள் ஆய்வு செய்யப்படுவதற்கும் ஏற்பாடு செய்யலாம்;*

*(ஈ) அந்த மாவட்டத்தில் குடியிருக்கிற, பட்டியலில் கண்ட பழங்குடியினர் ஒருவராக இல்லாத எவரும், அந்த மாவட்ட மன்றத்தினால் இதற்கென வழங்கப்படும் உரிமத்தின்படி அல்லாமல், எந்தப் பண்டத்தையும் மொத்தமாகவோ சில்லரையாகவோ தொழில் செய்த லாகாது என வகுத்துரைக்கலாம்.*

வரம்புரையாக: இந்தப் பத்தியின்படி ஒழுங்குறுத்தும் விதிகள் எவையும், மாவட்ட மன்றத்தின் மொத்த உறுப்பினர்களில் நான்கில் மூன்று பங்கு உறுப்பினர்களுக்குக் குறையாத பெரும்பான்மையினரால் நிறைவேற்றப்பட்டாலன்றி, வகுக்கப்படுதல் ஆகாது.

மேலும் வரம்புரையாக: அத்தகைய ஒழுங்குறுத்தும் விதிகள் வகுக்கப்படுவதற்கு முன்பிருந்தே அந்த மாவட்டத்திற்குள் தொழில் நடத்திவருகிற வட்டித்தொழில் நடத்துவோருக்கோ வணிகருக்கோ அத்தகைய ஒழுங்குறுத்தும் விதிகளின்படி உரிமம் வழங்க மறுத்தல் ஆகாது.

**11. இந்தப்பட்டியலின்படி இயற்றப்படும் சட்டங்கள், விதிகள், ஒழுங்குறுத்தும் விதிகள் ஆகியவற்றை வெளியிடுதல்:** ஒரு மாவட்ட மன்றத்தாலோ ஒரு வட்டார மன்றத்தாலோ இந்தப் பட்டியலின்படி இயற்றப்படும் சட்டங்கள், விதிகள், ஒழுங்குறுத்தும் விதிகள் அனைத்தும், உடனடியாக மாநிலத்தின் அதிகார முறை அரசிதழில் வெளியிடப்படுதல் வேண்டும்; மேலும், அவ்வாறு வெளியிடப்படுவதன் மேல் அவை சட்டத்தின் செல்லாற்றல் உடையன ஆகும்.

**12. மாநிலத்திலுள்ள தன்னாட்சி மாவட்டங்கள், தன்னாட்சி வட்டாரங்கள் ஆகியவற்றிற்கு நாடாளுமன்றச் சட்டங்களும் மாநிலச் சட்டமன்றச் சட்டங்களும் பொருந்துறுதல்:**

இந்த அரசமைப்பில் எது எவ்வாறிருப்பினும்

(அ) எந்தப் பொருட்பாடுகளைப் பொறுத்து ஒரு மாவட்ட மன்றம் அல்லது வட்டாரமன்றம் சட்டங்களை இயற்றுவதற்குரியவை எனப் பட்டியலின் 3-ஆம் பத்தியில் குறித்துரைக்கப்பட்டுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த, மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதுவும், காய்ச்சி வடிக்கப்படாத வெறியம் கலந்த மதுக்குடிவகை எதனையும் உட்கொள்ளுவதைத் தடைசெய்கிற அல்லது கட்டுப்படுத்துகிற மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதுவும், அத்தகைய மாவட்டத்திற்கான அல்லது அத்தகைய வட்டாரத்தின் மீது அதிகார வரம்பு கொண்டுள்ள மாவட்ட மன்றம், பொது அறிவிக்கை வாயிலாக

இரு நேர்வுகள் எதிலும், அவ்வாறு பணித்தாலன்றி, அந்த மாநிலத்திற்குள் உள்ள தன்னாட்சி மாவட்டம் அல்லது தன்னாட்சி வட்டாரம் எதற்கும் பொருந்துறு தல் ஆகாது; மேலும், அந்த மாவட்ட மன்றம் அத்தகைய சட்டம் எதனையும் பொருத்து அவ்வாறு பணிக்கும் போது, அந்தச் சட்டத்தினை அத்தகைய மாவட்டத் திற்கோ வட்டாரத்திற்கோ அவற்றின் பகுதி எதற்குமோ பொருந்துறச் செய்கையில் அந்த மாவட்ட மன்றம் தக்கதெனக் கருதுகிற விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அது செல்திறம் பெறும் எனப் பணிக்கலாம்.

(ஆ) ஆளுநர், பொது அறிவிக்கையின் வாயிலாக, இந்தப் பத்தி (அ) கூறின் வகையங்கள் பொருந்துறாத நாடாளு மன்றச் சட்டம் எதுவும் அல்லது மாநிலச் சட்ட மன்றச் சட்டம் எதுவும், அந்த மாநிலத்தில் உள்ள தன்னாட்சி மாவட்டத்திற்கு அல்லது தன்னாட்சி வட் டாரத்திற்குப் பொருந்துறாது என்றோ அல்லது அந்த அறிவிக்கையில் அவர் குறித்துரைக்கும் விதிவிலக்கு களுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அந்த மாவட்டத்தின் மாவட்டமன்றம் அல்லது அந்த வட் டாரத்தின் வட்டாரமன்றம் ஒப்புதலோடு, நேர்வுக் கேற்ப அந்த மாவட்டமன்றம் அல்லது வட்டாரமன்றத் தில் வழிமுறைகளின் தீர்மானம் சிபாரிசு செய்யப் பட்டால் அத்தகைய மாவட்டம் அல்லது வட்டாரம் அல்லது அதன்பகுதி எதற்கும் பொருந்துறும் என்றோ பணிக்கலாம்.

*13.* **தன்னாட்சி மாவட்டங்களைச் சார்ந்த மதிப்பீட்டு வரவு செலவினம் ஆண்டு நிதிநிலை அறிக்கையில் தனித்தனியாகக் காட்டப்படுதல் வேண்டும்:** இந்த அரசமைப்பு உறுப்பு 177ன்கீழ், ஒரு தன்னாட்சி மாவட்டத்தைச் சார்ந்ததாகவும் அசாம் மாநிலத் தின் வருவாயிலிருந்து செலுத்தப்பட அல்லது செய்யப்பட வேண் டியதாகவும் உள்ள மதிப்பீட்டு வரவு செலவினம் மாநிலச் சட்ட மன்றத்தின் முன்பு வைக்கப்பட வேண்டிய மாநில ஆண்டு நிதி நிலை அறிக்கையில் தனித்தனியாகக் காட்டப்படுதல் வேண்டும்.

**14. தன்னாட்சி மாவட்டங்களின் நிருவாகம் பற்றி விசாரணை செய்யவும், அறிக்கை அளிக்கவும் ஆணையத்தை அமர்த்துதல்:** (1) அசாம் ஆளுநர், எச்சமயத்திலும், மாநிலத்திலுள்ள தன்னாட்சி மாவட்டங்கள், நிருவாகம் தொடர்பாக விசாரணை செய்து அறிக்கை அளிப்பதற்கென ஓர் ஆணையத்தை அமர்த்தலாம் அல்லது பொதுவியலாக அந்த மாநிலத்தில் உள்ள தன்னாட்சி மாவட்டங்கள் நிருவாகம் பற்றியும், குறிப்பாக -

(அ) அத்தகைய மாவட்டங்களில் கல்வி, மருத்துவ வசதிகளுக்கும், செய்தித் தொடர்புகளுக்கும் செய்யப்படும் ஏற்பாடு;

(ஆ) அத்தகைய மாவட்டங்களைப் பொருத்து புதிய அல்லது தனியுறு சட்டம் எதற்குமான தேவைப்பாடு;

(இ) மாவட்ட மற்றும் வட்டார மன்றங்களால் இயற்றப் பட்ட சட்டங்கள், விதிகள், ஒழுங்குறுத்தும் விதிகள் ஆகியவற்றின் நிருவாகம்.

இவற்றைப் பற்றியும் விசாரணை செய்யவும் அவ்வப்போது அறிக்கை அளிக்கவும் ஓர் ஆணையத்தை அமர்த்தலாம்; மேலும், அத்தகைய ஆணையத்தால் பின்பற்றவேண்டிய நெறிமுறையை வரையறை செய்யலாம்.

(2) அத்தகைய ஒவ்வோர் ஆணையத்தின் அறிக்கையும், அதனைப் பொறுத்த ஆளுநரின் பரிந்துரைகளுடன், அசாம் அரசாங்கம் அதன் மீது மேற்கொள்ளவிருக்கும் நடவடிக்கை பற்றிய விளக்கக் குறிப்புரையுடன், உரிய அமைச்சரால் மாநிலச் சட்ட மன்றத்தின் முன்பு வைக்கப்படுதல் வேண்டும்.

(3) அசாம் ஆளுநர், தம் அமைச்சர்களுக்கிடையே மாநில அரசாங்கத்தின் அலுவல்களைப் பகிர்ந்தொதுக்குகையில், தம்முடைய அமைச்சர்களில் ஒருவரை, அந்த மாநிலத்தில் உள்ள தன்னாட்சி மாவட்டங்கள் நலப்பாட்டிற்குத் தனியுறு பொறுப்பு வகிப்பவராக அமர்த்தலாம்.

**15. மாவட்ட மற்றும் வட்டார மன்றங்களின் செயல்களையும் தீர்மானங்களையும் அழித்தறவு செய்தல் அல்லது தற்காலிகமாக நிறுத்தி வைத்தல்:** (1) ஆளுநர், எச்சமயத்திலேனும், ஒரு

*மாவட்ட அல்லது ஒரு வட்டார மன்றத்தின் ஒரு செயலோ தீர்மானமோ இந்தியாவின் பாதுகாப்பிற்கு ஆபத்து விளைவிக்கக்கூடும் என்று தெளிவுறக் காண்பாராயின், அத்தகைய செயலை அல்லது தீர்மானத்தை அவர் அழித்தறவு செய்யலாம் அல்லது தற்காலிகமாக நிறுத்தி வைக்கலாம்; மேலும், அத்தகைய செயல் செய்யப்படுவதையோ தொடர்ந்து செய்யப்படுவதையோ அத்தகைய தீர்மானத்தைச் செல்திறப்படுத்துவதையோ தடையுறுத்துவதற்கு (மன்றம் தற்காலிகமாக நிறுத்தி வைப்பதும், அந்த மன்றத்திடம் உற்றமைந்திருக்கும் அல்லது அதனால் செலுத்தப்படுவதாகும். அதிகாரங்கள் அனைத்தையும் அல்லது அவற்றில் எதனையும் தாமே மேற்கொள்ளுவதும் உள்ளடங்கலாக தாம் தேவையெனக் கருதுகிற நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம்.*

*(2) இந்தப் பத்தியின் (1) ஆம் உள்பத்தியின்படி ஆளுநரால் இடப்பட்ட ஆணை எதுவும், அதற்கான காரணங்களுடன், இயன்ற அளவு விரைவில், மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு வைக்கப்படுதல் வேண்டும்; மேலும், அந்த ஆணை, மாநிலத்தின் சட்டமன்றத்தால் ரத்து செய்யப்பட்டாலன்றி, அந்த ஆணை இடப்பட்ட தேதியிலிருந்து பன்னிரண்டு மாதக் கால அளவுக்குத் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவரும்.*

*வரம்புரையாக: அத்தகைய ஆணை தொடர்ந்து செல்லாற்றலில் இருப்பதற்கு ஒப்பேற்பளிக்கும் ஒரு தீர்மானம், மாநிலச் சட்டமன்றத்தினால் நிறைவேற்றப்பட்டாலும், நிறைவேற்றப்படுந்தோறும், அந்த ஆணை ஆளுநரால் நீக்கறவு செய்யப்பட்டாலன்றி, இந்தப் பத்தியின்படி அது பிறவாறு செயற்படுவது அற்றுப் போயிருக்கும் தேதியிலிருந்து மேலும் பன்னிரண்டு மாத கால அளவுக்குத் தொடர்ந்து செல்லாற்றலில் இருந்துவரும்.*

*3. இந்தப் பத்தியின்கீழ் ஆளுநருடைய செயல்கள் அவர் விருப்பத்தின்படி செயல்படுத்தப்படும்.*

***16. ஒரு மாவட்ட அல்லது வட்டாரமன்றத்தைக் கலைத்தல்:*** *இந்தப் பட்டியலின் 14 ஆம் பத்தியின்படி அமர்த்தப்பட்ட ஓர் ஆணையத்தின் பரிந்துரையின் மீது, ஆளுநர், பொது அறிவிக்கை வாயிலாக, ஒரு மாவட்ட அல்லது வட்டார மன்றத்தைக் கலைப்பதற்கு ஆணையிடலாம்; மேலும் -*

(அ) மன்றத்தின் மறு அமைப்புக்காகப் புதியதொரு பொதுத் தேர்தல் உடனடியாக நடத்தப்படுதல் வேண்டும் என்று பணிக்கலாம். அல்லது

(ஆ) மாநிலச் சட்டமன்றத்தின் முன் ஒப்பேற்புக்கு உட்பட்டு, அந்த மன்றத்தின் அதிகாரத்தின் கீழுள்ள வரையிடத்தின் நிருவாகத்தைத் தாமே மேற்கொள்ளலாம்; அல்லது பன்னிரண்டு மாதங்களுக்கு மேற்படாத ஒரு கால அளவுக்கு, அத்தகைய வரையிடத்தின் நிருவாகத்தை, மேற் சொன்ன பத்தியின்கீழ் அமர்த்தப்பட்டுள்ள ஆணையத்தின் கீழோ தம்மால் தக்கதெனக் கருதப்படும் பிற குழுமம் எதன் கீழுமோ விட்டுவைக்கலாம்.

வரம்புரையாக: இந்தப் பத்தியின் (அ) கூறின்படி ஓர் ஆணை பிறப்பிக்கப்பட்டிருக்கும்போது, ஆளுநர், புதியதொரு பொதுத் தேர்தல் வாயிலாக அந்த மன்றத்தை மறு அமைப்புச் செய்யும் வகையில், தொடர்புள்ள வரையிடத்தின் நிருவாகம் பொறுத்து, இந்தப் பத்தியின் (ஆ) கூறில் சுட்டப்பட்ட நடவடிக்கையை மேற்கொள்ளலாம்.

மேலும் வரம்புரையாக: மாநிலச் சட்டமன்றத்தின் முன்பு தம் கருத்துக்களைத் தெரிவிப்பதற்கு, மாவட்ட மன்றத்திற்கு அல்லது, நேர்வுக்கேற்ப, வட்டார மன்றத்திற்கு ஒரு வாய்ப்பளிக்காமல், இந்தப் பத்தியின் (ஆ) கூறின்படி நடவடிக்கை எதுவும் மேற்கொள்ளப் படுதல் ஆகாது.

**17. பத்தி 19ன்படி பகுதி IIல் சேர்க்கப்பட்டுள்ள அட்டவணையிலுள்ள பட்டியல் வரையிடங்களுக்குப் பொருந்துறுவதான வகையங்கள்:** (1) அசாம் ஆளுநர் -

(அ) குடியரசுத் தலைவர் முன் ஒப்புதல் பெற்றலான்றிப் பொது அறிவிப்பின்படி இந்தப் பட்டியலில் முன் கூறிய வகையம் எல்லாம் அல்லது ஏதாவது இந்தப் பட்டியல் பத்தி 19 பகுதி IIல் சேர்க்கப்பட்டுள்ள அட்டவணையின்படி ஏதாவது பழங்குடியினர் வரையிடங்களுக்குப் பொருந்துறும் அல்லது அந்த வரையிடங்களின் ஏதாவது ~ரு பாகம் வகையங்களில் கூறப் பட்டுள்ளது போல நிரு வகிக்கப்படும்.

(ஆ) பகுதி-II அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள பழங்குடியினர் வரையிடங்கள் அல்லது ஏதாவது ஒரு பாகத்தை ஏற்புதலுடன் அட்டவணையிலிருந்து நீக்கலாம்.

2. இந்த அரசமைப்புப் பகுதி VIIIல் உள்ள வகையங்களின் படி, இந்தப் பத்தி உள்பத்தி (1) ன் கீழ்ப்பொது அறிவிப்பு வெளியிட்ட பின், பகுதி -IIல் குறிப்பிடப்பட்டுள்ள அட்டவணையிலுள்ள பழங்குடியினர் வரையிடங்கள் அல்லது அதன் பாகங்களைக் குடியரசுத் தலைவர் அசாம் ஆளுநர் மூலமாக நிருவகிக்கலாம். முதல் பட்டியல் பகுதி-IVல் குறிப்பிடப்பட்டுள்ள நிலப்பரப்பு அல்லது அதன் பாகங்களுக்கும் இது பொருந்துறும்.

**18. மாறும் இடைக்காலத்திற்கான வகையங்கள்:** இந்த அரசமைப்பின் தொடக்க நிலைக்குப் பின்பு, அசாம் ஆளுநர், கூடிய விரைவில், மாநிலத்தில் உள்ள ஒவ்வொரு தன்னாட்சி மாவட்டத்திற்கும் ஒரு மாவட்ட மன்றத்தை இந்தப் பட்டியலின்படி அமைப்பதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல் வேண்டும்; மேலும், ஒரு தன்னாட்சி மாவட்டத்திற்கு, மாவட்ட மன்றம் அமைக்கப்படுகிற வரையில், அத்தகைய மாவட்டத்தின் நிர்வாகம் ஆளுநரிடம் உற்றமையும். அவர் விருப்பப்படி, இந்தப் பட்டியலின் மேலே கண்ட வகையங்களுக்கு மாற்றாகப் பின்வரும் வகையகங்கள் அத்தகைய மாவட்டத்தில் உள்ள வரையிடங்களின் நிருவாகத்திற்குப் பொருந்துறும்.

(அ) ஆளுநர், பொது அறிவிக்கை வாயிலாகப் பணித்தாலன்றி, நாடாளுமன்றச் சட்டம் அல்லது மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதுவும், அத்தகைய வரையிடம் எதற்கும் பொருந்துறுதல் ஆகாது; ஆளுநர், சட்டம் எதனையும் பொறுத்து அவ்வாறு பணிப்புரை இடும்போது அத்தகைய வரையிடத்திற்கு அல்லது குறித்த பகுதி எதற்கும் அந்தச் சட்டத்தைப் பொருந்துறச் செய்கையில், அவர் தாம் கருதுகிற விதிவிலக்குகளுக்கு அல்லது மாற்றமைவுகளுக்கு உட்பட்டு, அது செல்திறம் பெறும் எனப் பணிக்கலாம்.

(ஆ) அத்தகைய, வரையிடம் அதன் அமைதிக்காகவும் நல்லாட்சிக்காகவும் ஆளுநர் ஒழுங்குறுத்தும் விதிகளைச் செய்யலாம்; மேலும், அவ்வாறு வகுக்கப்பட்ட ஒழுங்குறுத்தும் விதிகள் எவையும், அத்தகைய வரையிடத்திற்கு

அப்போதைக்குப் பொருந்துறுவதான நாடாளுமன்றச் சட்டம் அல்லது மாநிலச் சட்டமன்றச் சட்டம் எதனையும் அல்லது நிலவுறும் சட்டம் எதனையும் நீக்கறவு செய்யலாம்; அல்லது திருத்தம் செய்யலாம். இந்த உறுப் பின்கீழ்க் கொண்டு வரப்படும் ஒழுங்குறுத்தும் விதிகள் குடியரசுத் தலைவர் ஏற்பிற்காகச் சமர்ப்பிக்கப்படுதல் வேண்டும். அப்படி ஏற்காத வரை செல்திறம் கிடையாது.

(இ) இந்தப் பத்தி உறுப்பு (அ) மற்றும் (ஆ)ன்படி ஆளுநர் தம் விருப்பப்படி அவருடைய செயற்பாடுகளை மேற் கொள்ளலாம்.

*19. **பழங்குடியினர் வரையிடங்கள்:** கீழ்க்கண்ட அட்டவணை யிலுள்ள பகுதி I மற்றும் II ல் குறிப்பிடப்பட்டுள்ள வரையிடங்கள் அசாம் மாநிலத்தின் உள்ள பழங்குடியினர் வரையிடங்களாக இருக்கும் அட்டவணையின் எந்தச் சுட்டுகையும், எந்த மாவட்டம் அல்லது மாவட்டத்திலுள்ள நிருவாக வரையிடங்களாகக் கருதப் படும் அல்லது இந்த அரசமைப்புத் தொடக்க நிலையில் உள்ள வரையிடங்களாகக் கருதப்படும்.*

## அட்டவணை

## பகுதி I

1. ஷில்லாங் நகர் தவிரக் காஸி மற்றும் ஜைந்தியா குன்றுகள் மாவட்டம்.
2. காரோ குன்றுகள் மாவட்டம்.
3. லுஷாய் குன்றுகள் மாவட்டம்.
4. நாகா குன்றுகள் மாவட்டம்.
5. கச்சார் மாவட்டத்தின் உட்பிரிவான வடக்குக் கச்சார்.
6. பரத்பூரில் உள்ள மொசாஸ் மற்றும் சருபத்தூர் தவிர, நௌகாங் மிகிர் குன்றுப் பகுதிகள் மற்றும் சிபாசாகர் மாவட்டங்கள்.

## பகுதி II

1. சாதியா மற்றும் பலிபாரா எல்லை நிலப்பரப்புகள்.
2. (லக்ஷிம்பூர் எல்லை நிலப்பரப்பு நீங்கலாக) திராப் எல்லை நிலப்பரப்புகள்.
3. நாகா மலைவாழ் மக்கள் பகுதிகள்.

# ஏழாவது பட்டியல்

(உறுப்பு 217)

## வரிசைப் பட்டியல் - I - ஒன்றியத்து வரிசைப் பட்டியல்

[1]1. இந்தியாவிற்கும் அதன் ஒவ்வொரு பகுதிக்குமான பாதுகாப்புப்படை, பாதுகாப்பிற்கான முன்னேற்பாடும், போர்க்காலங்களில் போரை நடத்துவதற்கும் போர் முடிவுற்ற பின்பு திறமான படைக்கலைப்பிற்கும் உதவுகின்ற செயல்கள் அனைத்தும் உள்ளடங்கலாக.

2. வேவுச் செய்தி மையத் துறையகம்.

3. இந்தியாவின் [2]பாதுகாப்புப் படை, வெளிநாட்டு விவகாரம் அல்லது இந்தியாவின் பாதுகாப்பிற்காக இந்திய நிலவரையில் தடுப்புக் காவல்.

[3]4. ஒன்றியத்தின் கடல், தரை மற்றும் வான் படைகளை அமைத்துப் பயிற்சி அளித்துப் பராமரித்துக் கட்டாள்கையில் வைத்தல் மற்றும் முதல் பட்டியல் பகுதி III-ல் குறிப்பிட்டுள்ளது போல மாநிலத்தில் ஆயுதப் படைகளை அமைத்துக் கட்டாள்கை செய்தல்.

5. நாட்டின் பாதுகாப்புக்கு அல்லது போர் நடத்துவதற்குத் தேவையானவை என நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்பும் தொழில்கள்.

---

1. 'இராணுவ நடவடிக்கைப் பயிற்சி உள்ளடங்கலான பாதுகாப்பிற்காக அதிகாரத்துடன் நிலங்களை எடுத்துக் கொள்ளுதல்' என்பது, 43-ல் பதிவு பெற்றுள்ளதால் அதனை இக்குழு நீக்கிவிட்டது.
2. மாநிலப் பட்டியல் ஒன்றில் பதியப்பட்ட பொது அமைதி பராமரிப்பதற்காகத் தடுப்புக் காவலில் வைத்தலில் பிணக்கு ஏற்படாதவாறு 'மாநிலத்தின் காரணங்கள்' என்பதற்குப் பதில் 'பாதுகாப்புப் படை அயல்நாட்டு விவகாரம் அல்லது இந்தியாவின் பாதுகாப்பு என்ற காரணங்களுக்கான' வார்த்தைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன.
3. அரசியல் நிர்ணய சபை ஏற்றுக் கொண்டதைத் தொடர்ந்து பின்வருபவை, ஆனால் முதல் பட்டியல் பகுதி IIIல் இரண்டாம் பாகத்தில், மாநிலத்தில் அவர்களுக்கென ஆயுதப்படை. பராமரிப்பதைத் தடுப்பதற்காக ஆயுதப்படை என்றுள்ள பதிவை நீக்க வேண்டுமென வரைவுக் குழுத் தலைவர் நினைக்கிறார்.

6. கடல், தரை மற்றும் வான் படைகள் தொடர்பான பணி மங்கள்.

7. பாளைய வரையிடங்களில் உள்வரைத் தன்னாட்சியையும் அத்தகைய வரையிடங்களுக்குள்ளே பாளைய அதிகார அமைப்பு களையும் அமைத்தல்; அவற்றின் அதிகாரங்கள்; மற்றும் அத்தகைய வரையிடங்களில் வீட்டு வசதியினை ஒழுங்குறுத்தல்.

8. ஆயுதங்கள், சுடு கருவிகள், படைத் தளவாடங்கள் மற்றும் வெடிப் பொருட்கள்.

9. அணுவாற்றல் மற்றும் அதனை உண்டாக்குவதற்குத் தேவை யான கனிம வள ஆதாரங்கள்.

10. அயல்நாட்டு அலுவற்பாடுகள்; அயல்நாடு எதனுடனும் ஒன்றியத்தைத் தொடர்புறுத்தும் பொருட்பாடுகள் அனைத்தும்.

11. அரசுத் தூதகக் குடிவணிக நலத் தூதக மற்றும் வணிகச் சார்பற்றம்.

12. ஐக்கிய நாடுகள் அமைவனம்.

13. பன்னாட்டிடை மாநாடுகள், கழகங்கள், பிற குழுமங்கள் ஆகியவற்றில் பங்கு கொள்ளுதல்; மேலும், அவற்றில் எடுக்கப்படும் முடிவுகளைச் செயல்முறைப் படுத்துதல்.

14. போரும் அமைதியும்.

15. அயல் நாடுகளுடன் உடன்படிக்கைகளையும் உடன்பாடு களையும் செய்து கொள்ளுதல்; அவற்றைச் செயல்முறைப்படுத் துதல்.

16. அயல்நாட்டு அதிகார வரம்பு.

17. அயல்நாடுகளுடன் வர்த்தகம் மற்றும் வாணிபம்.

18. அயல்நாட்டு பெறு கடன்கள்.

19. குடிமை, குடிமையாக்கம் மற்றும் அயலவர்கள்.

20. அயல் நாட்டிடம் ஒப்படைப்பு.

21. கடவுச்சீட்டுகள் மற்றும் அயலக நுழை இசைவு.

22. ஆழ்கடலிலோ வானிலோ இழைக்கப்படும் குற்றங்கள்; நாட்டிடைச் சட்டத்திற்கு எதிராக ஆழ்கடலிலோ வானிலோ இழைக்கப்படும் குற்றச் செயல்கள்.

23. இந்தியாவிற்குள் வர அனுமதித்தல், இந்தியாவிலிருந்து குடிபெயர்தல் மற்றும் வெளியேற்றுதல்.

24. இந்தியாவிற்கு அப்பாலுள்ள இடங்களுக்கு மேற்கொள்ளும் புனிதப் பயணங்கள்.

25. துறைமுகத்தில் தொற்றுநோய்த் தடை ஒதுக்கம்; அதன் தொடர்பான மருத்துவமனைகள்; கடலோடிகள்; கடல் துறை மருத்துவ மனைகள்.

26. இந்திய அரசாங்கத்தால் வரையறுக்கப்பட்ட சுங்க எல்லை கடந்த இறக்குமதியும் ஏற்றுமதியும்.

[1]27. அஞ்சல் மற்றும் தந்தி.

[2]28. தொலைபேசிகள், கம்பியில்லாத் தந்தி, ஒலிபரப்பு மற்றும் இவை போன்ற பிற செய்தித் தொடர்பகங்கள்.

29. அஞ்சலகச் சேமிப்பு வங்கி.

---

1. தற்சமயம் முதல் பட்டியல் பகுதி III-ல் குறிப்பிட்டுள்ளது போல, மாநிலங்களில் 'அஞ்சல் மற்றும் தந்தி'த் தொடர்பாக நாடாளுமன்றம் சட்டம் இயற்றும் அதிகாரத்தைக் கட்டுப்படுத்துவதற்காக உறுப்பு 224 (அ) காண்க.

2. தற்சமயம் முதல் பட்டியல் பகுதி III-ல் குறிப்பிட்டுள்ளது போல, மாநிலங்களில் 'தொலைபேசிகள், கம்பியில்லாத் தந்தி, ஒலிபரப்பு மற்றும் இவை போன்ற பிற செய்தித் தொடர்புகள் தொடர்பாக நாடாளுமன்றம் சட்டம் இயற்றும் அதிகாரத்தைக் கட்டுப்படுத்துவதற்காக உறுப்பு 224 (ஆ) காண்க.

30. வானூர்தியங்கள், வான்கலம் மற்றும் வான்வழிச் செலுத்தம்; வானூர்தி நிலையங்கள் அமைத்தல்; வான்வழிப் போக்கு வரத்தையும், வானூர்தி நிலையங்களையும் ஒழுங்குறுத்துதலும் சீரமைத்தலும்; வானூர்தியியல் கல்விக்கும் பயிற்சிக்கும் ஏற்பாடு செய்தல் மற்றும் மாநிலங்களும் பிற முகவர் நிலைகளும் அளிக்கும் அத்தகைய கல்வியையும் பயிற்சியையும் ஒழுங்குறுத்தல்.

31. நாடாளுமன்றத்தின் சட்டத்தினால் விளம்பப்படும் தேசிய நெடுஞ்சாலைகள்.

32. எந்திரத்தால் உந்தப்படும் கலங்கள் தொடர்பாக நாடாளு மன்றம் சட்டத்தினால் தேசிய நீர்வழிகள் என விளம்பும் உள்நாட்டு நீர்வழிகளில் கப்பல் போக்குவரத்தும் கப்பல் செலுத்தமும்; அத்தகைய நீர்வழித் தட விதிகள், அத்தகைய நீர் வழிகளின் மூலம் பயணிகள் மற்றும் பொருள்களைக் கொண்டு செல்லுதல்.

33. ஏற்றவிறக்க அலைகடல் நீர் மீதான கப்பல் போக்கு வரத்தும் கப்பல் செலுத்தமும் உள்ளடங்கலாகக் கடல்வழிக் கப்பல் போக்குவரத்தும் கப்பல் செலுத்தமும்; வாணிகக் கப்பல் மாலுமி களுக்கான கல்விக்கும் பயிற்சிக்கும் ஏற்பாடு செய்தல்; மற்றும் மாநிலங்களும் பிற முகவர் நிலைகளும் அளிக்கும் அத்தகைய கல்வியையும் பயிற்சியையும் ஒழுங்குறுத்துதல்.

34. கப்பல் படை தலைமை உத்தியோக நியாய ஆதிக்கம்.

35. நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தாலோ அதன் வழி யாலோ அல்லது நிலவுறும் சட்டத்தாலோ பெருந்துறைமுகங்கள் என விளம்பப்பட்ட துறைமுகங்கள், அவற்றின் எல்லைகளை வரை யறுத்தல் உள்ளடங்கலாக; அவற்றில் துறைமுக அதிகார அமைப்பு களை அமைத்தலும் அவற்றின் அதிகாரங்களும்.

36. விளக்குக் கப்பல்கள் உள்ளடங்கலாகக் கலங்கரை விளக் கங்கள், வழிகாட்டும் அவிரொளிகள்; மற்றும் கப்பல் போக்குவரத்து, வானூர்திகள் ஆகியவற்றின் பாதுகாப்பிற்கான பிறவகை ஏற்பாடுகள்.

37. பயணிகளையும் பண்டங்களையும் வான்வழியாகவோ அல்லது கடல் வழியாகவோ ஏற்றிச் செல்லுதல்.

38. ஒன்றிய இருப்பூர்தியம்; சிறிய இருப்பூர்தியம் தவிர எல்லா இருப்பூர்தியத்தின் பாதுகாப்பு, குறைந்த அதிகபட்ச கட்டணங்கள் மற்றும் வண்டிக்கூலிகள், இருப்பூர்தி நிலையம் மற்றும் சேவைக் கட்டணங்கள், பயணிகள் பண்டங்களைக் கொண்டு செல்லுதல் மற்றும் போக்குவரத்து மாற்றங்களுக்கான இருப்பூர்தியத்தின் நிர்வாக உத்திரவாதம், சிறிய இருப்பூர்தியங்களைப் பொறுத்தவரை பாதுகாப்பு, பயணிகள் பொருள்கள் கொண்டு செல்லுவதற்கான இருப்பூர்திய நிர்வாகத்திற்கான நிர்வாகத்தினை ஒழுங்குறுத்துதல்.

39. 1947 ஆகஸ்டு 15 தொடக்க நிலையின்போது, பேரரசு நூலகம், இந்திய அருங்காட்சியகம், பேரரசு போர் நினைவகம், விக்டோரியா நினைவகம் மற்றும் இவை போன்று, இந்திய அரசாங்கத்தினால் முழுவதுமாகவோ பகுதியாகவோ நிதி உதவியளிக்கப் பட்டுத் தேசிய முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நிறுவனம் என நாடாளு மன்றம் சட்டத்தினால் விளம்பும் பிற நிறுவனம் எதுவும்.

40. 1947 ஆகஸ்டு 15 தொடக்க நிலையின்போது, காசி இந்துப் பல்கலைக்கழகம் மற்றும் அலிகார் முஸ்லீம் பல்கலைக்கழகம் என வழங்கப்பட்ட நிறுவனங்கள்.

41. இந்திய நில அளவைத்துறை மற்றும் புவியமைப்பியல், தாவர இயல், விலங்கியல் ஆகியவற்றிற்கான இந்திய அளவைத் துறைகள்; ஒன்றிய வானிலை ஆராய்ச்சி அமைப்புக்கள்.

42. ஒன்றியத்தின் சொத்தும் அதிலிருந்து கிடைக்கும் வருவாயும் - ஆனால் ஒரு மாநிலத்தில் அமைந்துள்ள சொத்தினைப் பொறுத்தவரை, நாடாளுமன்றம் சட்டத்தினால் பிறவாறு வகை செய்திருந்தாலன்றி, அந்த மாநிலச் சட்டங்களுக்கு உட்பட்டது ஆகும்.

[1]**43. வரிசைப்பட்டி IIIல் உள்ள வகையங்களுக்கு உட்பட்டு ஒன்றியத்திற்காகச் சொத்துக்கள் சம்பாதித்தல் அல்லது எடுத்துச் கொள்ளுதல், அதற்கான இழப்பீடு நிர்ணயிக்கும்** கொள்கைகள் ஒழுங்குறுத்துதலைப் பொறுத்தது.

---

1. சொத்துக்களைச் சம்பாதித்தல் அல்லது எடுத்துக் கொள்ளுதல் அதற்கான இழப்பீடு கொடுப்பது பற்றிய கொள்கை ஒருங்கியல் பட்டியலின் பொருளாக இருக்க வேண்டுமென்று குழு நினைக்கின்றது. இதற்காக ஒருங்கியல் பட்டியலில் இந்தப் பதிவு மாற்றப்பட்டுப் புதிய பதிவு 35 சேர்க்கப்பட்டுள்ளது.

44. இந்திய ரிசர்வ் வங்கி.

45. ஒன்றியத்தின் பொதுக் கடன்.

46. பணச் செலாவணி, அயல்நாட்டுச் செலாவணி மாற்று வீதம், நாணயமடித்தல் மற்றும் சட்டமுறையான செலாவணி.

47. வங்கித் தொழில்.

48. காசோலைகள், மாற்றுச் சீட்டுகள், கடனுறுதிச் சீட்டுகள் மற்றும் இவையன்ன பிற முறையாவணங்கள்.

49. காப்பீடு.

[1]50. கூட்டுருமங்கள் என்பது, கூட்டுறவுச் சங்கங்கள் நீங்கலாக, வங்கித் தொழில், காப்பீடு மற்றும் நிதியியல் கூட்டுருமங்கள் உள்ளடங்கலாக, வணிகக் கூட்டுருமங்களைக் கூட்டுருமமாகப் பதிவு செய்தல், ஒழுங்குறுத்துதல் மற்றும் முடிவுறுத்துதல். பல்கலைக் கழகங்கள் நீங்கலாக, ஒரு மாநிலத்திற்கு மட்டுமே இல்லாத குறிக்கோள்களைக் கொண்ட கூட்டுருமங்கள் - அவை வணிகம் செய்வன வாயினும் அல்லனவாயினும்; அவற்றைக் கூட்டுருமமாகப் பதிவு செய்தல், ஒழுங்குறுத்துதல் மற்றும் முடிவுறுத்துதல்.

51. புதுப்புனைவு, பதிப்புரிமை, புதுக் கண்டுபிடிப்புகள், வடிவமைப்புகள், வணிகக் குறிகள் மற்றும் வணிகப் பண்டக் குறிகள்.

[2]52. உச்சநீதிமன்றத்தின் அமைப்பு, செயலமைப்பு, அதிகார வரம்பு மற்றும் அங்குப் பெறப்படும் கட்டணங்கள்.

---

1. தற்சமயம், முதல் பட்டியல் பகுதி III-ல் குறிப்பிட்டுள்ளது போல, மாநிலங்களைப் பொறுத்தவரைக் 'கூட்டுருமங்கள்' சம்பந்தமாக நாடாளுமன்றம் சட்டம் இயற்றும் அதிகாரத்தைக் குறைப்பதற்காகும், உறுப்பு 224 (இ) காண்க.

2. ஒன்றியத்தில் இணையான நீதிபதிகள் இருக்கக்கூடாதென்பதற்காகக் கூட்டாட்சி நீதிபதிகளுக்கான குறிப்பு நீக்கப்பட வேண்டுமெனக் குழு நினைக்கின்றது. இருந்தபோதிலும் குழு 219 என்ற புதிய உறுப்பைச் சேர்த்துள்ளது. இதன்படி ஒன்றியத்திலுள்ள பொருள் மற்றும் நாடாளுமன்றத்தினால் இயற்றப்பட்ட சட்டங்களை நல்ல முறையில் நிர்வகிப்பதற்காக நாடாளுமன்றத்திற்குக் கூடுதலான நீதிமன்றங்களை நியமிக்க அதிகாரம் அளித்துள்ளது. இச்செயல், 1867 பிரிட்டிஷ், வடக்கு அமெரிக்கச் சட்டத்தில் பகுதி 101ல் உள்ளது போலாகும்.

53. இந்திய நிலவரைக்குள் ஏதாவது ஒரு மாநிலத்தில் ஓர் உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்பை அளாவச் செய்வதும், முதல் பட்டியல் பகுதி III-ல் குறிப்பிடப்பட்டுள்ள மாநிலங்கள் தவிர, அந்த மாநிலத்தின் எல்லைக்கு அப்பால் ஓர் உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்பை விலக்குவதும்.

54. இந்தப் பட்டியலில் உள்ள எந்தப் பொருள் பற்றியும், உச்சநீதிமன்றம் தவிர, அனைத்து நீதிமன்றங்களின் அதிகாரங்களும் மற்றும் அதிகார வரம்பும்.

55. மக்கள் கணக்கெடுப்பு.

56. ஒன்றியத்தின் நோக்கத்திற்கான விசாரணைகள், அளவை ஆய்வுகள் மற்றும் புள்ளிவிவரங்கள்.

57. ஆராய்ச்சி, தொழில் அல்லது தொழில்நுட்பத்தில் பயிற்சி, சிறப்புக் கல்விப் பயில்வுகளின் வளர்பாடு இவற்றிற்கான ஒன்றியத்து முகமைகளும், நிறுவனங்களும்.

58. ஒன்றியத்து அரசுப் பணியங்கள் மற்றும் ஒன்றியத்து அரசுப் பணியாளர் தேர்வாணையம்.

59. ஒன்றியத்தின் கீழ்ப் பணிபுரிவோர் தொடர்பான தொழில் துறைப் பூசல்கள்.

[1]60. **தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவையென நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்தால் விளம்பப்படும் தொன்மையும் வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்த** நினைவுச் சின்னங்களும் மற்றும் தொல்பொருளாய்விடங்களும், தொல்பொருள் சிதைவுகளும்.

61. நிறுத்தலளவை மற்றும் அளவுகோல் பற்றிய திட்டத்தினை ஆரம்பித்தல்.

62. அபினி பற்றிய சாகுபடி செய்தல் மற்றும் உற்பத்தி செய்தல் அல்லது ஏற்றுமதிக்கான விற்பனை.

1. இந்தப் பதிவில் நாடாளுமன்றம் சட்டத்தின் மூலமாகத் தொன்மையும் வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்தவை என அறிவிக்க வேண்டுமென்று குழு நினைக்கின்றது. மற்ற ஒவ்வொன்றும் தொன்மையும் வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்தவையெனக் கருத முடியாது.

63. தீப்பற்றும் அபாயம் கொண்டவையென நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்பும் பெட்ரோலியம், பிற நீர்மங்கள் மற்றும் பொருள்களையும் வைத்திருத்தல் மற்றும் கொண்டு செல்லுதல்.

64. தொழில்துறைகள் முன்னேற்றம், அதாவது அந்த முன்னேற்றம் ஒன்றியத்தின் கட்டாள்கையிலிருப்பது பொதுநலனுக்கு உகந்ததென நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்புபவை.

65. சுரங்கம் மற்றும் எண்ணெ வயல்களில் தொழிலாளர் பாதுகாப்பினை ஒழுங்குறுத்துதல்.

66. சுரங்கங்களை ஒழுங்குறுத்துவதும் கனிமத்தை மேம் படுத்துவதும் ஒன்றியத்தின் கட்டாள்கையில் இருப்பது பொதுநல னுக்கு உகந்ததென நாடாளுமன்றம் சட்டத்தினால் விளம்புகின்ற அளவுக்கு, அவற்றை ஒழுங்குறுத்துதலும், மேம்படுத்தலும்.

67. தற்சமயம், முதல் பட்டியல் பகுதி I அல்லது பகுதி II-ல் குறிப்பிட்டுள்ளது போல, மாநிலம் எதனையும் சேர்ந்த, காவற்படை உறுப்பினர்களின் அதிகாரங்களையும் அதிகார வரம்பையும், அந்த மாநிலத்திற்கு வெளியேயுள்ள வரையிடம் எதற்கும் அளாவச் செய்தல்; ஆனால், அவ்வாறு அளாவச் செய்வது, ஒரு மாநிலத்தின் காவல் துறையினர், அந்த மாநிலத்திற்கு வெளியேயுள்ள வரையிடத் தில் தம் அதிகாரத்தையும் அதிகார வரம்பையும் அந்த வரையிடம் அமைந்துள்ள மாநில அரசாங்கத்தின் இசைவின்றிச் செலுத்து வதற்கு இயல்விப்பதாகாது. மற்றும், மாநிலம் எதனையும் சேர்ந்த காவற்படை உறுப்பினர்களின் அதிகாரங்களையும் அதிகார வரம்பை யும் அந்த மாநிலத்திற்கு வெளியேயுள்ள இருப்பூர்திய வரையிடங் களுக்கு அளாவச் செய்தல்.

68. நாடாளுமன்றம், குடியரசுத் தலைவர் மற்றும் குடியரசுத் துணைத் தலைவர் பதவிகளுக்கான தேர்தல்களைத் தேர்தல் ஆணையம் கண்காணித்துத் தனது கட்டாள்கையில் நடத்த வேண்டும்.

69. குடியரசுத் தலைவர் பதவியூதியங்கள், படித்தொகைகள் மற்றும் வாராமை விடுப்புப் பொறுத்த உரிமைகள்; ஒன்றியத்து அமைச்சர்கள், மாநிலங்கள் அவைத் தலைவர், துணைத் தலைவர், மக்கள் அவையின் சபாநாயகர், துணைச் சபாநாயகர், நாடாளுமன்ற

உறுப்பினர்களின் வரைவூதியங்கள், படித்தொகைகள் மற்றும் சிறப் புரிமைகள், தலைமைத் தணிக்கையரின் வரைவூதியங்கள், படித் தொகைகள் மற்றும் பிற பணி வரைகட்டுகள்.

70. நாடாளுமன்றக் குழுக்கள் முன்னால், சாட்சியம் அளிக்கும் நபர்கள் ஆஜராகுதல் அல்லது ஆவணங்களை அளித்தலை அமுலாக் குதல்.

71. ஒரு மாநிலத்திலிருந்து மற்றொன்றிற்குக் குடிபெயர்தல்.

72. மாநிலங்களிடையே தொற்று நோய்த் தடை ஒதுக்கம்.

73. வரிசைப் பட்டி II பதிவு 33 வகையங்களுக்கு இணங்க மாநிலங் களிடையே வர்த்தகம் மற்றும் வாணிபம்.

74. வெள்ளத்தைத் தடுத்தல், நீர்ப்பாசனம், கப்பல் போக்கு வரத்து மற்றும் நீர்மின் சக்திகளுக்காக மாநிலங்களுக்கிடையே நீர் வழிகளை அபிவிருத்தி செய்தல்.

75. ஆட்சி நிலவரை சார்ந்த கடலுக்கு அப்பால் மீன் பிடித் தலும் மீன் பண்ணைகளும்.

76. ஒன்றியத்து முகவர் நிலைகளால் உப்பு விளைவிக்கப் படுதல் மற்றும் பகிர்ந்தளித்தல் ஆகியவற்றை ஒழுங்குறுத்துதலும் கட்டாள்கை செய்தலும்.

77. ஒன்றியத்தைப் பாதிக்கும் வகையில் இந்திய நிலவரையில் எந்தப் பாகத்திலும் ஆபத்தான நெருக்கடி நிலைமையை மேற்கொள் வதற்கான வகையங்கள்.

78. இந்திய அரசாங்கத்தினாலோ அல்லது எந்த மாநில அரசாங் கத்தினாலோ நடத்தப்படும் பரிசுச் சீட்டுகள்.

[1]79. பங்கு மாற்றகங்கள், எதிர்கோள் வாணிபம் மற்றும் முத்திரைத் தீர்வு அல்லாத வரிகள்

---

1. அரசமைப்பு நிதிநிலை வல்லுநர் குழுப் பரிந்துரையின் பேரில் இந்தப் பதிவு சேர்க்கப்பட்டுள்ளது.

80. மாற்றுச் சீட்டுகள், காசோலைகள், கடனுறுதிச் சீட்டுகள், கப்பல் சரக்குப் பட்டியல்கள், நாணய உறுதிக் கடிதங்கள், காப்பீட்டு ஆவணங்கள், பங்குகள் உரிமை மாற்றம், கடனீட்டு ஆவணங்கள், மாற்றாள் அமர்த்து ஆவணங்கள், வரவுச் சீட்டுகள் ஆகியவை பொறுத்த முத்திரைத் தீர்வை வீதங்கள்.

81. வேளாண் நிலம் அல்லாத பிற சொத்திற்கு வாரிசுரிமை பொறுத்த தீர்வைகள்.

82. வேளாண் நிலம் அல்லாத பிற சொத்துக்களைப் பொறுத்த பண்ணைத் தீர்வைகள்.

83. இருப்பூர்தியம், கடல் வழியாக ஏற்றிச் செல்லப்படும் சரக்குகள் அல்லது பயணிகள் மீதான சேர்முனை வரிகள்; இருப் பூர்தியப் பயணக் கட்டணங்கள்; சரக்குக் கட்டணங்கள் ஆகியவற்றின் மீதான வரிகள்.

84. வேளாண் வருமானம் அல்லாத பிற வருமானத்தின் மீதான வரிகள்.

85. ஏற்றுமதித் தீர்வை உள்ளடங்கலான சுங்கத் தீர்வைகள்.

[1]86. இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்ட அல்லது உண் டாக்கப்பட்ட புகையிலை மீதும் பிற சரக்குகளின் மீதான ஆயத் தீர்வைகள் -

(அ) மனிதர் உட்கொள்வதற்கான வெறியம் கலந்த மதுக்குடி வகைகள்.

(ஆ) அபின், இந்தியக் கஞ்சா மற்றும் பிற மயக்க மருந்துப் பொருள்களும், மயக்கப் பொருள்களும் மற்றும் மயக்க மிலா மருந்துப் பொருள்களும் நீங்கலாக;

1. இந்தப் பதிவு உற்பத்தி (ஆ) உள்ளடங்கலான மருந்து, ஒப்பனைப் பொருள்கள் மற்றும் வெறியம் மீதான உள்நாட்டுப் பொருள்களின் மீது விதிக்கப்படும் தீர்வை, ஒன்றியம் விதிக்கும் தீர்வை பதிவில் சேர்க்க வேண்டுமெனக் குழு நினைக்கின்றது. மருந்துப் பொருள்கள் தொழிற்சாலைகள் அபிவிருத்தி அடைவதற்கு மாநிலங் களில் இந்தப் பொருள்களின் மீது விதிக்கப்படும் தீர்வை வீதம் ஒரே சீராக இருக்க வேண்டும். வெவ்வேறு மாநிலங்களிலும் மாறுபட்ட வீதங்கள் விதிக்கப்பட்டால் வெளிநாட்டுப் பொருள்களை இறக்குமதி செய்பவர்களுக்குச் சாதகமாகவும் இந்திய உற்பத்தியாளர்களுக்கு இழப்புப் பயப்பதாகவும் இருக்குமென மருந்து விசாரணைக்குழு 1931 ஆம் ஆண்டு அறிக்கையில் தெரிவித்துள்ளது.

ஆனால், வெறியம் அல்லது இந்தப் பதிவின் (ஆ) உட்பத்தியில் சேர்க்கப்பட்டுள்ள பொருள் எதுவும் அடங்கிய மருந்துக்கும் ஒப்பனைக்குமான தயாரிப்புகள் உள்ளடங்கலாக.

87. கூட்டுரும வரி.

88. வேளாண் நிலம் நீங்கலாகத் தனிப்பட்டவர்களின் மற்றும் நிறுமங்களின் சொத்திருப்புகளின் மூலதன மதிப்பு மீதான வரிகள், நிறுமங்களின் மூலதனம் மீதான வரிகள்.

89. இந்த வரிசைப் பட்டியிலுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த சட்டங்களுக்கு எதிரான குற்றச் செயல்கள்.

90. இந்த வரிசைப் பட்டியிலுள்ள பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த கட்டணங்கள்; ஆனால் இவற்றில் நீதிமன்றம் எதிலும் பெறப்படும் கட்டணங்கள் நீங்கலாக.

91. II-ஆம் வரிசைப்பட்டியில் அல்லது III-ஆம் வரிசைப் பட்டியில் குறிப்பிடப்பட்டிராத வரி எதுவும் உள்ளடங்கலாக, அவ்விரு வரிசைப் பட்டிகளிலும் எதிலும் எண்ணிடப்பட்டிராத பிற பொருட்பாடு எதுவும்

## வரிசைப் பட்டியல் II - மாநிலத்து வரிசைப் பட்டியல்

1. பொது ஒழுங்கமைதி (ஆனால் கடல், தரை அல்லது வான்படை எதனையும் குடியியல் அதிகாரத்திற்கு உதவும் வகையில் பயன்படுத்துவது இதில் உள்ளடங்காது) பொது ஒழுங்கமைதிப் பராமரிப்பதற்காகத் தடுப்புக் காவல் சட்டத்தின்கீழ்ச் சிறையில் வைக்கப்பட்ட நபர்கள்.

2. உச்சநீதிமன்றம் தவிர, நீதி நிர்வாகம், மற்ற நீதிமன்றங்களை அமைத்தல், ஒழுங்குப்படுத்துதல் மற்றும் அங்குப் பெறப்படும் கட்டணங்கள்.

3. இந்த வரிசைப் பட்டியிலுள்ள பொருட்பாடுகள் எவற்றையும் பொறுத்து, உச்சநீதிமன்றம் அல்லாத பிற அனைத்து நீதிமன்றங்களின் அதிகார வரம்பும் அதிகாரங்களும்; வருவாய் நீதிமன்றங்கள் மற்றும் வாடகை முறைகள்.

4. காவல் படை, இருப்பூர்தியக் காவல் படை மற்றும் கிராமக் காவல் படை உள்ளடங்கலாக.

5. சிறைகள், சீர்திருத்த நிலையங்கள், இளங்குற்றவாளிகள் சீர்திருத்த நிறுவனங்கள் மற்றும் இவை போல்வதான பிற நிறுவனங்கள்; அவற்றில் காவலில் வைக்கப்படுபவர்கள்; சிறைகள், பிற நிறுவனங்கள் இவற்றைப் பயன்படுத்துவதற்குப் பிற மாநிலங்களுடன் ஏற்பாடுகள்.

6. பொதுமக்களிடம் மாநிலத்தின் பொதுக் கடன்.

7. மாநில அரசுப் பணியங்கள்; மாநில அரசுப் பணியாளர் தேர்வாணையம்.

8. வேலைகள், நிலங்கள் மற்றும் கட்டிடங்கள் மாநிலத்தின் உரிமை அல்லது வைத்திருத்தலில் உள்ளது.

[1]9. **வரிசைப்பட்டி IIIல் உள்ளடங்கிய வகையங்களுக்கு உட்பட்டு**, ஒன்றியத்தின் தேவைகளுக்கானவை தவிர, கட்டாயமாகப் பெறப்பட்ட நிலம், **மாநிலத்தின் தேவைக்காகப் பெறப்பட்ட அல்லது கட்டாயமாக எடுத்துக் கொள்ளப்பட்ட நிலங்களுக்கு இழப்பு ஈடு அளிப்பதின் கொள்கைகளை ஒழுங்குறுத்துவது சம்பந்தமாக.**

10. மாநிலத்தின் கட்டாள்கையிலுள்ள அல்லது மாநிலத்தின் நிதி உதவி பெறுகிற நூலகங்கள், அருங்காட்சியகங்கள் மற்றும் இவையன்ன பிற நிறுவனங்கள்.

[2]11. மாநிலத்தின் சட்டசபைக்கான தேர்தல் மற்றும் மாநிலத்தின் ஆளுநர் / மாநிலத்தின் ஆளுநர் நியமனம் செய்வதற்காக அமைக்கப்படும் பட்டியல் மற்றும் தேர்தல் ஆணையம் அந்தத் தேர்தல்களை மேற்பார்வையிடுதல், தனது கட்டாள்கையில் கொணர்தல்.

---

1. (ஒன்றிய வரிசைப்பட்டி) வரிசைப்படி 1 பதிவு 43 அடிக்குறிப்புப் பார்க்க.
2. உறுப்பு 131ல் இரண்டாவது மாற்றாக ஏற்றுக்கொள்ளப்பட்டால் இந்தப் பதிவில் 'மாநிலத்தின் ஆளுநர்' என்னும் வார்த்தைகளுக்குப் பதிலாக 'மாநிலத்தின் ஆளுநர் நியமனம் செய்வதற்காக அமைக்கப்படும் பட்டியல்' என்னும் வார்த்தைகள் பயன்படுத்த வேண்டும்.

12. மாநில ஆளுநர் வராமைக்கான வரைவூதியங்கள், படித் தொகைகள் மற்றும் உரிமைகள், மாநில அமைச்சர்களின் வரைவூதி யங்கள் மற்றும் படித்தொகைகள், சட்டசபையின் சபாநாயகர் மற்றும் துணைச் சபாநாயகர், மேலவை இருக்குமாயின் தலைவர் மற்றும் துணைத் தலைவர், மாநிலச் சட்டசபை உறுப்பினர்களுக்கான வரைவூதியம், படித்தொகை மற்றும் உரிமைகள்.

13. மாநிலம் சட்டசபையின் குழுக்களுக்கு முன்னால் சாட்சியம் அளிக்க நபர்கள் ஆஜராகுதல் அல்லது ஆவணங்களைச் சமர்ப்பித்தல்.

14. உள்ளாட்சி, அதாவது, உள்வரைத் தன்னாட்சியின் அல்லது ஊராட்சியின் நோக்கமைந்த மாநகராட்சிகள், மேம்பாட்டுப் பொறுப் பமைவுகள், மாவட்டக் கழகங்கள் சுரங்கக் குடியிருப்பு அதிகார அமைப்புகள், பிற உள்ளாட்சி அதிகார அமைப்புகள் ஆகியவற்றின் அமைப்பும் அதிகாரங்களும்.

15. மக்கள் நல்வாழ்வும், துப்புரவும்; மருத்துவமனைகளும் மருந்தகங்களும்; பிறப்பு மற்றும் இறப்புப் பதிவு செய்தலும்.

16. புனிதப் பயணங்கள், இந்தியாவுக்கு அப்பாலுள்ள பிற இடங்களுக்கான புனிதப் பயணங்கள் நீங்கலாக.

17. புதைத்தலும் இடுகாடுகளும்; எரியூட்டுதலும் சுடுகாடு களும்.

18. வரிசைப் பட்டி I பதிவு 40-ல் குறிப்பிட்டுள்ளவைகள் தவிரப் பல்கலைக் கழகங்கள் உள்ளடங்கிய கல்வி.

19. போக்குவரவு இணைவகங்கள், அதாவது சாலைகள், பாலங்கள், தோணித் துறைகள் மற்றும் I-ம் வரிசைப் பட்டியில் குறித்துரைக்கப்படாத பிற போக்குவரவு இணைவகங்கள், சிறிய இருப்பூர்தியங்கள் குறித்து வரிசைப்பட்டி I வகையங்களுக்கு உட்பட்டு இருப்பூர்தியங்கள், நகராட்சி காந்த வண்டிப் பாதைகள், கம்பி வழிப் பாதைகள்; நீர் வழிகள் குறித்து I-ம் வரிசைப் பட்டியிலும் III ஆம் வரிசைப் பட்டியிலும் உள்ள வகையங்களுக்கு உட்பட்டு, உள்நாட்டு நீர் வழிகளும் அவற்றின் வழியான போக்குவரத்தும், துறைமுகங்கள்

குறித்து வரிசைப்பட்டி I-ன் வகையங்களுக்கு உட்பட்டுப் பெரிய துறைமுகங்கள்; எந்திரத்தால் உந்தப்படும் ஊர்திகள் அல்லாத பிற ஊர்திகள்.

20. நீர், அதாவது Iஆம் வரிசைப் பட்டியின் 74 ஆம் பதிவின் வகையங்களுக்கு உட்பட்டு, நீர் வழங்குதல், பாசனம் மற்றும் கால்வாய்கள், வடிகாலும் கரையணைகளும், நீர்த் தேக்கங்களும் நீர் மின் விசையும்.

21. வேளாண்மை, வேளாண் கல்வி மற்றும் ஆராய்ச்சி, பயிர்க் கொல்லிகளுக்கு எதிரான பாதுகாப்பு, பயிர் நோய்த் தடுப்பு உள்ளடங் கலாக.

22. கால்நடைகளை மேம்படுத்துதல் மற்றும் விலங்கு நோய்த் தடுப்பு; விலங்கின மருத்துவப் பயிற்சியும் தொழிலும்.

23. பட்டித் தொழுவங்களும் கால்நடை அத்துமீறல் தடுப்பும்.

24. நிலம், அதாவது, நிலத்திலுள்ளதான அல்லது நிலத்தின் மீதான உரிமைகள், நிலக்கிழார் மற்றும் குத்தகையாளர் தொடர்பு உள்ளடங்கலாக நிலப்பிடிமான முறைகள், குத்தகைகள் ஈட்டுதல்; வேளாண் நிலத்தின் உரிமையை மாற்றுதலும் மாற்றாக்கம் செய் தலும்; நில மேம்பாடும் வேளாண் கடன்களும்; குடியமர்த்தமும்.

25. காப்பாயங்கள்; வில்லங்கத்திற்குட்படுத்தப்பட்ட மற்றும் பற்றுகைச் செய்யப்பட்ட பண்ணைச் சொத்துக்கள்.

26. புதையற் பொருள்.

27. வனங்கள்.

28. ஒன்றியத்தின் கட்டாள்கையின் கீழ் ஒழுங்குறுத்துவதை யும் மேம்படுத்துவதையும் பொறுத்து I-ஆம் வரிசைப் பட்டியிலுள்ள வகையங்களுக்கு உட்பட்டுச் சுரங்கங்கள், எண்ணெ நிலங்கள் மற்றும் கனிம வள மேம்பாட்டையும் ஒழுங்குறுத்துதல்.

29. மீன் பண்ணைகள்.

30. கொடிய பறவைகள் மற்றும் கொடிய விலங்குகளைப் பாதுகாத்தல்.

31. எரிவாயு மற்றும் எரிவாயு உற்பத்திச்சாலை.

32. மாநில எல்லைகளுக்குள்ளான வணிகமும் வாணிபமும், அங்காடிகளும் சந்தைகளும்

33. இந்த அரசமைப்பு உறுப்பு 244 வகையங்களுக்கு உட்பட்டு, மாநிலங்களுக்கிடையேயான வணிகம், வாணிபத்தினை ஒழுங் குறுத்துதல்.

34. வட்டித் தொழிலும் வட்டித் தொழில் நடத்துவோரும்; வேளாண் கடன்சுமை தீருதவி.

35. வழிப்போக்கர் விடுதிகளும் வழிப்போக்கர் விடுதி நடத்துவோரும்.

36. சரக்குகளை உற்பத்தி செய்தலும் வழங்குதலும் மற்றும் பகிர்ந்தளித்தலும்.

37. ஒன்றியத்தின் கட்டாள்கையில் வரும் குறிப்பிட்ட தொழில் துறைகளின் அபிவிருத்தி, வரிசைப்பட்டி I வகையங்களுக்கு உட்பட்டுத் தொழிற்சாலைகள் அபிவிருத்தி.

38. உணவுப் பொருட்கள் மற்ற பொருட்களின் கலப்படம்.

39. எடைகளும் அளவுகளும் - தர நிலைகளை நிரூபிப்பது நீங்கலாக.

40. மதிமயங்கச் செய்யும் வெறியம், மயக்க மருந்துப் பொருள் அதாவது மதிமயங்கச் செய்யும் வெறியம், அபின் மற்றும் மயக்க மருந்து பொருள்கள் உற்பத்தி செய்தல், வைத்திருத்தல், கொண்டு செல்லுதல், வாங்குவது, விற்பது ஆனால் மயக்க மருந்து தவிர வரிசைப் பட்டி I வகையங்களுக்கு உட்பட்டு அபின் மற்றும் வரிசைப்பட்டி III வகையங்களுக்கு உட்பட்டு அபாயகரமான நச்சு மருந்துப் பொருள்கள் குறித்து.

குள் நுகரப்படும் அல்லது பயன்படுத்தப்படும் பொருள்களின் மீதான வரிகள், விற்பனை வரி, வியாபாரத்தில் மொத்தமாக ஈடுபடுத்தப் பட்ட அல்லது பொருள்கள் வாங்கியதற்கான வரிகள்; விளம்பரம் மீதான வரிகள்.

59. காந்த வண்டிகள் உள்ளடங்கலாகச் சாலைகளில் பயன் படுத்துவதற்குப் பொருத்தமானவையாகவும் எந்திரத்தால் அல்லது எந்திரமின்றி உந்தப்படுவனவாகவும் உள்ள ஊர்திகள் மீதான வரிகள்.

60. மின்விசை நுகர்மானம் அல்லது விற்பனை மீதான வரிகள்.

61. நுகர்மானத்திற்காக, பயன்பாட்டிற்காக அல்லது விற் பனைக்காக உள்நாட்டுப் பகுதிக்குள் வரும் சரக்குகள் மீதான வரிகள்.

62. பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள், களிப்பூட்டும் நிகழ்ச்சிகள், பந்தயங் கட்டுதல், சூதாடுதல் ஆகியவற்றின் மீதான வரிகள் உள் ளடங்கலாக, ஆடம்பரப் பொருள்கள் மீதான வரிகள்.

63. சுங்கக் கட்டணங்கள்.

64. இந்த வரிசைப் பட்டியலில் உள்ள பொருட்பாடுகள் எவையும் பொறுத்து விசாரணைகள் மற்றும் புள்ளிவிவரங்கள்.

65. இந்த வரிசைப் பட்டியில் உள்ள பொருட்பாடுகள் எவற் றையும் பொறுத்துச் சட்டங்களுக்கு எதிரான குற்றச் செயல்கள்.

66. இந்த வரிசைப்பட்டியிலுள்ள பொருட்பாடுகள் எவற்றை யும் பொறுத்த கட்டணங்கள், ஆனால் நீதிமன்றம் எதிலும் பெறப் படும் கட்டணங்கள் நீங்கலாக.

## வரிசைப்பட்டி - III - ஒருங்கியல் வரிசைப் பட்டியல்

1. குற்றவியல் சட்டம் - இந்த அரசமைப்பின் தொடக்க நிலை யில் இந்தியத் தண்டனைத் தொகுப்புச் சட்டத்தில் உள்ளடங்கிய அனைத்துப் பொருட்பாடுகளும் உள்ளடங்கலாக, ஆனால் I-ஆம் வரிசைப்பட்டியிலோ II-ஆம் வரிசைப்பட்டியிலோ குறித்துரைக்கப்

பட்ட பொருட்பாடுகள் எவற்றையும் பொறுத்த சட்டங்களுக்கு எதிரான குற்றச்செயல்கள் நீங்கலாக மற்றும் குடியியல் அதிகாரத் திற்கு உதவும் வகையில் கடல், தரை, வான் படைகளைப் பயன் படுத்துதல் நீங்கலாக.

2. குற்றவியல் நெறிமுறை - இந்த அரசமைப்பின் தொடக்கத் தேதியில் குற்றவியல் நெறிமுறைத் தொகுப்புச் சட்டத்தில் உள் ளடங்கிய அனைத்துப் பொருட்பாடுகளும் உள்ளடங்கலாக.

3. கைதிகளையும் குற்றம் சார்த்தல் பெற்றவர்களையும் ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்கு மாற்றுதல்.

4. உரிமையியல் நெறிமுறை-இந்த அரசமைப்பின் தொடக்கத் தேதியில் உரிமையியல் நெறிமுறைத் தொகுப்புச் சட்டத்தில் உள் ளடங்கிய காலவரம்புச் சட்டம் உள்ளடங்கலாக, தற்சமயம் மாநிலத் தில் திரும்பப் பெறுவதான முதல் பட்டியல் பகுதி I அல்லது பகுதி IIல் குறிப்பிட்டுள்ளது போல மாநிலத்திற்கு வெளியேயிருந்து பெற வேண்டிய நிலுவையிலுள்ள நில வருவாய் மற்றும் வரி உள்ளடங் கலாக.

5. சான்றும் ஆணைமொழிகளும்; சட்டங்கள், அரசுச் செயல் கள், அரசுப் பதிவணங்கள், நீதிமுறை நடவடிக்கைகள் ஆகியவை குறித்த சான்றேற்பு.

6. திருமணம் மற்றும் விவாகரத்து, குழந்தைகள் மற்றும் வயது வாராதோர்; தத்து எடுத்துக் கொள்ளுதல்.

[1]7. விருப்புறுதிகள், விருப்புறுதியற்ற நிலை மற்றும் உரிமை இறக்கம்; **கூட்டுக் குடும்பமும் பாகப் பிரிவினையும்; இந்த அர சமைப்பின் தொடக்க நிலையை ஒட்டி முன்பு நீதிமன்ற நடவடிக் கைகளில் தரப்பினர்களாக இருந்தவர்கள் எந்தப் பொருட்பாடுகள் பொறுத்துத் தங்கள் தனிப்பட்ட சட்டத்திற்கு உட்பட்டவர்களாக இருந்தார்களோ** அந்தப் பொருட்பாடுகள் அனைத்தும்.

---

1. இந்தியாவில் உள்ள இந்துக்கள் அனைவருக்கும் ஒரே மாதிரியான தனிப்பட்ட சட்டம் வேண்டுமெனக் குழு நினைக்கிறது. அதிலுள்ள அனைத்துப் பொருட் களும் ஒருங்கியல் பட்டியலில் உள்ளடங்க வேண்டும். அதனால் இந்தப் பதிவின் விரிவாக்கம்.

*8. வேளாண் நிலம் அல்லாத பிற சொத்தின் உரிமை மாற்றம், ஒப்பாவணங்களையும் ஆவணங்களையும் பதிவு செய்தல்.*

*9. பொறுப்புக் கட்டளைகளும் பொறுப்புக் கட்டளையர் களும்.*

*10. ஒப்பந்தங்கள் - கூட்டாண்மை முகவர் நிலை, ஏற்றிச் செல்லும் ஊர்தி ஒப்பந்தங்கள், பிற தனியுறு ஒப்பந்த வகைகள் உள் ளடங்கலாக, ஆனால் வேளாண் நிலம் தொடர்பான ஒப்பந்தங்கள் நீங்கலாக.*

*11. வழக்கைத் தீர்த்து வைத்தல்.*

*12. கடனைத் தீர்க்க வகையற்ற நிலை மற்றும் திவாலாகுதல்.*

*13. தலைமைக் காப்பாட்சியாளர்கள் மற்றும் அரசுப் பொறுப்புக் கட்டளையர்கள்.*

*14. நீதிமன்ற முத்திரைத்தாள் வகையில் ஈட்டப்படும் தீர்வை கள் அல்லது கட்டணங்கள், முத்திரைத் தீர்வைகள், ஆனால் முத்திரைத் தீர்வை வீதங்கள் நீங்கலாக.*

*15. வரிசைப்பட்டி IIல் குறிப்பிடப்பட்டுள்ள எந்தப் பொருட் கள் குறித்தும் உள்ளடங்கிய சட்டங்கள் நீங்கலாக வழக்குத் தொடர் வதற்குற்ற தீங்குகள்.*

*16. இந்த வரிசைப் பட்டியிலுள்ள பொருட்பாடுகள் எதனை யும் பொறுத்து, உச்சநீதிமன்றம் நீங்கலாக, அனைத்து நீதிமன்றங் களின் அதிகார வரம்பும், அதிகாரங்களும்.*

*17. சட்ட, மருத்துவ மற்றும் பிற தொழில்கள்.*

*18. செய்தித் தாள்கள், நூல்கள் மற்றும் அச்சகங்கள்.*

*19. பித்துநிலை மற்றும் மன நலக் கேடு - பித்தர்கள், மனநலக் கேடுடையவர்கள் ஆகியவர்களை ஏற்றுக் காப்பதற்கான அல்லது அவர்களுக்குச் சிகிச்சையளிப்பதற்கான இடங்கள் உள்ளடங்கலாக.*

20. நச்சு மற்றும் அபாயகரமான மருந்துகள்.

21. எந்திரத்தால் உந்தப்படும் ஊர்திகள்.

22. கொதிகலன்கள்.

23. விலங்குகளுக்குக் கொடுமை இழைப்பதைத் தடுத்தல்.

24. நாடோடியாகத் திரிதல்; நிலையின்றி இடம் பெயரும் பழங்குடியினர்.

25. தொழிற்சாலைகள்.

26. தொழிலாளர் நலவாழ்வு - வேலை நிலைமைகள், வருங்காலக் காப்பு நிதியங்கள், வேலைக்கமர்த்துவோரின் கடப்பாடு, உழைப்பாளர்களுக்கான சரியீடு, உடல்நலக் காப்பீடு, உடல் ஊனம் மற்றும் முதுமைக்கால ஓய்வூதியங்கள் உள்ளடங்கலாக.

27. வேலையின்மை மற்றும் சமுதாயக் காப்பீடு.

28. தொழிற்சங்கங்கள்; தொழில்துறை மற்றும் தொழிலாளர் பூசல்கள்.

29. மனிதரை, விலங்குகளை அல்லது செடியினங்களைப் பீடிக்கும் தொற்று நோய்கள் அல்லது ஒட்டு நோய்கள் அல்லது நச்சுப் பூச்சிகள் ஒரு மாநிலத்திலிருந்து மற்றொன்றிற்குப் பரவுவதைத் தடுத்தல்.

30. மின்விசை.

31. எந்திரத்தால் உந்தப்படும் கலங்களைப் பொறுத்து, உள்நாட்டு நீர்வழிகளில் கப்பல் போக்குவரத்தும் கப்பல் பயணமும் அத்தகைய நீர்வழித் தட விதிகளும்; மற்றும் தேசிய நீர்வழிகளைப் பொறுத்து 1 ஆம் வரிசைப் பட்டியின் வகையங்களுக்கு உட்பட்டு, உள்நாட்டு நீர்வழிகளில் பயணிகளையும் சரக்குகளையும் ஏற்றிச் செல்லுதல்.

32. கண்காட்சிக்காக நிழற்படம் காட்டும் இயந்திரத்திற்கு ஒப்புதல் அளித்தல்.

33. ஒன்றியத்தின் அதிகாரத்தின் கீழ்த் தடுப்புக் காவலில் இருக்கும் நபர்கள்.

34. பொருளாதார மற்றும் சமுதாயத் திட்டமிடுதல்.

[1]35. ஒன்றியம் அல்லது மாநிலத்திற்காகச் சொத்தினைக் கையகப்படுத்தலும் வேண்டுறுத்திப் பெறும் பொழுதும் அதற்கான இழப்பு ஈடு கொடுப்பதின் கொள்கைகளை நிர்ணயித்தல்.

36. இந்த வரிசைப்பட்டியில் குறித்துரைக்கப்பட்ட பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த விசாரணைகளும் புள்ளிவிவரங்களும்.

37. இந்த வரிசைப்பட்டியில் பொருட்பாடுகளில் எதனையும் பொறுத்த கட்டணங்கள், ஆனால், நீதிமன்றம் எதிலும் பெறப்படும் கட்டணங்கள் நீங்கலாக.

## எட்டாவது பட்டியல்

### (உறுப்பு 303 (1) (X))

### பட்டியலில் கண்ட பழங்குடியினர்

### பகுதி I

### சென்னை

1. பகாடா
2. போட்டாடாக்கள் - போடோ போட்டாடா, முரியா போட்டாடா மற்றும் சானோ போட்டாடா.
3. பூமியாக்கள் - பூரி பூமியா மற்றும் போடோ பூமியா.
4. பிஸ்ஸாய் - பரங்கி ஜோடியா, பெண்ணங்கி தாதுவா, ப்ராங்கி, ஹோல்லர், ஜோரியா, கொல்லை, கோண்டே, பரங்க, பெங்கஜோடியா, சோடோ ஜோடியா மற்றும் தாகோரா.

1. (ஒன்றிய வரிசைப் பட்டியல்) வரிசைப் பட்டியல் 1 பதிவு 43 அடிக்குறிப்புக் காண்க.

5. தக்காடா

6. டோம்கள் - அந்தியா டோம்கள், ஆதினியா டோம்கள், சோனல் டோம்கள், கிறிஸ்தவ டோம்கள், மிர்கானி டோம்கள், ஓரியா டோம்கள், பொனாகா டோம்கள், தெலிகா மற்றும் உம்மியா.

7. கடபாக்கா - போடா கடபா, செர்ல்லம் கடபா, பராங்கி கடபா, ஜோடியா கடபா, ஒலரோ கடபா, பங்கி கடபா மற்றும் பரங்க கடபா.

8. காசிக்கள் - போடா காசிக்கள் மற்றும் சான் காசிகள்.

9. கொண்டி - மோத்யா கோண்ட் மற்றும் ராஜோ கோண்ட்.

10. கவுடுகள் - பாடோ, பிரித்யா, டுடோசோரியா, ஹாடோ, ஜடாசோ மற்றும் ஜோரியா.

11. கொசால்யா கௌடுகள் - பசோதோரியா கௌடுகள், சிட்டி கௌடுகள், தங்கயாத் கௌடுகள், தொட்டு கமாரியா, டுடு கமரோ, வடியா கௌடுகள் மற்றும் புல்லோ சோரியா கௌடுகள்.

12. மகதர கௌடுகள் - பெர்னியா கௌடு, போடோ மகதா, தொங்க யாத் கௌடு, லட்யா கௌடு, பொன்னா மகதா மற்றும் சானா மகதா.

13. சீரிதி கௌடுகள்

14. ஹோல்வா

15. ஜடபுகள்

16. ஜட்டிபுகள்

17. கம்மாராகள்

18. கட்டிஸ் - கட்டி, கொம்மரா மற்றும் லோஹரா.

19. கோடு

20. கொம்மார்

21. கொண்ட தோராகள்

22. கொண்ட காபுகள்

23. கொண்டா ரெட்டிகள்

24. கோன்த்கள் - தேசாய கோந்த்கள், தோங்கிரியா கோந்த்கள், குட்டியா கோந்த்கள், திகிரியா கோந்த்கள் மற்றும் யெனிடி கோந்த்கள்

25. கோடியா - பார்டிகா, பெந்தோ ஓரியா, துலியா அல்லது டுலியா, ஹோல்வா பால்கோ, புதியா, சன்ரோனா மற்றும் சிதோ பாய்கோ.

26. கோயா அல்லது கவுட் (அதன் உட் பிரிவுகளும்) - ராஷா கோயாகளின் ராஜா, லிங்கத்நாரி கோயகள் (சாதாரணம்) மற்றும் கொட்டு கோயாகள்

27. மடிகாகள்.

28. மாலாக்கள் அல்லது ஏஜென்சி மாலாக்கள் அல்லது வால்மீகிகள்.

29. மாலிகள் - சோர்சியா மாலிகள், பாய்கோ மாலிகள் மற்றும் பெத்த மாலிகள்

30. மானே

31. மன்னா தோரா

32. முக்கா தோரா - நூக்கா தோரா

33. முலி அல்லது முலியா.

34. முரியா

35. ஒஜுலுகள் அல்லது மேட்டா சோம்சலீகள்.

36. ஒமானைதோ

37. பைகரபு

38. பலசி

39. பள்ளி

40. பென்தியாகள்

41. போர்ஜாகள் - போடோ, போண்டா, தாருவா, திதுவா, ஜோடியா, முண்டிலி, பெங்கு, பைடி மற்றும் சலியா.

42. ரெட்டி தோராகள்

43. ரெல்லி அல்லது சசாந்தி

44. ரோனாகள்

45. சவராகள் - காப்பு சவராகள், குட்டோ சவராகள் மற்றும் மலியா சவராகள்.

46. லகாதீவு, மினிகாய் மற்றும் அமிந்திலி தீவுகளில் வசிப்பவர்கள்.

## பகுதி - II

### பம்பாய்

1. பார்தா
2. பாலசா
3. பில்
4. சோத்ரா
5. தன்கா
6. தோடியா
7. டுபியா
8. காமிட் அல்லது காம்தா
9. கோண்ட்
10. கதோடி அல்லது கட்காரி
11. கோன்கா
12. கோலி மஹாதேப்
13. மாவ்சி
14. நாய்க்டா அல்லது நாயக்
15. பார்தி, அத்லிசின் சேர் உள்ளடங்கிய அல்லது பான்சே பார்த்
16. படேலியா
17. போம்லா
18. போவரா
19. ரதாவா
20. தாட்வி பில்
21. தாகுர்
22. வால்வை
23. வார்லி
24. வாசவா

## பகுதி - III

### மேற்கு வங்காளம்

1. போடியா
2. சாக்மா
3. குகி
4. லேப்சா
5. முண்டா

6. மாக்
7. ம்ரோ
8. ஓரான்
9. சந்தால்
10. திப்பேரா
11. மேற்கு வங்காள அரசாங்கத்தினால் அறிவிக்கப்பட்ட வேறு எந்தப் பழங்குடியினரும்.

## பகுதி IV

### ஐக்கிய மாகாணங்கள்

1. புய்ன்யா
2. பைஸ்வார்
3. பைகா
4. கோண்ட்
5. கார்வர்
6. கோல்
7. ஓஜா
8. ஐக்கிய மாகாணங்களின் அரசாங்கத்தால் அறிவிக்கப்பட்ட வேறு எந்தப் பழங்குடியினரும்

## பகுதி V

### கிழக்குப் பஞ்சாப்

ஸ்பிதியுலுள்ள திபேதியர்கள் மற்றும் காஸ்க்ரா மாவட்டத்திலுள்ள லாஹால்.

## பகுதி VI

### பீஹார்

பீஹார் மாநிலத்தில் வசிப்பவர் கீழ்க்கண்ட எந்தப் பழங்குடியினரைச் சேர்ந்தவராக இருந்தாலும் -

1. அசுர்
2. பன்ஜாரா
3. பதுடி
4. பென்ட்கர்

5. பின்ஜியா
6. பிர்ஹோர்
7. பிர்ஜியா
8. செரோ
9. சிக் பராய்க்
10. கடாபா
11. கட்வார்
12. கோண்ட்
13. கொரேய்ட்
14. ஹோ
15. ஜுவாங்
16. கர்மாலி
17. கரியா
18. கர்வார்
19. கெடாவுரி
20. ஹோண்ட்
21. கிஸான்
22. கோலி
23. கோரா
24. கோர்வா
25. மஹ்லி
26. மல் பஹரியா
27. முண்டா
28. ஓரான்
29. பர்ஹியா
30. சந்தால்
31. சவுரியா பஹரியா
32. சவார்
33. தாரு

II. கீழ்க்கண்ட மாவட்டங்களில் அல்லது காவல் நிலையங்களில் வசிப்பவர் எவரேனும் அதாவது, ராஞ்சி மாவட்டங்கள், சிங்பூம், ஹஜாரிபாக் மற்றும் சந்தால் பர்கானாக்கள், காவல் நிலையங்களான அர்ஷா, பலராம்பூர், ஜால்டா, ஜய்பூர், பக்முந்தி, சாந்தில், இசாகார், பரஹபூம், படம்தா பந்துவான் மற்றும் மன்பாம் மாவட்டத்திலுள்ள மஜ்பஜார் கீழ்க்கண்ட ஏதேனும் பழங்குடியினரைச் சேர்ந்தவராயிருத்தல் -

1. பாரி
2. போக்டா
3. புய்யா
4. புமிஜ்
5. காசி
6. பான்
7. ரஜ்வார்
8. துரி

III. தன்பாத் உட்பிரிவு அல்லது மன்பூம் மாவட்டத்திலுள்ள காவல் நிலையத்தில் வசிப்பவரான அதாவது பூம்ஜி பழங்குடியினரைச் சேர்ந்த புருலியா, ஹீரா, பாஞ்சா, ரகுநாத்பூர், சந்தூரி, நிதுரியா, பாரா, சாஸ், சந்தன்கியாரி மற்றும் காஷிபூர்.

## பகுதி VII

### மத்திய மாகாணங்கள்

1. கோண்ட்
2. காவார்
3. மாரியா
4. முரியா
5. ஹல்பா
6. பர்தான்
7. ஓரான்
8. பிஞ்ச்வார்
9. ஆன்ந்
10. பரியா-பூமியா
11. கோலி
12. பத்ரா
13. பைகா
14. கோலம்
15. பில்
16. புயின்ஹர்
17. தன்வார்
18. பைனா
19. பார்ஜா
20. காமார்

21. புன்ஜியா
22. நகார்சி
23. ஓஜா
24. கோர்கு
25. கோல்
26. நகாசியா
27. சவாரா
28. கோர்வா
29. மஜ்வார்
30. காரியா
31. சவுந்தா
32. கோன்ந்
33. நிஹால்
34. பிர்ஹூல் (அல்லது பிர்ஹோர்)
35. ரவுதியா
36. பான்டோ

## பகுதி VIII

### அசாம்

கீழ்க்கண்ட பழங்குடியினர் மற்றும் சமுதாயத்தினர் -

1. கசாரி
2. போரோ அல்லது போரோ-கசாரி
3. ரபா
4. மிரி
5. லலுங்
6. மிகிர்
7. காரோ
8. ஹஜோன்பி
9. டியோரி
10. அபோர்
11. மிஷ்மி
12. டாபியா

13. சிங்போ
14. காம்ப்தி
15. எந்த நாகா அல்லது குகிப் பழங்குடியினர்
16. அசாம் அரசாங்கத்தால் அறிவிக்கப்பட்டுள்ள வேறு எந்தப் பழங் குடியினர் அல்லது சமுதாயத்தினர்.

## பகுதி IX

### ஒரிசா

I. ஒரிசா மாநிலத்தில் வசிக்கும் கீழ்க்கண்ட பழங்குடியினரைச் சேர்ந்த வராயிருத்தல்:

1. பகாடா
2. பஞ்சாரி
3. செஞ்சு
4. கடாபா
5. கோண்ட்
6. ஜடாபு
7. கோன்ட் (கோன்ந்)
8. கொண்டா - தோரா
9. கோயா
10. பரோஜா
11. சாரா (சவார்)
12. ஒரான்
13. சந்தால்
14. காரியா
15. முண்டா
16. பஞ்சாரா
17. பிஞ்சியா
18. கிசான்
19. கோல
20. கோரா

II. கீழ்க்கண்ட நிலவரையில் வசிப்பவர் எவரேனும் அதாவது, கொராபட் மற்றும் கொண்ட்மால் மாவட்டங்கள் மற்றும் கீழ்க்கண்ட பழங்குடியினரைச் சார்ந்த கஞ்சம் முகவர் நிலை:

1. டோம் அல்லது டோம்போ
2. பான் அல்லது பானோ

III. சம்பல்பூர் மாவட்டத்தில் வசிப்பவர் கீழ்க்கண்ட பழங் குடியினரைச் சேர்ந்தவராயிருத்தல்:

1. பாரி
2. புய்யா
3. புமிஜ்
4. காசி
5. துரி
6. பான் அல்லது பானே

## அனுபந்தம்

### வரைவுக் குழு உறுப்பினர் திரு. அல்லாடி கிருஷ்ணசாமி அய்யர் அரசியல் நிர்ணய சபைக்குப் பணிந்தனுப்பிய தனிக் குறிப்பு

நாடாளுமன்றம் மாநிலங்களுக்கு இடையே சட்டசபையின் அதிகாரத்தைப் பகிர்ந்தளிப்பதிலோ அல்லது மாநில வரிசைப் பட்டியில் உள்ள ஒரு பொருள் தேசிய முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தால் நாடாளுமன்றம் அந்த அதிகாரத்தை எடுத்துக் கொள்வதாக இருந்தாலும் எனக்கும் என் நண்பர்களுக்குமிடையே கருத்து வேறுபாடு கிடையாது. உறுப்பு 217, 223 (1) மற்றும் 226 சம்பந்தமாக அரசியல் நிர்ணயசபைக்கு அவர்களின் ஆலோசனைக்காக ஒரு தனிக் குறிப்புப் பணிந்தனுப்ப விரும்புகின்றேன்.

### சட்டசபையின் அதிகாரங்களைப் பகிர்ந்தளித்தல் - உறுப்பு 217 மற்றும் 223 (1)

2. அரசியல் நிர்ணய சபை, சட்டசபை அதிகாரங்களைப் பகிர்ந் தளிப்பது குறித்து முடிவெடுத்துள்ளது. மேலும், மிகுதியாக உள்ள அதிகாரம் மத்திய அரசிடம் இருத்தல் வேண்டுமெனவும் முடிவு எடுக்கப்பட்டுள்ளது. இந்தக் கருத்திற்குச் சட்ட வடிவம் கொடுப்பது எப்படி என்பதுதான் இப்பொழுது எழுந்துள்ள கேள்வி. எனது

நண்பர்கள் இந்திய அரசாங்கச் சட்டம் பாகம் 100ல் உள்ளதைப் பின்பற்றலாம் என முடிவெடுத்துள்ளனர். மேலும், மிகுதியான அதிகாரங்களுக்குத் தனி உறுப்பும் அதனை ஒன்றியத்திற்கு ஒதுக்கப் பட்ட வரிசைப் பட்டியில் ஒரு பாகமாக எடுத்துக் கொள்ளவும் முடிவெடுத்திருக்கின்றனர். என்னுடைய திட்டம் என்னவென்றால், மிகுதியான அதிகாரங்கள் மத்தியில் (ஒன்றிய நாடாளுமன்றம்) இருத்தல் வேண்டுமென ஒப்புக் கொண்டதனால், ஒன்றிய வரிசைப் பட்டியில் கணக்கிடப்பட்டுள்ள விவரங்கள் பொதுவான மிகுதி யான அதிகாரங்கள் மத்தியில் இருப்பதை எடுத்துக் காட்டுவதாகும். எனவே, முதலில் மாகாண மாநிலங்கள் அல்லது மாநிலத்தின் அதிகாரங்களை வரையறுத்துப் பின்னர் ஒருங்கியல் அதிகாரங்கள் முடிவாக மத்திய அல்லது ஒன்றிய நாடாளுமன்றத்தின் அதிகாரங்களைப் பகிர்ந்தளித்து அதே நேரத்தில் மத்திய அரசாங்கத்தின் பொதுவான அதிகாரங்களை விளக்கக் கூடிய அனைத்தையும் உள்ளடக்கிய வரிசைப் பட்டியைத் தயாரித்தல் நல்ல திட்டமாகும். இந்திய அர சாங்கச் சட்டம் பகுதி 100ல் உள்ள திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட் டாலும் அரசியல் கட்சிகளுக்கிடையே மிகுதியான அதிகாரம் எங்கு இருக்க வேண்டுமென்பதற்கு ஒப்புதல் ஏற்படவில்லை. எந்தக் குறிப் பிட்ட இடத்திலும் வரிசைப் பட்டியல்களிலும் இல்லாத பொருள் குறித்து எந்தச் சட்டசபை மிகுதியான அதிகாரத்தை உபயோகிக்க வேண்டுமென்பதைத் தலைமை ஆளுநரின் முடிவுக்கு விடப்படும். தற்பொழுது நமக்கு அந்தப் பிரச்சினை இல்லை. இந்திய அரசாங்கச் சட்டத்தில் உள்ள வகையங்களின் முக்கியத்துவத்தை விட மத்தியப் பட்டியலில் உள்ள ஒவ்வொரு விவரத்தின் பொருள் பற்றிக் கூறுவது முக்கியம் குறைந்ததாக உள்ளது.

பாகம் 100ல் ''எது எவ்வாறாயிருப்பினும்'' என்பது திரும்ப திரும்ப வருவது, நீதிமன்றங்களில் தொடர்ந்து நீள்கின்ற மற்றும் தேவையற்ற விவாதத்திற்குரிய பொருளாக இருந்தது.

அரசமைப்பு வரைவுத் திட்டத்தின்படி, உறுப்பு 224 மற்றும் 225 வகையங்களில், அதிகாரப் பகிர்ந்தளிப்பு மாநிலங்களுக்கிடையே ஏற்பட்ட ஒப்புதலுக்கு உட்பட்டதாகும். பகுதி IIIன்படி ஒன்றியத்தில் மாநிலங்கள் இருப்பதால் எந்தவிதச் சிக்கலும் ஏற்படாது.

மேலும், சட்டம் இயற்றுவதற்கான அதிகாரத்துடன் அதனைச் சட்ட அதிகாரத்தோடு செயல்படுத்துவதற்கான வகையங்கள் ஒன்றும்

அந்த உறுப்பில் இல்லை. இதைப் போன்ற வகையங்கள் ஆஸ்திரே லியா மற்றும் அமெரிக்க அரசமைப்புகளில் உள்ளன. ஆஸ்திரேலியா அரசமைப்புப் பகுதி 51 மற்றும் அமெரிக்க அரசமைப்பு உறுப்பு I, பகுதி 8 உட்பாகம் 18 பார்க்கவும்.

எனவே, அரசமைப்பு வரைவில் உறுப்பு 217 மற்றும் உறுப்பு 223 (1)க்குப் பதிலாகக் கீழ்க்கண்ட உறுப்பினைக் கருத்தில் கொள்ளு மாறு அரசியல் நிர்ணயசபைக்குத் தெரிவிக்கின்றேன்.

## பகுதி I

''(1) பட்டியல் Iல் உள்ள மாநிலங்களின் சட்டசபைகளுக்கு மாநிலத்திற்கான சட்டங்கள் அல்லது வரிசைப்பட்டி Iல் (மாகாண சட்டசபைப் பட்டியலுக்குப் பொருந்தியுள்ள) குறிப்பிடப்பட்டுள்ள அந்த மாநிலத்தின் பகுதி அல்லது ஏதாவது பொருள் குறித்துச் சட்ட மியற்றப் பிரத்தியேகமான அதிகாரம் உண்டு.''

''(2) பட்டியல் I பகுதி Iல், எந்த மாநிலத்தின் சட்டசபையும், கூறு (1)ன் கீழ், வரிசைப்பட்டி IIல் குறிப்பிடப்பட்டுள்ள பொருள் கள், மாநிலத்தின் எந்தப் பொருள் அதன் பகுதிக்குரிய சட்டங்கள் இயற்றுவதற்கான கூடுதல் அதிகாரத்தினைப் பெறுகிறது. வரம்புரை யாக, மேலும், ஒன்றிய நாடாளுமன்றம் அதன் மொத்த நிலப்பரப் பில் உள்ள பொருள் பற்றியும் அல்லது ஏதாவது பகுதி பற்றியும் சட்டம் இயற்ற அதிகாரம் உண்டு. மாநிலச் சட்டசபையில் இயற்றிய சட்டம் ஒன்றிய நாடாளுமன்ற சட்டத்திற்கு முரணாக இல்லாதவரை அதற்குச் செயலாற்றல் உண்டு.''

''(3) முன் உட்பகுதியில் அளிக்கப்பட்ட கூடுதல் அதிகாரங் களுடன், ஒன்றியத்தின் சமாதானம், ஒழுங்கு மற்றும் நல்ல அரசாங்கத் திற்காகவும் அல்லது அதன் எந்தப் பகுதியிலும் உள்ள பொருள் குறித்து ஆனால் வரிசைப்பட்டி I-ல் கணக்கிடப்பட்டுள்ள பொருள் கள் தவிர, குறிப்பாக மேற்கூறியவைகளுக்குக் குந்தகம் இல்லாமல் ஒன்றிய நாடாளுமன்றம் சட்டம் இயற்றலாம். வரிசைப்பட்டி III-ல் கணக்கிடப்பட்டுள்ள பொருள் குறித்து ஒன்றிய நாடாளுமன்றத் திற்குச் சட்டங்கள் இயற்ற பிரத்தியேகமான அதிகாரம் உண்டு.''

''(4) (அ) பட்டியல் I பகுதி II-ல் உள்ள மாநிலங்களில் அமைதி, ஒழுங்கு மற்றும் நல்ல அரசாங்கத்திற்கான சட்டங்களை இயற்றுவதற்கு ஒன்றிய நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு.

(ஆ) உட்பாகம் (அ)வின் கீழ், நாடாளுமன்றத்தின் பொது வான அதிகாரங்களுக்கு உட்பட்டுப் பட்டியல் I பகுதி IIல் உள்ள மாநிலங்களின் சட்டசபைகளுக்குக் கீழ்க்கண்ட பொருள் குறித்துச் சட்டம் இயற்ற அதிகாரம் உண்டு.

வரம்புரையாக: ஒரு மாநிலத்தில் நிறைவேற்றப்பட்ட சட்டம், ஒன்றிய நாடாளுமன்றத்தின் சட்டத்திற்கு முரணாக இல்லாத வரை அந்த மாநிலத்தில் அதன் செயலாற்றல் உண்டு.

(மாகாணங்களின் முதன்மை ஆணையர் தம் குறித்த பணிக் குழுவின் பரிந்துரை இந்த விஷயத்தில் ஏற்றுக்கொள்ளப்படுவதால் இந்த வரையம் தேவைப்படுகிறது.)

''(5) நாடாளுமன்றத்திலோ அல்லது மாநிலச் சட்டசபை யிலோ சட்டம் இயற்றுவதற்கான அதிகாரம், குறிப்பிட்ட சட்ட மன்றத்தில் சட்டம் இயற்றுவதற்கான அதிகாரம் இருப்பதைச் செயல் படுத்த எல்லாப் பொருள்கள் மீதும் பரவலாக இருக்கும்.

''(6) வரிசைப்பட்டியல் I அல்லது (வரிசைப்பட்டியல் II)-ல் கணக்கிடப் பட்டுள்ள பொருள் குறித்து மாநிலத்தில் உள்ள சட்டம் அல்லது நிலவும் சட்டம் ஒன்றிய நாடாளுமன்றத்தின் சட்டத்திற்கு முரணாக இருக்குமேயானால் நேர்வுக்கேற்ப நாடாளுமன்றத்தின் சட்டம் அல்லது நிலவும் சட்டம் செயல்படும். அந்த மாநிலத்தில் உள்ள பொருத்தமில்லாத சட்டம் தவிர்க்கப்படும்.

(இது ஆஸ்திரேலியா மற்றும் அமெரிக்கா வகையங்களைப் பின்பற்றியதாகும். ஒவ்வொரு பகுதி மற்றும் கூறினைப் பற்றி ஆராய்ச்சி மேற்கொள்ளாமலே, ஒரு சட்டம் மற்றொரு சட்டத்திற்கு முரணானது என்று நீதிமன்றம் எளிதாக முடிவுக்கு வரும்.)

ஒருங்கியல் வரிசைப் பட்டியில் உறுப்பு 231 (2)-ல் உள்ள பொருட்களின் மீதான சட்டங்களுக்குச் சிறப்பு வகையம் சேர்ப்பது தேவையென நினைத்தனர். மத்திய சட்டசபைக்கு உள்ள மேலுரிமை

அதிகாரத்தினால் இந்த வகையம் தேவையன்று என நான் நினைக்கின்றேன்.

## உறுப்பு 226 மற்றும் 228

3. மாகாண வரிசைப் பட்டியலில் உள்ள பொருள் தேசிய முக்கியத்துவம் அல்லது தேசிய நலத்தினைப் பொறுத்ததாக இருக்குமானால், உறுப்பு 226-ல் உள்ளது போல மாகாணத்தில் உள்ள பொருள் குறித்துச் சட்டம் இயற்றும் அதிகாரத்தை ஒன்றியம் ஆக்ரமித்துக் (இந்த வார்த்தையின் ஒருவர் பயன்படுத்துவதாயின்) கொள்ளலாம் என்ற கொள்கையினை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஒரு குறிப்பிட்ட மாநிலத்திற்கு மட்டும் முக்கியப் பொருளாக இல்லாமல் தேசிய அளவில் முக்கியத்துவம் பெறும்பொழுது மட்டுமே ஒன்றியம் மாநிலத்தின் அதிகாரத்தினை எடுத்துக் கொள்ளலாம். முன் கூறப்பட்டவை சரியானதாக இருக்குமானால், மாநிலம் அதிகாரத்தைத் தன் வசம் வைத்திருப்பதற்கு எந்த நியாயமும் இல்லை. ஒன்றியம் அதிகாரத்தை ஏற்றுக் கொள்வது சுலபமானதோ அல்லது எளிமையான முறையோ அல்ல. மாகாண அல்லது மாநில அதிகாரத்தை ஒருங்கியல் அதிகாரமாக மாற்றுவதற்கு அரசமைப்பில் மாற்றம் கொண்டு வராமல் செய்ய முடியாது. உறுப்பு 228-ன்படி குறிப்பிட்ட பொருள் பற்றிச் சட்டம் இயற்றும் அதிகாரம் மாகாணத்திற்கு உள்ளது என்ற வகையம் செய்யும்போது இந்தக் கொள்கையினை மனதில் கொள்ளவில்லை. மாகாண அதிகாரத்தை ஒருங்கியல் அதிகாரமாக மாற்றலாம் என்பது - மத்திய அரசு தலையிடும் என்பது - அரசமைப்பின் கூட்டாட்சி அமைப்பினைப் பாதிக்கும். அதனால் நான் கீழ்க்கண்ட வார்த்தைகளுக்குப் ப்திலீடாக இதைக் கூறுகின்றேன்:

''மாநில வரிசைப் பட்டியலில் கணக்கிடப்பட்டுள்ள எந்தப் பொருளும் தேசிய முக்கியத்துவம் பெறும்'' என்ற வார்த்தைகளுக்குப் பதில்,

''அல்லது தேசிய அக்கறைக்கு உகந்த .... தீர்மானம்'' மற்றும் வார்த்தைகளைச் சேர்க்கவும்.

''நாடாளுமன்றத்தின் சட்டத்தின் வாயிலாக'' என்ற வார்த்தைகளுக்கு முன்னால்

*''அந்தப் பொருள் பற்றி நாடாளுமன்றம் சட்டம் இயற்ற வேண்டும்.''*

*உறுப்பு 228-ல் ''உறுப்பு 226 மற்றும் உறுப்பு 227ல் இன்மை'' என்ற வார்த்தைகளுக்குப் பதில் ''உறுப்பு 227ல் இன்மை'' என்பதாகும்.*

*அல்லாடி கிருஷ்ணசாமி*

*உச்சநீதிமன்றம், வரிசைப் பட்டியல் Iல் ஒரு பொருளாக இருப்பதால் உறுப்பு 218 தேவையில்லை.*

*உறுப்பு 221 உயர்நீதிமன்றத்தைப் பொறுத்தது. மூன்று வரிசைப் பட்டியல்களிலும் உயர்நீதிமன்றம் உள்ளடங்கிய எல்லா நீதிமன்றங்களின் நியாய ஆதிக்கத்தினை உள் அடக்குவதால், நியாய ஆதிக்கத்தினைப் பற்றிப் பிரத்தியேக வகையத்தினைக் கூற வேண்டியதில்லை. வரிசைப் பட்டியலில், உறுப்புகளின் சட்ட அதிகாரத்தினைப் பகிர்ந்தளிப்பது பற்றிக் கூறுவதால், உச்சநீதிமன்றத்தினைப் பற்றித் தனி உறுப்பு மிகுதியானதும் தேவையற்றதுமாகும்.*

*அல்லாடி கிருஷ்ணசாமி*

*/உத்திரவுப்படி/*

**ஹெச்.வி.ஆர். ஐயங்கார்**
**செயலர்**

# சிறப்புப் பெயரகராதி

### கோ



### ச



### சா



### சி



### சீ



### செ



### சை



### டா



### டோ



### த



### தா



### தே



### தி



### தே

★ ★ ★

